first sutram. Tolkappiyam, had already been commented on by such masters as *Ilampuranar*, *Senavarayar* and the great *Nachinarkiniyar*, and the Yogi's essay was a running comment and critical discussion of some of the points of difference and what he considered as mistakes in these great commentaries. He also revised and corrected the *Virutti* on Nannul by Sankara-namachivaya Pulavar. Among the Tamil people, a scholar's merits are in proportion to his high proficiency in Grammar, and these works would have raised him at once in the estimation of the literate of that day. His short commentary on Sivagnana-bhodam must have followed these grammatical composition. His reputation must have spread by this time and he left the mutt for preaching and lecturing in and about Conjeeveram and Madras. Near Madras is a village called Thottikalai and there was a Mudaliar who was a great patron of arts and literature at the time. Among the descendants of this Mudaliar was the late Professor Ranganadham. Our Yogi secured him as his patron and friend, and one Thottikalai Subramania Mudaliar became his pupil also. The Yogi having expressed his desire to master the Sanscrit language, the Mudaliar with great difficulty and expense procured him suitable teachers from Tiruvottiyur and Conjeeveram. He possessed an extraordinary memory. He would simply sit and listen to what the Brahmin teachers would read and expound before him and the whole was committed to his memory. He soon made himself proficient in Tarka

and Agama Shastras, in the works of Sri Nilakanta Sivacharya, Haradatta, Appayya Dikshitar and others The results of his studies were his translations in Tamil of Tarka Sangraha and Annabhattiyam, of Siddhanta Prakasika of Sarvatma Sambhu Sivachariar, Sivatavavivekam of Appaya Dikshitar and of a famous sloka of Haradatta. All these studies and works had a clear object and this was to culminate in his great undertaking of the Dravida Mahabhashya. While with his patron in Thottikalai, and at his request he composed *Kalasai Sengalanir Vinayaga PillaiTamil* in praise of God Ganesa in Thottikalai Temple. The date of this composition is given as Saka year 1647, Kara, Kumbha 27 Revati, Friday Purvapaksha-2 ; in an appended verse corresponding to 1724. It was on this occasion his patron presented him a large plate full of gold mohurs which he took and at once distributed to the poor present on the occasion—an incident which illustrates how he was great in heart as he was in intellect. His Kalasai *Pathitrupattandi* was in praise of Thotti kalai Isvara. In it occurs the verse,

"சிவனெனு மொழியைக் கொடிய சண்டாளன்
செப்பிடி லவனுட னுறைக
அவனொடு கலந்து பேசுக வவனோ
டருகிருந் துண்ணுக வென்னும்
உவமையில் சுருதிப் பொருடனை நம்பா
ஆமரோ டுடன்பயில் கொடியோன்
இவனெனக் கழித்தா லையனே கதிவே
றெனக்கிலை கலசையாண்டகையே."

" *Parama Purusha* dwelling in Kalasai! if you give me up as the sinner associating himself with those fools who won't believe in the incomparable Text of the Upanishad which says, " If even the worst Pariah utters the sacred name " Siva " dwell at once with him, have loving speech with him, and sit near and eat with him, " I have no other refuge. "

This Text of the Upanishad is *quite* quoted by Sri Nilakanta Sivachariar in his Vedanta sutra Bhashya. But it is strange enough that the published editions do not contain this text. Perhaps it was left out as it would make the Upanishadtoo sectarian !

*Kulattur Pathitrupatthanthathi*, *Amudambigai Pillai-Tamil* were composed in praise of the God and Goddess of the Temple of Kulattur near Madras. His *Mudumozhi Venba* was addressed to the same God but it is an ethical work. The last two lines are a verse of the Sacred Kural and the first two lines contain an illustrative story of the principle from the Puranas and other works. Under கடவுள் வாழ்த்து, we find,

> சீர்கொளிறை யொன்றுண்டத் தெய்வ நீ யென்றொப்பால்
> சோர்விலடையாற் றெளிந்தோஞ் சோமேசா—வோரில்
> அகரமுதல வெழுத்தெல்லா மாதி
> பகவன் முதற்றே யுலகு.

Under வான்சிறப்பு occurs the following:—

> நேய புகழ்த்துணையார் நீராட்டுங் கைதளர்ந்துன்
> தூய முடிமேல் வீழ்ந்தார் சோமேசா—வாயுங்காற்
> றானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
> வானம் வழங்கா தெனின்.

Under கல்வி and கல்லாமை we find,

சம்பந்தர் நாவரசர் பாற்கண்டோம் சார்ந்துவப்ப
தும்பிரிவி னுள்ளுவதுஞ் சோமேசா—நம்பி
உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

மெய்த்திரு வள்ளுவனார் வென்றயர்த்தார் கல்விநலத்
துய்த்தசங்கத் தார் தாழ்ந்தார் சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

He composed a centum of verses in praise of the God in Tirumullaivayal near Madras.

Conjeeveram was the scene of his labours next and where he acquired two distinguished pupils in the person of Kachiappa Mudaliar and Saravana Bhaktar. While he composed the part of Kanchipuranam, the Second part was finished by his pupil Kachiapppa.

He composed also his *Kanchi Ananda Rudresar Pathikam*, *Anandakalippu* and *Andadi*. All these works are distinguished by what Pandits. call [illegible] and [illegible], (choice words and words full of meaning.) They are full of rhythm and the diction is clear and easy. What is most remarkable about these verses are however the highest philosophical truth which he has introduced into each. Even in his *Nattupadalam* and *Nagarapadalam*, he embellishes with his similies borrowed from philosophy.

போதமேலாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்குமா போன் மழை பெயன் மாறித்தீர்ந்துங்
காதல் செய்துறையும் புள்ளு மாக்களுங் கவன்று நெஞ்ச
நோதகமரங்க ளெல்லா நுண்டுளி துவற்றுமாதோ.

(Even after rains ceased the drippings from trees did not cease as the Vasanamala submits even after the destruction of Anavamala by the attaining of gnana).

விலகிவீ ழருவித் தாரை வேறுவே றுக வோடிக்
குலநதிப் பாலிவைப்பி னேகமாய்க் கூடுந் தோற்றம்
அலகில் பல் வழியு மூதா ரணிமையி னொன்று மாறும்
பலபல மதமுமீற்றி னொருவழிப் படலும் போலும்.

(As different religions lead us ultimately to the same true path, as so many roads join near a great city, so did the various streams join the River Palar).

வறுமையுற் றழியுந் தொண்டை வளமலி நாட்டோர் தங்கள்
இறுமுடல் வருந்தியேனு மீவதற் கொல்கா ரன்றே
தெறுகதிர் கனற்றும்வேனிற் பருவத்துஞ் சீர்மை குன்று
துறுமண லகடுகீண்டு மொண்புன லுதவும்பாலி.

(The people of *Thondainadu* will not even in their extreme poverty lack the power to give to the needy, even though they have to sacrifice themselves. So will the River Palar feed the multitude out of its springs even in the height of hot weather).

Among his controversial essays may be mentioned his *Ilakkana Vilakka Churavali*; and his reputation of Siva Sama Vadam on the word "எடுத்து" occurring in a verse of Siddhiar. His criticism of

the first verse of Kamban's Ramayana and his own answers there exemplify his remarkable versatile genius.

His *magnum opus* was of course his great commentary on Sivagnana Bhodam and all his rare erudition and skill as a dialectism are fully brought to bear on this work and we will notice its contents separately.

After a life of great usefulness and holiness, he was freed of his mortal coils in chaitra of Visvavasu just 121 years ago. And the following verse records this event.

*மன்னும் விசுவா வசுவருட மேடமதி*
*யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னும்*
*திருவாள னெங்கோன் சிவஞான தேவன்*
*திருமேனி நீங்கு தினம்.*

**J. M. NALLASAMY PILLAY,**

District Munsiff, Salem.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

சைவாகமங்களினுள்ளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞானபாதத்தோதிய பொருளினை யாராயு மாராய்ச்சி யிந்நூலின்கணெடுத்துக்கொள்ளப்பட்டது. இவ்வாராய்ச்சிக்குப் பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியா ரியாவரெனவும், இதனா னுதலப்படும்பொரு ளியாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியா யிதற்குமுன் னொருதலையா னுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயரியாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூலியாதெனவும், இந்நூல் செய்தா ரியாவரெனவும், பலவாற்றானாசங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சியுறற்பொருட் டிந்நூன்முகத் துரைக்கப்படுவதாகிய

## சிறப்புப்பாயிரம்.

"மலர்தலையுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மாநாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே" எனவரும்.

உயர் சிவஞானபோதமென்றது ஏனை மூன்று பாதத்தை யாராயு நூல்கட்கு மேற்பட்ட சிவஞானபோதமென்றவாறு, எனவே, அந்நூல்க ளுணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெற்றாம். பெறவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை யோதி யதன்பின் ஏனை மூன்றுபாதங்களை யாராயுநூன் முறையேகேட்டவ்வா றொழுகி மனந்துயராய் நித்தி யாநித்திய வுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி விடுபேற்றினவா மிக்குண்டாயவழி, அவர்க்கிந்நா லுணர்த்துகவென்பது போந்ததெனக்கொள்க.

இப்பாயிரப்பொரு ளாசிறுதியில் 'எந்தை சனற்குமரன்' என்னும் வெண்பாவாற் பெறப்படுதலின், ஈண்டுங் கூறுதல் கூறியது கூறலாம் பிறவெனின்,—ஆகாது; 'எந்தை சனற் குமரன்' என்பதனாற் பெறப்பட்டதனையே மாணாக்கர்க்கு நான்முகத் துணர்த்துதற்பொருட்டு ஈண்டுத் தந்துரைத்ததாகலா னென்பது. மிருகேந்திரத்திறுதியிற் கூறும் வரலாற்றினை நாராயணகண்டவாசிரியர் நான்முகத்துத் தந்துரைத்ததூஉ மிக்கருத்தேபற்றி யென்க.

இந்நா னந்திபெருமான் பெறுதற்கு வரலாறென்னையெனின்? கூறுதும். மாசங்கார முடிவின்கண் உலகங்களை மீளப்படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள் குடிலையினின்று நாதவடிவாயும், அதன்பின் விந்துவடிவாயும் அதன்பின் அக்கரவடிவாயு முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்ப்படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கருளிச் செய்தற்பொருட்டுப், பரமசிவன் ஈசானமுதலிய பஞ்சப்பிரம மனுக்களாகிய சத்திகளே திருமுடிமுதலிய வவயவங்களாகச் சகளநிட்களத் திருமேனிகொண்டருளிச், சதாசிவ மூர்த்தியாய் நின்று, தற்புருட முதலிய நான்கு திருமுகங்களான் வேதங்களைத் தோற்றுவித்து, வேதங்களை யனந்த

தேவர் வழியானே பிரமனுக்கருளிச்செய்து, ஈசானமுகத்தி னின்றுஞ் சிவாகமங்களைத் தோற்றுவித்து அச்சிவாகமங்க ளைப் பிரதிசங்கிதை முறையானே பிரணவர் முதலிய பதின் மரு மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய விருபத்தெ ண்மருக்குஞ் சிவபேத முருத்திரபேத மெனப்பகுத் தொ ரோவொன் றெவ்வொருவருக்கருளிச்செய்து, பின்பு மகவுக முறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தியேசரெண்ம ரின் முதல்வராகிய வனந்ததேவர்க் கருளிச்செய்தான். அவ ற்றை யனந்த தேவர் நூற்றுப்பதினெட்டுருத்திரரின் முத ல்வராகிய சிகண்டருத்திரருக் கருளிச்செய்தார். அவற்றைச் சிகண்டருத்திரர் கணங்கட்குந்தேவர்க்கு முனிவர்க்கு மளித் தற்பொருட்டு முதற்க ணந்திபெருமானுக் கருளிச்செய்தார். அங்ஙன மாகமங்களெல்லாங் கேட்டருளிய நந்திபெருமான் சிகண்ட முதல்வரை வணங்கிநின்று, சிவாகமந்தோறுஞ் சரி யை முதலிய நாற்பாதங்களுஞ் சிறுபான்மை வேறு வேருகக் கூறப்பட்டன; அவற்றுள் உண்மையாவ திது வென்றருளிச் செய்யவேண்டு மென்றிரந்து விண்ணப்பஞ்செய்து வினவ வழிச், சிகண்டருத்திரமுதல்வர் கருணை கூர்ந்து "நன்றே வினவினை; அனந்ததேவரெமக் கருளிச்செய்தவாறே கூறு கின்றேம்; கேட்பாயாக" என்றருளிக், கற்பந்தோறும் படை ப்பு வேறுபாடுங் கேட்போர் கருத்து வேறுபாடும் பற்றி அவற்றிற் கிரியைச் சரியை முதலிய மூன்று பாதங்களு மாக மங்களில் வெவ்வேருகக் கூறப்பட்டன.

ஆகலான், அவற்றுள் எவ்வாகமத்தின்வழி யார் தீக்கை பெற்றூர், அவ்வாகமத்தின் வழியவரொழுகற்பாலர். இனி ஞானபாதமாவது பொருட்டன்மை யுணர்த்துவதாகலின், அது பலதிறப்படுதல் பொருந்தாமையின், அவையெல்லாந் துலாருந்தகி முறைபற்றிக் கூறப்பட்டனவன்றி மாறுகோ ளில்லையென்பது வகுத்துணர்த்துதற்பொருட்டு இரௌரவா கமத்துட் பன்னிருசூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞான

போத மென்பதோர் படலம். அது கேட்டார்க்கெல்லா வாக மப் பொருள்களு மாறுகோளின்றி யினிது விளங்குமெனக் கூறி அச்சிவஞானபோதத்தை நந்திபெருமானுக் கருளிச்செய்தார். நந்திபெருமானும் அது கேட்ட துணையானே எல்லா வையமு நீங்கி மெய்ப்பொருடெளிந்து பின்னர்த் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ்சிறந்த சனற்குமாரமுனிகட் கருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ்சிறந்த சத்தியஞானதரிசனிகளுக் கருளிச்செய்தார். அவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ்சிறந்த பரஞ்சோதிமாமுனிகட் கருளிச்செய்தார். அவர் தமிழ்நாடுசெய்த தவத்தானே திருவெண்ணெய்நல்லூரி லவதரித்தருளி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையரா யெழுந்தருளியிருந்த மெய்கண்டதேவர்பால் வந்து சிவஞானபோதத்தை நல்கி, "இதனை யீண்டுள்ளோருணர்ந்துய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைக்க" வென்றருளிப், பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞானதரிசனிகள்பாற் றுங்கேட்டவாறே வகுத்தருளிச் செய்து நீங்க, அவருமவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளித், தம்முடைய மாணாக்கர் பல்லோருள்ளுஞ்சிறந்த அருணந்திசிவர்க் களித்தருளினர். இஃதிந் நூல்வந்த வரலாறெனக்கொள்க. பொழிப்புரையை வடநூலார் வார்த்திகமென்பர். பொழிப்பெனினுங் காண்டிகையெனினு மொக்கும். பொழிப்புரை பிண்டப்பொழிப்புரையெனவுங் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரையெனவுமிருவகைப்படும். அவற்றுளிது கண்ணழித்துக் கடாவிடைகளா னுரைக்கும் பொழிப்புரையென வுணர்ந்துகொள்க. இனி யாசிரியர் வார்த்திகப்பொழிப்பு உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படுமென்னும் வடமொழி மதஃபற்றி யீண்டுக் கருத்துரையு மேற்கோளு மேதுவுமுரைச்செய்யுளானுரைத்தார்; உதாரணம் பாச்செய்யுளானுரைத்தார்.

"இச்சிவஞானபோதத்து முன்னூறு சூத்திரங்களானே பெத்தத்தினின்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின், அவை

பொதுவியல்பெனவும், பின்னூறு சூத்திரங்களானே முத்தியி
னின்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின், அவை சிறப்பியல்
பெனவுமாம். இனிப் பொதுவியல் புணர்த்து நூல்கள் பொ
துவெனவுஞ் சிறப்பியல் புணர்த்து நூல்கள் சிறப்பெனவுங்
கூறப்படும். சிறப்பியல்பு சகசமாயுள்ளதாகலின், உண்மை
யெனவும் படும். பொதுவியல்பு அளவை முகத்தானு மிலக்
கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்த லென்னு
மிருதிறத்தா னுணரப்படும். சிறப்பியல்பு சாதகமுகத்தா
னும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்த
றெளித னிட்டை யென்னு நான்கு திறத்தா னுணரப்படும்.
கேட்டல் சிந்தித்த றெளித னிட்டைகளை வடநூலார் முறை
யே சிரவண மனன நிதித்தியாசன நிட்டை யென்ப. "பல
பொருட்குப் பொதுவாகிய விலக்கணம் பொதுவியல்பு" என்
றும் "ஒரு பொருட்கே யுரிய விலக்கணஞ் சிறப்பியல்பு"
என்றும் அளவைநூலார் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பி
யல்பு வேறு; "தடத்தலக்கணஞ் சொரூபலக்கண" மென்
னும் வடசொற்குப் பரியாயப் பெயரா யீண்டுக் கூறப்படும்
பொதுவியல்பு சிறப்பியல்பு வேறெனத் தெரிந்துணர்ந்துகொ
ள்க. இவ்விரு வேறு வகைக்குஞ் சொல்லொருமை மாத்தி
ரையே பற்றி மயங்கற்க.

சிவஞானபோதம் இங்ஙனம் பொதுவியல்புஞ் சிறப்பிய
ல்பு மொருங்குணர்த்தலின், முழு முத னூலாம். இனிச் சிவ
ஞானசித்தி சிவப்பிரகாச மென்பன முறையே யிவ்விலக்க
ணம் பெற்ற வழிநூலும் புடைநூலுமாம். மொழிபெயர்த்
துக் கூறு நூல்களின் ஞானாமிர்த முதலிய பெரும்பாலும்
பொதுவியல்புமாத்திரையே கூறுதலிற் பொதுநூலாம். திரு
வுந்தி திருக்களிற்றுப்படி முதலியன சிறப்பியல்பு மாத்திரை
யே கூறுதலின் உண்மை நூலாமென்பது. வடமொழியினும்
பௌட்கர மிருகேந்திர முதலிய சிவாகமங்கள் பெத்தத்தினி
ன்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின், அவை பொது நூலா

ம். சருவஞானோத்தர முதலிய சிவாகமங்கண் முத்திபினின்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின், அவையுண்மைநூலாம். உபநிடதங்களினுஞ் சுபாலமுதலிய வுபநிடதம் உலகந் தோன்றி யொடுங்கு முறைமையுந் தோற்றியொடுக்குதற் கொரு கருத்தா வுண்டென்னு மாத்திரையும் போல்வன வுணர்த்துதலிற் பொதுவெனப்படும், சாந்தோக்கிய முதலிய வுபநிடதங்கள் இருவகையுங் கூறுதலிற் பொதுவுஞ் சிறப்புமாம். அதர்வசிகை அதர்வசிரஞ் சுவேதாச்சுவதரமுதலிய வுபநிடதங்கண் முத்திநிலையேபற்றிச் சாதகமும் பயனுங்கூறுதலின், உண்மையெனப்படும். அதர்வசிகை முதலிய வுபநிடதங்களிற்கூறும் பொருள்களுஞ் சிவாகமப்பொருளை நோக்கும்வழிச் சூத்திரமும் பாடியமும் போலத் தூலாருந்ததி முறையாம். இக்கருத்துப் பற்றியே வேதம் பொது நூலெனவும் ஆகமஞ் சிறப்பு நூலெனவுந் திருமந்திர முதலியவற்றிற் கூறப்பட்டனவென் றுணர்க.

"வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்" என்றதூஉம் இம்முறை தெரிந்து கோடற்கென்க. இவ்வுண்மை யுணர்ந்து பொருள் கோடலே யுரைகோண் முறையாம். இனி யிவ்வுண்மை யுணர்ந்து பொருள்கொள்ளமாட்டாதார் உபநிடதங்க ளொன்றோடொன்று முரணு மெனவும் உபநிடதமுஞ் சிவாகமமுந் தம்முண் முரணுமெனவும், சிவாகமத்துள்ளு மொன்றோடொன்று முரணு மெனவு மயங்கி, ஒன்றன் பொருளேபற்றி யேனையவற்றை யிகழ்வர். அற்றே லஃதங்ஙனமாக; வேதாந்த சித்தாந்த நூல்கள் அங்ஙன மிரு வேறுவகைப்படுத்துக் கூறவேண்டியதென்னை? சிறப்பியல் பொன்றே கூறவமையுமாலோவெனின்,—அமையாது; ஆன்மாக்கள் அங்ஙனந் தத்தமக்குரிய சோபான முறையினறிந்து வருந் தன்மைக்கேற்பத் தூலாருந்ததி நியாயமாக வுணர்த்தவேண்டுமாதலி னென்க. "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புக

ன்மிருதி வழியுமூன்றும் புகலுமாச்சிரம, வறத்துறைகளவை யடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து புராணங்கள் படித்துஞ், சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத், திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்ற நூஉ மிவ்வியல்பு நோக்கியே யென்க.

இங்ஙன மிவ்விருவகை யியல்பும் வேறுவேறுகூறு மாக மங்களின் பொருளொருமை யுணரமாட்டாது, ஒரோவொன் றேபற்றி யைக்கியவாத முதற்பல திறத்தான் வேறுபட்டுத் தம்முண் மயங்குவார்க்கு அங்ஙனமயங்காது அவற்றின் பொ ருளொருமை யுணர்த்துதற் கெழுந்தது இச்சிவஞானபோத மென்றறிக. இஃதறியாதார் எல்லாவாகமப்பொருளையும் பன் னிரு சூத்திரத்தாற் றொகுத்து விளக்குதற்கெழுந்தது இந்நூ லென்றுரைப்ப. மிருகேந்திரத்தின் முதற்கண்ணதாகிய ஒரு சூத்திரத்தானே எல்லாவாகமப்பொருளுந் தொகுத்தெடுத்து விளக்கப்பட்டனவென்பது ஆண்டே யறியக்கிடத்தலானும், மற்று மங்ஙனந் தொகுத்துக்கூறு மாகமங்கள் பலவுள வாத லானும், அதுபற்றி யிதன்கட்போந்த விசேடமின்மையானு ம், 'நாடிக்கண்டு மயர் வற வளித்த, 'சிவஞானபோத' மெ ன்பதற்குத் தாற்பரிய மதுவாகாமையானும், அவ ருரைப்ப ன வெல்லாம் போலியென்றொழிக. 'சிவஞானபோத' மெ ன்பதூம் இக்காரணத்தாற் பெற்ற பெயர். அஃதெவ்வாறெ ன்னின்? "உயர்ஞான மிரண்டா மாரு மலமகல வகலாத மன்னுபோதத் - திருவருளோன் றென்றதனைத் தெரிய வோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்புநாலே" என்ப வாகலின், பரஞான மபரஞான மென்றிரண்டுஞ் சிவஞான மெனப்படும். அவற்றுட் பரஞானத்தைப் போதிப்ப தெல் லாவாகமங்கட்கும் பொதுவாகலின், ஈண்டுச் சிவஞானமெ ன்றது அவ்வபரஞானமாகிய சிவஞானமேயாம். போதம்

போதித்தல். அவற்றி னிச்சயப்பொரு ளிதுவென வுண ர்த்துதலாம். ஆகவே, சைவாகமங்களின் பொருணிச்சய முணர்த்துவது சிவஞானபோதமெனக் காரணக்குறியாயிற் றென் றுணர்க. இப்பொருள் வடமொழிச் சிவஞானபோ தத்துப் பன்னிரண்டாஞ்சூத்திரத்திற் பிற்பாதியிற் கூறி யவாறுபற்றி யுரைக்கப்பட்டது. சிவஞானமெனப் பொதுப் படக் கூறினுந்தலைமைபற்றி ஞானபாதமே கொள்ளப்படும். ஞானபாதத்திற்குத் தலைமை "கிரியை யென மருவுமவை யாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்" என்பதனாலறிக. அற் றேல், ஏனை மூன்றுபாதப் பொருள்களையாராயு நூல்க ளியா வையெனின்? அவை சோமசம்புசிவாசாரியர் செய்த கிரி யா காண்டக் கிரமாவலி முதலியவாமென்க. அற்றேல், ஞா னபாதப்பொருளாராய்ச்சி நூலும் பிற்காலத் தாசிரியன்மா ரே கூறவமையும்; ஆகமத்துட்கூறவேண்டாம் பிறவெனின்? ஆசிரியன்மார் அவை யனுட்டிக்குமுறை யாராயப்புகுந்தா ன்றி அவற்றிற்குப் பொருளொருமை கூறப் புகுந்தாரல்லர்; " அவை சிறுபான்மை தம்முள் வேறுபாடுடைய " என்றும், " யார் யார் எவ்வாகமத்தின் முறையே தீக்கை பெற்றார் அவ ரவர் அவ்வாகமத்தின் முறையே யனுட்டிக்க" என்றும் "எக் கோயில் எவ்வாகமத்தின் முறை பிரதிட்டை செய்யப்பட் டது அக்கோயிலுக் கவ்வாகமத்தின் முறையே பூசை விழா முதலிய நடாத்துக" என்றும், "மாறிச் செய்யிற் குற்றம்" என்றும், ஆகமங்களே கூறுதலின், அவற்றிற்குப் பொரு ளொருமை காட்டலாகாமையின், கற்பபேதத்தானும், ஆன் மாக்கள் கருத்து வேறுபாட்டானும், அவ்வவற்றிற் கேற்பச் சிறுபான்மை தம்முள் வேறுபடக் கூறுதல் பொருத்தமு டைத் தென்பதுபற்றி யவற்றைக் கூறு மாகமங்கள் சிறுபா ன்மை யங்ஙனம் வேறுபட நிகழ்ந்தன.

இனி ஞானபாதமாவது பொருட்டன்மை யுணர்த்துவ தாகலின், ஆண்டு வேறுபடுதல் பொருந்தாதாயினும், ஆன்

மாக்களின் மலபரிபாக தாரதம்மியத்திற் கேற்பத் தூலாருந் ததி முறைமைத்தாக வுணர்த்துதன் மரபென்பதுபற்றி, அங் ஙனங் கூறு மாகமங்களை நோக்குவோர் அவை யொன்றோ டொன்று முரணுவனபோலக் கருதி மயங்குவர். அங்ஙன மயங்காமைப் பொருட்டு ஞானபாதப் பொருள்களை யெல் லாம் பொது வுண்மையென விருவகைப்படுத்து ஆராய்ச்சி செய்தொருதலையா னுணர்த்தவேண்டுதலின், அஃதேனையோ ர லாகாமையின் வேண்டுமென்க. அங்ஙன முரணுவன போலத் தோன்றுவன யாவையெனின்? சுவாயம்புவ முத லியவற்றிற் பதார்த்த மேழென்றலும், பௌட்கர முதலியவ ற்றி னாறென்றலும், பராக்கியை முதலியவற்றி னைந்தென் றலும், சருவ ஞானோத்தர முதலியவற்றி னான்கென்றலும், இரௌரவ மிருகேந்திர முதலியவற்றின் மூன்றென்றலும், போல்வனவா மென்க. அவை யெல்லா மூன்றென்றதனு ளடங்குதலின், முப்பொரு ளொன்றலே எல்லாவாகமங்கட் குந் துணிபெனக் காட்டுதல்போல்வன பொரு ளொருமை கூறுதலா மென்பது.

## வேதாகமப் பிராமாணியம்.

வைதிகரி லொருசாரார் "வேதம் பிரமாண நூல்" என் றும், "சிவாகமம் பிரமாணநூலன்" றென்றுங் கூறுவர். சைவரிலொருசாரார் "சிவாகமம் பிரமாணநூ" லென்றும், "வேதமதுபோல்வதோர் பிரமாணநூலன்" றென்றும், கூறு வர். நீலகண்டவாசிரியர் அப்பயதீக்கிதர் முதலிய சிவாத்து வித சைவாசிரியர்கள் நீலகண்டபாடியம், சிவாதித்தமணிதீ பிகை, சிவதத்துவவிவேக முதலியவற்றில், அவ் வைதிகரை மறுத்துச் சிவாகமப்பிராமாணியம் வலியுறுத்துரைத்தார். அரதத்தசிவாசாரியர் உமாபதிசிவாசாரியர் முதலிய வைதிக சித்தாந்த சைவாசாரியர் சதுர்வேததாற்பரிய சங்கிரகம், பௌட்கரவிருத்தி முதலியவற்றில், வேதாகமப்பிராமாணி யம் வலியுறுத் துரைத்தார்.

"வேதங்களொருவராற் செய்யப்படாது நிலைபேறுடைமையானும், ஆன்றோராற் றழுவப்படுதலானும், குற்றமின்றிப் பிரமாணமாமென்பது துணியப்படும். ஆகமங்களவ்வாறு நித்தமன்றி யொருவராற் செய்யப்பட்டமையானும், பிரமப்பொருள் வேதமொன்றானே யுணரப்படுமென்ப தெல்லார்க்கு மொப்பமுடிந்தமை யானும், அங்ஙனமாயினு மிருதி நூன்முதலியனபோல வேதமுதனூலாகக்கொண் டாகமங்கள் செய்யப்பட்டனவெனின்? அது நம்மனோர்க்குக் கொள்கையன்மையானும், அங்ஙனங்கொள்ளின், வேதப்பொருளுணர்ந்து நூல்செய்த மனுமுதலியோர்போல வாகமஞ்செய்த விறைவனுக்கு முற்றுணர்வின்மை பெறப்படுதலானும், அவ்வாறன்றி முற்றுணர்வியல்பாகவுடைய விறைவனாற் செய்யப்பட்டமையின் ஆகமங்கள் பிரமாணமெனக்கூறின், முற்றுணர்வுடைய விறைவனுண்மை துணிந்தபின்னர் அவனாற் செய்யப்பட்டமையி னாகமம் பிரமாணமெனத்துணியப்படும். ஆகமம் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அதனாலிறைவனுண்மை துணியப்படுமென, ஒன்றனையொன்று பற்றுத லென்னுங் குற்றமாமாகலானும், ஆகமம் பிரமாணமென்பது தெளியப்படாதாம்; அல்லதூஉம், வாசிட்டலயிங்கத்திற் " பாஞ்சராத்திரம் புகழ்ந்தெடுத் தொருசிலர் பகர்வார் " என்பது முதலாகத் தந்திரவழி யொழுகுவோரை எடுத்துக்கூறி " அவர்மாமூட " ரெனவும், பாற்பபுராணத்தில் வசிட்டனுக்குந் திலீபனுக்குங் கூற்று நிகழ்வுழித் "திராவிட தேசந்தனிற் சித்திரசேனனென்பா" னென்றெடுத்துக்கொண்டு, " சித்திரசேனனென்னு மரசன் பாசண்டர்கூற்றேபற்றி வைதிக வொழுக்கத்தைக் கைவிட்டுப் பாசுபதவழியொழுகி நரகத்தில் வீழ்ந்தா " னெனவும், வாசிட்டலயிங்கத்திற் " சாண்டில்லிய னென்பானொருவன் றறுகண்ணனுய்ப் பிறர்மனை நயந்து வாசுதேவனைத் தீங்குநெறியானே வழிபட்டு நிரயத்தில் வீழ்ந்தா " னெனவுஞ், சூதசங்கிதையின் " மொழிபாஞ்ச

ராத்திரங் காபாலங் காளா முகஞ்சாத்தம் பவுத்த மாருகதந் தன்னிற். கழிபாசு பதநூல்சாம் பவத்திற் றிக்கை காதலிப் பிர் வேதிபரிற் கடையர் காணிர்" என்றற்றொடக்கத்தாற் "றந்திரவழிபொழுகுதல் பொய்த்தொழி லுணர்ந்து வெகுண்ட கௌதமன் சாபப்பய" னெனவுங் கூர்மபுராணத்தில் "அனைவருமரன் றனையரிவை யண்மி" யென்றெடுத்துக்கொண்டு "அறமுனிவரிட்ட சாபவயத்தானே வேட்பித்தன் முதலியவற்றி னதிகாரமின்மையான் விருத்தியின்றி வருந்துவோர்க்கு விருத்தியின்பொருட்டுத் தந்திரஞ் செய்யப்பட்ட" தெனவும், அதனுள் "மோகநாரிருவோமுஞ் செய்வோம் விடைக்கொடியா" யென்பதனு லாகமங்கண் மோகிப்பிக்கு நூலெனவுங் கூறுதலால், ஆகமம் பிரமாணமல்லவென்பதே தெற்றென விளங்குமாகலின், அவை வீடுபேறு முதலிய மறுமைப்பயன் பயப்பிக்குமா றென்னையெனின்? கூறுதும்.

வேத நித்தமென்பதற்குப் பிரமாண மின்மையானும், தோற்றக்கேடுகள் காணப்படுதலா னநித்தமென்பதே துணியப்படுதலானும், 'அந்தக்ககரமேயிது' வென்னுமறிந்துணர்வு அந்தக்கடமே யிதுவென்பதுபோலச் சாதியொருமைபற்றி நிகழ்வதேயாதலானும், அவ்வாறன்றி யெழுத்துக்கணித்தமெனக் கொள்ளினும் அவையொன்றோடொன்று தொடர்படுத்துவருஞ் சொற்க ளநித்தமேயாகலானும், உலகத்திற்குத்தோற்ற மொடுக்கங்களுண்மையிற் பிரவாகநித்தமென்பதும் பொருந்தாமையானும், எல்லாவுயிர்கண்மாட்டும் பேரருளுடைய பரமசிவனாற் செய்யப்பட்டமைபற்றியே வேதங்கட்குப் பிரமாண முண்மை கொள்ளப்படும். அம்முறையானே சிவாகமங்களும் பிரமாணமாத றுணியப்படும். அது "வேதமுதலாக மந்தாதிறுதியாகியவெல்லா நெறியும் பரமசிவனாற் செய்யப்பட்டமையானும், இறுதிக்காலத்துப் பரமசிவனிடத் தொடுங்கிய வேதம் படைப்புக்காலத்து முன்போலவே தோன்றுதலானும், 'நித்த' மென்றுபசரித்துக் கூறப்

படும். ஆகலின், சிவாகமங்களை நித்தமென்பது மிக்கருத் தேபற்றி யென்க. அங்ஙன மல்லாக்கால், "வேதம் பரம சிவனாற் செய்யப்பட்ட" தென்னுஞ் சுருதிகளோடும், "அட்டாதச வித்தைக்கு முதற்கருத்தாவாகிய சூலபாணி" யென் றற்றொடக்கத்துப் புராணவசனங்களோடும் ஈண்டுக்கூறும் அனுமானவளவையோடும், முரணுமாறறிக.

ஒருவனின்னேன் வந்தேனென்புழி அவனு மவன் வாய் மொழியும்போல, முதல்வனு முதல்வனாற் செய்யப்படும் வேதாகமங்களுந் தம்முட் காரகவேதுவு ஞாபகவேதுவுமாகிய வேறுபாடுடைமையின், இன்னோரன்னவை யொன்றனை யொன்று பற்றுதலென்னுங் குற்றமாகா வென்க. இனி யான் றோராற் றழுவப்பட்டமைபற்றி வேதஞ் சிவாகமமிரண்டும் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அவற்றானே யவை பரம சிவனாற் செய்யப்பட்டனவென்பது துணியப்படுமாகலானு மொன்றனையொன்றுபற்றுத லாகாமையு முணர்க. ஆன் றோராற் றழுவப்படுத லாகமப்பகுதியினின்றாலெனின்? அற் றன்று; "துறக்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தான் வேட்க" வென்றற் றொடக்கத்துச் சுருதிகட்கு அவை வேட்குமாறு வகுத்துக் கூறுஞ் சுருதிகளு மத்தன்மையவாகிய கற்ப சூத்திரங்களு மின்றியமையாது வேண்டப்படுமாறு போல வேதத்துள் விதிக்கப்படுஞ் சிவபூசை முதலிய விதிக ட்கும் அவற்றை வகுத்துக் கூறுங் காமிக முதலிய சிவாகம ங்க ளின்றியமையாது வேண்டப்பட்டு நிற்றலின், அவை யா ன்றோராற் றழுவப்படுத லொருதலையாகலானென்க. இது சதுர்வேததாற்பரியசங்கிரகத்தில் அரதத்தாசாரியர் கூறிய வாற்றானறிக. அங்ஙனமாயினுந் தீக்கைப்பே றன்றோராற் றழுவப்படாமையின், அப்பகுதியிற் பிரமாணமாமாறென்னை யெனின்? அற்றன்று; சுவேதன் உபமன்னியன் அகத்தி யன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு காண்டலானென்க.

உபமன்னியன் அகத்தியன் முதலியோர்பாற் கண்ணன் இரா
மன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு அரிவஞ்சம் பாரதம்
பாற்பபுராண முதலியவற்றின் விரித்துக்கூறியவாறுங்காண்க.
அஃதெல்லாரும் பெறுமை, எல்லாருக்கு மலபரிபாக மின்
மையாற், பரமகஞ்ச சந்நியாசம்போல, அதற்குரிய வதிகாரி
கள் சிலரேயாகலானென்பது. அற்றேல், வாமநூல் முதலா
யினவும் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், காமிகமுதலிய
வற்றோடொப்பப் பிரமாணமாதல் வேண்டப்படும் பிறவெ
னின்? படாது; அவற்றுட் கூறுஞ் சுரைக்குடந்தாபித்தன்
முதலிய வாசாரங்கள் வேதத்து ளெடுத்தோதி விலக்கப்பட்
டமையிற், சவுத்திராமணியாகத்திற் சுரையேற்றல் வேதத்
துள் விதிக்கப்பட்டதாயினு மேனையோர்க்கேயாயவாறுபோ
ல, அவையும் ஏனையோர்க்கே யுரியவென்பது பெறுதுமாக
லின், அவையு மவற்றிற்குரிய வதிகாரிகள் வேறுபாட்டாற்
பிரமாணமாமெனக் கொள்ளப்படுமென்க. அங்ஙனமாயின்,
அது வேத விதியோடு முரணுமாலோவெனின்? அவற்றுட்
கூறுங் கிரியைகட்கு வேதநெறியிற்றப்பியமாந்த ரதிகாரிக
ளெனப் பிரித்துவைத்தலான் முரணாதென்க. இது காந்தத்
துட் கூறப்பட்டது.

இனிப்பொருள்கண் முரணியவழி வலியவற்றான் மெலி
யவை கண்டிக்கப்படுமெனக் கொள்க. எல்லாநெறியு மிறை
வனாற் செய்யப்பட்டமையான் விசேடமின்மையின் அவற்று
ளொன்றற்கொன்று வன்மை மென்மை கூறின், இதுவே
மாறுகொளக் கூறலாமாலெனின்? அற்றன்று; அவற்றைப்
பின் வழிப்படுத்து நூல்செய்தோர் தாரதம்மியத்தானே யவ
ற்றிற்கு வன்மை மென்மை கூறுதலமையுமாகலின், பின்னூ
ல் செய்தார் அவ்வந்நெறியிற் கூறும்பொருள்களை யம்மொழி
யின் றாற்பரிய மறியாது மயங்கி அவற்றோடு மாறுகொளத்
தொகுத்தும் விரித்துஞ் செய்தாராகலின், அவை மென்மை
யெனப்பட்டன. மாறுகோளில் கூற்றினெல்லாம் பிரமாண

மேயாமென்க. இனி வேதத்தினுஞ் சிவாகமத்தினு மிந்திரன் முதலியோர் அவ்வாறு வழிப்படுத்து வேறு நூல் செய்யாது, வேதத்திற்கு வியாசர் முதலியோரும் ஆகமத்துக்குப் பிரணவர் முதலியோரும்போலச் சம்பிரதாயமாத்திரமே விளக்கினாராகலின், அவ்விரண்டினுள் வன்மை மென்மைகள் கூறுதல் பொருந்தாமையின், அவற்றுளொரோவழி மாறுகோள்போலத் தோன்றியவழி, வேதவாக்கியங்கடம்முண் மாறுபட்டவழிக்கருத்து வேறுபாடு பற்றிக் கூறியதெனத் தெரிந்துரைத்துக்கொள்வதுபோல, அவை முரணாதவாறு தெரிந்துரைத்துக்கொள்வதன்றி, அவை யொன்றனொன்று மறுக்கப்படாவெங்க.

இவ்வாறன்றி, இன்னுமொருவாற்றான் விடுக்குமாறு: ஈருவாக முதலிய வெல்லாச்சமயமும் பரமசிவனாற் செய்யப்பட்டமையிற் பிரமாணமேயாமாயினும், அவற்றுண் முதற்கண் மிகவுமந்தவுணர்வினரா யுலகவின்பமே பெரும்பயனெனவுந் தமக்குப்புறம்பாகிய மக்கண் முதலியோரே யான்மாவெனவு மபிமானஞ் செய்துழலுமதிகாரிகளுக்குப், பரமசிவனிரங்கித், துன்ப முதலிய வற்றோடு விரவுதலா னுலகவின்பம் பேருறுதிப்பயனன்றெனவு மக்கண் முதலியோ ரான்மாவல்லரெனவு முணர்த்தி, அவர்களுணர்வு அவ்வளவி னிலைபெறுதற் பொருட்டு நுட்பப்பொரு ளுணர்த்தப் புகிற் கொள்ளமாட்டாமையாற் றாலவுடம்பே யான்மாவெனவும் அவ்வுடம்புசுசித்தலே பேருறுதிப் பயனெனவு மறிவுறுத்தருளினன். பின்பங்ஙன மறிவுறுத்த நெறியே யொழுகிப் பரமசிவன் றிருவருட்குரியராய் மலசத்திபிற்சிறிது நீங்கி, உடம்பே யான்மா உடம்பு சுசித்தலே பெரும்பய னென்பவற்றினையப்பாடு தோன்றிய வதிகாரிகளுக்கு, உடம்பு முதலியன வான்மாவல்லவென்று மறுத்தற்பொருட்டுப் புத்தநூ லறிவுறுத்தருளினன். இவ்வாறே மேலுஞ் சோபானமுறை யானுபதேசித்தருளியதென மாறுபாடின்மை யுணர்ந்துகொள்ளப்படும்.

இங்ஙனஞ்சாருவாக முதலிய நூல்களைச்சோபானமுறையாற்
கொள்ளவே, அதிகாரி தாரதம்மியத்தான் மேலுள்ள நூல்க
ள் கீழுள்ள நூல்களை மறுக்குமுகத்தாற் றோன்றினவாகலின்,
மாறுகோளில்லையென்பதூஉம், அவையு மொருவாற்றாற் பிர
மாணமேயாமென்பதூஉம், போந்தமையுணர்க.

இது தயித்திரியத்தி லதிகாரிபேதம்பற்றி "அன்னமய
கோசம் பிரம" மென்றும், அதனை மறுத்து மேலதனிற் சூக்
குமமாகிய "பிராணமயகோசம் பிரம" மென்றும், அதற்கு
மேல் "மனோமயகோசம் பிரம" மென்றும், அதற்குமேல்
"விஞ்ஞானமயகோசம் பிரம" மென்றும், அதற்குமேல் "ஆ
னந்தமயகோசம் பிரம" மென்றும், ஒன்றற்கொன்று சூக்கு
மமா யுணர்த்துதல் போலவும், கவுசிதகவுபநிடதத்தி லதிகாரி
பேதத்தால் இந்திரன் றபித்தியனுக்குத் தன்னையே பிரமமா
கக் கூறியதுபோலவுங் கொள்க. அங்ஙனம் புல்லையெதிரே
காட்டி யாக்களைப் பிடிக்குமாறுபோலச் சோபானமுறைமை
பற்றிக் கூறியதென்பதும், அவையெல்லா மொருவாற்றாற்
பிரமாணமென்பதும், சூதசங்கிதையிற் காண்க. இங்ஙனங்
கூறியவாற்றானே, வேதமுஞ் சித்தாந்த சைவாகமமுமென்
று மிரண்டுமே யுத்தமநூலெனவும், ஏனைச் சாருவாகமுதற்
பாஞ்சராத்திர மிறுதியாகிய நூல்களெல்லா மிவ்விரண்டினொ
டு மாறுபட்டவழி மறுக்கப்படுமெனவும், அவற்றுள்ளும் வ
ழிநூல் செய்தார் தாரதம்மியத்தாற் கீழ்க்கீழ் நூல்கண் மே
ன்மேனூல்களான் மறுக்கப்படுமெனவும், உணர்ந்து கொள்க.

இனித் "தந்திரவழி யொழுகினோர் மூட" ரெனவும்,
"நிரயத்தில் வீழ்ந்தா" ரெனவும், "அவை சாபப்பய" னென
வும், "விருத்திப் பொருட்" டெனவும், "மோகநூ" லெனவு
ம் புராணங்களிற் கூறியது, வேதப்பொருளொடு மாறுகொ
ளக் கூறும் பாசுபதம் பாஞ்சராத்திர முதலிய புறச்சமயங்க
ளையாம்; வேதப்பொருளையே விரித்துக் கூறப்புகுந்த வேத

சாரமாகிய சித்தாந்த சைவாகமங்களே யன்றெனவுணர்க. இதுவும் வாயவ்வியசங்கிதை சனற்குமாரசங்கிதை கூர்மபுராண மகுடாகம முதலியவற்றுட் கூறியவாறு. இனிப் புறச்சமயவழி யொழுகினேரை யங்ஙன மிழித்துக் கூறியதூஉம், அந்நெறி யொழுகுதல் பற்றியன்று; மற்றென்னெனின்? அவற்றையே பொருளாகக் கொண்டு வேதநெறியை நிந்தித்தமை பற்றி யென்க. அதுவும் ஆண்டே கூறப்பட்டது.

புறச்சமய நூல்கள் விருத்திப் பொருட்டுச் செய்யப்பட்டன வென்பதூஉம், உடலோம்புதற் பொருட்டென்றதன்று; விருத்தி யொழுக்கமுமாமாகலிற் சாபத்தால் வேதநெறியி னீங்கினே ராசரித்தற்பொருட் டென்றவாறும். மோக நூலென்றதூஉம், மணிமந்திர மருநது முதலியவற்றுன் விம்மிதம்பயக்கு நூலென்றவாறேயாம். இனி வேதமுஞ் சிவாகமமு மொன்றேயாயினு மிருபகுதிப்பட்டது, வேத மூன்று வருணத்தார்க்குஞ் சிவாகம நான்குவருணத்தாருக்கும் பொதுவாதல்பற்றி யாதலாற் சிவாகமங்கள் பிரமாணமென்பது தெற்றெனவுணர்க. இங்ஙனஞ் சைவாகமங்களுக்குப் பிராமாணியம் பௌட்கரவுரையி னுமாபதிசிவாசாரியர் காட்டியவாறே காண்க. நீலகண்டபாடியத்திற் பதியதிகரணத்திற் காட்டுமாறு, "சிவாகமங்களி னெருசாரன பரப்பிரமங் கேவல நிமித்தகாரண" மெனக்கூறும்; அதனை மறுத்தற்கெழுந்த திவ்வதிகரணமென் றுரைப்பாருமுளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத்திற்கும் வேற்றுமைகண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் வேதமுஞ் சிவாகமமென வழங்கப்படுமாதலாற் சிவாகம மூன்றுவருணத்துக்கே யுரித்தாயது நான்குவருணத்துக்கே யுரித்தாயதுமென விருவகைப்படும்; அவற்றுண் முன்னையது வேதமெனவும் பின்னையது சிவாகமமெனவும் வழங்கப்பட்டன; இவ்விரண்டுஞ்செய்த கருத்தன் சிவனெருவனேயாம்; இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் கூறப்பட்டது; பஞ்ச

ப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதமுதலிய மந்திரங் களும், பதி பசு பாச முதலிய பொருள் வழக்கமும், திருநீற் றி னுத்தூளனந் திரிபுண்டர முருத்திராக்கந் தரித்தல் சிவலி ங்கபூசை முதலிய தருமங்களும், பிறவும், வேதஞ் சிவாகம மிரண்டினு மொப்பக்காண்டலான், அவ்விரண்டும் பிரமாண மேயாகலானும், கருத்தா வொருவனேயாகலா னவ்விரண்டிற் கும் பொருளொன்றேயாகலின் அவற்றுள்ளு மாறுபாடின் மையானும், இவ்வதிகரணங் கேவல நிமித்தமாத்திரமே யி றைவனெனக்கூறு மிரணியகருப்பநூலாகிய யோகசாத்திரத் தை மறுத்தற் கெழுந்ததெனவே யாங் கூறுதும்" என்றிவ் வாறு நீலகண்டவாசாரியராற் காட்டப்பட்டது. இதனை வி ரித்துச் சிவாதித்தமணிதீபிகை சிவதத்துவவிவேகமுதலிய நூலுடையார் சிவாகமங்கட்குப் பிராமாணியங் காட்டியவா றும் அந்நூல்களுட்காண்க.

வேதஞ் சிவாகமமென விருபகுதிப்பட்டது, மூன்றுவ ருணத்திற்கு முரிமையாதலு நான்குவருணத்திற்கு முரிமை யாதலும் பற்றியென நீலகண்டபாடியத்திற் கூறப்பட்டது. "வேதநூல் சைவநூலென் றிரண்டேநூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க, ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுச்சைவ மருஞ்சிறப்பு நூலா, நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு நிகழ்த்தியது நீண்ம றையி னொழிபொருள் வேதாந்தத், தீதில்பொருள் கொண் டுரைக்கு நூல்சைவம் பிறநூ றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சி த்தாந்த மாகும்" எ-ம், "உலகியல் வேதநூ லொழுக்க மென் பது, நிலவு மெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்" எ-ம் கூறு பவாகலின், அங்ஙனந் தூலாருந்ததி முறைமைபற்றிக் கூறு தலின் இருபகுதிப்பட்டதெனவே யாங் கோடும்.

இனிச் சைவரிலொருசாரார் சைவாகமங்களில், "உலக நூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திர" மென நூல்களையைவகைப்படுத்து, "மாந்திரமொழிந்த நான்

கும் புறநா" லென வைதிகத்தினையும் அவற்றுடன் விலக்கு தலானும், "வேதாந்தத்திலேகனேயான்மா" வென வேதாந்த தைப் புறச்சமயங்களோ டெடுத்தோதி மறுத்தலானும்' வேதம் பிரமாணமன்றென்பர். அது பகுத்துணர்வில்லாதார் கூற்றேயா மென்று மறுக்க, என்னை? "ஆண்டு 'வைதிக' மென்றது மீமாஞ்சைநாலும், வைசேடிகநூலும், நையாயிகநூலுமென்னு மூன்றுமேயா" மெனவும், "புறச்சமயங்களோடு வைத்தெண்ணிய 'வேதாந்த' மாவது ஏகான்மவாதங்கூறும் வியாசநூ" லெனவும், சித்தாந்தப்பிரகாசிகையிற் சர்வான்ம சம்புசிவாசாரியர் கூறுதலான், அது வேறென்பது தெற்றென விளங்குமாகலின், ஆண்டு "வேத" மென்றதூஉம் மீமாஞ்சை நூலையெனக்கொள்க; வேதத்துள் விதித்த கருமகாண்டத்தை யாராய்ச்சிசெய்தலின் அதற்கு மப்பெயராயிற்று. அங்ஙனங் கொள்ளாக்கால், வேதசாரஞ் சிவாகம மாதலாற் "சைவாசாரத்திற்குரியோன் வைதிக" னெனவும், "வேதாந்தப்பொருளைத் தெளித்துக் கூறுவது சித்தாந்த" மெனவும், "பிறநூல் பிற பொருள்களைக்கூறு" மெனவும், வேதத்தோ டொற்றுமை யுடைமைபற்றியே சிவாகமங்கட்குப் பிரமாணமாதல் கூறும் வசனங்களோடு முரணுமாறறிக. 'பாசுபத' மென்பது யோகப் பெயராற் சைவாகமங்கட்கும் உரூடப் பெயராற் பாசுபதாகமங்கட்கு மாமாறுபோல, 'வேதாந்த' மென்பது யோகப்பெயரான் வேதத்தின் முடிபாகிய வுபநிடதங்களைக் கூறும்; உரூடப்பெயரால் அவற்றை யெடுத்துச் செய்த வேகான்மவாதநூலைக் கூறும். ஆதலின், அவ்விரு வேறுவகையுந் தெரிந்துணர்ந்து கொள்க.

வேதமோதுதற்கண்ணும் வைதிகாசாரத்தின்கண்ணும் உபநயனப் பேறுடையார்க்கன்றி யதிகாரமின்மைபோலச் சைவாகம மோதுதற்கண்ணுஞ் சைவாசாரத்தின்கண்ணுஞ் சிவதீக்கைப் பேறுடையார்க்கன்றி யதிகார மில்லையெனக் கொள்க.

வேதத்திற் கூறுங் கருமகாண்டப் பொருட்கு இன்றியமையாது வேண்டப்பட் டெஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய வுபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் மேலெடுத்துக்கொண்டு இனிது விளக்குதலின், சிவாகமஞ் சித்தாந்த சாத்திர மென்று வழங்கப்படும். இச்சித்தாந்த வாகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாத மென நான்கு பாதங்களுடையனவாம்.

இவற்றுள், சரியாபாதத்துட் பிராயச்சித்தவிதியும், பவித்திரவிதியும், சிவலிங்க விலக்கணமும், நந்தி முதலிய கணநாதரிலக்கணமும், செபமாலை யோகபட்டந் தண்டங் கமண்டல முதலியவற்றி னிலக்கணமும், அந்தியேட்டிவிதியும், சிரார்த்தவிதியும் கூறப்படும்.

கிரியாபாதத்துள் மந்திரங்களினது உத்தாரணஞ் சந்தியாவந்தனம் பூசை செபம் ஓமங்களும், சமயம் விசேட நிருவாணம் ஆசாரியாபிடேகங்களும், புத்தி முத்திகளுக் குபாயமான தீக்கையும் கூறப்படும்.

யோகபாதத்துள் முப்பத்தாறு தத்துவங்களும், தத்துவேசுரரும், ஆன்மாவும், பரமசிவனும், சத்தியும், சகத்திற்குக் காரணமான மாயை மாமாயைகளைக் காணும் வல்லமையும், அணிமாதி சித்திகளுண்டா முறைமையும், இயம நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரந் தாரணைந் தியானஞ் சமாதிகளினுடைய முறைமையும், மூலாதார முதலிய ஆதாரங்களின் முறையும் கூறப்படும்.

ஞானபாதத்துட் பரமசிவனுடைய சொரூபமும், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னு மான்மாக்களின் சொரூபமும், ஆணவங் காமிய மாயேயம் வைந்தவந் திரோதான சத்தி என்னும் பாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும், சிவதத்துவமுதற் பிரகிருதி தத்துவம்வரை முப்பத்

தாறு தத்துவங்களினது உற்பத்தியும், இவை யான்மாக்கள் போகம் புசிக்கைக்குக் கருவியாமுறையும், புவனங்கள் புவனேசுவரர் சொரூபங்களும், புவனங்களின் யோசனைப் பிரமாணங்களும், அதமப் பிரளய மத்திமப்பிரளய மகாப் பிரளயங்களின் சொரூபங்களும், அதமப் பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டியா முறைமையும், பாசுபதம் மாவிரதங் காபாலிக முதலிய மதங்களின் சொரூபங்களும் கூறப்படும்.

உயர் சிவஞானபோதமெனவே யாப்பும், கேட்போரும், நுதலிய பொருளும், நூற்பெயரும், நாடித் தீர்ந்து கண்டு மயர்வறவெனவே நுதலிய பொருளின்வகையும், பயனும், நந்தி முனிகணத்தளித்தவெனவே வழியும், வெண்ணெய்ச்சுவேதவனன் மெய்கண்டதேவனெனவே ஆக்கியோன் பெயரும், தமிழ் வழங்கு நிலமே இந்நூல் வழங்குநிலமென எல்லையும் போந்தவாறுணர்க. வடநூலார் யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. யாப்புச் சம்பந்தமென்பாருமுளர்.

பாயிரம் முடிந்தது.

---

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.

திராவிடமாபாடியம்.

எனப்படும்

# சிவஞானபாஷ்யம்.

---

## மங்கல்வாழ்த்து.

சைவாகமங்களுண் ஞானபாதப் பொருளினிகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தற்கு ரௌரவாகமத்தி னெழுந்த சிவஞானபோத நூலைத் தமிழுலகமுய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைப்பானெடுத்துக்கொண்ட வாசிரியர், சாக்கிரத்தே யதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிதுமணுகாமை யறிந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணாக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார், வாழ்த்தும் வணக்கமும் பொருளியல் புரைத்தலுமென மங்கலவாழ்த்து மூவகைப்படும். அவற்றுளிது பொருளியல் புரைத்தலெனக் கொள்க.

கல்லா னிழன்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே. எனவரும்.

நந்திபெருமானுக்கு இந்நூலறிவுறுத்தருளிய முதலாசிரியரென்ப துணர்த்துதற்குக் கல்லானிழலென இடங் கூறினார். ஆண்டெழுந்தருளியிருந்து, சிவாகமப்பொருள்களொன்றோடொன்று முரணுவனவாக மலைந்து வினவிய நந்திபெ

ருமானுக்கு, இந்நூலான் மலவுதீர்த்தருளினரென்பார், மலை வில்லாரென்றார்' இல்லார் இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர். இனி மலைவில்லாரென்பது மேருவை வில்லாகவுடையரெனக்கொண்டு, கல்லாலினிழலி லெழுந்தருளியிருந்து வீடுபேறும் மலையை வில்லாக வளைத்துப் பகைவரைவென்று போகமும் அளித்தருளியோரெனினுமமையும். எனவே ஐந்தொழிற்கும் வினைமுதலென்றவாறாயிற்று.

அருளியவென்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். உண்ணியபுக்கானென்றாற்போல. அது புனைவரென்னும் பிறவினை முதல்வினைகொண்டு முடிந்தது. அருளுதல், புனைந்தமைபற்றிக் கல்லாலினிழலில் வீற்றிருந்து மலவுதீர்த்தருளிய வாசிரியர் கருணைமீக்கூர்தல். அருளிய பொல்லாரெனப் பெயரெச்ச முடிபாக வைத்துரைத்தலுமொன்று.

பொள்ளார் பொல்லாரென மரீஇயிற்று: சுயம்புமூர்த்தியென்றதாம்.

இணைமலர் பண்புத்தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய்த் திருவடியை யுணர்த்திற்று. இணையென்பதனைத் திருவடிக்கு அடையாக்கி இருபெயரொட்டாகுபெயரென்றலுமொன்று. இவற்றியல்பெல்லாம் சூத்திரவிருத்தியுளுரைத்தாம், ஆண்டுக்காண்க. புனைவரென்றதற்கேற்பத் திருவடியை மலராக வுருவகஞ்செய்தாரென்றலுமொன்று.

நல்லார்-கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தழுந்தியோர். புனைதல்-தாடலைபோலடங்கிநிற்றல். ஏகாரமீற்றசை. தேற்றமெனினு மமையும்.

இப்பாட்டு வஞ்சித்துறை. இது கல்லென்பது முதல் ஏ யென்பதிறுவாய்ப் பன்னிருசொற்களாற் கூறவே, இந்நூல் பன்னிரு சூத்திரத்தாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுள் மும்மூன்று சொற்கள் ஒவ்வோரடியாக வைத்து நான்கடியாகக் கூறவே, இந்நூலும் அவற்றுள் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாக வைத்து நான்கியலாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுள் முன்னிரடியு மொரு வினைமுடியும் பின்னிரடியும் பிறிதோர் வினைமுடியுமாக விருவகைப்படுத்துச் செய்யவே, முன்னாறு சூத்திரமோரதிகாரமும் பின்னாறுசூத்திரம் வேறோரதிகாரமுமாக இந்நூலிரண்டதிகாரத்தாற் செய்யப்பட்டதெனவும், குறிப்பானுணர்த்தியவாறு காண்க. இரண்டாமோத்தின் முதற்சூத்திரம் இதுவுமதுவென முதலோத்தினிறுதிச் சூத்திரத்தோடு மாட்டெறியப்படுமென்பதனையுணர்த்துதற்கு மலையென்பதனை யிரடியுஞ் சாரவைத்தார். கல்லானிழன்மலை முதலடியினிடங்கூறவே முதலோத்துப் பிரமாணங் கூறுமென்பதூஉம், இரண்டாமடியின் மலைவில்லாரருளியவெனச் செய்கை கூறவே இரண்டாமோத்து இலக்கணங் கூறுமென்பதூஉம், மூன்றாமடியிற் பொல்லாரிணைமலரெனத் திருவடி கூறவே மூன்றாமோத்துச் சாதனங்கூறுமென்பதூஉம், நான்காமடியில் நல்லார்புனைவரெனப்பேறு கூறவே நான்காமோத்துப் பயன் கூறுமென்பதூஉம், குறிப்பாற் பெறப்படும். பிறவுமிவ்வாறோர்ந்துணர்க. இங்ஙனம் நூலுதற் பொருளெல்லாம் குறிப்பாற்றன்னகத்தடக்கி நிற்றல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென்றுணர்க. இவ்வாறு பல்வகைப்படுத்தோதியது இந்நூலென்பது "கண்டனவும் பொருளியல்பாற் செலச்செய்தி முறைகளும் பெத்தமோ டிழுக்கின்னா" என்றமிழ்நூலாசிரியர் வகுத்தோதியவாற்றானுங் கண்டுகொள்க.

மங்கலவாழ்த்து முடிந்தது.

---

## அவையடக்கம்.

மங்கலவாழ்த்துக் கூறுமுகத்தான் ஈண்டைக்கிறைவனாவான் இவனென்பதுணர்த்தி, இனி அவையடக்கங்கூறுமுகத்தான் அவ்விறைவனானியம்பப்படு நூலுணர்ந்தாரதுயர்வும் ஏனைச் சமய நூலுணர்ந்தாரதிழிபும், உணர்த்துகின்றார்.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன். எனவரும்.

உணர்ந்தெனவே குருமுகத்தாற் கேட்கப்படுஞ் சிவாகம நூல்பற்றி யென்பது வருவித்துரைத்துக் கொள்ளப்படும். தம்மையுடையதன்னெனவே தாந் தலைவனுக்குடைப்பொருளென்பதூஉம், எம்மையுடைமையெனவே யாந் தமக்குடைப்பொருளென்பதூஉம், பெறப்பட்டன. உடைப்பொருள் அடிமையுமுடைமையுமென இருவகைப்படும். அவற்றுள் உயிர்வருக்கமெல்லா மிறைவனுக்கு அடிமையெனவும், மாயை கன்மங்களு மவற்றின் காரியங்களுமுடைமை யெனவும் உணர்ந்துகொள்க. தன்னுணர்வாரென்புழி இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. உடைமையினென ஏதுப்பொருட்கண் வரும் இன்னுருபும் புணராமையானென்னும் ஆனுருபும் தொக்குநின்றன. எமையிகழாரென்பது எம்மைக் குற்றங்கணீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவாரன்றி இகழ்தல் செய்யாரென்க. எனவே, எம்மாற் செய்யப்படுநூலையுமவ்வாறு கைக்கொள்வரென்பது குறிப்பெச்சம். தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வாரெனவே, தம்மையுணர்ந்தன்றித் தலைவனையுணர்தல் கூடாதென்பது பெற்றாம். அற்றேல் "தன்னாலே தன்னையறிந்தாற் றன்னையுந் தானேகாணும்" எ-ம். "அதிலறிவடங்கி மன்னிடவியாபியாய வான்பயன் றோன்றும்" எ-ம். தலைவனை யுணர்ந்தன்றித் தமையுணர்தல்

கூடாதென்னுஞ் சார்புநூல் இதனோடுமுரணும் பிறவெனின்? முரணாது. அஃதாண்டுச் சிவரூபத்தான் ஆன்மதரிசனமும், சிவதரிசனத்தால் ஆன்மசுத்தியுமாமாறு கூறிற்றெனவும், இது ஆன்மசுத்திப்பின் சிவப்பேறுமாறுணர்த்துகின்றதெனவுந் தெரிந்துகொள்ளப்படுமாகலின். அரன்றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணு ரென்பதனோடு முரணாமையு மிவ்வாறே யுணர்ந்துகொள்க. இதனானே, தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வாராவார் ஆன்மலாபப் பேறுடையாரென்பது பெற்றாம். அவர் சிவமயமேயாகலின் எம்மையுடைமை யென்றார். உடைமை - உடையராந்தன்மை. எம்மையுடைமையென இரண்டாவது குறிப்புப்பெயர் கோடல் அமையுமென்பது, "இரண்டாகுவதே" யென்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையர் புகழையுடைமை யென உதாரணங்காட்டி யாப்புறுத்தமையானுமறிக.

தம்மையுணராரெனப் பொதுப்படக்கூறுதலானே, தாமொருபொருளுண்டென்பதே யுணராத உலோகாயதரும், தம்மைக் குணிப்பொருளென்றுணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு அடிமையென்றுணராத ஏனைச்சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும் தம்மை உடைப்பொருளெனக்கொள்ளினும், அவருட் பாஞ்சராத்திரிகள், உடையனல்லாதானை உடையானென மயங்கிக் கோடலானும், உடையானுக்குப் பரிணாமங்கூறுதலானும், சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங்கூறுதலானும், பிறவாற்றானும் அவருந் தம்மையுணராரெனக் கொள்க. தம்மையுணர்ந்து தன்னுணர்வாரெனவே, தம்மையுணரார் தன்னுணராரென்பது தானே போதருமென்பதுபற்றி உணராரென்றொழிந்தார். முன்னின்றவரை எதிர்முகமாக்கும் விளிப்பெயர். அவர் [illegible] தம்மிற் புணராமையாலே, பிரிவின்றுறுபவர் [illegible]

று கையினுலொவ்வோருறுப்பினைத் தைவந்து வேழமாவது முறம்போல்வதெனவும் உரல்போல்வதெனவும் உலக்கைபோல்வதெனவும் மலைபோல்வதெனவும் தம்முண் மாறுகொண்டொருவரையொருவர் மறுத்துக் கலாம் விளைத்தல்போல், சித்தாந்தநெறிநின்று ஆசான்றிருவருள் பெறுதார் தத்தமுணர்விற்கேற்பச் சமயநூல்களின் ஒவ்வொன்றனை ஆராய்ந்து அவற்றிற்கூறும் ஏகதேசப்பொருள்களைபற்றிக் கூறி ஒருவரையொருவர் மறுத்துத் தம்முண் மாறுகொண்டு கலாம்விளைத்தல். அங்ஙனம் கலாய்க்கின்றுழிக் கண்ணுடையானொருவனேக்கி, இவர் செவி முதலிய ஒரோருறுப்புக்களைபற்றிக் கூறிக் கலாம் விளைக்கின்றாரெனவும், வேழத்தினியல்பு வேறெனவுந் தெரிந்துணர்ந்து அவர்க்கு அதை யுணர்த்தலுறில், கொடிறும் பேதையும்போலத் தாங்கொண்டதேபற்றி அவனையுந் தம்முளொருவனுக வைத்து இழித்துக் கூறுமாறு கோடலேயன்றிப் பொருளெனக்கொள்ளமாட்டார். அது பற்றியவன் வெகுளாது இவரியல்பிதுவென நகையாடியொழிந்துவிடும். அதுபோல, ஒவ்வொரு சமயநூல்பற்றி அங்ஙனம் பிணங்குவாரை அவையெல்லா மொவ்வோரேகதேச வியைபுபற்றிக் கூறினவாகலான் அவைபற்றிப் பிணங்கற்கவெனவும்,பொருட்டன்மை வேறெனவும் யாமிந்நாலானுணர்த்தப்புகின், அவரதனைக் கொள்ளமாட்டாது பயிற்சிவயத்தால் தாங்கொண்டதேபற்றி எம்மையுந் தம்முளொருவராக வைத்து இகழ்ந்துரைப்பாராகலின், அவ்வழியவர் வெள்ளறிவிதுவென்று ஒழிவதேயன்றி அதனைக் கொள்ளாமென்பார் கேளாம்புறனென்றார். கேட்டல் - பொருளாகக்கோடல். அது 'ஊறுகேளாது' என்பதனுனும் "கேளாரும் வேட்பமொழிவதாம்" என்பதனுனுமறிக. புறன் புறச்சமயம்பற்றி யிகழ்ந்துரைக்குமொழியும் புறங்கூற்றுமொழியுமென்பது இரட்டுறமொழிதலாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது புறச்சமயங்களல்லாத பாஷாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தேயிகழ்ந்து கூறும் மொழி.

இச்சமயங்களெல்லாம் புறப்புறச்சமயமும் புறச்சமயமும் அகப்புறச்சமயமும் அகச்சமயமுமென நான்கு வகைப்படும். அவற்றுள், புறப்புறச்சமயம் உலோகாயதம் நால்வகைப்பௌத்தம் ஆருகதமென அறுவகைப்படும். புறச்சமயம் தருக்கம் மீமாஞ்சை ஏகான்மவாதம் சாங்கியம் யோகம் பாஞ்சராத்திரமென அறுவகைப்படும். அகப்புறச்சமயம் பாசுபதம் மாவிரதம் காபாலம் வாமம் வைரவம் ஐக்கவாதசைவமென அறுவகைப்படும். அகச்சமயம் பாஷாணவாதசைவமுதல் சிவாத்துவித சைவமீறாக அறுவகைப்படும். இவையெல்லாம் அகம் புறமென்றிரண்டாயடக்குமாறுமோர்ந்துணர்க, இவ்வாறிரண்டாயடக்கியும் அவற்றைத் தம்முள் வேறுபாடுநோக்கி நான்காக வகுத்துக்கூறுதலும் அமையுமென்பது, தொல்காப்பியத்தின் அகம் புறமென்றிரண்டாயடக்கிக் கூறிய பொருளைத் தம்முள் வேறுபாடுநோக்கிப் பன்னிருபடலத்தின் அகம் அகப்புறம் புறம் புறப்புறம் என நான்காகப் பகுத்தோதியவாற்றானு முணர்க. இஃதறியாதார், தொல்காப்பியமும் பன்னிருபடலமுந் தம்முண் முரணுவனவாகக் கருதி, அவற்றுளொரு நூலையேபற்றி மற்றொன்றனையிகழ்வர். ஈண்டுக்கூறிய சமயத்தாருள், உலோகாயதர் முதல் ஆருகதரீறாகியவறுவரும், வேதஞ் சிவாகம மிரண்டனையும் நிந்திக்கு நாத்திகராயினும், ஒரு நூலென்றும் பிரமாணமென்றுங்கொண்டு ஒருநெறிக்கண்ணே நிற்றலான் அவர் சமயம் புறப்புறச்சமயமெனவைத் தெண்ணப்பட்டன. தார்க்கிகர் முதற் பாஞ்சராத்திரிகளீறாகிய வறுவரும், வேதம் பிரமாணமெனப் பொதுவகையாற் கொள்ளினும், அவருட் டார்க்கிகர் தன்னாற் பிராமாணியங் கொள்ளாமையானும், வேதப்பொருளோடு முரணிப் பொருட்டன்மை கோடலானும், மீமாஞ்சகர் கருமகாண்டமாகிய வேதமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு ஞானகாண்டமாகிய உபநிடதங்களை யிகழ்தலானும் ஏகான்மவாதிகள் ஞானகாண்டமாத்திரைக்கே பிரமாணங்கொ

ண்டு கருமகாண்டத்தை இகழ்தலானும், ஏனைமூவரும் வேத வாக்கியங்களில் தத்தமதத்திற்குப் பொருந்துவன மாத்திரை யே யெடுத்துக்கொண்டு ஏனையவற்றிற்குப் பிரமாணங்கொள் ளாமையானும், வேதப்புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கோடலானும், இவ்வறுவருஞ் சிவாகம நிந்தகராகலானும் இவர்சமயம் புறச்சமயமென வேறுவைத்தெண்ணப்பட்டன. பாசுபதர் முதலிய வைவரும், வேதஞ்சிவாகமமிரண்டிற்கும் பொதுவகையாற் பிரமாணங்கொள்ளினும், அவ்விரண்டிற்கு ம் புறமாகிய பாசுபதமுதலிய நூல்கட்குச் சிறப்புவகையாற் பிரமாணங் கோடலானும், வேதஞ் சிவாகம மிரண்டினும் ஆகாவென விலக்கப்பட்டனவற்றை ஆசரித்தலானும், ஐ க்கவாதசைவர் வேதஞ்சிவாகம மிரண்டிற்கும் சிறப்புவகை யாற் பிரமாணங்கொண்டு அவற்றின் விலக்கியனவொழித்து விதித்தவழி யொழுகுவாராயினும், எல்லாப்பெருங்கேட்டிற் கும் மூலகாரணமாகிய ஆணவமலத்துண்மை கொள்ளாமை யானும், அதனுண்மை சாதிக்குஞ் சிவாகம வாக்கியங்களை இகழ்தலானும் அவ்வறுவகைச்சமயமும் அகப்புறச்சமயமெ ன வேறுவைத்தெண்ணப்பட்டன. ஏனைப்பாஷாணவாதசை வர் முதலிய அறுவரும் பொருளுண்மையெல்லாஞ் சித்தாந்த சைவரோடொப்பக் கொள்ளும் அந்தரங்கவுரிமையுடையரா யினும், அவ்வப்பொருள்கட்குக் கூறும் தன்னியல்பு பொது வியல்பு மாத்திரையின் முரணுதலான் அவர்சமயம் அகச்சமய மென வேறுவைத்தெண்ணப்பட்டன. இவ்வாறு நால்வகைச் சமயங்கட்குஞ் சித்தாந்த சைவத்தோடுளதாகிய வேற்று மைத் தாரதம்மியங் கண்டுகொள்க.

அகச்சமயமாறனுட் சிவாத்துவித சைவமாவது நிமித் தகாரணத்துக்குப் பரிணாமங் கூறுவதாகலின், அது நிமித்த காரண பரிணாமவாதமெனவுங் கூறப்படும். அங்ஙனங்கொ ண்ட சிவாத்துவிதசைவமாவது யாதோ? வெனவும் "நிகழ் சிவாத்துவிதாந்தத்துக்குலவினர்" என்றமையின் இறுதிக்

கன்னெடுத்தோதப்படுஞ் சுத்தசைவம்போலுமெனவும் மய
ங்குப. சுத்தசைவம் நுட்பப்பொருளுணராமை மாத்திரை
யேபற்றி வேறுவைக்கப்பட்டதன்றிக் கருத்துவகையாற்
சித்தாந்த சைவத்தின் வேறன்மையிற் சுத்தசைவஞ் சித்தா
ந்த சைவத்து ளடங்குமென்றுணர்க. அற்றாகலினன்றே
“நிலவுலோகாயதாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக், குலவின
ராளவளவாக் கொள்கைய தாகி” எனவீனச்சமயங்களை யெ
டுத்தோதி விலக்கிச் சுத்தசைவத்தை அங்ஙனம் விலக்கா
தொழிந்ததூஉ மென்க.

இனி யிவ்வாறன்றிப் பாஷாணவாதத்திற்கும் பேதவா
தத்திற்குந் தம்முள் வேறுபாடு சிறிதாகலினவ்விரண்டனையு
மொன்றாக வைத்தெண்ணிச் சுத்தசைவத்தையுமுடன்கூட்டி
அகச்சமயமா றெனக் கோடலுமொன்று. இங்ஙனமாகலான்
“மெய்த்தநுசைவமாதியிரு மூன்று” மென்றதூஉம் பாஷாண
வாதமுதலிய வறுவகைச் சைவங்களையுமெனக் காண்க. பாசுப
தர் முதலியோர் கலைக்குமேலுள்ள தத்துவங்களையுணராமையி
ன் அவர் வித்தையாதியெய்து தத்துவங்களெய்வரெனக் கோ
டல் பொருந்தாமையறிக. ஐக்கவாதசைவர் கலைக்குமே
லுள்ள தத்துவங்களுண்டெனக் கொள்ளாராயினும் மூலமல
முண்டென்பதறியாமையின் மூலமல நீங்கிய முத்தர்க்கன்றிச்
சுத்ததத்துவ புவனங்களினெய்துதல் கூடாமையின் அவர்
க்கு முத்தித்தானம் மோகினிக்குமேற் சுத்தவித்தைக்குக்
கீழ் விஞ்ஞானகலர்க்குரிய தானமேயாமாகலின், ஏனைப்பாஷா
ணவாதசைவர் முதலியோரே வித்தையாதிதத்துவங்களெய்
வரென்றறிக. “புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொ
ளியாய்” என்புழியும் அகச்சமயமென்றது, “ஏகனநேகனி
ருள்கருமமாயை யிரண்டு” என்னும் ஆறுபொருளுங்கொண்
ட பாடாணவாதமுதலிய வறுவகைச் சைவங்களையேயாமெ
னவும், புறச்சமயமென்றது அங்ஙனம் பொருளுண்மை கொ
ள்ளாத ஏனைமூவகைப்புறச்சமயங்களையுமெனவும் உணர்ந்து
கொள்க.

## புறப்புறச்சமயம்.

### [உலோகாயதம்]

புறப்புறச்சமயமாறனுள் உலோகாயதமாவது காண்டலளவையொன்றேபிரமாணம், காணப்படும் நிலம் நீர் தீ வளியென நான்கே தத்துவங்கள், இவை நித்தப்பொருள்கள், இவற்றின் கூட்டமே யுடம்பு, பாகடையுஞ் சுண்ணாம்புங் கூடியவழிச் செவ்வண்ணம் பிறக்குமாறுபோல இவற்றின் கூட்டரவினோருணர்வுண்டாம். அவ்வுணர்வு உடம்பு வளரவளரும் தேயத் தேயுமாகலின் உடம்பிற்குவேறேயுயிரென்பதும் பொய், உடம்பிற்கு இன்பத்துன்பங்களியல்பாயுள்ளன, இவற்றிற்குக்காரணம் வினையென்பதும் பொய், மயிலைச் சித்திரித்தாரையும் குயிலைக் கூவுவித்தாரையுங்காணாமையிற் கடவுளுண்டென்பதும் பொய், இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரோடு மணந்துண்டுடுத்து வாழ்வதே துறக்கவின்பம், அது பெறாது பகைவரால் நோயால் வறுமையால் நூல்களாற் பிறவற்றால் வருந்துவதே நிரயத்துன்பம், வேறே துறக்க நிரயமுளவென்பதும் பொய், நான்கு பூதக்கூட்டரவிற் பிராணவாயுவொன்று நீங்கில் உணர்விழந்து உடம்பு நாசமாம். அதுவே வீடுபேறு. வேறே வீடுபேறுண்டென்பதும் பொய், இவ்வுண்மையுணராத மடவோர் மறுமையுண்டெனக்கொண்டு தவங்கள் பட்டினிமுதலியவற்றான் வருந்துவர். கற்பமுதலிய சங்கேத நூல்கள் மதுகையின்றி மதியுடையோராற் செய்யப்பட்டன. பொன் நிலம் உணவு முதலிய தானங்களை யுயர்த்துக் கூறு நூல்கள் பசியான் வருந்தி நல்கூர்ந்தோராற் செய்யப்பட்டன. தேவதலம் தண்ணீர்ப்பந்தர் கூவல் பொய்கை சோலை முதலியன செய்தலையுயர்த்துக் கூறு நூல்கள் வழிச்செல்வோராற் கூறப்பட்டன. ஆகலான் இவற்றைக்கைவிட்டு உழவு பசுக்காவல் வாணிகம் செங்கோன்முறைமை முதலியவாக ஆன்றோர் காட்டிய நெறியினின்

று இம்மையின்பங்களை நுகர்ந்து வாழ்தல் உறுதிப்பயன் என்பதாம். உலோகாயதநூல் செய்தோன் பிரகற்பதியென்றுணர்க. இவ்வுலோகாயதர் தேகான்மவாதிகளும் இந்திரியான்மவாதிகளும் பிராணான்மவாதிகளும் அந்தக்கரணான்மவாதிகளுமெனப் பலதிறப்படுவர்.

## புத்தம்

இனிப் புத்தமாவது—உலகத்துப் பிறந்திறந்துழன்று சிலமுதலியவற்றானல்லுணர்வு தோன்றி முழுதுணர்ந்து முத்திபெற்றுத் தன்னைப்போற் பிறரு முணர்ந்துய்தற்பொருட்டுக் கருணையினாற் பிடகநூல் செய்தவன் புத்தக்கடவுள், அந்நூலிற் கூறும் பொருளாவன ஞானமே ஆன்மாவெனப்படும், அதுநீரோட்டம்போலச் சந்தானமாய்க் கணந்தோறும் தோன்றியழியும், அங்ஙனந் தோன்றியழியுங்கால் மான்மத நாற்றம்போல முதற்கணத்தின் அழிவெய்து ஞானத்திற்றோன்றிய வாசனை பிற்கணத்திற்றோன்றும், ஞானத்திற் பற்றுதலான் அறிவுமுதலாயின நிகழும், மற்றுமுளபொருளெல்லாங் கணந்தோறுந் தோன்றியழியும், இந்தஞானத்திற்றோன்றிய வாசனையழிவதே முத்தியென்பதாம். ஞானமுங் கூடக் கெடுதல் முத்தியென்பாருமுளர். இப்புத்தமதத்தர் மாத்தியமிகன் யோகாசாரன் சௌத்திராந்திகன் வைபாடிகனென நால்வகைப்படுவர். இந்நால்வரும், முறையே எல்லாப் பொருளுஞ் சூனியமெனவும், புறப்பொருள்சூனியமெனவும், புறப்பொருளுண்மை வழியளவையானறியப்படுமெனவும், புறப்பொருள் காட்சிப்பொருளாமெனவுங் கூறுப. இந்நால்வரும் ஆதிபுத்தனுடைய மாணாக்கர்.

### மாத்தியமிகன்.

இவருண் மாத்தியமிகராவார் உலகத்துப்பொருள்கள் உள்பொருளாயினழியா, இல்பொருளாயிற்றோன்றா, உள்ளவுமில்லவுமாமெனின்? முரணும், இரண்டுமல்லவெனின்? உணர்

ச்சி கூடாவாகலின் இந்நான்கு பகுதியுமின்மையான் எல்லாப் பொருளுஞ் சூனியமே, மயக்கத்தாற் காட்சிப்பொருள்போலப் புலப்படுகின்றன என ஆசிரியன் பிடகநூலுணர்த்திய வழியதனை யுண்மையாகக்கொண்டு மேல்வினவாதார். ஆசிரியன்மொழிந்தது பொருளெனக் கோடலிற் றலைமாணுக்கர் அதற்குமேல் வினு நிகழ்த்தாமையிற் கடை மாணுக்கர் என விரண்டுமொருங்குற்று நின்றமையின் மத்தியமாணுக்கராய் மாத்தியமிகரெனப் பெயர் பெற்றுரென்பது.

## யோகாசாரன்.

இனி யோகாசாரராவார் அங்ஙனமாசிரியனுணர்த்திய வழிப் புறப்பொருள் பாழென்பதனை யுடம்பட்டு ஞானமு மவ்வாறு சூனியமாயின் வழங்கற்பாடு கூடாதன்றேயென வினவினர்க்கு நன்றே வினவினீர் ஞானமாத்திரமுள்ளது அந்த ஞானஞ் சாகாரநிராகாரமென் றிருவகைப்படும். அவற்றுள் வட்டம் சதுரம் கறுப்பு சிவப்பு முதலியவடிவிற்றுய் அகத்தே தோன்று ஞானஞ்சாகாரமெனவும் பந்தநீங்கியவழி யங்ஙனம் வேறுபாடின்றித் தொடர்ச்சியாயெழுவதாகிய ஞானம் நிராகாரமெனவும் கூறப்படும். இத்தன்மைத்தாகிய ஞானமேயன்றிப் பொருளென வேறில்லை, கனவின்கட் புறப்பொருளையவாவாது கேவல ஞானத்தானே வழங்கக் காண்டலான் நனவின்கண் வழங்குவது மவ்வாறேயாம், அவ்வுணர்வு அகத்தினிகழ்வதேயாயினும் அநாதிவாசனை வயத்தாற் புறத்தே காணப்படுவதுபோலத் தோன்றுநின்றதெனக் கொள்க என்றாசிரியனுணர்த்தினன்; அங்ஙனமுணர்த்தப்பட்டோர் ஆசிரியன் மொழிந்ததனையுடன்பட்டு அதற்கு மேல்வினவினராகலின், யோகாசாரரென்றாயினரென்பது. புத்தமதவாசிரியன் மொழியுடம்படுதலையாசாரமெனவும் அதற்குமேல்வினவுதலை யோகமெனவுங் குறியிட்டு வழங்குபவாகலானும் அவ்விரண்டானும் பெற்றபெயரென்றுணர்க.

## சௌத்திராந்திகன்.

இனிச் சௌத்திராந்திகராவார் அங்ஙனமாசிரிய னுணர்த்திபவழிப் புறப்பொருண் முழுதுஞ் சூனியமென்பதென்னை? யானிதுகண்டேனென் றுணர்வுழி யானென்னும் ஞானம் அகத்துப்பொருளும் இதுவென்று சுட்டியறியப்படுவது புறத்துப்பொருளுமாகலான், அவற்றிற்கு வேறுபாடு தெற்றென விளங்குதலானும், இரண்டுமொருங்குணர்தலேபற்றி யொன்றென்றல் பொருந்தாமையானும், இரண்டு மொருங்குணர்தலெனவே வேறுபாடுண்மை தானே பெறப்படுதலானும், ஞானமே குடம் படம் முதலியனவாகத் தோன்றுநின்றதெனக் கோடல் பொருந்தமன்றென வினாயினர்க்கு, நன்றே வினாயினீர் புறத்துத் தோன்றுவனவும் உள்பொருளேயாம். அவை காட்சிப்பொருளல்ல குடவடிவிற்றாகிய ஞானமுணர்ந்தபின்னன்றிக் குடமுணர்தல் கூடாமையின் கணத்திற்றோன்றியழியுங் குடமுதலாயின அங்ஙனமுணருங்காறு நிலைபெறுதலின்மையாற் குடமுதலாயின தத்தம் வடிவினை ஞானத்தின் வைத்திட்டழிந்தபின்னை ஞானத்துட்பற்றிய வடிவானேயங்ஙனமிறந்துபோய்க் குடமுதலாயின வழியளவையின் வைத்துணரப்படும். இவற்றிற்குக்காரணமென்னை? யெனிற் புறம்அகம் என்னும் இருவகைச் சமுதாயமாம். அவற்றுட் புறச்சமுதாயம் நிலமுதலாயின. அவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். அவை நிலவணு நீரணு தீயணு வளியணுவென நால்வகைப்படும். அவை யொருங்குபல தொக்கவழிப் புறச்சமுதாயந்தோன்றும். இனி அகச்சமுதாயம் சித்தமும் சித்தப்பகுதியுமாம். அவற்றிற்குக் காரணம் ஐவகைப்படுங் கந்தங்கள். அவை உருவம் வேதனை ஞானங் குறி வாசனை என்பனவாம். கந்தமென்பது சமூகமென்னும்பொருட்டு; அவற்றுட் சித்தத்தாற் சிந்திக்கப்படுஞ் சத்தமுதலாயின உருவக்கந்தம். இவை புறத்துள்ளனவாயினும், அகத்திற் சித்தத்தாற் சிந்திக்கப்படுதலான் அகச்சமுதாயத்துள் வைத்தெண்ணப்பட்டன. இனி அகச்சமுதாயத்துட்பட்ட உடல் பொறி முதலியவற்

றை உருவக்கந்தமென்றலுமொன்று. அவ்வுருவக்கந்தத்தை யுணருமுணர்வு ஞானக்கந்தம்; அது சாகார நிராகாரமென்னும் வேறுபாட்டாற் பிரவிருத்தி விஞ்ஞானமென்றும், ஆலய விஞ்ஞானமென்றும் இருவகைப்படும். சாகாரஞ்சவிகற்பமாம். நிராகாரம் நிருவிகற்பமாம். இனி யிவ்வுணர்வாற்றோன்று மின்பத்துன்பமொதுமல்கள் வேதனைக்கந்தம். சாத்தன் கொற்றன் முதலிய பெயர் குறிக்கந்தம். அப்பெயர்களாற் பகுத்துணருஞ் சவிகற்பவுணர்வு குறிக்கந்தமெனவும், நிருவிகற்பமொன்றே ஞானக்கந்தமெனவுங் கோடலுமொன்று. அவற்றின வாசனை வாசனைக்கந்தமாம். வாசனையெனினுஞ் செய்கையெனினு மொக்கும். குறியெனினுஞ் சஞ்ஞையெனினு மொக்கும். இவ்வைந்தும் ஒருங்கு தொகுதலான் அகச்சமுதாயந் தோன்றும். இவற்றுள் உருவக்கந்தம் புறச்சமுதாயத்துள் வைக்கப்படும், ஏனைநான்குமே சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச்சமுதாயமென்பாரு முளர். சகமுழுதும் இவ்விருவகைச் சமுதாயத்துளடங்குமென் றாசிரியனுணர்த்தினன். அதுகேட்ட மாணுக்கர் இங்ஙனம் மாணுக்கர் வினவிய கடாவிற்கேற்பவறிவுறுக்குஞ் சூத்திரங்கள் எவ்வளவின் முடிவுபெறுமெனக் கடாயினர்; அவ்வழி யாசிரியன் சூத்திராந்தம் கடாவிய நீர் சௌத்திராந்திகரெனப் பெயர் பெறுகவென்றமையின் அவர்க்கது பெயராயிற்று.

## வைபாடிகன்.

இனி வைபாடிகராவார் ஆசிரியனிங்ஙனமுணர்த்திய வழி யதுகேட்டமாணுக்கர் புறப்பொருள் ஞானத்தாலநுமித்தறியபற்பாற்றென்றதென்னை? ஞானமே தனக்குக் காட்சிப் பொருளாகலானும்,காட்சிப்பொருளொன்றுமின்றாயின் வியாத்தியுணர்தற்கு இடமின்மையான் வழியளவை நிகழாதாகலானும் இது மாறுகோளுரை போலுமெனக் கடாயினர்; ஆகலின் அவர் வைபாடிகரெனப்பட்டார். மாறுகோளுரை பெ

னினும் விபாடையெனினு மொக்கும். அவர்க்குப் புறப் பொருள் காட்சிப்பொருளாமெனவும்ஆசிரியனுணர்த்தினன்.

இங்ஙனம் வினாயினர் கருத்துக்கேற்ப நால்வகைப்படுத்துச் செவியறிவுறுப்பினும், கணபங்கமுதலியவற்றை உடம்பட்டுக்கோடலானும் எல்லாரும் முறையானே முழுதுஞ்ஞானியமென்று கோடற்குரியரென்பது ஆசிரியன் கருத்து. அங்ஙனமாயினும் வினாயினர் கருத்துக்கேற்ப ஆசிரியன் கூறிய விடைப்பொருளை யுறுதியாகக் கோடலின் மதம் வேறுபட்டு நால்வராயினர். இங்ஙனம் புத்தமதநான்குங் கண்டுகொள்க.

## ஆருகதம்.

இனி ஆருகதமாவது சீவனும்அசீவனும் ஆச்சிரவமும் சமுவயமும் நிச்சரமும் பந்தமும் வீடுமெனப் பதார்த்தங்களேழுள, இவற்றுட் சீவன் அநாதி சித்தனும் முத்தனும் பெத்தனுமென மூவகைப்படும். இவற்றுள் அநாதிசித்தன் அருகக்கடவுள். முத்தன் மோகமுதலிய பந்தத்தினீங்கினவன் பெத்தன் அவற்றுட்கட்டுண்டவன். இச்சீவன் எடுத்தவுடம்பளவின் வியாபகமாய் உடம்புதோறும் வெவ்வேறாம். இனி அசீவன் புற்கலமும் ஆகாயமும் தன்மமும் அதன்மமும் என நான்கு வகைப்படும். அவற்றுள் உருவப்பொருளான நிலமுதலிய நாற்பெரும் பூதமும் மரம் புல் முதலிய நிலையியற்பொருளும் பை முட்டை முதலியவற்றிற் பிறக்குமியங்கியற்பொருளுமெனப் புற்கலமறுவகைப்படும். இவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். உலகாகாயமும் உலகங்கடந்த வாகாயமுமென ஆகாயமிருவகைப்படும். உலகங்களுக்குட் படுமாகாயம் உலகாகாயமெனவும் உலகங்கட்குப் புறத்தே யெல்லையின்றியுள்ளது உலகங்கடந்தவாகாயமெனவு முணர்க. தன்மம் புற்கலத்தின் வேறுப் நன்மையைப்பயப்பது. அதன்மம் தீமையைப் பயப்பது. அசிவ பதார்த்தவகை நான்குமிங்ங

னம் கண்டுகொள்க. இவையெல்லாம் அத்திகாயமென்னும் வாய்பாடு கூட்டி வழங்கப்படும்.

இனி ஆச்சிரவமாவது பொறிவழிச்சேறல்; கன்மத் தொடர்ச்சி யென்பாருமுளர். சமுவயமாவது அங்ஙனஞ் செல்லாமற் றடுத்து முத்திக்குக் காரணமாவது. அது நிலத்தினெறும்பு முதலியன சாவாது வழிநோக்கி மெல்ல வியங்குதலும் இனியவை கூறுதலும் நியமவுணவு முதலா யினவாம். நிச்சரமாவது, சுடுபாறையிற்கிடத்தல் தலைமயிர் பறித்தல் முதலிய தவம். பந்தமாவது, இருப்புக்குடம் பை தன்னகப்பட்ட சுரைப்பழத்தை நீர்நிலையிற் கீழ்ச் செலுத்துமாறுபோலச் சீவனுடைய சுதந்திரத்தையடக் கிப் பிறவியிற் சுழல்விக்கும் மோகமுதலிய வெண்குண முமாம். வீடாவது, இருப்புக்குடம்பைதகர்ந்தவழிச் சுரைப் பழமேலெழுமாறுபோலச் சீவன் மோகமுதலியவற்றினீங் கிச் சுதந்திரம்பெற்று உலகங்கடந்து எல்லையின்றியுளதா கிய ஆகாயத்தின்மேனோக்கியே சேறல். மேலெல்லைக்கணிரு த்தல் முத்தியென்பாருமுளர். இவ்வெழுவகைப் பதார்த்தங் களும் அநேகாந்தவாதத்தாற் கூறப்படும். அஃதாவது உடம் பெடுத்தற்குமுன் சீவனுண்டோவில்லையோவென்று வினவிய வழி உண்டாம், இல்லையாம், உண்டுமில்லையுமாம், சொல்லொ ணாததாம், உண்டுமாம் சொல்லொணாததுமாம், இல்லையுமாம் சொல்லொணாததுமாம், உண்டு மில்லையுமாஞ் சொல்லொணாத துமாம் எனவெழுவகையா னிறுத்தல். வினாபவை யெல்லாம் இவ்வாறேயிறுக்கப்படும். ஆமென்பதீண்டுச் சற்றென்னும் பொருட்டாயதோ ரிடைச்சொல். சொல்லொணாததென் பது உளதுமிலதுமல்லாத தென்னும் பொருட்டென்பது. எனவே உள்ளதும் இல்லதும் உளதிலதும் இரண்டுமில்லது மென நான்குபக்கமாய் இரண்டுமல்லதென்னும் பொருட்டா கிய சொல்லொணாத தென்பதனோடு உள்ளதும் இல்லதும் உளதிலதும் என்னும் மூன்றுங்கூட்ட எழுபக்கமாயினவெனக்

காண்க. பொருளியல்பு இவ்வெழுவகையுளொன்றாகச் சொல்லவும்படும் சொல்லவும்படாதென்பது கருத்தாகலின் முரணுமையுமறிக. இவ்வெழுவகையுள் ஒவ்வொன்றேபற்றிக் கூறும் ஏனைச்சமயத்தார் கோட்பாடெல்லா முள்ளடக்கிநிற்றலின் இங்ஙனம் அநேகாந்தவாதங் கூறுஞ்சமயமே மேற்பட்ட சமயமென்பது கருத்து. ஆருகதம் முடிந்தது.

இவருள் உலோகாயதன் காட்சிவாதியெனவும், புத்தன் க்ஷணபங்கவாதியெனவும், ஆருகதன் அநேகாந்தவாதியெனவும், புத்தருள்ளும் மாத்தியமிகன் சூனியவாதியெனவும், யோகாசாரன் விஞ்ஞானவாதியெனவும், ஏனையிருவருஞ் சமுதாயவாதிகளெனவும் உணர்க. இவ்வாறு புறப்புறச்சமய மாறுங் கண்டுகொள்க.

---

## புறச்சமயம்.

### [தருக்கம்.]

இனிப் புறச்சமயமாறனுள் தருக்கமாவது வைசேடிகமும் நையாயிகமுமென இருவகைப்படும். அவற்றுள் வைசேடிக நூலிற் கூறும் பொருளாவன, திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மையெனப்பதார்த்தம் எழுவகைப்படும். இவற்றுட் டிரவியம் நிலம் நீர் தீ வளி ஆகாயம் காலம் திசை ஆன்மா மனமென ஒன்பதுவகைப்படும். அவற்றுள் நிலமுதலிய நான்கும் அநித்தப்பொருள். அவற்றின் காரணங்களாகிய நால்வகைப் பரமாணுக்களும் ஆகாயமுதலிய வைந்தும் நித்தப்பொருள்கள். அவற்றுள் ஆகாயம் காலம் திசை மூன்றும் ஒரோவொன்றேயாய் வியாபகமாயுள்ளன. ஆன்மாக்கள் வியாபகமாய் எண்ணிறந்தனவாம். மனம் அணுவளவிற்றாய் ஆன்மாக்கடோறும் வெவ்வேறாயிருக்கும். ஆன்மா பரமான்மா சீவான்மாவென விருவகைப்படும். பரமான்மா முற்றுணர்வுடையவன் எல்லாம் வல்லவன் அவன் இச்

சைவசத்தானே உலகந்தோன்றி ஒடுங்கும். அவனாற் செய்யப்பட்டது வேதம். இனிச் சீவான்மாக்கள் சிற்றறிவினவாய் வினைக்கீடாகப் பிறந்திறந்து இன்பத்துன்பங்களை நுகர்வனவாம். ஆன்மாக்களுக்கு மனத்தோடு கூடாதவழி அறிவில்லை. இங்ஙனந் திரவியமொன்பதுங் கண்டுகொள்க. இனிக்குணங்களாவன: திரவியம் பற்றுக்கோடாக நிகழ்வன. அவை உருவம் சுவை நாற்றம் ஊறு முதலியனவாக இருபத்துநான்கு வகைப்படும்.

அவற்றுட் புத்தி இன்பம் துன்பம் விருப்பு வெறுப்பு முயற்சி அறம் பாவமென்னு மெட்டுக்குணமும் பாவனை யென்னும் வாதனையும் சீவான்மாக்களுக்குச் சிறப்புக்குணங்கள். இவற்றுட் புத்தி விருப்பு முயற்சி மூன்றும் பரமான்மாவுக்குச் சிறப்புக்குணங்கள். பரமான்மாவின் குணங்களாகிய புத்தி முதலிய மூன்றும் நித்தியம். சீவான்மாக்களின் புத்தி முதலிய மூன்றும் அநித்தியம். ஏனையவுமோர்ந்துணர்க. தொழிலாவன: எழும்பல் வீழ்தல் வளைதல் நிமிர்தல் நடத்தல் என ஐவகைப்படும். சாதியாவது பலபொருட்குப் பொதுவாகிய தன்மை. அது பரம் அபரமென இருவகைப்படும். விசேடமாவது ஒவ்வொரு பொருட்கே யுரியதன்மை. அவை நிலவணு முதலிய பரமாணுக்களும் ஆகாயமுதலிய வைந்துமாகிய நித்தப்பொருள்களின் வேறுபாடுணர நிற்பனவாய்ப் பலவாம். சமவாயமாவது அவயவமுதலியவற்றிற்கு அவயவி முதலியவற்றோடு நீக்கமின்றி யுளதாகிய வியைபு. அஃதொன்றேயாம். இன்மையாவது முன்னின்மையும் அழிவுபாட்டின்மையும் என்றுமின்மையும் ஒன்றினொன்றின்மையுமென நான்குவகைப்படும். ஆக இங்ஙனங்கூறு மெழுவகைப்பொருள்களின் சிறப்பியல்பு பொதுவியல்பு வேற்றியல்புகளை யுணரவே உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவினியல்பு விளங்கும். விளங்கவே உடம்பு முதலியவற்றை

தானென்றெண்ணிய மித்தையுணர்வு கழியும். அதுகழியவே முயற்சியின்மையின் அறம்பாவங்க ளில்லையாய்ப் பிறவியொழியும். ஒழியவே வரக்கடவனவாகிய துன்பங்களின்மையின் உடம்பு முகந்துகொண்ட வினைப்பயன் நுகர்ச்சியாற் கழிவுழி இறுதித் துன்பங்கெட்டு மனத்தோடு கூடுதற் கேதுவின்மையின் அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தியென்பதாம். வைசேடிய நூல் செய்தவன் கணாதமுனிவன்.

இனி நையாயிகமாவது வைசேடியநூலிற் கூறியவற்றைச் சிறுபான்மை வேறுபடுத்திப் பிரமாணம் பிரமேய முதலாகப் பதினாறுவகையான் விரித்துக்கூறுவதாம். நையாயிகநூல் செய்தவன் அக்கபாதமுனிவன். இங்ஙனமிருவகைப்படுந் தருக்கநூலார் சிலவற்றிற்குக் கணபங்கங் கூறுமாறாவது உண்டவுணவின்சாரமே அவயவங்களாய்ப் பரிணமித்துக் கணந்தோறும் வளர்ந்துந் தேய்ந்தும் வேறுபடுதலின் அவயவியாகிய உடம்பும் வளர்ந்துந் தேய்ந்துங் கணந்தோறும் பிறிது பிறிதாம். அங்ஙனங் கணந்தோறும் வளர்ந்துந் தேய்ந்தும் வருதல் காணப்படாதாயினும், மழைத்தாரையா னிறையும் பொய்கைநீரும் இறைப்பக் குறையுங் கூவனீரும் போல முடிவின்கட் காணப்படுதலிற் கணந்தோறும் வளர்தலுந் தேய்தலுமுடைமை பெற்றாம். இவ்வாறே மண்டொடுதல் பூரித்தல் முதலியவற்றால் நிலமும் யாற்றுநீர்ப்பெருக்கு முதலியவற்றால் கடலும் கணந்தோறும் நிறைவு குறைவுடைமையான் இன்னோரன்னவையெல்லாம் கணபங்கமாய்ப் பிறிதுபிறிது தோன்றுமெனக்கொள்வர். சௌத்திராந்திகரும் வைபாடிகரும் சமணரும் தார்க்கிகரும் பரமாணுகாரணவாதிகளாயினும் அவருட் சௌத்திராந்திகரும் வைபாடிகருஞ் சமணரும் பரமாணுக்களொருங்கு பலதொக்குக் காரியமாமென்பர். தார்க்கிகர் அவ்வாறன்றி இறைவனிச்சைவயத்தாற் பரமாணுக்களிற் கிரியை தோன்றி இவ்விரண்டு பரமா

ணுக்கள் தம்மிற் சேர்ந்திரட்டையணுவாய் அவை மும்மூன்று தம்முட்சேர்ந்து மும்மையணுவாய் அவை நந்நான்கு தம்முட்சேர்ந்து நான்மையணுவாய் இவ்வாறே யொன்றற்கொன்று சினையு முதலுமாய் முறையே தோன்றிக் காரியப்படுமென்றும், ஒடுங்குங்காலு மிறைவனிச்சைவயத்தான் அம்முறையே யொடுங்கு மென்றுங் கொள்வர். தார்க்கிகரும் சௌத்திராந்திகர் வைபாடிகரும் நிலவணு நீரணு தீயணு வளியணுவெனப் பரமாணுக்கள் நால்வகைப்படுமெனக் கொள்வர். சமணர் அவ்வாறு கொள்ளாது பரமாணுக்களெல்லாம் ஒரு தன்மையனவேயென்பர். இவை தம்முள் வேற்றுமை. இங்ஙனமாயினுந் தார்க்கிகர் வேதநெறியினொழுகி வேதத்திற்குப் பிரமாணங் கோடலிற் புறப்புறச்சமயிகளாகிய நாத்திகரோடு சேராது வைதிகருள் வைத்தெண்ணப்பட்டாரென்க. தார்க்கிகர் மதம் முடிந்தது.

## மீமாஞ்சை

இனி மீமாஞ்சையாவது: வேதத்திற் கருமகாண்டவாராய்ச்சி செய்தற்கெழுந்த நூலாகலின் அதுவும் வேதமெனப்படும். அது பன்னிரண்டத்தியாயமாகச் சைமினிமுனிவனாற் செய்யப்பட்டது. அந்நூல் கூறும் பொருளாவது: வேதம் ஒருவராற் செய்யப்பட்டதன்றி அநாதியே சுயம்புவாயுள்ளது; அங்ஙனமாகலின் வேதம் பிரமாணமெனப்படும். வேதத்துள்ளும் நீராடுக வேள்விசெய்க வழிபடுக என்றாற்போலத் தொழிற்படுத்துவனவாகிய சோதகவாக்கியங்களே பிரமாணமாம். உலகத்துச் சொற்பொருளுணரும் அவாவினராகிய இளையோர், ஆவினையாக்க மேதியை விடுக்கவெனவும் ஏவுமுதியோன் கூறுமொழிகேட்டும், அதுபற்றி யியற்று முதியோன் செய்யுந் தொழிலினைக் கண்டும், பின்பு மேதியை யாக்க ஆவினை விடுக்கவென மாறிக்கூறியவழி அங்ஙனஞ் செய்யுந் தொழிலினைக் கண்டும், இச்சொற் கிதுபொ

ருள் இச்சொற்கிதுபொருளெனவும் இங்ஙனஞ் சொற்பொரு ளெல்லாந் தொழிற்படுத்துஞ் சொல்லானே உணர்தற்பாலன வெனவுமுணர்ந்துகொள்வாராகலின், வேதத்தினும் அவ்வாறு தொழிற்படுத்துஞ் சொற்களே பொருள்விளக்கிப் பிரமாண மாமென்பது தெளியப்படும். அங்ஙனமன்றி உலகந் தோன்றி யொடுங்குமென்றும் தோற்றியொடுக்குதற்கோரிறைவ னுண்டென்றும் இந்திரன்முதலிய கடவுளருளரென்றும் அவர் இவ்வியல்பினரென்றும் பொருளியல்புகூறும் வாக்கிய ங்கள் பிரமாணமாகாவாயினும், அவை தொழிற்படுத்துவன வாகிய சோதகவாக்கியங்கட்குப் புனைந்துரைவகையால் உப காரமாதல்பற்றிப் பிரமாணமெனக்கொள்ளப்படும். இந்தி ராயசுவாகா வருணயசுவாகா என்றாற்போலும் வேதமந்திர ங்களும் பொருளுடையவல்லவாயினும் விதிவாக்கியங்கட்கு உபகாரமாதல்பற்றிப் பிரமாணமெனப்படும். சோதிட்டோ மம் பசுயாகமென்றாற்போலும் வேள்விப்பெயர்களும் வேள் விகளின் வேறுபாடுமுதலிய வுணர்த்திற்றலின் பிரமாணமாம்.

இங்ஙனம் வேதத்தின் விதிவாக்கியமல்லாதனவும் ஒரு வாற்றான் விதிக்குபகாரப்படுதல்பற்றிப் பிரமாணமென உப சரித்துக்கொள்ளப்படும். வேதமெல்லாம் இங்ஙனம் விதியும் புனைந்துரையும் மந்திரமும் குறியீடுமென நான்குவகைப்படு ம். இவற்றுள் விதி அங்கியும் ஏனை மூன்றும் விதிக்கங்கமு மாம். விதிவாக்கியம் விதித்தலும் விலக்குதலுமென இருவ கைப்படும். அவைபற்றிச் செய்யும் வினையும் அறமும் பாவ முமென இருவகைத்து. ஆன்மாவை யறிகவென விதித்த லின் ஆன்மாக்கள் பலவாய் நித்தமாய் வியாபகமாய்ப் பிறந் திறந்து வினைசெய்து வினைப்பயன்களை நுகர்ந்துவரும். வி னைசெய்தவர்க்கு வினையே துறக்கமுதலிய பயன்களையுதவும். காமியப்பயன் குறித்து வினைசெய்யின் அவ்வப் பயன்களையு தவும். காமியம் வேண்டாது விலக்கியனவொழித்து வே ள்விகள் செய்யின் அவ்வினை முத்தியையுதவும். இவ்வான்

மாக்களுக்கு வேறாய்ப் பரமான்மா வொருவன் உண்டென்ப தூஉம் உலகந் தோன்றி யழியுமென்பதூஉம் பொய். உலகம் என்றுமிவ்வாறே நிலைபெறுமென்பதாம். இங்ஙனஞ் செய் யப்பட்ட சைமினி சூத்திரங்கட்குப் பாடியஞ்செய்தான் சப ரமுனிவன். சூத்திரத்திற்கும் பாடியத்திற்கும் சிறுபான் மை வேறுபாடுகொண்டு பட்டாசாரியன் சூத்திரமதம்பற்றி வழிநூல்செய்தான். பட்டன் மாணாக்கனாகிய பிரபாகரன் பாடிய மதம்பற்றி வழிநூல் செய்தான். இங்ஙனமாகலின் மீமாஞ்சைமத மிருவகைப்பட்டது. பட்டாசாரியன் கன்ம மே பயன் கொடுக்குமென்றும் முத்தியில் நையாயிகர்போல் ஆனந்தமுண்டென்றுங் கொள்வன். பிரபாகரன் கன்மநாச த்தின் அபூருவமெனவொன்று தோன்றிநின்று பயன்கொடு க்குமென்றும் வைசேடிகர்போலப் பாடாணம்போற் கிடப் பதே முத்தியென்றுங் கூறுவன். பொருட்டன்மைகளினுஞ் சிறுபான்மை பட்டாசாரியனில் வேறுபடக்கூறுவன். பிர பாகரமதமெனினுங் குருமதமெனினு மொக்கும்.

மீமாஞ்சைநூல் பன்னிரண்டத்தியாயத்துள் முதலத் தியாய முதற்பாதத்திற் கருமங்களுக்கு நேரே பிரமாண மான விதிவாக்கியங்கட்குப் பிரமாணமில்லையென வாதிகள் கூறுஞ் சங்கைகளை மறுத்து வேதம் சுயம்புவாகலிற் பிர மாணமாமென்றும், இரண்டாம்பாதத்திற் புனைந்துரை வாக் கியங்களும் மந்திரங்களுமாகிய விரண்டும் விதிக்கு வேண்டப் படுந்திரவியங்களும் துதிகளும் முதலியவற்றைத் தெரிவித் தலிற் பிரமாணமாமென்றும், மூன்றாம்பாதத்தின் வேதத் தோடு முரணாது மனுமுதலிய வான்றோரால் செய்யப்பட் ட மிருதிமுதலியவற்றிற்கு மூலவேத முண்டென்று வழி யளவையா னுணரப்படுதலின் அவை பிரமாணமாமென் றும், நாலாம் பாதத்தின் விதிவாக்கியத்தில் அகப்பட்ட வே ள்விப்பெயர்கள் கருமவேறுபாடும் மாட்டேற்றும் அறிவாத லும் முதலியன வுணரநிற்றலானும் கருமத்திற்குப் பெயராத

லாலும் பிரமாணமாமென்றும், இவ்வாறு பிரமாணமாமாறுணர்த்துதலிற் பிரமாணவியலென்னும் பெயர்த்து. இரண்டாமத்தியாயம் அங்ஙனம் பிரமாணமாகிய வேதத்திற் பெறப்பட்ட கருமங்கள் வேதவாக்கியங்களிற் கூறும் பகுதி வினைவேறுபடுதலும் ஒருவினை பலகாற் கூறுதலும் தொகை கூறுதலும் வேறுவேறு குறியிடுதலும் குணவேறுபாடு கூறுதலும் வேறு பிரகரணத்திற் கூறுதலுமாகிய விவற்றான் ஒன்றற்கொன்று வேறுபாடுடைமை தெரிவித்தலிற் கருமபேதவியலென்னும் பெயர்த்து.

மூன்றாமத்தியாயம் அங்ஙனம் பலவேறுவகைப்பட்ட கருமங்கட்குச் சுருதி இலிங்கம் வாக்கியம் பிரகரணம் தானம் குறியீடு என்னுமிவற்றானே இதற்கிது அங்கமெனவும் இது அங்கியெனவும் அங்கமு மங்கியுமாமுறைமை கூறுதலின் அங்காங்கியலென்னும் பெயர்த்து. தலைமைப் பொருள் அங்கியுந் தலைமையில் பொருள் அங்கமுமெனக்கொள்க. சுருதி முதலியவற்றுட் சுருதியாவது வேறொன்றனை யவாவாது தான் கருதிய பொருளைத்தானே தெரிவிப்பது. அது விதிக்குஞ் சொல்லும் குறியிட்டுச்சொல்லும் விவகரிக்குஞ் சொல்லுமென மூவகைப்படும். இலிங்கமாவது : ஆற்றலாற்பொருளையுணர்த்துவது. அது சொல்லாற்றலும் பொருளாற்றலுமெனவிருவகைப்படும். ஒரு மந்திரத்தின் வருந் தொழில்பற்றி அத்தொழினிகழுங் கருமத்திற்கம்மந்திர மங்கமென்பது சொல்லாற்றலாற் பெறப்படும். “அவியினைக் கருவியாற் சருவத்தாற் கையால் வாங்குக” வெனப் பொதுப்படக்கூறியவழிக் கருவியிறைச்சிக்குஞ் சுருவம் நெகிழ்ந்த பொருட்டும்கை புரோடாச முதலியவற்றிற்கும் அங்கமென்பது பொருளாற்றலாற் பெறப்படும். வாக்கியமாவது: இங்ஙனஞ்சுருதியுமிலிங்கமுமின்றிச் சொற்றொடர்பற்றி யுணரவருவது. பிரகரணமாவது: சோதிட்டோமம் வேட்கவென்றாற் போலும்

விதிவாக்கியங்களாற் பொதுப்பட வுணர்ந்து சிறப்பானறியப் படாத கன்மங்களான் அவாவப்பட் டிவ்வாறு செய்யற்பாற் றென வகுத்துக் கூறுவது. அது பெரும் பிரகரணமென் றும் இடைக்கட்பட்ட பிரகரணமென்றும் இருவகைப்படும். தானமாவது: நிரனிறையிடமும் அண்மையிடமுமென இ ருவகைப்படும். அவற்றுளண்மை சொல்லினண்மையுமநு ட்டானத்தினண்மையுமென விருவகைத்து. குறியீடாவது: காரணத்தான் வரும் பெயர். அது வேதமரபுபற்றிய பெய ரும் உலகமரபுபற்றிய பெயரும் என விருவகைப்படும். இவ் வாறு சுருதிமுதலியவற்றி னியல்புணர்ந்துகொள்க.

நாலாமத்தியாயம் இங்ஙன மங்கமு மங்கியுமாகிய கன்ம ங்களை யனுட்டிப்பிக்கும் பிரயோகமாமாறு கூறுதலிற் பிர யோகவியலென்னும் பெயர்த்து. அங்கம் பிழைத்தவழி அங் கியின்பொருட்டு வேறங்கம் வேண்டப்படும். அங்கிபிழைத்த வழி அங்கத்தின் பொருட்டு வேறங்கி வேண்டப்படுவதின்று. அங்கம் பிழைத்தவழி அதற்கங்கி பலவுளவாயின் யாதொன் றற்கங்கமாயே மற்றொன்றற் கங்கமாம்; அதன்பொருட்டே வேறங்கம் வேண்டப்படும்; மற்றொன்றன் பொருட்டு வேண் டப்படுவதின்று என்றாற்போலத் தெரிவிப்பது பிரயோக முறையென்க.

அஞ்சாமத்தியாயம் ஒரு பிரயோகத்துட்பட்ட வங்கா ங்கிகளை யநுட்டிக்கு முற்பிற்பாட்டு முறைமையைச் சுருதி முறைமை பொருண்முறைமை பாடமுறைமை முதலியன பற்றித் தெரிவித்தலின் முறைமைப்பாட்டியலென்னும் பெ யர்த்து. இங்ஙன மிரண்டாவதில் உற்பத்திவிதியா னறியப் படுங் கன்மபேதமும், மூன்றாவதில் உபகரிக்கும் விதியான் அறியப்படும் அங்காங்கியியல்பும், நான்கினும் ஐந்தினும் பிர யோகிக்கப்படுவனவற்றின் விதியானறியப்படும்பிரயோகமும் முறைமைப்பாடுந் தெரித்துணர்த்தியபின், ஆறாமத்தியாயம்

பயன்கூறுமுகத்தான் அதிகாரிகளாவாரைத் தெரிவித்தலிற் பயனியலென்னும் பெயர்த்து. அதிகாரவிய லெனினுமாம். இங்ஙனம் நால்வகைப்படும் எடுத்தோத்து விதிகளை ஆராயு மாறு ஆறத்தியாயத்துள் உணர்த்தி மேலேழாவது முதற்பத் தாவதிறுவாய் நான்கத்தியாயங்களான் மாட்டேற்றுவிதியா ராயுமா றுணர்த்தப்பட்டது. இவ்வாறு செய்யற்பாற்றென எடுத்தோதுவது எடுத்தோத்து விதியெனவும் அதுபோலச் செய்கவெனமாட்டெறிவது மாட்டேற்றுவிதி யெனவு முண ர்க.

அவற்றுள் ஏழாமத்தியாம் அதுபோலச் செய்கவென் னும் வசனத்தானும் அங்ஙனம் வசனமில்லவற்றிற்கும் பெய ர் ஒருமையானும் அதுவுமில்லவற்றிற்கு இது செய்கவென விதித்தலானது செய்யுமாறு யாதானு மொன்றனோடு மாட் டெறியும் வசனமுண்டென வழியளவையா னுணரப்படும் விதியானும் மாட்டெறியுமாறுணர்த்தி, எட்டாமத்தியாம் அ ங்ஙனம் பொதுப்பட வழியளவையா னுணரப்படுவனவற் றுள் எதுபோலெது செய்யப்படுமென் றவாயவழிச் சொல் லொப்புமை பொருளொப்புமை பற்றி இன்னதுபோ லின் னது செய்யப்படுமெனத் தெரிந்தெடுத் துணர்த்துதலின் ஏழாவது மெட்டாவதும் மாட்டேற்றியலென்னும் பெயரின வாம். ஒன்பதாமத்தியயம் அங்ஙனம் மாட்டெறிந்தமை பற்றிப் பகுதிப்பொருளிற் செய்யுங் காரியம் விகுதிப்பொரு ளிற் செய்வுழிப் பகுதியிற் கூறும் மந்திரமும் சாமமூந் தொ ழிலும் விகுதிப்பொருளுக்கேற்ப வேறுபடக்கொள்ளுந் திற நியாயம்பற்றி யூகிக்குமாறுணர்த்துதலின் ஊகவியலென்னும் பெயர்த்து. பத்தாமத்தியாயம் அங்ஙனமூகித்தபின்னர் மாட் டெறிந்தவற்றுள் ஆண்டைக்குரியனவாகாதவற்றை நியாயம் பற்றி விலக்குமாறுணர்த்துதலின் விலக்கியலென்னும் பெயர் த்து. இங்ஙனம் பத்தத்தியாயத்தினும் எடுத்தோத்துவிதியி னும் மாட்டேற்றுவிதியினுந் தெரிந்துணர்த்தவேண்டியவற்

வுறத் தெரித்துணர்த்தியபின்னர் ஏனையிரண்டத்தியாயத்தி னும் இவ்விருவகைக்கும் பொதுவாகிய தந்திரமும்பிரசங்கமு மாமாறுணர்த்துதலின், பதினொராமத்தியாயந் தந்திரவியலெ ன்னும் பெயர்த்து. பன்னிரண்டாமத்தியாயம் பிரசங்கவிய லென்னும் பெயர்த்து.

தந்திரமாவது: கருமஞ்செய்யுங்காற் றலைமைவினை பல வுளவாய ஒருதேசமும் ஒருகாலமும் ஒரு கருத்தாவுமாயவழி அவற்றிற்கெல்லாம் பொதுப்பட அங்கவனுட்டானம் ஒரு காற் செய்யவமையுமென்றாற் போல்வது. அங்ஙனமன்றி மறித்துஞ் செய்யப்பாலதாதலே யபாவமென்பர். பிரசங்க மாவது: முதற்கண்வந்த வாசிரியன் அமுதுசெய்தற்கட்ட வறுசுவையடிசில் ஆசிரியனையன்றியும் ஒருதலையானங்ஙன மட்டு இடுதற்குரியனாய்ப்பின்புவந்த மருகனுக்கு முபகாரமா தல்போல ஒன்றன்பொருட்டுச் செய்தவினை மற்றொன்றற்கு முபகாரமாதல். ஆசிரியனுக்கட்டவடிசில் ஆசிரியனுடன் வந் தவர்க்குமுபகாரமாதல் பிரசங்கமன்றென்பது. மீமாஞ்சை நூலிற் பன்னிரண்டத்தியாயமு முதலிய பொருள் இங்ஙனந் தொகுத்துணர்த்தப்பட்டது. இவற்றிற்குதாரணம் விரிப் பிற் பெருகும். நையாயிகநூலிற் கூறுந் தர்க்கமும் மீமாஞ் சை நூலிற் கூறும் நியாயங்களும் எல்லா நூல்கட்குமுபகார மெனக்கொள்க. மீமாஞ்சை மதம் முடிந்தது.

## ஏகான்மவாதம்

ஏகான்மவாதமாவது: மாயாவாதமும் பாற்கரியவாத மும் கிரீடாப்பிரமவாதமும் சத்தப்பிரமவாதமுமென நான்கு வகைப்படும். அவற்றுண் மாயாவாதமாவது: சச்சிதானந்த மாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பது பிரமம். பரமார்த்தத் திலே சத்தொன்றே மெய்ப்பொருள் ஏனையவெல்லாம் பிரம த்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சை யினாற் காணப்படுவனவாகலிற் பொய். இங்ஙனந் தோன்று

மூலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடுபோல அசத்துமன்றி அநிருவசனமாயிருக்கும். அநிருவசனமென்பது சொல்லொணுதென்னும்பொருட்டு. இந்த மாயைக்கு வேருகிய பிரமரூபமே யான் என வேதாந்த ஞானத்தாலறிவதே முத்தியென்பதாம்.

பார்க்கரியவாதமாவது: முன்கூறப்பட்ட பிரமமே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினுற் பந்தமாயிற்று. பரமார்த்தத்திலொருபொருளே. வேதாந்தஞானத்தான் உடம்பிற்கு வேருகிய வான்மரூபம் விளங்கும். அதுவே பரப்பிரமமென்றறிந்து அதன்கணிலயித்தலே முத்தியென்பதாம்.

கிரீடாப்பிரமவாதமாவது: முன்கூறப்பட்ட பிரமமே நான். யான் ஒருபடித்தன்றிப் பலவேறுவகைப்பட்டவிகாரப் பொருள்களோடு கூடிப்பலவாற்ருல் விளையாடுகின்றேனென்று இவ்வாறறிவதே முத்தியென்பதாம்.

சத்தப்பிரமவாதமாவது: காரணமாகிய பரப்பிரமம் இறுதிக்காலத்திற் சத்தவடிவிற்றுயிருக்கும். அஃதவிச்சையினுற் சடமுஞ் சித்துமாயவுலகங்களாய் விரியும். முடிவின்கட் சத்தமாத்திரையே யுள்ளது என்றிங்ஙனமறிவதே முத்தியென்பதாம். இங்ஙனம் நால்வேறுவகைப்பட்ட ஏகான்மவாதநூல் செய்தவன் வியாதமுனிவன்.

## சாங்கியமதம்

இனிச் சாங்கியமதமாவது, மூலப்பகுதி நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப்பொருட்குங் காரணமாய் முக்குணங்களுமொப்பநின்ற வவ்வியத்தமாய் அருவாயுள்ளது. இஃதிருபத்துநாலாந்தத்துவம். இதன்கட்டோன்றுங் காரி[illegible] புத்திமுதனிலிய [illegible] இருபத்துமூன்று தத்துவமுள,

இத்தத்துவமிருபத்துநான்கிற்கும் வேறாய் நித்தமாய் வியாபகமாய்த் அருவாய்ப்பலசாங்கியமாய் அறிவதுஞ்செய்வதுமின்றி அறிவுமாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலுங் காரியமாதலுமின்றி நிற்கு மான்மாக்கள் இருபத்தைந்தாந் தத்துவமெனப்படும். இவ்விருபத்தைந்தாந் தத்துவமாகிய புருடன் முத்தியினும் பெத்தத்தும் ஒருதன்மையனேயாம். புருடனுக்கு மலினமென்பதில்லை. தாமரையிலைநீர்போலொட்டற்று நிற்பன். அநாதியே புத்தியைச் சார்ந்த வவிச்சைவயத்தாற் பெத்தனெனப்பட்டு இன்பத்துன்பவுணர்வு தோன்றாநின்றது. புத்தியாவது மூலப்பகுதியின் பரிணாமம். அதுவே மானென்றும் அந்தக்கரணமென்றுங் கூறப்படும். அது பொறிவழியான் ஞானமாய்ப்பரிணமித்து விடயத்திற் செல்லும் புருடன் செய்வானென்பதும் புத்தியறியுமென்பதும் வேற்றுமையுணராமையானென்பது. மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரவே அவிச்சை நீங்கும்; அதுவே முத்தியெனப்படும். ஆன்மாக்களுக்கு வேறாய் இறைவனொருவனுண்டென்பது பொய்யென்பதாம். இந்நூல் செய்தவன் கபிலமுனிவன். இதனுட் கூறுஞ் சற்காரியவாதம் சைவமுதலிய சற்காரியவாதநூல்கட்கெல்லாம் உபகாரமாம். இதனுட் கூறு மத்தியாசவாதம் மாயாவாதத்துக்கு உபகாரமாம். சாங்கியமுடிந்தது.

## யோகமதம்

யோகமாவது நிலமுதற் புருடனீறாகிய இருபத்தைந்து தத்துவமும் பெத்தமுத்திகளும் நீதிக்கேதுவாம். இருபத்தாறாந் தத்துவம் இறைவனொருவனுளன், அவன் முற்றுணர்வுடையனாய்ச் சாத்திரங்களை யருளிச்செய்து புருடருக்கு ஞானத்தை யறிவுறுப்பனாகலின், இவ்வான்மாக்களுக்கு வேறென்றுணரப்படுமென்பதாம். இந்நூல் செய்தவன் பதஞ்சலி முனிவன். யோகமதம் முடிந்தது.

## பாஞ்சராத்திரமதம்

இனிப் பாஞ்சராத்திரமதமாவது: இருபத்துநாலாந் தத்துவமாகிய குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந் தத்துவம் வாசுதேவனென்றொருவனுள்ளன். அவனே பரம்பொருள். அவனிடத்தினின்றும் கண்ணனும் அநிருத்தனும் மகரத்துவசனும் ரௌகிணேயனும் என நால்வர் உலகங்களைப் படைத்தற்பொருட்டுத் தோன்றினர். இந்த நால்வகை வியூகங்களாற் சடமுஞ் சித்துமாகிய எல்லாவுலகமும் படைக்கப்பட்டனவாதலால், எல்லாம் வாசுதேவன் பரிணாமமேயாம். இங்ஙனம் கூறும் பாஞ்சராத்திரத்தினன்றி வேதங்களினுறுதிப்பயனுண்டாகாது. ஆதலாற் பாஞ்சராத்திர முறையே தீக்ஷை பெற்று வாசுதேவனை வழிபட்டு வாசுதேவனுருவின் இலயமாதலே முத்தியென்பதாம். இந்நூல் செய்தவன் வாசுதேவனென்க.

இவ்வாறு புறச்சமயமாறுங் கண்டுகொள்க.

---

## அகப்புறச்சமயம்.

(பாசுபதம்)

இனி அகப்புறச்சமயமாறனுட் பாசுபதமாவது: ஆன்மாக்கள் பலவாய் நித்தமாய் வியாபகமாய்க் காரியகாரணக் கூட்டரவாற்றோன்றும் ஞானத்தாற் றனித்தனி வேறாயுள்ளன. இவ்வான்மாக்களுக்கு ஆணவமலமென்பதொன்று இல்லை. மாயை கன்மமென்றிரண்டாற் பந்தமுற்று இன்பத் துன்பங்களை யனுபவிக்கும். இவற்றினுவர்ப்புத்தோன்றிச் சாத்திரமுறையானே தீக்கை பெற்றவன்பால் ஈசனுடைய ஞானம் போய்ப்பற்றும். அப்போது, குடும்பத்தின் பாரம் புத்திரர்பால் வைத்தொழிந்துத் துறவறத்திற் செல்வார்போல, ஈசனுந் தன்னுடைய குணங்களை யவன்பாற் பற்றுவித்துத் தானதிகாரத்தினொழிவுபெற்றிருப்பன் என்பதாம்.

## மாவிரதம்

மாவிரதமாவது: மேற்கூறிப்போந்த இயல்பையுடைய ஆன்மாக்கள் அவ்வாறே பந்தமுற்றுச் சுகதுக்கங்களை யனுபவிக்கும் சாத்திரத்திற் கூறு முறையே தீக்ஷைபெற்று எலும்புமாலையணிதன் முதலிய சரியைகளின் வழுவாதொழுகினவர் முத்தராவார். முத்தருக்குச் சிவனோடு சமமான எல்லாக் குணங்களும் உற்பத்தியாம் என்பதாம்.

## காபாலம்

காபாலமாவது: ஆன்மாக்களியல்பும் பந்தவியல்பும் மாவிரதர் கொண்டவாறேயாம். சாத்திரமுறையே தீக்ஷைபெற்றுப் பச்சைக்கொடியொன்று கைக்கொண்டு நாடோறும் மனிதர் தலையோட்டின் ஐயமேற்றுண்பவர், உன்மத்தராய்ச் சிவனுவேசித்தலால் எல்லாக்குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பதாம்; இம்மூவரும் முறையே சங்கிராந்தசமவாதி எனவும், உற்பத்திவாதியெனவும், ஆவேசவாதியெனவு முணர்க. இம்மூன்றுமதமுஞ் செய்தார் முறையே மாயை வித்தை காலமென்னுந் தத்துவங்களின் வைகும் உருத்திரர் மூவரெனக்கொள்க.

## வாமம்

இனி வாமமதமாவது: பாற்கரியன் கூறியவாறே சடமுஞ் சித்துமாகியவனைத்துலகும் சத்தியின் பரிணாமமே. வாமநூலின் விதித்த முறை யொழுகிச் சத்தியின் இலயித்தலே முத்தியென்பதாம். இந்நூல்செய்தார் சித்தபுருடர். சத்தி தத்துவத்தின் வைகும் ஓரான்மாவாற் செய்யப்பட்டது சுத்தசாத்தமென்றறிக.

## வைரவம்

இனி வைரவமதமாவது: பெரும்பாலும் வாமமதத்தோடொத்துச் சிறுபான்மை ஆசாரங்களான் வேறுபட்டு வைரவனே பரம்பொருளெனக் கொண்டு வைரவபதத்திற் சேர்வதே முத்தியென்பதாம்.

### ஐக்கவாதசைவம்

இனி ஐக்கவாதசைவமாவது "இன்மைமல மாயை கன்மமென்றிரண்டே யிறைதா னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிரு வினையின், றன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந் தந்திடுமிந் நிதனாலே யிருபயனுஞ் சார்ந்து, கன்ம மெல்லா நேராக நேராதன் மருவக் கடவுளரு ளாலெவையுங் கழிந்திடுவ னதனாற், பின்மலமா னவையணுகா பெருகொளி முன்பமுதே பெற்றிடும்" என்பதாம்;

இவ்வாறு அகப்புறச்சமயமாறுங்கண்டுகொள்க. காளாமுகம் சாம்பவ முதலியனவும் இவற்றின் பகுதியாயடங்கும்.

இனிப் பாடாணவாத முதலிய அகச்சமயங்களாறின் கருத்துஞ் சங்கற்ப நிராகரணத்தின் விரித்தோதியவாற்றானறிக. ஈண்டும் வந்துழி வந்துழிக் காட்டுதும். ஈண்டுக் கூறாத சமயங்களும், கூறியவற்றின் பகுதியாய் இவற்றுள்ளே யடங்கும். அஃதறிந்தடக்கிக்கொள்க.

---

## முதற்சூத்திரம்.

ஈண்டு வடமொழிச் சிவஞானபோதத்துட் கூறியவாறே பொதுவுண்மையென் றிரண்டதிகாரமாகப் பகுத்துக் கொண்டு, பிரமாணம் இலக்கணம் சாதனம் பயனென நான்கு திறத்தாற் பொருளியல்புரைப்பான் எடுத்துக்கொண்ட வாசிரியர், அவற்றுள் முப்பொருளின் வைத்து முதற்கட் பதியுண்மைக்குப் பிரமாணங் கூறும் முதற்சூத்திரத்துக்கு வார்த்திகமாகிய பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்துச் செய்கின்றார்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
ரோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

என்பது சூத்திரம்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு இனி அதன் கருத்துரைக்கின்றார்.

சங்காரகாரணனுயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகமென்பதுணர்த்துதனுதலிற்று. எனவரும்.

சங்காரமைவகைப்படும். அவற்றுள் முதலது நிவிர்த்திகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; இரண்டாவது பிரதிட்டாகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; மூன்றாவது வித்தியாகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; நான்காவது சாந்திகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; இறுதியது சாந்தியதீதகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம். அவற்றுள் ஈண்டைக் கேற்புடையது இறுதிக்கண்ணதாகலின் ஈண்டுச் சங்காரகாரணனென்றது சுத்த மாயாபுவனந்தஞ் சங்கரிக்குஞ் சங்காரகாரணனாகிய பரமசிவனை; அயன்மாலொடுங்கூடக்குண தத்துவத்தின் வைகிப் பிரகிருதிபுவனந்தஞ் சங்கரிக்குங் குணிருத்திரனையன்றெனவுணர்க. என்னை? அவன் பிரகிருதியின் மேற்பட்ட புவனங்கட்குச் சங்காரகாரணன் அன்மையானும், பரமசிவன் இலயபோகவதிகாரமென்னு மூன்றவத்தையினும் முறையே அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்றுதிருமேனிகொண்டு, சத்தன் உத்தியுத்தன் பிரவிருத்தன் எனவுஞ் சிவன் சதாசிவன் மகேசனெனவும் பெயர்பெற்றுநிற்பனென்றும், இங்ஙனந் தொழிலான் வேறுபட்டதன்றிப் பொருளான் வேறுபாடில்லையென்றும், பசுவர்க்கத்திற் பிரளயாகலரில் பக்குவமுடையவன் சீகண்டருத்

திரனென்று சைவாகமங்களெல்லாமோதுதலின் மகேசுரமூர்த்தியிருவாயான திருமேனியே பரமசிவனுக்குச் சுதந்திரவடிவம் ஏனையவை அன்னவல்லவென்பது பெறப்படுதலானும் என்பது. இவ்வேறுபாடுணர்த்தற்கன்றே பொதுப்படச் சங்காரகாரணனை யென்றொழியாது சங்காரகாரணனாயுள்ள முதலையென விதந்தோதியதூஉமென்க. இவ்வேறுபாடுணராது மகாருத்திரனாகிய பரமசிவனைக் குணிருத்திரனாக வைத்தெண்ணுவோரை நோக்கி "நம்மவரே மூவரென் றே யெம்பிரானொடு மெண்ணிவிண் ணுண்டு மண்மேற், றேவரென் றே பிறு மாந்தென்ன பாவந் திரிதவரே" என வாதவூரடிகளிரங்கிக் கூறிய திருவாக்குமறிக. இன்னும் "தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்ற தோர்" எ-ம். "தேவராயு மசுரராயுஞ் சித்தர் செழுமறைசேர், நாவராயு நண்ணுபாரும் விண்ணெரி காலீறு, மேவராய விரைமலரோன் செங்கண்மா லீசனென்னு; மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே" எ-ம். "மாவையுரித்ததள்கொண் டங்கமணிந்தவனை வஞ்சர்மனத்திறையு நெஞ்சணு காதவனை, மூவருருத்தனதா மூலமுதற் கருவை" எ-ம். "வரிவாயமலரானும் வையந்தன்னை, யுரிதாயளந்தானு முள்ளுதற்கங்கரியானு, மறியாதகள்ளின்மேயான பெரியானென்றறிவார்கள் பேசுவாரே" எ-ம். "படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை" எ-ம். "தேவர்கோ வறியாத தேவதேவன் செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை, மூவர்கோ னாய்நின்ற முதல்வன்" எ-ம். "முந்துநடுவு முடிவுமாகிய மூவரறியாச், சிந்துரச் சேவடியானை" எ-ம். "முந்திய முதனடு விறுதியு மானாய் மூவரு மறிகிலர்" எ-ம். "அரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பா, னரனா யழிப்பானுந் தானே" எ-ம். "விரனய் னரியாரு மறியாவகை யெங்களீசர் பரிசுகளே" எ-ம். வருந் திருவாக்குக்களானு மோர்ந்துணர்க. இதுவே சுருதி மிருதி புராணமிதிகாசமெல்லாவற்றிற்

கும் கருத்தென்பது, சிவதத்துவ விவேகமுடையார் குணநீ தனென்னுஞ் சுலோகத்திற் கடாவிடைகளான் விரித்துக்காட்டியவாற்றானறிக. இங்ஙனமாயினும், சீகண்டருத்திரன் அயன்மால் போலச் சகலரிலன்றிப் பிரளயாகலர்களிற் பக்குவமுடையோனாய்க் கட்டுநீங்கி முத்திபெற்ற கடவுளாகலானும் பரமசிவனுக்குரிய எல்லாப்பெயர்களும் வடிவமுந் தொழிலும்பெற்றுடையவனாகலானும், சைவாகமங்களையறிவுறுக்குங் குரவனாகலானும், அயன்மாலிருவர்க்கு மேலாய்ச் சைவத்தினெய்திச் சமயதீக்கை பெற்றோரால் வழிபடுகடவுளாயினானென்க.

இங்ஙனம் கருத்துரைத்துக் கண்ணழித்துரைப்பான் புகுந்து ஈண்டு முதற்கண் உரைவகையாமாறுணர்த்துகின்றார்.

இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க எனவரும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்துரைக்கு முரைபற்றி உரைத்துக்கொள்க வென்றவாறு. எனவே, பொழிப்புரை இங்ஙனமிருவகைப்படும். அவற்றுட் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரை மாத்திரையேயாமீண்டுரைக்கின்றாம். பிண்டமாகக் கொண்டுரைக்கும் பொழிப்புரை இதுபற்றி உணர்ந்துகோடலாமாகலின், அஃதியாமுரைக்கின்றிலமென மாணாக்கர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று. இங்ஙனம் பொழிப்புரை யிருவகைப்படுமென்பது "பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப், பிண்டமாகக் கொண்டுரைப் பதுவே" எ - ம். "பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை நாடிற்றிரிபில வாகுதல் பொழிப்பே" எ-ம். ஓதியவாற்றானறிக. இஃதேனைச் சூத்திரங்களினு மூய்த்துணர்தற்பொருட்டு முதற்கண் வைக்கப்பட்டது. பிண்டப்பொருளெனினுமொக்கும். உரைத்துக்கொள்க வென்புழிக் கொள்ளென்பது தற்பொருட்டுப் பொருட்கண்வந்த விகுதி பகுதியோடியைதற்குரிய துச்சாரியை பெற்று உரை

த்துக்கொள்ளென நின்றவழி அதுவும் பகுதித்தன்மைப்பட்டு மேல்வரும் வியங்கோள் விகுதிபெற்றுத் தமக்குப்பொருள் இனிது விளங்குதற்பொருட்டு உரைக்கவென்னும் பொருளாய் நின்றது. இது சூத்திரவிருத்தியுள் விரித்துரைத்தாம். ஆண்டுக் காண்க. இங்ஙனம் ஆசிரியராணை தந்தமையிற் கண்ணழித் துரைபற்றிச் சூத்திரத்துக்குப் பதப்பொருள் கூறுதும்.

அவனவளது—என்மனார் புலவர் என்பது ஆண் பெண்ணலியென்றாற்போலும் உலகத்தொகுதி தோற்றநிலையிறுதியென்னு முத்தொழிலுடைமையான் ஒருவனாற் றோற்றப்பட்டு நின்றுள்ளதேயாம். அற்றேல், அஃதியாவனினுளதாமெனிற்? றானொடுங்குதற்கு நிலைக்களமான கடவுளினின்றும் உளதாம். ஒடுங்கியவாறே யொழியாது மீளவுளதாவதெதனாலெனில்? சகசமான ஆணவமலந் தீர்ந்தொடுங்காமையால் உளதாம். இங்ஙனமாகலிற் சங்காரத்தொழிலைச் செய்யுங் கடவுளே முதற்கடவுளென்று கூறுவர் அறிவுடையோர் என்றவாறு.

எனுமென்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சமாய் இவ்வாறென்னும் பொருள் குறித்துநின்றது. வடமொழி முதற்சூத்திரத்தின் ஆதியென்றதும் அப்பொருட்டு. அவையென்பது தொகுதி. அஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உளவெனப்பிரித்துப் பயனிலையாக்கித் தானென்பது அசையாகக்கொள்க. வினைமை - வினையுடைமை. உடைமை - உடைத்தாந்தன்மை.

அவ்வக்காலத்தன்றி மூவினையும் ஒருகாலத்துப்படுதல் கண்டிலமென்பாரை நோக்கித் தன்மையின் வைத்தோதினார். தோற்றியவெனப் பிறவினைவாய்பாட்டானோதுதலின், அதற்குரிய வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. தோற்றியவென்புழிப் படுசொற் றொக்குநின்றது; "இல்வாழ்வான்" என்புழிப்போல. திதிப்படுமுலகத்தைத் திதியெனவும் அந்

தத்தைச் செய்யுங் கடவுளே அந்தமெனவும் உபசரித்தார். காணப்பட்டவுலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், தோற்றியதிதியே யொடுங்கியுளதாமென உலகின்மேல் வைத்துக் கூறினார். சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்திவ்வுலகமென்றதும் இக்கருத்தே பற்றி யென்க. தோற்றுவாேனாருவனுளன் அவன் ஒடுக்கியுளதாக்குவனெனக் கடவுளின்மேல் வைத்தோதிய வடமொழிச் சூத்திரத்திற்குந் தாற்பரிய மிதுவேயெனக் கொள்க. ஏகாரந் தேற்றம். ஒடுங்கியென்பது பெயர். ஒடுங்கியென்புழி இன்னுருபும் மலத்தென்புழி ஆறனுருபுந் தொக்குநின்றன. ஆமென்பதனை முன்னுங்கூட்டுக. என்மனாரென்பது செய்யுண்முடிபாயதோர் ஆரீற்று முற்றுச்சொல். மன் எதிர் கால விடைநிலை. அது "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையருரையானு மறிக. ஈண்டுப் புலவரென்றது அளவையினியல்புணர்ந்தாரை. இதனுள், அவனவளது வெனுமவை மூவினைமையின் என்பதோரதிகரணம், தோற்றியதிதியே யொடுங்கியுளதாம், என்பதோரதிகரணம், அந்தமாதியென்பதோரதிகரணம். ஆகமூன்றதிகரணத்ததிச்சூத்திரமென்றுணர்க. இம்மூன்றும் ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருதலின், ஒரு சூத்திரத்தாற் கூறினார். வருஞ்சூத்திரங்களினு மிவ்வாறே கண்டுகொள்க. தன்னாற் கூறப்படும் பொருளும் அதன்கணையப்பாடும் அதற்குப் பிறர்கூறும் பக்கமும் அதனை மறுத்துக் கூறுஞ் சித்தாந்தத் துணிபும் இயைபும் என்னுமிவற்றிற்கு நிலைக்களம் ஈண்டதிகரணமெனப்படும். அவற்றுள் இயைபு நூலியைபும் அதிகாரவியைபும் ஒத்தியைபும் பாதவியைபும் அதிகரணவியைபும் எனவைவகைப்படும். அவையெல்லாமாண்டாண்டுக் காட்டுதும்.

---

## முதலதிகரணம்.

இம்முதலதிகரணத்தாற் கூறப்படும் பொருளாவது மேற் கருத்தாவினுண்மை சாதித்தற்பொருட்டு உலகிற்கு முத்தொழிலுண்மை சாதித்தல்.

உலகம் முத்தொழிலுடைத்து என்பதாம்.

அதற்கவை உளவோ இலவோவென்று இரட்டுறத் தோன்றும் ஐயப்பாடு ஈண்டு மீமாஞ்சை நூலாரும் உலோகாயதநூலாரும் உலகந் தோன்றுதலுமழிதலுமின்றி என்றுமிவ்வாறே நிலைபெறுவதாகலின் உலகங் காரியப்பொருளாமெனவும், எனவே இதுகொண்டு கருத்தாவுண்மை சாதித்தல் முயல் கோடுடைத்து ஆன்வயிற்றுப்பிறத்தலான் என்பதனோடொக்குமெனவுங் கூறுவர். அவருண் மீமாஞ்சைநூலார் கூறுமாறுவது, உலகந்தோன்றி நின்றழியுமென்பது காட்சியளவையாற் பெறப்படுவதுமன்று; அவினுபாவமாகிய ஏதுக்காணாமையின், வழியளவையாற் பெறப்படுவதுமன்று. வேதத்துட் கூறப்படுதலாற் பெறுதுமெனின்? வேதத்தில் நடாத்துக நிறுவுக செய்கவென்றாற்போலத் தொழிற்படுத்தும் வாக்கியங்களே சொற்பொருளுணரும் வேட்கையாளர்க்கு அங்ஙனமேவுவோர் சொற்கேட்டு இயற்றுவோர் செய்யுந்தொழிலானே அவ்வச்சொற்பொருளுணரநிற்றலிற் பிரமாணமாம்; அவ்வாறன்றிப் பொருளியல்பு கூறும் வாக்கியங்களாற் சொற்பொருளுணரப்படாமையின் அவைபிரமாணமாகாவாயினும், தொழிற்படுத்தும் வாக்கியங்கட்கியாதானுமொருவாற்றான் உபகாரமாதலுடைமையான் உபசரித்துப் பிரமாணமெனக்கொள்ளப்படுமாகலானும், அதுபற்றி உரையளவையாற் பெறப்படுமென்பதுமின்றாகலானும் உலகிற்கு முத்தொழிலுண்மை பெறப்படாதென்பதாம். இவ்வாசங்கை நிகழ்ந்த வழியதனை நீக்குதற்கு ஈண்டு உளதாயொருவ

ளொருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்ப த்தி திதி நாசமுடைத்தென்றது. எனவரும்.

எனவே, உலகந் தோன்றிநின்றழியும், அவனவளது வென்றிவ்வாறு பகுக்கப்படும் அவயவப்பகுப்புடைமையின் ஆடைபோலுமென்னும் அனுமானத்தானே மூவினையுடைமை துணியப்படுமென்பதாயிற்று.

சொற்பொருளுணர்ச்சி தொழிற்படுத்துஞ் சொன்மாத்திரையானே துணியப்படுமென்னும் வரையறையின்றித் தாய் தந்தை முதலியோர் இச்சொற்கு இதுபொருள் இச்சொற்கு இதுபொருள் எனத் தெரிவித்தலானும் நிகண்டு நூலானும் துணியப்படுமாகலின் அதுபற்றிப் பொருளியல்பு கூறும் வாக்கியங்கள் பிரமாணமல்லவென்றலின், ஈண்டென்பது மூன்றதிகரணத்தில் வைத்து முதலதிகரணத்தி லென்பதாம், அவயவப்பகுப்புடைமையான் முத்தொழிலுடைமை துணியப்படுமென்றுணர்த்துவார், ஒருவனொருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமெனச் சூத்திரத்தினோதிய வாறே உடம்பொடுபுணர்த் தோதினரென்க. பொருந்தாமையின் உரையளவையே பிரமாணமென்றோத லமையுமாயினும், அவர் மதமேபற்றி யவரை மறுத்தற்பொருட்டு மூவினையுடைமையும் வழியளவையாற் சாதித்தார். ஈண்டவயவமென்றது, ஆடையினேகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படு நூல்கள்போல ஒரு பொருளினேகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுந் தகுதியுடையவற்றை. நில மலை கடன் முதலியவற்றின் ஏகதேசமாகிய மண் சிலை நீர் முதலியன தொடுதல் போழ்தல் முகத்தல் முதலிய தொழில்களானே தனித்தனி பிரித்தற்குரியவாமாறு காண்க, கலை ஆணவமலத்தினேகதேசத்தை நீக்கிக் கிரியையையெழுப்புமெனவும், பரமசிவன் சுத்தமாயையினேகதேசத்தைக் கலக்கிச் சுத்ததத்துவங்களைத் தோற்றுவிப்பனெனவும் அனந்ததேவன் அசுத்தமா

யையி னேகதேசத்தைக் கலக்கிக் கலைமுதலியவற்றைத் தோற்றுவிப்பனெனவும் வழங்குவதுபற்றி அவயவமெனப்படா; வேறுவேறு பிரித்தற்குரியன வன்மையின். இவற்றை நீக்குதற்கன்றே, ஒருபொருளினேகதேசமென்றொழியாது வேறுவேறு பிரித்தற்குரியன அவயவமென்றதூஉமென்க. இங்ஙனமாயினும், தார்க்கிகர்மதத்திற் பரமாணுக்கள் அவயவமுடையனவல்லவாகலான் அவை தோன்றிநின்றழியுமென்பது பெறப்படாமையின், அவயவமுடைமை காரியப்பாட்டிற்கு ஏதுவென்றல் யாண்டுஞ் செல்லாதாலெனின்? அற்றன்று: அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு சடமுமாய்ப்பலவுமாய் உரைக்கப்படுவனவெல்லாந் தோன்றியழியுமென்பது கருத்தாகக்கொள்க. இன்னுழை கதிரின்றுன்னணுக்களே பரமாணுக்களாம். அவற்றை மும்மையணுவெனக்கொண்டு அவற்றினும் நுண்ணியவாய்க் கட்புலனாகாதென உளவென்றதற்குப் பிரமாணமின்மையின் பரமாணுக்களும் அவயவமுடையனவேயாம். அல்லவெனக்கொள்ளினும், அவை சடமுமாய்ப் பலவுமாகலாற் றோன்றி நின்று அழிவனவேயாமென்க. ஆணவமலம் சடமாயினும் பலவன்று, ஆன்மாக்கள் பலவாயினுஞ் சடமல்ல. ஆகலான் அவற்றின்கட் செல்லாமையறிக. இங்ஙனமாயினும், மாயை சுத்தமாயை அசுத்தமாயையென இரண்டாய்ச் சடமுமாகலான் அவை காரியப்பொருளாவான் செல்லும். அவை தனித்தனி யொன்றேயாமெனிற்? குடமுதலியனவுந் தனித்தனி யொன்றேயாகலாற் பலவாதல் யாண்டைடதென்பதாய் முடியுமாலோவெனின்? அற்றன்று. அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு சுட்டியறியப்படுவனவெல்லாம் தோன்றிநின்று அழியுமென்பதே சித்தாந்த முடிபெனக்கொள்க. இது விளங்குதற்பொருட்டன்றே, ஆண் பெண் அலியென்றதல் ஒருவன் ஒருத்தி யொன்றென்றதல் ஓதாது, அவனவளதுவெனச் சுட்டுப்பெ

யர்களானேதியதூஉமென்க. இதற்கிதுவே பொருளாதலுணர்த்துதற்கன்றே ஒருவனெருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென வுரைசெய்து எடுத்துக்கொண்டதூஉமென்க. "அசத்தாஞ்சுட்டி யுணர்பொருளானவெல்லாம்" "அறிவினலறிந்த யாவு மசத்தாதலறிதி" என்னுந் திருவாக்குக்களானும் இதுவேயிதற்குச் சிறந்த ஏதுவாதல் கண்டுகொள்க. அற்றேல், அவனேதானே எனவும் அவனிவனாய் நின்ற முறை எனவும், அவனிவனனது எனவும், அது நீயானாய் எனவும், பாவிக்கச்சொல்லுவது எனவும், நித்தப்பொருள்களுஞ் சுட்டியறியப்படுமாலோவெனின்? அற்றன்று. அவையங்ஙனம் பொதுமையிற் சுட்டியறியப்படுமாயினும் அநுபவநிலையிற் சுட்டியறியப்படாவென்பது. "உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே" எ-ம். "அறிவிறந்தங் கறிந்திடஉர்" எ-ம். 'பாவனை யிறந்து நின்று பாவிக்கப் படுவ தாகும்' எ-ம். "ஆட்பாலவர்க் கருளும்வண்ணமு மாதி மாண்புங், கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" எ-ம். "ஏதுக்களானு மெடுத்தமொழியானுமிக்குச்சாதிக்கவேண்டா" எ-ம். ஓதுவனவற்றாலறிக. பிரபஞ்சமவ்வாறன்றிச் சிறப்பியல்புபற்றி அநுபவமாயுண்மையாற் சுட்டப்படுமென்னுங் கருத்தானன்றே, ஒருவனெருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென்றொழியாது, உளதாயென விசேடித்ததூஉமென்க. நித்தப்பொருள் சுட்டியறியப்படாதென்பது ஆறுஞ்சூத்திரத்திற் காண்க.

இங்ஙனம் வழியளவையானே உலகந் தோன்றிநின்றழியுமெனச் சாதித்து மீமாஞ்சைநூலாரை மறுத்தவழி, உலோகாயதநூலார் காட்சியளவையொன்றே பிரமாணமன்றி வழியளவை முதலியன பிரமாணமல்லவாகலான் அவற்றாற் சாதிப்பன பொருள்படாவாமென்பர். வழியளவையின்றாயின், மேல்வரும் பயனைக் குறித்து முயற்சி செய்வாரில்லையாதல்வேண்டும் "இம்மையின் முயற்சியாலே யிருநிதி யீட்

டப்படு" மென்பதே அவர்கொள்கையாகலானும், வழியளவையும் அதுபற்றி உரையளவையும் பிரமாணமெனக் காட்டிய வழி யவருமதனனே மறுக்கப்படுவாராயினும் அவர் மதமே பற்றி யவரை மறுத்தற்பொருட்டுத் தோன்றியழிதல் கண்கூடாகக் காட்டுவார் வேறுமோரேதுக் கூறுகின்றார்.

தோற்றமுமீறும் உள்ளதன்பாலே கிடத்தலின் என வரும்.

வார்த்திகப் பொழிப்பாவது உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானும் செய்யப்படுமென்னும் வடமொழிமதம்பற்றிக், கருத்துரையும் மேற்கோளும் ஏதுவும் உரைச்செய்யுளானுரைத்து, உதாரணம் பாச்செய்யுளானுரைக்கின்றார்.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ
வொன்றேன்றிற் றேன்றி யுளதா யிறக்கண்டு
மன்றேன்று முண்டேன்ன வாய்ந்து.

என்வரும்.

இது முதலுந் துணையுங் காரணமாகக்கொண்டே திதிநிகழும். அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கேயழியக் கண்டிலமாலெனின்? ஒவ்வொருகால விசேடத்திற் சாதிபற்றி யொருங்கே தோன்றி ஒருங்கேநின்று ஒருங்கேயழிவதனைக் காண்டலால் என்றாயினும் அதற்குரிய காலம்வருமென்று உலகத்திற்கு மங்களமாதலுண்டென்று அக்காட்சிபற்றி யறியப்படுமென்பதாம்.

பூதாதி அன்மொழித்தொகை. பூதாதிக்கென நான்கனுருபு விரித்துரைக்க. ஆகுமென்பது முற்றுவினை. பெற்றிமையென்பது ஈண்டுச் சாதியை. ஒகாரம் எதிர்மறை. ஒன்

றென்றினென்பது ஒன்றொன்றாய்ப் பார்த்துணர்வதுள்ளமே என்புழிப்போல அடுக்குமொழி. கண்டும் உம்மை சிறப்பு. பெற்றிமையினொன்றொன்றிற் றோன்றி யுள தாயிறுதலாவது, "பயில்வித்தெல்லாங் காரிடமதனிற் காட்டுமெங்குராங் கழியும் வேனில்" என்றதுபற்றி யுணர்ந்துகொள்க. இங்ஙனஞ் சொற்பிரபஞ்சம் பொருட்பிரஞ்சமென்னு மிரண்டனுட் பொருட்பிரபஞ்சந் தோன்றிநின்றழியுமென்பது ஏதுக்களாற் சாதிக்கப்பட்டது.

இனி இரட்டுறமொழிதலான், அவனவளென்பதனாற் பெறப்படு முயர்திணையும் அதுவென்பதனாற் பெறப்படு மஃறிணையுமென்னும் இருதிணைப்பகுதித்தாகிய சொற்பிர பஞ்சக் கூட்டம், இங்ஙனம் அவயவப்பகுப்புடைமையானும் சடமுமாய்ப் பலவுமாகலானும், சுட்டியறியப்படுதலானும், திதியின்பால் ஏனையிரண்டுங் காணப்படுதலானும், தோன்றி நின்றழிதலுடைத் தெனவும், பொருளுரைத்துக் கொள்க. அற்றேல், வேதம் நித்தியமென்னுஞ் சுருதிகளோடு முரணும் பிறவெனின்? முரணாது; நித்தனாகிய பரமசிவனாற் செய்யப் பட்டமையானும், இறுதிக்காலத்துப் பரமசிவனிடத்தொடு ங்கிய வேதம் படைப்புக்காலத்து முன்போலவே தோன்று தலானும், நித்தமென்றுபசரித்துக் கூறப்படுமாகலின். சிவா கமங்களை நித்தமென்பதும் இக்கருத்தேபற்றியென்க. அங் ஙனமல்லாக்கால், வேதம் பரமசிவனாற் செய்யப்பட்டதென் னுஞ் சுருதிகளோடும் அட்டாதச வித்தைக்கு முதற்கருத்தாவாகிய இச்சூலபாணியென்றற்றொடக்கத்துப் புராணவசனங்களோடும் ஈண்டுக்கூறும் வழியளவையோடும் முரணுமா றறிக. வித்தை பதினெட்டாவன: இருக்கு முதலிய வேத நான்கும், சிக்ஷை கற்பசூத்திரம் வியாகரணம் நிருத்தம் சந் தோவிசிதி சோதிடமென்னும் அங்கமாறும், புராணம் நியா

ய நூல் மீமாஞ்சை மிருதியென்னும் உபாங்கம் நான்கும், ஆயு ள்வேதம் வில்வேதம் காந்தருவவேதம் அருத்தநூலென்னும் இருக்கு முதலியவற்றிற்கு உபவேதம் நான்கும் எனவிவை. இவற்றுள் வேதநான்கும் பிரமகாண்டமும் பிரமஞானத்தி ற்கு நிமித்தமான கருமகாண்டமு முணர்த்துவனவாம். சிவா கமங்களும் பிரமகாண்டமாயடங்குமென்பர். வேதங்களை எடுத்தல் படுத்தல் முதலிய இசைவேறுபாட்டான் உச்சரிக் குமா றுணர்த்துவது சிக்ஷை. வேதங்களிற் கூறுங் கருமங் களை யனுட்டிக்கு முறைமை யுணர்த்துவது கற்பசூத்திரம். வேதங்களின் எழுத்துச் சொற்பொரு ளியல்புணர்த்துவது வியாகரணம். வேதங்களின் சொற்பொரு ளுணர்விப்பது நிருத்தம். வேதமந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங்க ளின் பெயரும் அவற்றிற்கெழுத்து இனைத்தென்றலும் உண ர்த்துவது சந்தோவிசிதி. வேதத்திற் சொல்லப்படுங் கரும ங்கள் செய்தற்குரிய காலவிசேடங்களை யுணர்த்துவது சோ திடம். இங்ஙனமாகலின் இவையாறும், வேதத்திற்கங்கமெ னப்பட்டன. பரமசிவன் உலகத்தைப்படைக்குமாறு முத லாயின கூறும் வேதவாக்கியப்பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது புராணம். இதிகாசமுமீண்டடங்கும். வேதப்பொருள்களை நிச்சயித்தற்கனுகூலமான பிரமாண மு தலியவற்றை யுணர்த்துவது நியாயநூல். வேதப்பொருளின் றுற்பரியமுணர்தற்கு அநுகூலமான நியாயங்களை யாராய்ச்சி செய்துணர்த்துவது மீமாஞ்சை. அது பூருவமீமாஞ்சை உத் தரமீமாஞ்சை யெனவும் வேதமெனவும் வேதாந்தமெனவும் வழங்கப்படும். அவ்வவ்வருணங்கட்கும் நிலைக்குமுரிய கரு மங்களையுணர்த்துவது மிருதிநூல். புராணமுதலிய நான்கும் வேதத்திற்குபாங்கமெனப்படும். எல்லாமநுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச்செய்வது ஆயுள்வேதம். பகைவரானலிவின்றி உலகங் காத்தற்கு வே ண்டப்படும் படைக்கலம் பயிறலை யுணர்த்துவது வில்வேதம்,

எல்லாக்கடவுளர்க்கும் உவகையைச்செய்யு மிசைமுதலியவற்றை யுணர்விப்பது காந்தருவவேதம். இம்மைக்கும் மறுமைக்கு மேதுவாகிய பொருள்களை யீட்டுமுபாயமுணர்விப்பது அருத்தநூல். இவை நான்கும் உபவேதமெனப்படுமென்றுணர்க.

முதலதிகரணம் முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்திற் பிரபஞ்ச நித்தியமெனக்கொண்ட மீமாஞ்சை நூலாரையும் உலோகாயதநூலாரையு மறுத்துச் சொல்லும் பொருளுமென்றிருவகைப்பட்ட பிரபஞ்சம் உற்பத்திநாசமுடைத்தெனக் கருத்தாவினுண்மை சாதித்தற்கோதிய ஏதுவை ஏதுக்களாற் சாதித்தவழி, ஏதுவுண்டு சாத்தியமில்லையெனப் பிணங்கும் புத்தர் முதலியோரை மறுத்துச் சிறப்புப்பொதுவகையானுஞ் சிறப்புவகையானுங் கருத்தாவுண்மை சாதித்தற்கெழுந்தது இரண்டாமதிகரணம். அதிகரணவியைபும் இதனானே விளங்கும்.

இனியென்றது அதிகரணவியைபுணர்த்துதற்பொருட்டு. முன்வரு மதிகரணங்களும் இவ்வாறே கண்டுகொள்க.

இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது எனவிங்ஙனஞ் சொற்பல்காமைப்பொருட்டுத் துணிந்ததாக வைத்துரைத்தாராயினும் பொருளியைபிற்கேற்ப இதனை மூன்றதிகரணமாக வைத்துரைப்பது ஆசிரியர் கருத்தெனக்கொள்க; அஃதாமாறு காட்டுதும்:—

இனி உலகமுள்ளது என்றது.

எ - து. மே - ள். எ-னின். உலகம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றியழிதல் இயல்பென்றலே அமை

லுடைமையின், அது வினையுடைத்தாயினும் தோற்று வாரொருவனை யுடைத்தாதல் செல்லாது எனப் புத்தநூலார் சொல்லுங்கடாவை யாசங்கித்துத் திதியென்னுஞ் சூத்திரக் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோட னுதலிற்று. இ - ள். வெ - டை.

இல்லதற்குத் தோற்றமின்மையின்.

எ - து. ஏது எ - னின். உள்ளதாதல் யாங்ஙனம் என் னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

இ - ள். இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்கா லத்து முற்பத்தியின்மையின் ஈண்டுற்பத்தி காணப்படுதலான் உலகமுள்ளது என மேற்கொண்டது. எ - று.

இனி உலகஞ் செய்வோனையுடைத்து என்றது.

எ - து. மே - ள். எ - னின். உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தமுதற்காரணத்தினின்றுந் தானே தோன்றியழியும் இதற்கொரு நிமித்தகாரணமாய் ஒரு கருத்தா வேண்டாம் எனச் சாங்கியர்கூறுங் கடாவையாசங்கித்துத் தோற்றியவென்னுஞ் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ - ள். வெ - டை.

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மை யின்.

எ - து. ஏது. எ - னின், அதற்குப் பிரமாணமென் னை என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். மண்முதலியவற்றி னுள்ளதாகிய கடமுதலிய பொருட்குக் குயவன் முதலிய செய்வோரையின்றி வினைதன் முதலிய செய்தொழில் நிகழாமையின் உலகம் இவ்வியல்பிற் றாகலான் இனி யிவ்வுலகஞ்செய்வோனையுடைத்து எனமேற் கொண்டது எ - று.

இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது.

எ - து. மே - ள். எ - னின். இத்துணையுங் கூறிய வாற்றான் உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டெனப்பட்ட கருத்தாத் திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனேயாதலமையும் எனப் பஞ்சராத்திரி முதலியோர் கூறுங் கடாவை யாசங்கித்து ஒடுங்கியுளதாமென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். உலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவினின்றன்றி உளதாகாது. எ - று.

ஒடுங்கினவென்னும் பெயரெச்சஞ் சங்காரமென்னும் இடப்பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை என்று எதிர்மறைமுகத்தாற் கூறியது, எனைக்கடவுளரின் உளதாகாமை யாப்புறுத்தற்பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்த குறிப்பேதுவைப் புலப்படக் காணுமாறு.

ஆண்டு ஒடுங்குதலின்.

எ - து. ஏது. எ - னின். அதற்குப் பிரமாணமென்னை என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். யாது யாண்டொடுங்கும் அஃததனினுற்பத்தியாம். மண்ணிற்குடம்போலும் என்னும் அவினாபாவத்தாற் பிரபஞ்சஞ் சங்காரகாரணன்மாட் டொடுங்குதலின் மீளத் தோன்றுங்கால் ஆண்டுநின்றுந் தோன்றுதலே பொருத்தமுடைமையின் அவ்வாறு மேற்கொண்டது. எ - று.

இவ்வாறு மூன்றதிகரணப் பொருளும் இதன்கட்போந்தவாறும் இவ்வாறுரையாக்காற் பொருளியைபுபடாமையும் நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

இலயித்த தன்னி லிலயித்ததா மலத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்

*எ - து. உ - ம். எ - னின். உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாகவேண்டுவதில்லையாகலாற் சற்காரியவாதம் அடாது எனப் புத்தர் கூறுங்கடாவை யாசங்கித்து இல்லதற்குத் தோற்றமின்மையினென்ற வேதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். இலயித்தது இலயித்த தன்னில் ஆம் எ - து, உள்ளதாயினுஞ் சங்காரகாலத்தி னொடுங்கியதாகலான் அவ்வொடுங்கியவுலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவினின்றும் படைப்புக்காலத்தின் மீளவுளதாம். அற்றேல், ஒடுங்கியது ஒடுங்கியவாறே யொழியாது மீளவுண்டாகவேண்டா; வேண்டுமாயின், முன்னொடுங்காது நிலைபெறவே யமையும். அவ்வாறன்றி ஒடுங்கி மீளவுளதாவது எற்றுக்கெனின்? மலத்தால். எ - து. உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவுமுண்டாம். அற்றேல் முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறு தோன்றுமென்னுமல் அதுவே ஒடுங்கி நின்று மீளவுளதாமென்றற்குப் பிரமாணம் என்னையெனின்? இலயித்தவாறு உளது ஆ வேண்டும். எ - து. எஃதெவ்வாறு நின்றொடுங்கிற்று அஃதவ்வொடுங்கியவாறே உளதாதல் எல்லாராலும் விரும்பப்படும். எ - று.

எனவே அந்நியமமில்லையாயின் நெற்கமுகாய் நீளாது நெல்லாய் நீளுதற்கு ஏதுவென்னையென்னுந் தருக்கமே அதனையறிவுறுத்துமென்றவாறாயிற்று. சற்காரிய வாதத்தினியல்பு "தந்துமுதலகாரகம்" என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க.

---

* இதுமுதல் ஐந்தாஞ் சூத்திரமுடிவுவரை சிவஞானபோதச் சிற்றுரை.

இன்னும், இஃதிதனின் வேறென்னுஞ்சவிகற்பக்காட்சி பிரமாணமென்பார்க்கும் அபேதவுணர்வு நிகழ்ந்தன்றிப் பேதவுணர்ச்சி நிகழாது; எப்தியதற்கன்றி விலக்கின்மையின். அங்ஙனமாகவே, முற்படத்தோன்றும் அபேதவுணர்ச்சி பிரமாணமென்ப தொருதலையாகக் கோடல் வேண்டும். வேண்டவே, பிற்படத் தோன்றும் பேதவுணர்ச்சி யதனை யவாய் நிற்றலிற் பிரமாணமாகாமையறிக. அபேதவுணர்ச்சி காட்சி யளவையானே பெறப்படுதலின் குடமாடையின் வேறன்று; திரவியமாகலால், ஆடைபோலுமென்னு மனுமானமும், வேற்றுமையின்றிக் கூறும் வேதவாக்கியங்களும், அதற்குப்பிரமாணமாமென்க. ஆகவே, வான் வளி தீ நீர் முதலியனவாக நீ வேற்றுமைபடக் கூறும் வாக்கியங்களெல்லா மிவ்வளவைகளோடு முரணுதலின், உபசாரமேயன்றிப் பொருள்படா வென்பது கண்டுகொள்க. இங்ஙனம் பேதவுணர்ச்சிக்குப் பிரமாணமின்மையிற் பேதப் பிரவஞ்சமாகிய பிரமேயமின்மையுந் தானே போதரும். அவ்விரண்டு முளவெனக் கொள்ளினும், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தமென்னை? தாதான்மியமோ? காரணகாரியத் தன்மையோ? சையோகமோ? சமவாயமோ? வேறொன்றோ? எனக் கடாயினார்க்குத், தாதான்மியமாவது ஒன்றுதானே யொருவாற்றானிருவகைப்பட்டுப்பிரிப்பின்றிநிற்றற் குரித்தாதலாகலின், அத்தன்மைத்தாகிய தாதான்மிய சம்பந்தங் குடஞானத்திற்குங் குடத்திற்கு முண்டெனின்,—குடஞானம்போலக் குடமு மகத்தின்கணுளதாதல் வேண்டும். குடம் புறத்தின் கண்ணதாகலுங் குடஞானமகத்தின் கண்ணதாகலு மெல்லார்க்கு மொப்பமுடிந்தமையின், அவற்றிற்குத் தாதான்மியங்கூறல் பொருந்தாமையானும், காரண காரியத் தன்மையே சம்பந்தமெனின்? காரணகாரியங்களி னொன்றுள்வழி யொன்றின்றாதல் பொருந்தாமையின், கனவின்கட் குடஞான முதலிய வுணர்வுண்மையின், குடமுதலியனவு மாண்டுளவாதல் வேண்

றில். அஃதின்மையானும், விடயமும் விடயிப்பதுமாந் தன்மை சம்பந்தமெனின்? விடயமாவதிதுவென்றறிய வாராமையானும், சம்பந்தமே பெறப்படாமையின், பேதப் பிரவஞ்சம் பிரமிதிக்குப் புலனாகாமையானும், பிரவஞ்சம் அசத்தியம்பொருளே யாகலான், அவற்றிற்குக் காரணமாகிய மாயை யநிருவசன மென்றல் பொருத்தமுடைத்தேதன்று, இங்ஙனமாயாவாதிகள் கூடாவிடைகளாற் சாதிப்பாராகலின், ஆண்டுமூக் கென்னை யெனின்? கூறுதும்.

பிரவஞ்சஞ் சத்தியப் பொருளென்பதற்குக் காட்சியளவையே பிரமாணமாம். கயிற்றை யரவெனக் காணுந் திரிவுகாட்சியிற்போல மாசறு காட்சியின் வேறுபடுதலின்மையின், நிகழ்காலத்திற் கண்டது முக்காலத்தினு மொக்குமாகலானும், நிருவிகற்பக் காட்சியின் விதிமுகத்தாற் பேதமறியமாட்டாதாயினுங் குற்றிபோ மகனோ வென்னுமையத்தின் பின்னர் இது குற்றியே பகனன்றென வெதிர்மறை முகத்தாற் பேதவுணர்வு காட்சிக்குப் புலப்படுதலானும், திரிவுகாட்சியிற் கயிறு பாம்புபோலவு மலைபோலவு மொவ்வொருவர்க் கொவ்வொரு காலத்திற்றோன்றும்; அதுபோலன்றி மாசறுகாட்சியின் எல்லார்க்கு மெக்காலத்துங் குடங் குடமேயாய்த் தோன்றுவதல்லது வேறுபடத் தோன்றாமையிற் சவிகற்பக் காட்சி பிரமாணமே யாகலானும், அன்றியுங் கயிற்றுக்கும் பாம்பிற்குங் கோணி நின்று கிடத்தன் முதலிய விலக்கண மொப்புமையா னொன்றையொன்றாகத் திரியக் காண்டல் பொருந்தும்; அதுபோலச் சித்தாகிய பிரமத்தைக் குடமுதலிய பொருளாகத் திரியக்காண்டற்குத் தம்முளொப்புமையின்மையின் அதுவு மவ்வாறு திரிவுகாட்சியென்றல் பொருந்தாமையானும், சவிகற்பக்காட்சிக்கு நிருவிகற்பக்காட்சி காரணமாகலிற் காரணத்துள்ளதே காரியத்திலு முள்ளதாய் பெயர் சாதி குண முதலிய பேதவுணர்ச்சி நிருவிகற்பக் காட்

சியி னின்றுபிற் சவிகற்பக் காட்சியினு மின்றாய் முடியுமாகலின், நிருவிகற்பக்காட்சியினுஞ் சூக்குமமாய்ப் பேதந் தோன்று மாகலானும், அதுபற்றி யெய்தியதற்கே விலக்காகலிற் பேத முணர்ந்தன்றிப் பேதமின்மை யுணர்தல் கூடாமையின் அபேத ஞானமும் பேதஞானத்தை யவாவி நிற்றலின், அபேத ஞானமுற்படத் தோன்றுதல்பற்றிப் பிரமாணமென்றல் பொருந்தாமையானும், ஆடை குடத்திற்கு வேறென்றற் றொடக்கத்துப் பேதவுணர்ச்சி முக்காலத்தினும் வேறுபடாமையின், ஆடை குடத்தின் வேறன்றென்றற் றொடக்கத்து அபேதவுணர்ச்சி யெதிர்காலத்தின் வேறுபடுதலின், வேறுபடாமையும் வேறுபடுதலும் பற்றியே பிரமாணமென்றும் அப்பிரமாணமென்றுங் கோடல் பொருத்த முடைத்தாகலானும், காட்சியளவையே பேதவுணர்ச்சிக்குப் பிரமாணமாதலறிக. ஆகவே, அபேதஞ் சாதித்தற்கு முற்கூறிய வனுமானமும் போலியாயவாறு காண்க.

அங்ஙன மல்லாக்கால், அவ்வனுமானத்தானே ஆடையெடுக்கச்சென்றான் குடத்தையெடுத்து வருதல் வேண்டுமென்றொழிக. இதனானே யபேதங்கூறு மாகமங்களு முபசாரமென்பது கண்டுகொள்க. இன்னும் பிரவஞ்ச மித்தையெனத் துணிவதற்குக் கொண்ட பிரமாண மெய்யோ? பொய்யோ? எனக் கடாயினார்க்கு, மெய்யினிற் பிரவஞ்சத் துட்பட்ட பிரமாண மெய்யெனவே யம்முறையாற் பிரவஞ்சமு மெய்யேயாம். பொய்யெனிற் பொய் பிரமாண மாகாமையிற் பிரவஞ்ச மெய்ப்பொருளென்பது தானே போதரும். அற்றேல், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்த மென்னையெனின்? அறியப்படுவது மறிவதுமாகிய விடய விடயித்தன்மையே சம்பந்தமென்றுணர்க. விடய விடயித் தன்மை சம்பந்த மன்றென்பையாயின்: நீ பிரவஞ்ச மித்தை யென்றுணரு முணர்விற் கது விடய மாகாமையிற் பிரவஞ்சமித்தை யன்றெனப்பட் டுனக்கே வழுவாமென் றொழிக.

அற்றேல், விடயமாவதியாதெனின்? எவ்வுணர்வு நிகழ்ந்துழியெப்பொருள் விளங்கும் அஃததற்கு விடயமென்க, விளங்குதல் விளங்குதற் குரிமையாதல். ஆகவே, இங்ஙனங் கூறியவாற்றாற் பிரமாணமுஞ் சம்பந்தமு முண்மையிற் பிரமேயமாகிய பிரவஞ்ச மெய்ப்பொருளே யாகலான் அதற்கு முதற்காரணமாகிய மாயையு மெய்ப்பொருளாவதன்றி யநிருவசனமாதல் பொருந்தாமை யறிக.

இனி வேதத்துளோரிடத்தும் பிரமப்பொருளை "உபாதான" மென்னுஞ் சொல்லா லெடுத்தோதக் காணாமையால், பிரமம் பிரவஞ்சத்திற்குப் பரமாதார வியாபக நிமித்தமென்பதே வேதத்துக்குங் கருத்தாமென்க. இன்னும், அவ்வம்முதற் காரணங்களின் குணமெல்லா மவ்வக்காரியங்கட்கு முளவென்பது நியமமாதலின், சித்தாகிய பிரமத்திற்றோன்றிய பிரவஞ்சமுஞ் சித்தாதல் வேண்டுமன்றிச் சடமாதல் பொருந்தாதெனக. அற்றேல்; பாலினுண்டாகிய தயிருக்குப் பாலின்குணமு நெல்லினுண்டாகிய பதர் பலாலங்கட்கு நெல்லின் குணமுங் கொம்பி னுண்டாகிய புல்லுக்குக் கொம்பின் குணமுஞ் சிலம்பியி னுண்டாகிய நூலுக்குச் சிலம்பியின் குணமுங் கோமயத்தி னுண்டாகிய தேளுக்குக் கோமயத்தின் குணமுங் காணாமையின், காரணத்தின் குணமே காரியத்திற்குங் கேடுமென்னு நியமம் பொருந்தாதாலெனின்? அற்றன்று; தன்றன்கு ணொன்றற்காதலின்மையின், காரணத்தின் குணமே காரியத்திற்கு மென்பதற்குத் தாற்பரியம், காரணத்தின் குணங்களோ டொத்த குணங்களே காரியத்திற் குளவாதலன்றி யவற்றிற்கு மறுதலையான குணங்க ளுளவாகாவென்பதேயாமாகலான், ஈண்டெடுத்துக்காட்டியவற்று ளியைமைத் தக்கிழுக்கின்மையறிக. சிலம்பியி னூல் வருதற்கு முதற் காரணஞ் சிலம்பி வயிற்றினுண்மையானுங் கோமயத்திற் றோன்றியது தேளினுடம்பேயாகலானும், இன்னோரன்ன

வையெல்லாம் பிறவிப்பேத மாகலானும், ஆண்டையப்பாடின்மை கண்டுகொள்க.

ஈண்டுக் கூறியவாற்றான் மாயையே பிரவஞ்சத்திற்கு முதற்காரண மென்பதூஉம், அதற்குத் தாரகமாய் விரவிநின்றதிட்டித்தலான் முதல்வ னிமித்த காரணமே யாவனென்பதூஉம், துணிபொருளாயினமை காண்க. "மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் நின்று முதல்வனு முதற்காரணமாம்" என்ற நீலகண்ட வாசிரியரும் பரந்து சென்று முடிவின்கண் இவ்வாறு கோடலே சித்தாந்தமாக வலியுறுத்தினர். அது சென்மாதிகரணத் திறுதியிற் சிவாதித்தியமணி தீபிகையினுங் காண்க.

அற்றேல், "பிரமத்தையுணர்ந்தோன் எல்லா முணர்ந்தோன்" என்றற் றொடக்கத்து வேத வசனங்கள் பயப்பாடிலவாமெனின்? உடையானியல்புணர்ந்தவழி, உடைப்பொருளான உயிர் மாயை கன்மங்களும் அவ்விலக்கணத்து ளகப்பட்டு வியாப்பியமாய் நிற்றலின், அவையு மினிது விளங்குமென்பது அவற்றிற்குப் பொருளாதலின், பயப்பாடுடையனவேயாமென்க. நான்மணிமாலையில், "நுரையுந் திரையு நொய்யுறு கொட்பும், வரைவில் சீகர வாரியுங் குரைகடற், பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி, யெண்ணிலவாகி யிருங்கட லடங்குந், தன்மைபோலச் சராசர மனைத்து, நின்னிடைத் தோன்றி நின்னிடை யொடுங்கும்" என்றது, முதல்வன் மாயைக் காதாரமாய் நிற்றல் பற்றி யாகலின், ஆண்டையப்பாடின்மை யறிக. இது கிழங்கினின்றுந் தோன்றுந் தாமரையைப் பங்கசம் என்பது போல்வதோ ருபசார வழக்கெனக் கொள்க. மாயைக்குத் தாரகமாய் நிற்றல்பற்றியே யவ்வாறுரைத்ததென்ப துணர்த்து கோடற்கே, நீரிற் றோன்றியொடுங்கு நுரை முதலியவற்றை நீர்க்கிடனாகிய கடலிற் றோன்றி யொடுங்குதல் போலென் றுவமை கூறினா ரென்க.

கடலென்றது-நீர்க்கிடங் கொடுத்து நிற்கு மாகாயம். நின்ற திருத்தாண்டகத்தும் பிறண்டும் "இருநிலனய்த்தீயாகி யெம் மடிக ணின்றவாறே" என்பது முதலாக எழுந்த தமிழ்வே தத் திருவாக்குக்களும், "அறிவானுந் தானே யறிவிப்பான் றானே, யறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற, மெய்ப் பொருளுந் தானே விரிபொழில்பா ராகாய, மப்பொருளுந் தானே யவன்" என்னும் அம்மை திருவாக்கும், உலகெலா மாகி வேறா யுடனுமாய் முதல்வன் நிற்றல்பற்றியாகலின், ஆன்டாசங்கை யின்மையுங் கண்டுகொள்க. இதனானே, அபேதங்கூறும் வசனங்களு முபசாரமேயன்றி யுண்மையன் றென்பது கண்டுகொள்க. இவ்வாறன்றி முதல்வன் மாயை போல முதற்காரணமாவனெனின்? அது மேற்கூறிய குற்ற ங்கட் கிடனுதலன்றியு "நிருவிகாரி" யென்னுஞ் சுருதிகளோ டு முரணுதலு முடைத்தென்க. இங்ஙனங் கூறியவாற்றால் "காரிய காரணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம், பாரின் மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநிமித்தந், தேரின் மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக, வாரியன் குலாலனய்நின் றாக்குவ னகில மெல்லாம்" என்னு மத்துவித சைவ சித்தாந்த வழக்கே சுருதி யுத்தி யனுபவ மூன்றற்கு மேற்ற தாய் உண்மைப் பொருளை வலியுறுத்தற் குரிய மெய்ப் பிரசங்கமா மென்றறிந்துகொள்க.

அற்றேலஃதங்ஙனமாக; நிமித்தகாரணனாகிய முதல் வன் முதற்காரணமாகிய மாயைக் காதாரமாவனாயின், உவமப் பொருளாகிய குயவனு மண்ணுக்காதாரமாதல் வேண்டுமா லெனின்? அறியாது கடாயினாய். உவமமெல்லாமொருபுடை யொத்தலேயன்றி முழுவது மொத்தலின்று. முழுவது மொக்குமென்பாரை முதல்வனுக்குரிய வியாபக முதலிய குணங்களுங் குயவனுக்கு முளவாதல் வேண்டுமெனக் கடா வினார்க்கு விடை யென்னையெனக் கூறிமறுக்க. ஒருபுடை

யொத்தலானன்றே யொருபொருளுக் கோரோ ரியல்புபற்றி வேறுவேறுவமை கூறியதூஉமென்க. அற்றேல், இவ்வியல் பிற் குவமை யாதோவெனின்? நன்றே கடாயினுய். குழவி யுடம்பின் முதற்காரணமாகிய வுதிரசுக்கிலங்களுக் காதார மதற்கு நிமித்தகாரணமாகிய தாய் தந்தை யாதலுஞ் சிலம்பி நூலின் முதற்காரணத்துக் காதார மதற்கு நிமித்தகாரண மாகிய சிலம்பியாதலு மறிந்தாயன்றே? இவ்வாறு பலவுள வெனக் கொள்க.

ஆதிபகவனுகிய முதல்வன் எள்ளினெய்போலப் பசு பாசங்களிற் கலந்து நீக்கமற வெளபச்சிலேடிக வியாபகமாய் நிற்குமியல்பினனுதலின், அவன் பிரபஞ்ச காரியமியற்றுதிய ற்றுதற்குக் குலாலனை யங்ஙன முவமையாகக் கூறுதல் கருத் தாவாதன் மாத்திரைக்கேயன்றி வேறில்லையென்பது தெரி ந்துகொள்க. இயற்றுதியற்றுதலாவது, காரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரையாற் செய்தலாம். மற்றுக்குலாலன் சங்க ற்பத்தானன்றிக் கரணத்தாற் காரியஞ் செய்யும் வினைமுத லாகலின் சங்கற்பத்தாற் காரியஞ்செய்பு மாதி பகவனுக்குக் கருத்தா முறைமையினுஞ் சிறிதொப்புப்பற்றியே யுவமமாகின் றெனென் றுணர்க. ஈண்டுச் சங்கற்ப மென்றது, வியாபக சிற்சத்தி சன்னிதப் பிரோரகத்தினை. கர்த்திருத்துவமங்ஙன மிருவகையாமாறு............என்னும் பௌட்கராகம வசனத் தானறிக.

இறைவ னெள்ளினெய் போலப் பசுபாசங்களிற் கல ந்து நீக்கமற வெளபச்சிலேடிக வியாபகமாய் நிறைந்து நிற்கு மென்னு மத்துவித சைவ சித்தாந்த நிருவசனவுரையை, இக் காலத் தேகான்ம வாதிகளு ளொருசாராருட்பட்டார், எள்ளி னெய் கோதிடையுற்றுப் பிரிந்திருக்கக் காண்டலின், உடம்பு மா முதல்வனு மொன்றனிடை யீடுற்றுப் பிரிந்து வியாபக மாகுங் கொலென் றுசங்கை நிகழ்த்துவர். ஒரு பொருட்

கொந்த பொருஞ்சிவம மாதலொருபுடை யொத்தல்பற்றியே
யென்பது மேற்கூறினுமாகலின், அங்ஙனமாசங்கித்த லு
ண்மையிலக்கணமறியார் கூற்றே யாமென்றொழிக. பசுபாசங்
களின் முதல்வன் கலந்து நீக்கமற வியாபகமாய் நிற்றற்கு
எள்ளினெய்யை யுவமானமாகக் கூறுவது; நெய் எள்ளின்
உள்ளும் புறம்புமாய்க் கலந்திருத்தல் பற்றியேயன்றிப் பிறி
தில்லையென்க. இங்ஙன மாசங்கிப்பார் ஆவிரம்பூப் பொன்
னிறமொக்கு மென்றவழி யஃதுருக்கியடித்து நீட்டவும் படு
ங்கொலெனவும், இவளுதல் பிறைமதி போலு மென்றவழிக்
குறைதலும் வளர்தலு வாளுறியங்குதலு மென்றிவையும்
இவணுதற் குளகொலெனவு மாசங்கிப்பாராகலின், அவை
யவர் வெள்ளறிவு வியாபாரமாமென் றொழிக்கப்படுவன வல்
லது மறுத்தற் கேற்பன வல்லவென் றறிக. ஈண்டுக்குறை
தன் மறைதலும் வளர்தல் வெளிப்படுதலுமாம். இன்னும்,
அவர் பசுபாசங்கண், மெய்ப்பொருளென்பார் முதல்வன் வி
யாபகத்துக்கு நூனதை கூறுபவராவர். யாதினாலெனின்? பசு
பாசங்களுள்ள விடங்களின் முதல்வனிருப் பிடையறவுற்று
அவன் வியாபகங் குறைவுறுதலா லென்றிங்ஙன மாசங்கை
நிகழ்த்தாநிற்பர். இன்னோரன்ன வாசங்கைகளை அவர் பிரா
கிருத அவயவ கண்டப் பொருட் பயிற்சியானிகழ்த்துகின்
றார். என்னை? அவயவமுடைய கண்டப்பொருளன்றி நிரவ
யவவகண்ட சச்சிதானந்தப் பொருள் மற்றொன்று னிடை
யறவுற்றுக் குறைவுறு தாதலானென்க. ஆதிபகவனாகிய
நிறைவ னிரவயவவகண்ட சச்சிதானந்த முதற்பொருளாக
லின், அவன் அநாதியே தன்போல நித்தியமாய்த் தனக்கு
வியாப்பியமான சிதசித்துக்களில் யாண்டுங்கலந்து நீக்கமறத்
தன்பூரணத்திற்கு நூனதையாதுமின்றி யவையே தானாய்
நிற்றும் பெற்றியுடையனா மென்க. இனி அப்பெற்றி யுயி
களா லிற்றென வறியவு மோதவும் வராத சொரூபமாம்.
அற்றாகலினன்றே சுருதிகளு மவன் சொரூபவியல்பு "வாக்

மனசாதீத மென்றும்" "அநிர்த்தேசியம்" என்று மங்ஙன மெடுத்து முறையிட்டோய்ந்தன வென்பது. "வாக்கு மன ங்கழிய நின்ற மறையோனே" என்னுந் தமிழ்வேதமு மக் கருத்தேபற்றி யெழுந்தது. வளி தீ நீர் நில மெனவொன்றற் கொன்று தூலமாகி நிலைபெறும் பூதங்கணான்கிற்குஞ்சூக்கும பூதமான வாகாய மிடங்கொடுத்து வியாபகமாய் நிற்கும் பெ ற்றியே மக்கட் குற்றறிதற் கரிதாய நுண்பொருளாம். ஆன பின், நிரவய வவகண்ட சத்தாயுஞ் சித்தாயு மானந்தமாயு நிற்கும் பரப்பிரமமுதற் பொருள் பசுபாசங்களுக்கு அந்தரி யாமியாயும் வியாபியாயும் பூரணமுற்று நிற்குஞ் சொரூபவிப ல்லை, மாயா தனுகரணங்களாற் கட்டுற் றவற்றி னுபகாரத் தானுஞ் சுத்த மாயா நாத விருத்தி காரிய சத்த சமூகமான வேதமுதலிய கலையறிவு மின்மினி விளக்கத்தானுஞ் சிறிதறி வு விளங்கி, அங்ஙனம் விளங்கிய சிற்றறிவு மாத்திரையானே, நாம் பிரமமென்று தருக்கி, இறைவன் றிருவருட்கப ளாய்க் கேவலமுற்றுழலும் பசுபோதப் புல்லறிவுயிர்கள், நா மறிந்தாமென் றெருப்படுதலும், பசுபாசங்கண் மெய்ப்பொ ருளாயின் அவற்றினிருப்பான் முதல்வன் வியாபகத்திற் கிடையறவு முட்டுற்று நூனதை புகுதருமென்று பாண்டிந் நியம்போல அபிநயித்துக் குதர்க்க நிகழ்த்தலும், புல்லறிவு முதிர்ச்சியாவதல்லது மற்றியாதாமென்க.

மலர்தலை யுலகத்துச் செவிப்புலனாமோசை எழுத்தோ சை யெனவும், இசையோசை யெனவும், இருவகைப்படும். இவற்றுள் எழுத்தோசை விந்துமுதற் காரணமாக அதனினி ன்றும் விருத்தியாய்த் தோன்றிச் செவிப்புலனாவது. இசை யோசை ஆகாய முதற்காரணமாக அதன்கட்டோன்றிச் செ விப்புலனாவது, வடநூலார் எழுத்தோசையை வர்ணாத்மக சத்தமென்றும், இசையோசையைத் தொனியாத்மக சத்த மென்றுங் கூறுப. சத்த தன்மாத்திரையின் காரியமாகிய

ளாகாயமே சத்தத்திற்கெல்லாங் காரணமாகலின், எழுத்தோசைக்கு வேறுகாரணமாமாறென்னையெனின்? அற்றன்று; ஆகாய மெழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய விசையோசைக்குக் காரணமாவதன்றி அதனாற் புலப்படுவதாகிய வெழுத்தோசைக்குக் காரணமாகாதென்க. ஒளியுமுருவமும் போலப் புலப்படுப்பதும் புலப்படுவதுமாகிய விசையோசைக்கும் எழுத்தோசைக்குந் தம்முள் வேற்றுமை அனுபவத்தின் வெளிப்படத்தோன்றுதலானும், கடலோசை முதலாயின வெழுத்தோசையின் வேறாதல் எல்லார்க்கு மொப்ப முடிந்ததாகலானும், அவ்விரண்டன் காரணமும் வேறென்பது துணியப்படுமென்க. இன்னும், அங்காப்பு முதலிய அகமுயற்சியாற் புலப்படுவது எழுத்தோசை யெனவும், அதனைப் புலப்படுப்பதாய் எடுத்தல் படுத்தல் முதலிய புறமுயற்சியாற் பிறப்ப திசையோசை யெனவும், தம்முள் வேறுபாடு தெரிந்துணர்ந்துகொள்க.

“மா வென்ப தொடுங்குதல் யாவென்பது வருதலாகலின், எல்லாக் காரியங்களுந் தன்பால் வந்து ஒடுங்குதற்குந் தன்கணின்று தோன்றுதற்குங் காரணமாய் நின்றது மாயையெனப்படுமாகலின், ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப் பொருள் யாது அதனை மாயையென்றலே பொருத்தமுடைமையறிக.

இனி முதல்வன் மாயைக் காதாரமாய் விரவி நிமித்தகாரணனாயினும், மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் முதற்காரணமு மாவனெனச் சிவாத்துவிதசைவர் கூறுவர். அது பொருந்ாது. என்னை? தோன்றி நின்றழியு முடம்பொடு கூடியவழி விகாரப்படுதல்பற்றி யுடம்பொடு விசிட்டனாய் நின்ற சீவான்மாவுந் தோன்றிநின்றழிவனென்பது பொருந்தும்; அதுபோல மாயையொடு விசிட்டனாய் முதல்வனு முதற்காரண மாமென்பார்க்கு, விசிட்டமாவது விசேடண

மும் விசேடியமு மவ்விரண்டினையபு மென்னு மவற்றின் வேறன்மையான் முதல்வனு மவ்வாறு விகாரியாதல் வேண்டப்படும். படவே, 'நிருவிகாரி' என்னுஞ் சுருதியொடு முரணுமாகலானென்க. விசிட்டமாவது அம்மூன்றற்றும் வேறெனக்கொள்வார்க்கு, முதல்வன் முதற்காரணமென்பதே பொருந்தாதாய் முடியுமென் றறிக. அல்லதூஉம், நிமித்தகாரணமே முதற்காரண மென்றெடுத்துக் காட்டுதற் கோரு பொருளின்மையின் அது வழியளவைக் கேலாமையானும், வழியளவையினும் ஆகமவளவைவலியுடைத்தெனின்? அற்றாயினும், வழியளவை யாகமவளவை யொடு முரணாதாகலானும், ஒரோவழி முரணுமாயின், அதுபற்றி யாண்டுந்துணிவுபெறுமையின், வழியளவை பிரமாணமன்றெனப்பட்டு, அதுபற்றியோதிய நிகமாகமவசனங்கள் பயனிலவாய் முடியுமாகலானும், நிகமாகமப்பொருள்க டம்முண் முரணுவன போலத் தோன்றியவழி யவற்றுள் வன்மை மென்மை யுணர்ந்து பொருள்கோடற்கு வைத்ததே வழியளவையாகலான் அஃததனோடு முரணுதல் பொருத்த மின்மையானும், அது விடையன்மை யறிக. இனி இவ்விரண்டும் பொருந்தாமையானும், வேறுவிடுக்குமா றின்மையானும், மாயையே முதற்காரணம்; அதற்குத் தாரகமாய் விரவிநின்றதிட்டித்தலான் முதல்வனு முதற்காரண மெனக் கோடல்வேண்டும். அங்ஙனங்கொள்ளின் விகாரியாதலின்மையான், முதல்வனு முதற்காரணமாமென்பது வாய்பாடுமாத்திரையே யன்றிப் பொருட்படாமையின், அஃது எமது அத்துவித சித்தாந்தமென்றொழிக.*

கன்மமும் *"நாசோற்பத்தி பண்ணிவரு மாதலா லநாதி" என்பதுபற்றிப் பிரபஞ்சம்போலப் பிரவாகாநாதி யென்பாரும், †"ஏக னநேக னிருள்கரும மாயையிரண்

* சிவப்பிரகாசம், பொது. கரு. நண்ணியிடு.
† திருவருட்பயன்.

டாகவினை யாருதியில்." எ - ம். "ஆணவமுதலன் றநாளேபோற் கருமமும்." எ - ம். ஒப்பவோதுதல்பற்றி மூவகைவினைக்கும் முதற்காரணமாய மூலகன்மமொன்று அநாதிநித்தமாயுண்டென்பாருமென்று இருதிறத்தராசிரியரென்க. இவ்வினை யீட்டப்படுங்கால், மந்திர முதலிய அத்துவாக்களிடமாக மனம் வாக்குக்காயமென்னும் மூன்றானீட்டப்பட்டு, தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர் பெற்று, பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடந்து, சாதி ஆயுப் போகமென்னும் மூன்றற்குமேதுவாய் முறையே சனகந் தாரகம் போக்கியம் என்னு மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணியபாவமென்னும் பரியாயப் பெயர்பெற்று, பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம் அத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னு முத்திறத்தாற் பலதிறப்பட்டு, பிராரத்தமெனப் பெயர் பெறும். ஆதிபௌதிகமாவது சடம் வாயிலாக வருவது. ஆத்தியான்மிகமாவது சடத்தோடு கூடிய சேதனம் வாயிலாக வருவது. ஆதிதைவிகமாவது ஒருவாயிலானன்றித் தெய்வந் தானே காரணமாக வருவது. இன்னும் இவ்வினைகள் உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்று ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய், முறையே நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளினடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும் போகங்களைப் பயப்பிக்குமென்றறிக. உலகவினை : கூவல்தண்ணீர்ப்பந்தலாதியமைத்தல். வைதிகவினை ; வேள்வியாதிசெய்தல். அத்தியான்மிகவினை : சிவபூசையாதி செய்தல். அதிமார்க்கவினை : யோகஞ்செய்தல். மாந்திரவினை : மந்திரோச்சாரம் ஞானநூலோதலாதி செய்தலாம்.

இரண்டாமதிகரண முடிந்தது.

---

## மூன்றாமதிகரணம்.

—:0:—

இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.

எ-து. மே-ள். எ-னின். புனருற்பவம் சடத்துக்கன்றிச் சித்துக்கு முளதாயினன்றே முற்செய்வினையே ஈண்டைக்கு வருமென மேற்கூறியதமையும் அஃதுண்டோ இல்லையோ என்னுமையப்பாட்டின்கண் குடமுடைந்தவழிக் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுமென்னுஞ் சுருதிபற்றி இறந்தவுயிர் மீளப் பிறப்பதில்லையெனக் கிரீடாப்பிரமவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடலுதலிற்று. இ-ள். வெ-படை.

வருதல் தொன்றுதொட்டவ்வாறுதல்.

மாறுதல் ஈண்டிறத்தலென்பது 'போக்குவரவுபுரிய' என்னு மூலத்தானும், ஏதுவுதாரணங்களோடு உளதாகிய இயைபானுமுணர்க. இஃதுணராது அச்சு வேறுபடுதலென்றுரைப்பாருமுளர். அஃதீண்டைக்கியாதுமியையாமையுணர்க.

தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்.

எ-து. ஏது. எ-னின். அதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். உற்பத்தியும் நாசமுந் தொடர்ச்சியாயுள்ள பொருட்கன்றி ஏனைப்பொருட்கு உற்பத்தி கூடாமையான் இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்துவருமென மேற்கொண்டது. எ-று.

தோற்றமும் ஈறுமென்னுமும்மைகளை எதிரது தழீஇயினவாகக் கோடலிற் றொடர்ச்சியாயென்பது போந்தவாறறிக. உளதாதல் ஈண்டுத் தோன்றுதல்,

இனி இவ்வாறன்றிக் குடாகாயவுவமையேபற்றி இருவினையான் வரும் புனருற்பவம் உயிரின்பொருட்டுச் சிவத்துக்கேயாமெனச் சிவாத்துவிதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து மூலப்பகுதியிற் றோன்றும் புத்திதத்துவத்திற்கே அதுவெனச் சாங்கியர் கூறுங்கடாவை யாசங்கித்து மேற்கோடனுதலிற்று, இவ்வதிகரணமெனக்கொண்டு தோற்றமும் ஈறும் அவ்வுரிமையுள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாதலின்மையான் இவ்வான்மாக்களே மாறிப்பிறந்துவருமெனமேற்கொண்டதென்றுரைப்பினுமாம். இப்பொருட்கு உரிமையென்பது அவாய்நிலையான் வந்தது.

உளதாதலென்னும் ஒருமை தோற்றவீறுகளோடு தனித்தனி சென்றியையும்.

ஆன்மாக்களே யென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது.

இனி மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற்பொருட்டு மேற்கொண்டதென்பாருமுளர். அத்துவிதமென்ற சொல்லானே அவரை மறுத்து ஆன்மாக்களைப் பெறுவித்தமையின் ஈண்டவர் மதம்பற்றிக் கடா நிகழ்தற்கேரின்மையுணர்க.

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினாற்—கண்செவிகேட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

எ-து. உ-ம். எ-னின். புனருற்பவமாங்காற்பகுதிப் இப்[illegible]ணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று. கண் செவி கேட்டு உள்ளதே தோற்ற உளம் அந்நாடு விண்படர்ந்து கண்ட நனவைக் கனவு உணர்வில் தான் மறந்து மனம் தள்ள

வினையினால் அணுவாய்ச்சென்று கருவில் விழுந்தான் எனக் கொண்டுகூட்டுக.

இ-ள். கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற எ-து. கண் செவி முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவழித் தனக்குக் கேடின்றிப் படைப்புக்காலந் தொடங்கிச் சங்காரகாலமளவும் நிலைபெற்றுள்ளதாகிய சூக்கும தேகம் பூதசாரவுடம்பு முதலியனவாய்க் காரியப்பட உளம் அத்துடு விண்படர்ந்து. எ-து. உயிரானது அப்பூதசார முதலிய உடம்பின்கட் பொருந்தித் துறக்க நிரயங்களிற்சென்றநுபவித்துப்பின்னர், கண்ட நனவைக் கனவு உணர்வின் தான் மறந்து. எ-து. நனவின்கட் கண்டவற்றைக் கனுக்காணும் காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற்போல, முன்னைக் கண் செவி கெட்டவாறும் உள்ளதே தோற்ற அத்துடு விண்படர்ந்தவாறும் ஆண்டநுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றை மறந்து அறிவு வேறுபட்டு.—மனந் தள்ள வினையினால் அணுவாய்ச்சென்று கருவில் விழும் தான். எ-து. முன்னுடம்பு இறக்குங்கால் அடுத்த வினை காட்டுங் கதிநிமித்தம்பற்றி உயிர் அவாவுமாறு மனஞ்செலுத்துதலான் அக்கதிக்கட் சேறற்கேதுவாய் எஞ்சிநின்ற புண்ணியபாவ சேடத்தாற் சூக்கும தேகமாத்திரையாய்ச் சென்று அம்மனந்தள்ளிய கதிக்கு அமைந்த அக்கருவின்கட்படும். எ-று.

இன் உவமவுருபு. தான் அசை. மறத்தற்குச் செயப்படுபொருள் அவாய்நிலையான் வந்தது.

விண்படர்ந்தென்னும் உபலக்கணத்தால் நிரயம்படர்ந்தென்பதூஉம் பெறுதும். படர்ந்தெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

அத்துடென்புழி அன்சாரியைவிகாரத்தாற்றொக்கது. பொருந்தியென்பது சொல்லெச்சம். வினை, ஆகுபெயர்.

உடம்பு நீங்கிப்போங்கால் முதற்கட் கெடுவன கண்ணு ம், செவியுமாகலின், அச்சிறப்பு நோக்கிக் கண்செவி கெட் டென்றுபசரித்தார். கெட்டவழி யென்பது கெட்டெனத் திரிந்து நின்றது.

ஐம்பெரும்பூதத்தின் காரியமெனப்பட்ட தூலவுடம்பு சூக்குமவுடம்பின் காரியமாமாறென்னை யென்னும் ஐயநீக்கு தற்கு உள்ளதே தோற்றமென்றார்.

ஏகாரந் தேற்றம்.

ஆகாயமுதலிய தூலபூதங்கள் சத்தமுதலிய சூக்கும பூதங்களின் காரியமாதலின், அதுபற்றியே தன்மாத்திரைமய மாகிய சூக்குமவுடம்பிற்றோன்றுவதாய தூலவுடம்பு ஐம்பெ ரும் பூதமயமெனப்பட்டதன்றிப் பிறிதில்லையென்பது *"பூ தஞ்சரீரம் போனாற் புரியட்ட ரூபந்தானே யாதனா சரீரமா கி" எ-ம். † "சூக்குமவுருவே தென்னிற் றூலகா ரணமதாகு ம்." எ-ம். ‡ "தூலமா முருவினுக்குச் சூக்கும முதல்." எ-ம். "$ மாறிபின் வருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென் னிற் கூறிய சூக்கு மத்தாம்." எ-ம். § "விதிப்படி சூக்கு மத்தே புருவநும்." எ-ம். ¶ "மனுதிதரு முடல்." எ-ம் வழிநூலாசிரியரும் இவ்வாறே கூறியவாறு காண்க. இஃது ணராதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அது தோ ன்றுங்கால் ‖ "காலமுற்று, நீக்கிட மரம்பின் வேரோர் நி ன்மர நிகழ்த்து." மாறுபோலச் சூக்குமவுடம்பு கெடாது நிற்பத் தூலவுடம்பு * "வேறொரு குறியாமாரம் விரசங் கிளியுமா" தல்போல வினைக்கிடாக அச்சுவேறுபட்டு † "மதி

* சிவஞானசித்தி. இரண்டாஞ்சூத்திரம். கூக. † நான்காஞ் சூத்திரம். க0. ‡ இரண்டாஞ்சூத்திரம். ௩0. $ இரண்டாஞ்சூத் திரம். சஎ. § இரண்டாஞ்சூத்திரம். சக. ¶ பதினொராஞ்சூத் திரம். [illegible]. அசரீரிட்டை. ‖ இரண்டாஞ்சூத்திரம். சஉ. சூக்குமம். * இரண்டாஞ்சூத்திரம். ௫எ. † இரண்டாஞ்சூத்திரம். ௫க.

க்கெழு கலைகள் போல வருவது போவதாம்." என்பதானும் வழிநூலாசிரியர் கூறிய வாற்றானறிக.

அணு சூக்குமவுடம்பு.

தள்ள தள்ளுதலானென்க.

அக்கருவிலெனச் சுட்டுவருவிக்க.

தான் அசை.

உள்ளதே தோற்றமென்றதனால் உடற்றிரிவும், விண் படர்ந்தென்றதனால் இடத்திரிவும், கண்ட நனவைக் கனவிற்றான் மறந்தென்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன.

உள்ளதே தோற்றமென்றதனால் புதிது புதிதாய்த் தோன்றுதல்பற்றிச் சற்காரியவாதத்திற்கு இழுக்கின்மையும், அத்துடல் விண்படர்ந்தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமெனவுங் கூறியதனால் போக்குவரவுபற்றி வியாபகத்துக்கு இழுக்கின்மையும், வினைச்சேடத்தாலென்றதனால் துறக்க நரகங்களின் அநுபவித்தொழிந்தமைபற்றிப் புனருற்பவகாரணத்திற்கு இழுக்கின்மையும், மனந் தள்ளவென்றதனால் அஃதெஞ்சுதற்கேதுவுங்காட்டியவாறு.

வேதத்துட்கூறப்படும் பஞ்சாக்கினிவித்தையின் இயல் புணர்ந்துளார் கண் செவி கெட்டவழி விண் படர்ந்து மழைத்துளியாய்ச் சென்று கருவில் விழுமென்றார். பஞ்சாக்கினி வித்தையினியல்பாவது: துறக்கம், மேகமண்டலம், நிலம், புருடன், தாய் இவ்வைந்திடமங்கியாகவும் அவ்வவ்விடங்களில் எய்திய ஆன்மா ஆகுதியாகவும் வைத்துத்தியானித்தல்.

மறந்து விண்படர்ந்தெனக் கூட்டியுரைப்பாருமுளர். சுவர்க்காதிபதங்களிற்படர்ந்து அநுபவிப்புழி அறிவுதிரியாமை புராணங்களுட்காண்க.

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

எ - து. உ - ம் - எ - னின். உயிர்க்குப் புனருற்பவமாகாமைக்கு வாதிகளான் எடுத்துக் காட்டப்படுங் குடாகாய வாகாயவுவமைக்குப் பொருள்கூறி மேலதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ - ள். அரவு தன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போய்வரும் அப்பண்பும் பரவில் வேறு. எ-று. கண் மெலிகெட்டவழி உள்ளதே தோற்ற அத்துடுவின் படர்தற்குப் பாம்பு தோலுரித்துப் புதிதொருதோல் போர்த்துச் சேறலும் புருடன் நனவுடம்பினீங்கிக் கனவுடம்பிற் சேறலும், யோகிகள் தம்முடம்பு நீங்கிப் பரகாயத்திற்சென்று மீடலுமாகிய இவ்வுவமைகள் மிக்கு வழங்குதற்கண் இவற்றிற்கு மாறாக, குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது. எ - து. குடவாகாயங் குடமுடைந்தவழி ஆகாயத்தோடு கூடுமாறு போல்வதோர் கூத்தாட்டாமென்று நீ கூறுதல் பொருந்தாது. உள்ளம் போம் ஆறு அது. எ - து. சூக்குமவுடம்பு விட்டுப் போமாற்றிற்கே அவ்வுவமையாகலான், எ - று.

எனவே, உடல்விட்டுப் போமாற்றிற்கு இவ்விருவகையுவமைகளும் ஆகமங்களிற் கூறுதலின், அவை தம்முண் முரணாதவாறு, அரவுதன்றோலுரிவு முதலியன தூலவுடல் விட்டுப் போமாற்றிற்கும், குடாகாயவுவமை சூக்குமவுடம்புவிட்டுப் போமாற்றிற்குமெனக் கோடல் பொருத்தமுடைமையான் அவ்வேறுபாடுணராது குடாகாயவுவமையுந் தூலவுடம்பு விட்டுப் போமாற்றிற்கே போதுமென மயங்கற்கவென மேலதனை வலியுறுத்தவாறு காண்க.

மேலைவெண்பாவில் 'கண்ட நனவைக் கனவுணாவிற் ருன்மறந்து' என்றது அறிவு வேறுபடுமுறைமைக்கு எடுத்துக்காட்டியதெனவும், ஈண்டு அக்கனவுமென்றது அதனோடு உடல் வேறுபடுமுறைமைக்கு எடுத்துக்காட்டியதெனவுந் தெரிந்துகொள்க.

பரவு முதனிலைத்தொழிற்பெயர். இல்லுருபு தொழினிகழ்ச்சிக்கண் வந்த ஏழாவது.

பரவுதல் எல்லார்க்கும் புலனுமாறு மிக்குநிகழ்தல்.

ஈண்டு உள்ளமென்றது சூக்குமவுடம்பை.

போமாற்றிற்கென்னும் நான்காவது விகாரத்தாற் றொக்கது; "ஐந்தவித்தா னாற்றல்" என்புழிப்போல.

குளவாம்பல் குளாம்பலென மரீஇயினாற்போலக் குடவாகாயங் குடாகாயமென மரீஇயிற்று. குடாகாயம் வடநூன் முடிபென்று கோடலுமொன்று.

ஆகாயக்கூத்தாட்டென்பது உவமத்தொகை. இதனை உம்மைத்தொகையாகக்கொண்டு குடாகாயவாகாயமும் கூத்தாட்டும்போலென்றுரைப்பாருமுளர்.

மூன்றாமதிகரணமுடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

—:o:—

இனி நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.

ம-று. மேல். எ-னின். அங்ஙனம் புணருங்காலைத் தானேயாய் இருவினைகளைச் செலுத்தி நிற்பதெனப் போந்த ஆணையெனப்படுஞ்சத்தியாவது முதல்வனின் வேறோ அன்றோவெனும் ஐயப்பாட்டின்கட் பொருட்குச்சத்தி வேறன்

றும் வியாபியாய் நிற்றலான் இனி ஆணையினீக்கமின்றி நிற்குமன்றேயென மேற்கொண்டது எ-று.

அவிநாபாவமுணர்த்துவார் ஏகாநேகமிரண்டுமின்றியென மேற்கோளிற்போந்தபொருளை அநுவதித்துச் சருவவியாபியாய் நிற்றலானென ஏதுக்கூறினார். சருவவியாபியாய் நிற்றல் அவையேதானேயாயென்னும் அதிகரணத்தாற் சாதிக்கப்பட்டமையின் அதனை ஏண்டேதுவாக வைத்து ஆணையினீக்கமின்றி நிற்குமென்னு மேற்கோளைச் சாதித்தவாறு.

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றேவற்றேவனு—மங்க
ணவையவ னன்றில்லைப் போன்ஞேளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு.

எ-து. உ-ம். எ-னின். ஏதுவும் மேற்கோளுந் தம்முள் அவிநாபாவமாமாறு யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று எ-று. யாங்கணும் அவையே தானேயென மேற்கூறிய அளவைபானே முதல்வன் ஒரு பொருளாதல் கூடாது. எ-று. ஒன்றாயிற் கங்கைக்கரையினின்ற ஒருமானுடனே காவிரிக்கரையினும் ஒருங்குநிற்கமாட்டான் அதுபோல ஒருபொருள் ஓரிடத்துளதாதலன்றி யாங்கணும்வியாபித்து நிற்கமாட்டாதென்பதாம். இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று. எ-று. அற்றேல் முதல்வன் இருபொருளாய் நிற்குமெனக் கோடுமெனின்? யாங்கணும் அவையேதானேயாயுளனாதல் கூடாது. எ-று. தன்மாட்டே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருள்களின்கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் கூடாதென்பதாம். அற்றேல் இவ்விரண்டோடு முரணுதலின் எங்குமுளனல்லனெனக் கோடுமெனின்? எவற்று எவ

ளும் அங்கண் அவை அவன் அன்று இல்லை. எ-று. எவ்விடங்களிலுள்ள எத்திறப்பொருளுமாகிய அவ்விடத்து அவையெல்லாம் அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லையாமாறுபோல அம்முதல்வனையின்றி யமையாவாகலான் எங்குமுளனல்லனென்றல் பொருந்தாது. எ-று. ஆகலான் எங்குமுளனல்லனென்றல் பொருந்தாதென்பது குறிப்பெச்சம். அற்றேல் வேறு விடுக்குமாறென்னையெனின்? ஈசன் பொன் ஒளிபோல். எ-து. எங்குமுளனாகிய முதல்வன் ஞாயிறும் ஒளியும்போல ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத்தாற் சிவமுஞ்சத்தியுமென்றிசைந்து நிற்கும். எ-று. அற்றேல் பசுபாசங்களும் வியாபகமெனக் கோடலின் அவையும் இம்முறைமைபற்றி ஏகாநேகமிரண்டுமின்றி முதல்வன்போலத் தத்தஞ் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனொடு சமமாவான் செல்லுமெனின்? அவை உடைமை நாம் ஆள் அங்கு. எ-து. அவ்வாறாயினும் முதல்வனது வியாபகத்தை நோக்கி வியாப்பியமாதலின் அப்பாசங்கள் உடைமையாம்; பசுக்களாகிய நாம், அடிமையாவேம் அம்முதல்வன் மாட்டு. எ-று.

அன்றென்னப் பாடமோதுவாருமுளர்.

பாசங்கள் உடைமையாமாறும் பசுக்கள் அடிமையாமாறும் 'தாரகமாமக்கள் றுணிற்றல்' எ-ம். 'அகலிலிறலாமொன் றொரு பலவாறே தொழும்பாகும்' எ-ம். மேற்சொற்றப்பட்டமையின், அவற்றை ஈண்டெடுத்துக்காட்டி ஆங்கை நீக்கியவாறு.

என்றமென்னும் பெயரெச்சக்ககரம் விகாரத்தாற் றொக்கது. "புகழ்புரிந்த" என்புழிப்போல. அளவையானென ஆனுருபு விரித்துரைக்க.

ஒன்றன்றி உளனன்று என்புழி ஒன்றாய் உளனென்னும் ... வாசகங்கள் ஆகுபெயரால் அக்கரங்களின்மேனின்

றனவாகலான் உளனென்பதூஉம் அஃறிணையொருமைபோற் முடிந்தது.

அன்மை கூடாமைப்பொருட்டு.

எவற்றெனுமென்பது ஏழாம்வேற்றுமைத்தொகை அஃறிணைக்கண்வரும் எவனென்னும் வினாவினைக்குறிப்புச் சொல் ஈண்டுப் பெயர்த்தன்மைப்பட்டு எவனுமென எஞ்சாப்பொருண்மைபுணர்த்தி நின்றது.

அன்றியென்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்றெனத் திரிந்தது.

இன்மை ஈண்டு அமையாமைப்பொருட்டு.

பொன் ஆகுபெயர்.

ஆம் என்பது உடைமையோடியையும்.

பொன்னொளிபோலீசனென்பது தொகையுவமமாகலிற் பொதுவியல்பு விரித்துரைக்கப்பட்டது.

இவ்வதிகரணத்தாற் போந்த தொகைப்பொருள், முதல்வன் வியாபகனாதலின் வியாபகப்பொருட்கு ஒன்றாய் நிற்றல் கூடாது; அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பனெனின் வியாபகனாதல் கூடாது; வியாபியல்லனெனின் பசுபாசங்கள் அவனையின்றியமைதல் கூடாது; ஆகலான், முதல்வனொருவனே ஞாயிறுமொளியும்போலச் சிவமுஞ்சத்தியுமெனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொருண்மையினிற்பனெனச் சமவேதமாய் நிற்குமாறு தெளிவித்தலுந் தானே தாதான்மியசத்தியுண்மைக்குப் பிரமாணங் கூறியவாறுமென்றுணர்க. அஃதாமாறு—கண்ணை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉந் தானேயாகிய ஞாயிறொன்றுதானே விடயங்களை விளக்குறுங் கதிரெனவுங் கண்ணை விளக்குறுங் கதிரெனவுந் தாதான்மியத்தால் இருதிறப்

பட்டியைந்துநிற்றல்போலப், புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய்த் தன்னியல்பினிற்பதூஉம் புறப்பொருளை நோக்கி நின்றுணர்த்துவதூஉமாகிய இருதன்மையையுடைய பேரறிவாய சைதன்னியமொன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்குநிலையிற் சத்தியெனவும், புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய் நிற்குநிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தால் இருதிறப் பட்டியைந்து நிற்குமெனவுணர்க.

இனித் தீயின் சத்தி யொன்றுதானே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தியென்றற் றொடக்கத்துப் பலவேறுவகைப்படுமாறுபோலச் சிவசத்தி யொன்றே காரியவேறுபாட்டால் பரை ஆதி இச்சை ஞானம் கிரியையென்று ஐவகைச்சத்திகளாயும், முறையே ஐந்தும் நான்கும் எட்டும் பதின்மூன்றும் எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானிய முதலிய ஐவகைச்சத்திகளாயும், ஆரணி செனனி ரோதயித்திரி என்னும் மூவகைச் சத்திகளாயும் நிவிர்த்தி பிரதிட்டை முதலிய ஐவகைச்சத்திகளாயும், வாமை சேட்டை முதலிய அட்டசத்திகளாயும், பரவாகீசுவரி அபரவாகீசுவரி மனோன்மனி மகேசை உமை திரு வாணியென எழுவகைச் சிவபேதங்கட்கும் முறையே எழுவகைச்சத்திகளாயும், அத்தியான்மிகமெனப்படும் உன்மனை சமனை முதலிய கலைகளாயும், இன்னும்பல வேறுவகைப்பட்டு நிற்கும். அவ்வச்சத்திகளோடு புணர்ந்த சிவமும் அவ்வாறே பலவகைப்பெயர் பெற்று நிற்கும். அவ்வச்சத்திகட்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறு வகையான் விருத்திப்பட்டு அப்பெயர் பெறும். இவற்றி னியல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

*ஐவகைச் சத்திகளாவன நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை யென்பனவாம், தாய், தந்தை,

---

*இதுமுதல் இக்குறிவரும் வரை பாஷ்யம்.

மனைவி, மக்கள், மண், பொன் முதலிய பந்தங்களினின்று நிவிர்த்தி செய்யுஞ் சிவசத்திக்கு நிவிர்த்தி யென்று பெயர். அங்ஙனம் நிவிர்த்தி பெற்ற ஆன்மாக்களை மீள நோக்காத வண்ணம் பிரதிட்டை செய்யுஞ் சிவசத்திக்குப் பிரதிட்டை யென்று பெயர். அங்ஙனம் பிரதிட்டைபெற்றவான்மாக்களுக்கு அனுமானஞானம் ஆகமஞானமின்றி அநுபூதிஞானத்தைப் பயப்பிக்குஞ் சிவசத்திக்கு வித்தை யென்று பெயர். அங்ஙனம் அநுபூதிபெற்ற ஆன்மாக்கட்கு விருப்பு வெறுப்பு சங்கற்ப முதலிய எல்லாத்துன்பங்களையுஞ் சாந்தமாகச் செய்யுஞ் சிவசத்திக்குச் சாந்தி யென்று பெயர். அங்ஙனம் சாந்தமாய் நின்றதுமொழியச் செய்யுஞ் சிவசத்திக்குச் சாந்திய தீதை யென்று பெயர், இங்ஙனம் சிவசத்தியாகிய திருவருட் சத்தியொன்றே காரிய வேறுபாட்டால் ஐந்து பேதப்பட்டது. இங்ஙனமே சிவமும் நிவிர்த்திபதி முதலியவாக ஐந்து பேதப்பட்டது,

அட்டசத்திகளாவன : வாமை சேட்டை ரௌத்திரி காளி கலவிகரணி பலவிகரணி பலப்பிரமதனி சர்வபூதமனி என்பனவாம்.

அத்தியான்மிகமெனப்படும் கலைகளாவன: உன்மனை சமனை வியாபினி சத்தி நாதாந்தம் நாதம் நிரோதி அர்த்தசந்திரன் விந்து விடம் அருக்கீசம் மேதை யென்பனவாம்.

சத்தப் பிரவஞ்சம் அர்த்தப் பிரவஞ்சமெனக் காரிய மிருவகைப்படும். இவையிரண்டுந் தம்முள் வேறுபாடுடைய வாயினும், சத்தமென்னுஞ் சாதியான் வேறுபாடின்மையானும், சத்தப்பிரவஞ்சம் அர்த்தப் பிரவஞ்சத்தைப் பற்றியன்றி நில்லாமையானும், சுத்தமாயையொன்றுதானே சத்தரூபமு மர்த்தரூபமுமாகிய விரண்டுதன்மையுமுடைத்தாய் அவ்விரண்டற்கு முதற்காரணமாமெனக் கொள்ளப்படும். இனிச்

சொற்பொரு ளுணர்த்துதற் கனுகூலமாகு ஞாபகசத்திகளும் பொருள் காரியப்படுதற் குபகாரமாகுங் காரகசத்திகளும் அவ்விரண்டன்கண்ணுந் தாதான்மியத்தா லுளவாத லருத்தாபத்தி யளவையாற் கொள்ளப்படும். அற்றேல், எழுத்தானியன்ற பதங்களாதல், பதங்களானியன்றவாய்நிலை தகுதி யண்மைகளான் எழுவாய் பயனிலை முதலியவாய்த்தொடர்ந்து நிற்கும் வாக்கியங்களாதல் அவ்வப்பொருள்களை யறிவுறுக்குமெனவே கோடும்; அவ்வாறன்றி யெழுத்தின் வேறாய்ப் பொருள்களை யறிவுறுக்குஞ் சத்திகளுண்டென்பதற்குப் பிரமாண மில்லையாலோவெனின்? அற்றன்று; ‘கால்’ என்புழிக் ககரவாகார லகரவெழுத்துக்களையன்றி அவற்றின் வேறாய்ப் பதமென்ப தொன்றின்மையானும், அவ்வாறே ‘காலொடிந்தது’ என்புழி அப்பதங்களின் வேறாய் வாக்கிய மொன்றின்மையானும், எழுத்தின் வேறாய்ப் பதவாக்கியங்கள் பொருளுணர்த்துவன வல்லவென்பது பெறப்படும். படவே, நையாயிகர் பதம்பற்றிக் ககரவாகார லகர வெழுத்துக்களே அப்பொருளுணர்த்துமெனக் கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்வுழி, அவை யொருங்குகூடிப் பொருளுணர்த்துமோ? ஒரோவொன்றே பொருளுணர்த்துமோ? எனக் கடாயினார்க்கு. ஒலி யுணர்வு தொழின் மூன்று முக்கணப்பொழுதி னிலைபெறுமென்பது நையாயிகர் முதலியோர்க்குடம்பாடாகலின், முறையிற் பிறந்து நின்று கெடுமெழுத்துக்கள் ஒருங்குகூடி நின்று பொருளுணர்த்துமென்பது கூடாமையின், ஒரோவொன்றே பொருளுணர்த்துமெனல் வேண்டும், ‘க’ என்ற மாத்திரையானே ‘கம்பலம்’ என்னும் பொருளுணர்த்தாமையானும், உணர்த்துமெனினுங் ககர வொழிந்த வெழுத்துக்களை யுச்சரித்தல் பயனிலவாய் முடியுமாகலானும், ஒரோவொன்றே பொருளுணர்த்து மென்பது பொருந்தாமையின், எழுத்துப் பதவாக்கியங்களின் வேறாய்ப் பொருளறிவுறுப்பனவாகிய ஞாபகசத்திகளுண்டென்பது கண்டுகொள்க. சத்தி

மெனினும் பேதமெனினும் ஆற்றலெனினும் பொருந்தும். இவ்வாற்றாற் சொல்லாற் புலப்பட்டுப் பொருளறிவுறுக்கு ஞாபகசத்திகள் சொற்றொறும் வெவ்வேறுண்டெனவே கோடும். ஆயினும், 'ஆ', ஆண்டு, என்றாற்போல்வன வொன்றாய் நின்று வெவ்வேறு பொருளுணர்த்தக்காண்டலின், ஒருசொற் சத்தியானே ஒருபொருளன்றிப் பலபொருளுணரப்படுதலு முண்டாங்கொலெனின்? அற்றன்று; ஆ ஆண்டு என்றாற்போல்வன வெவ்வேறு பொருளுணர்த்துதலின், ஒரு சொல்லெனப்படா; வெவ்வேறு சொற்களே யாமென்க. இனி வெவ்வேறு சொற்களாயினும், எழுத்தொப்புமையானே பலபொருளொருசொல்லென்று அங்ஙனம் வழங்கப்பட்டனவென்பது. இன்னும், ஆவென்பது பெற்றத்தினையு மரவிசேடத்தினையு முணர்த்தும்வழிப் பெயர்ச்சொல்லெனவும், இரக்கக்குறிப்பினை யுணர்த்தும்வழி இடைச்சொல்லெனவும், ஆதற்புடைபெயர்ச்சியை யுணர்த்தும்வழி உரிச்சொல்லெனவுங் கொள்ளப்படுதலின், எழுத்தொப்புமைபற்றியே உபசாரத்தான் அவ்வாறு வழங்கப்பட்டன வென்பது தெற்றென வுணர்க.*

நான்காமதிகரண முடிந்தது.

———

இரண்டாஞ்சூத்திர முடிந்தது.

———

# மூன்றாஞ் சூத்திரம்.

உளதில தென்றலி னெனதுட லென்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

எ-து. ௩-ம். எ-னின். ஆன்மப்பிரகாச முணர்த்துத லுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துத லுதலிற்று.

இ-ள். மேல் அவையேதானே யென்றெடுத்துக்கொள்ளப்பட்ட உயிர் தனுமுதலியவற்றுள் ஒன்றாகப்பாற்றோ னை அவ்வமதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து உயிர் அவற்றிற்கு வேறுண்டென்பது கருதலளவையான் விளக்கி மேலைச்சூத்திரத்தின் உயிர்கண்மேல் வைத்தோதிய முதல்வனதிலக்கணத்தை வலியுறுத்துதல் மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

முதன்மையுடைமைபற்றி உலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பது முதற்சூத்திரத்துட் கூறி, காரணமாதற் பொதுமையான் இயையுடைமை நோக்கித் துணைக்காரண முதற்காரணங்களது உண்மையும் அவற்றால் உளதாங் காரியப்பொருளும் இரண்டாஞ் சூத்திரத்துட்கூறி அவற்றாற்பயன் கொள்ளற்குரிய பசுக்களதுண்மைக்குப் பிரமாணங் காண்டுக் கூறுகின்றாரென்றுணர்க. இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. இல்லதென்றல் முதலிய அறுவகை யேதுக்களானும் மாயாவியந்திரதனுவினு

ன்னும் பெயருடையாற் பெறப்படுங் குறிப்பேதுவானும் இவ்வற்றின் வேறாய் இவ்வுடம்பினுள் உயிரெனப்படுவதொன்றுண்டு. எ-று.

இது பூட்டுவிற் பொருள்கோள்.

உளதென்றது சாதியொருமை. அறிதலினென்றது ஐம்புலனோடுஞ் சென்றியையும்.

தனுவினுளான்மா வுளதென்றாரேனும், காணப்பட்ட உடம்பாற் காணப்படாத உயிருக்குண்மை கூறவேண்டுதலின் இவ்வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாய ஆன்மாவையுடைத்தென உடம்பின்மேல் வைத்தோதுதல் ஆசிரியர் கருத்து. அற்றாகலினன்றே பதியுண்மை உலகின்மேல் வைத்தோதியதூஉமென்பது.

*இவ்வான்மாக்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென மூவகைப்படும்.

விஞ்ஞானகலர் விஞ்ஞானத்தாற் கலைபற்றவர். பிரளயாகலர் பிரளயத்திற் கலைபற்றவர். சகலர் கலையோடு கூடினவர். இவை காரணப்பெயர். விஞ்ஞானகலர் ஆணவபந்தமொன்றுமேயுடையர். பிரளயாகலர் ஆணவம் கன்மமென்னும் இரண்டு பந்தமுமுடையர். சகலர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்றுபந்தமுமுடையர். இனி விஞ்ஞானகலர், அநாதியே மலபந்தமாத்திரம் உடைய விஞ்ஞானகலரும், அநுபவத்தானாதல், விஞ்ஞானத்தானாதல், யோகத்தானாதல் சந்நியாசத்தானாதல், தீக்கையானாதல், இடையே மாயாபந்தம் கன்மபந்தமுழுவதும் நீங்கி, அசுத்தமாயையின் மேலுள்ள புவனங்களிலுகரக்கடவனவாகிய போகங்கட்கு ஏதுவாய் நின்ற மலபந்தம் தன்னையே உடையவராகிய விஞ்ஞானகலருமென, இருவகையர். பிரளயாகலர், அநாதியே மலகன்மந்

* இதுமுதல் இக்குறிவரும் வரை பாஷ்யம்.

கள் மாத்திரமுடைய பிரளயாகலரும், இடையே பரிபக்குவ விசேடத்தால் மாயாபந்தமாத்திரம் நீங்கி ஏனை இரண்டுமுடைய பிரளயாகலருமென, இருவகையர். சகலர், தேவர் மக்கள் முதற் பலவகைப்படுவர். விஞ்ஞானகலருக்குரிய புவனங்கள், அசுத்த மாயைக்கும் சுத்தவித்தைக்கும் இடையே உள்ளன. பிரளயாகலருக்குரிய புவனங்கள், அசுத்த மாயை முதல் அராக மீறான தத்துவங்களில் உள்ளன. சகலர்க்குரிய புவனங்கள், மூலப்பகுதி முதல் பிருதுவி ஈறான தத்துவங்களில் உள்ளன. இன்னும், இம்மூவகை ஆன்மாக்கள் இயல்பெல்லாம் ஆகமங்களுட்காண்க.*

ஈண்டு மேற்கோள் ஒன்றாயினும், எழுவகை மதங்களை வேறுவேறு மறுக்குமேதுக்கள் ஏழாகலான் ஆன்மாவுளதென்னு மேற்கோள் அவற்றொடு தனித்தனிசென் றியைதலின் ஏழதிகரணத்ததாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இதனுட் கூறிய வேதுவேயேதுவும் மேற்கோளும் அதுவேயாகலான் ஏனைச்சூத்திரங்களுட்போல வேறெடுக் கூறவேண்டாமையின், இவை யேதுவாமாறும் இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறும் இனிது விளக்கி வலியுறுத்துதன்மாத்திரையே ஈண்டுரைக்கப்படுவதென்க் கொள்க.

## முதலதிகரணம்.

—:o:—

ஈண்டு இலதென்றலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமுகான்மவாதி என்னுமெண்மருள் அந்தக்கரணான்மவாதிகள் ஆன்மாவினதிலக்கணங்கூறும்வழி அநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலின் அவரையொழித்து, ஒழிந்த எழுவர்மதங்களையு முறையே மறுத்து உயிருண்மை சாதிப்பான்றொடங்கி, அவ

ற்றுள் இது சூனியமேயான்மாவென்னு மாத்துமிகர் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண் ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-டை.

ஆன்மாவிலதென் றலினென வருவித்துரைக்க.

எவற்றினையும் அன்றன்றெனவிட்டு ஆன்மா இலதெ ன்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என் றது.

எ-து. பொ-ரை. எ-னின். ஆன்மா இலதென்றலே பற்றி அஃதுண்டெனக் கோடல் முயற்கோடில்லையென்னு மேதுவால் அஃதுண்டெனச்சாதித்தலோடொக்கும் என்னுங் கடாவை யாசங்கித்து அதன்ருற்பரிய முணர்த்துதனுதலி ற்று.

இ-ள். ஆன்மா இலதென்னுஞ் சூனியான்மவாதிகளும் இல்லையென வாளா கூறுதலமையாமையின் உடல் பொறி விடயமனைத்தினையும் முறையானே இஃதான்மாவன்று இஃ தான்மாவன்றென ஒரோவொன்ருகக் கழித்து இவ்வாருக லின் ஆன்மாவென்பது சூனியமென்று அங்ஙனங் கூறுபவா கலான் அவற்றை ஒரோவொன்ருக விட்டு அங்ஙனங் கூறிக் கொண்டு நிற்பதோரறிவுண்மையின் அவ்வறிவே மேல்அவை யே தானேயாயென்பதனுள் ஆகமவளவையாற் சாதித்துப் போந்த ஆன்மாவென்றவாறும். ஈண்டிலதென்றலின் ஆன் மாவுளதென மேற்கொண்டது. எ-று.

அங்ஙனமறியுமறிவுஞ் சூனியமேயெனின், அஃது எ ன்னை ஈன்றுண்மலடி யென்பதனேடொக்குமென் றெழிக வென்பது கருத்து,

இன்மை ஈண்டுச் சூனியப்பொருட்டு. சூனியமாவது உள்ளதுமன்று இல்லதுமன்று இரண்டுமாவதுமன்று வேறு மன்றென்னப்படும் பாழ்.

வேகாரம் பிரிநிலைக்கண் வந்தது,

*சிலர் ஆன்மா இந்த உடம்பினைப் பற்றிநின்று சிவிப்பதாகுமென்பர். உடம்போ பல்வகைக் கருவிகளால் யாப்புற்றியன்றதொரு பாவையாம். இனி அப்பல்வகைக்கருவிகளுள் ஆன்மாவென்று அச்சிலர் சொல்லப்படுவது யாது? உடற்கருவிகள் பலவற்றையும் தனித்தனியே பேதித்து ஆன்மா இதுவன்று இதுவன்று என்று நீக்கிச் சோதனைசெய்துபோதருங்கால், அவ்வுடற்கருவிகளெல்லாம் அங்ஙனம் ஆன்மாவன்றென நீக்கியபின், அங்ஙனஞ் சோதித்து நீக்கப்படுங் கருவி யாதுமின்றாய் முடிவில் சூனியம் தலைப்படக் காண்கின்றோம். ஆதலால், சிலர் உண்டெனக்கொண்டு கூறும் அவ்வான்மாச் சூனியமேயாம், உள்பொருளாகமாட்டாது என்பதாம். அவர் இவ்வாறு அளவைகாட்டித் தங்கொள்கை நாட்டுகின்றார், அவர் உடற் கருவிகளனைத்தினையும் இஃதான்மாவன்று இஃதான்மாவன்று என்று தனித்தனி சோதித்து நீக்கிச் செல்லுழிச் சூனியம் முடிவாய்த்தலைப்படுவதனால் ஆன்மாச்சூனியமேயாமென்றல் பெரியதோர் அறியாமையேயாம். என்னை? உடற்கருவிகளனைத்தினையும் இஃதான்மாவன்று இஃதான்மாவன்றென்று சோதித்தலாகிய வியாபரத்தினைச் செய்கின்றுழி, சோதனைசெய்து நிற்பதாகிய அறிவே அவ்வான்மாவாகுமென்று துணிந்தறியமாட்டாராய் அங்ஙனம் போலியுரை கோடலாலென்க. இனி அவ்வறிவு சோதனை செய்து போதருங்காலையினும், சோதனை முடியுங்காலையினும் ஒருதன்மையாகவே நிற்பதொன்றாகலானும், உடற்கருவிகள் எல்லாம் அசேதனமாயொழியத் தான் சேதனமாய் விளங்கி நிற்பதாதலானும், அதுவே அவ்வான்மாவாகுமென்று அவர் அறிந்தமைவாராக.

அவர் சோதனை செய்துகொண்டு நிற்கும் அவ்வறிவைக் கைவிட்டுச் சூனியமே யான்மாவாகுமென்று கொண்

* இதுமுதல் இக்குறிவரும்வரை பாஷ்யம்.

து யாதுபோலுமெனின்? வழிநடப்போர் பதின்மர் ஊர வழிமைக்கட்சென்றுழித் தம்முள் யாவனேனும் நீங்கினானோ வென்று சங்கையுற்று அச்சங்கைதீர்த்தல்வேண்டி வேறு வேறாய்த் தனி பிரிந்துநின்று தம்மை மறந்து மற்றையவரைக் கணித்து ஒன்பதின்மரேநின்றேம், ஒருத்தனைக்கண்டிலே மென்று, கருத்தழிந்து கவலையுற்ற கையறியாமைச் செய்தி போலுமென்க. இனி அங்ஙனம் சோதித்து அறியுமறிவுஞ் சூனியமேயெனின்? அங்ஙனமறியுமறிவுஞ் சூனியமென்ற தூஉம் அவ்வறிவேயன்றிப் பிறிதொன்றன்மையான், அது மகப்பயந்தோம்புவாளை மலடியென்னு மதனோடொக்குமென் றொழிக. என்னை? மலடிக்கு மகப்பயந்தோம்புமாறில்லையா கலின், மகப்பயந்தோம்புவாள் மலடியாதல் செல்லாதவாறு போல, இஃதான்மா இஃதான்மாவன்றென்று விவகரிக்கு மாறு சூனியத்துக்கேலாமையினென்க. சூனியமாவது உள் ளதுமன்று, இல்லதுமன்று, இரண்டுமாவதுமன்று, வேறு மன்றெனப்படும் பாழாம். ஆகவே, உள்பொருளாய் உணர் வுடையதாய் நிற்பதொன்றே அங்ஙனம் விவகரிப்பதென வேண்டப்பட்டுச் சூனியம் ஆன்மாவென்பது போலியாயொ ழிதல் காண்க.

இனி அங்ஙனம் அறியுமறிவும் நானன்றென நீக்கின், அவ்வாறு நீக்கிய வறிவு வேறுண்டெனப்பட்டு மேலும் அந வஸ்தையாமாகலின், அதுவே அவ்வான்மாவென்று துணி பாகக்கொள்க. இது சூனியான்மவாதிகளைமறுத்து ஆன்மாக் கருவிகளனைத்திற்கும் வேறாய் இவ்வுடம்பகத்து நிற்பதொரு சேதனப்பொருளென்று சாதித்தவாறும்.*

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்சேழுத்தாய்
நின்றேன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

எ-று. உ-ம். எ-னின். அவ்வறிவை உடல் பொறி விடய முதலியவற்றின் வேறாகப்பிரித்துக் காணுமாறும் அதுவே நீயாமாறுந் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அனைத்தும் நின்று எ-து. உடல் பொறி விடய முதலிய அனைத்திலும் அறுவது காணுகின்று. அன்று அன்று என விட்டு. எ-து. முறையானே இது நானன்று இது நானன்றென ஒரோவொன்றாகக்கண்டு நீக்கியவழி அந் தொகுத்தாய் ஒன்று நின்றுளது. எ-து. அவ்விடத்து அகர முதலிய சூக்குமபஞ்சாக்கரரூபமாயறிந்து வந்ததோரறிவு நிலைபெற்றுளதன்றே? அதுவே நீ. எ-து. அதுவு நானன்றெனக் கழிப்பின் அங்ஙனங்கழித்த உணர்வு வேறுண்டெனப் பட்டு மேலும் வரம்பின்றியோடுமாகலிற் சூக்கும பஞ்சாக்கர ரூபமாய் நின்றறிந்து வந்த அவ்வறிவுதானே நீயென்பதறிவாயாக. அற்றேல், மாயேயமுஞ் சிவமுமுளவென்பது மேலைச்சூத்திரங்களாற் சாதிக்கப்பட்டமையின் அவையே அவ்வறிவினையுமறிந்து நீக்குமெனவமையுமாகலான் வரம்பின்றி யோடுமாறில்லையாலெனின்? சார்மாயை. எ-து. நின்றாற் சாரப்பட்ட மாயை. அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலான் நீ அல்லை. எ-து நிலமுதலிய காரியமனைத்துமாய் நின்னொடு விரவி நின்று இப்பெத்தகாலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கறிவை விளக்கி நிற்றன் மாத்திரையேயன்றி அறிவதன்றாகலான் நீ அம்மாயையல்லை. தற்பரமும் அல்லை. எ-து. மாயையான் விளங்கி யறியும் நீ அதற்கு அதீதமாகிய சிவமுமல்லை. தனி எ-து. அவற்றின் வேறு எ-று.

விட்டவழி யென்பது விட்டெனத் திரிந்து நின்றது.

அவ்வறிவாவது இதுவென்றுணர்த்துவார் அன்றன் றென நின்றனைத்தும் விட்டவழியென எதுப்பொருளை அத

வகுத்து அஞ்செழுத்தாயொன்று நின்றுளதென அடையாளங் கூறினார். அஞ்செழுத்தாய் நின்றறியுமாறு வருகின்ற சூத்திரத்துட்பெறப்படும். இதற்குப் பிறரெல்லாங் கூறியது கூறலென்னும் வழுப்பட மேலு மோரினையபின்றி யுரைத்தார்.

அனைத்துநின்றென்புழி முன்னர்க் கண்ணுருபும் பின்னர் ஆக்கச்சொல்லுந் தந்துரைக்க. ஏகாரந் தேற்றம். தற்பரமென்றது குறிப்பேதுவாய் நின்ற பெயர்.

அனைத்து நின்றின்று தர்ப்பணம்போற் காட்டலால் சார்மாயை நீயல்லை தற்பரமுமல்லை தனியென்றதனானே வருகின்ற அதிகரணங்களுக்கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறு மாயிற்று.

முதலதிகரண முடிந்தது.

---

## இ ர ண் டா ம தி க ர ண ம்.

——:0:——

இனி எனதுடலென்றலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். அவ்வறிவு உடம்பின்கண்ணன்றி நிகழக் காணாமையானும் நானுணுகினேன் பருத்தேனென உடம்பினையே நானென்று வழங்கக் காண்டலானும் உடம்பே யான்மாவெனத் தேகான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தினிரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-டை.

நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பானென உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும் யானுடம்பு யான்கை யான்கால் எனவுடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி எனதென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக் காண்டலின் அதுவே உயிர்

வேறுண்டென்பதனை அறிவுறுக்குமென அவன் வழங்குமுறையைபற்றி அவனை மறுத்தவாறு.

என்பதி என்மனையென்றாற்போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

எ-து. பொ-ரை. எ-னின். எனதுடலென்பது பிறிதின் கிழமைப்பொருள்படாது தலைமாத்திரையாய் நிற்குமிராகுவை இராகுவினது தலையென்று வழங்குமாறுபோல அமேதம்பற்றியே வழங்கப்படுமென அமையுமென்னுங் கடாவையாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துத லுதலிற்று. இ-ள். இராகுவினது தலையென்றாற்போல்வன சிறுபான்மைவழக்கமாகலின் ஆண்டொற்றுமைப்பொருள் கோடலமையும் ஈண்டவ்வாறன்றி என்பதி என்மனைவி என்பொருள் என்றுவழங்குமாறுபோல என்கை என்கால் என்கண் என்செவி என்பொறி என்பிராணன் என்னறிவெனப் பலவாற்றானும் பெரும்பாலும் உலகத்து வழங்கக் காண்டலின் இவ்வழக்கமிகுதிப்பாடு பிறிதின்கிழமைப்பொருட்கணன்றி வாராமையான் அங்ஙனங்கூறிக்கொண்டு நிற்கும்பொருள் வேறொன்றுண்டென்பது பெறப்படுதலின் அதுவே மேலுரையளவைபற்றிச் சாதித்த ஆன்மாவென்றவாறும். எனதுடலென்றலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

*இனித் தேகான்மவாதிகள் உடம்பே யான்மாவாகுமென்பர். அறிவு உடம்பின் கணன்றி நிகழக்காணாமையாலும், நான் நுணுகினேன் நான் பருத்தேனென உடம்பினையே நானென வழங்கக்காண்டலாலும், உடம்பே ஆன்மாவாகுமென்று அவர் அளவை காட்டித் தங்கொள்கை நிறுத்துவர், நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பானென வுடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் ஆன்மாவிற்கேற்றி வழங்குவர். அங்ஙனம் வழங்குவரேனும், யா

* இதுமுதல் இக்குறிவரும் வரை பாஷ்யம்.

ன் உடம்பு, யான் கை, யான் காலெனவுடம்பை அப்படி வழங்குவாரல்லர். என்னுடம்பு, என் கை, என் காலென வேற்றுமைப்படவே யாவரும் வழங்குவராகலானும், இவ்வுடம்பு சடமாகலானும், ஆன்மாச் சித்தாகலானும், தேகத்தின் வேறாய் அதன்கண் நிலைபெறுவது ஆன்மாவாகுமென்று அறிக.

அபேதக்கருத்தினல் என்னுயிரென்று வழங்குமாறுபோல அபேதக்கருத்தினல் எனதுடலென்று வழங்குதலும் அமைவதாம்; ஆதலின் அதுகொண்டே ஆன்மாத் தேகத்தின்வேறாய் உண்டென்றல் அமையாதென்றல் இசையாதெனின், என்னுயிரென்று அவ்வாறு பிறிதின்கிழமைப்பொருள்பட வழங்கப்படுவது பிராணவாயுவேயாம். இனி ஆன்மாத் தன்னை ஒற்றுமைப்பொருளில் வேற்றுமையாக அங்ஙனம் ஒரோவழிவழங்கினும் அது விளக்கின் சோதியென்றாற் போல்வதோர் பேதகற்பனையென்றே யொழிக்கப்படுவதாம். இவ்வாறன்றி என்பதி என்மனைவி என்பொருளென வழங்குமாறுபோல, என்கை என்கால் என்கண் என்செவியெனப் பலவாற்றாலும் பெரும்பாலும் உலகத்துப் பிறிதின்கிழமைப்பட வழங்குதலின், அதுபற்றி ஆன்மாத் தேகத்திற்கு வேறாயுண்டென்று சாதித்தல் பொருந்துவதே யாமென்க.

அவருள் ஒருசாரார், நிலம் நீர் அனல் வளி யென்னும் பூதநான்கும், சடமாயினும், பாக்கு வெற்றிலை சுண்ணமென்பனவற்றின்கண் முன்னர் இல்லாத செவ்வண்ணம் அவையொருங்குசேருங்காலை அச்சேர்க்கைக்கண் புதுவதாக வுண்டாதல்போலத், தம்முளொன்றாய்க் கூடுங்காலை அக்கூட்டரவில் அவற்றின்கண் முன்னர் இல்லாததோர் சேதனம் புதுவதாய்த்தோன்றி வியாபரிக்கு மென்பதமைவதாம; தேகத்தின்வேறாக ஆன்மா ஒன்றுண்டென்றல் பொருந்ாதென்பர். நிலம் நீர் அனல் வளியென்னும் பூதநான்கும் உண்மையில் சடமாகலின் அவை கூடிய கூட்டரவில் சேதனம் புது

வாகத்தோன்றுமென்றல் ஒருவாற்றானும் இசையாது. அன்றியும், தத்தமியற்கையிற் சடமாய் நிற்கும் அப்பூதநான்கும் தாமொன்றாய்க் கூடியவழிச் சித்தியல்பாய் மாறுமென்றல் இயற்கை விரோதமாம். பாக்கு வெற்றிலை சுண்ணம்புகளில் முன்னில்லாத செவ்வண்ணம் கூட்டத்தில் விளங்கினவென்றல் இயற்கைவிரோதமாகமாட்டாது, செவ்வண்ணம் சித்குணமன்று; சடப்பொருட்குணமேயாம். இன்னும், பாக்கின்கண் இனிது தோன்றாது அடங்கிநிற்கும் செவ்வண்ணம் அதனோடு வெற்றிலை சுண்ணம்பு கூடும்பொழுது இனிது விளங்கித் தோன்றுவதாயிற்று. இங்கு முன்னில்லாத கூட்டத்திற் புதுவதாய்த் தோன்றிற்றில்லை, உள்ளதே புலனாக விளங்கித் தோன்றிற்று. இல்லதற்குத்தோற்றம் எக்காலத்தும் இல்லை உள்ளதற்கே எக்காலத்தும் தோற்றம் உண்டு. உள்ளது உள்ளதேயாம். அதற்குத் தோற்றம் கூறல் இயையாதெனின், அற்றன்று. சத்திமாத்திரையாயுள்ள தத்துவம் காரணவுபகாரத்தால் வியத்தியாய்த் தூலமுற்று விளங்குமென்பதே உள்ளது தோன்றுமென்பதற்குத் தாற்பரியமாதலால், அதற்குத் தோற்றங்கூறுதல் இயைபேயாமென்றறிக. எடுத்துக்காட்டு இங்ஙனம் விரோதமுறுதலால் பூதநான்கின் கூட்டரவில் முன்னில்லாத வோரறிவு தோற்றி வியாபரிக்குமென்ற அவர்கொள்கை கழுத்திற் கையிட்டுத் தள்ளி ஒதுக்கப்படுமென்க, இவ்வாறாகலின், பூதக்கூட்டத்திரண்ட தேகத்திற்கு வேறாக ஆன்மா ஒன்று உண்டென்பது சாலுஞ்சித்தாந்தமேயாகுமென்க. *

எனதென்ற மாட்டி னெனதலா தென்னு
தனதலா தன்றகக்கண் யாக்கை — யெனதென்ற
மென்னறிவ தென்று முரைத்தநீ நிற்றிகா
ணுன்னிலவை வேறு முணர்.

அ-ரு. உ-ம். எ-னின். பதி மலவிமுத்திய பொருள்

கள் தம்மின் வேறாதல் கண்டு பிறிதின்கிழமைப்பொருள்பட எனதென்றாற்போலன்றிக் கைகான்முதலியவற்றைத் தற்கிழமைப்பொருள்பட எனதென்று கூறிநிற்றலின் அவ்விரு வேறு மொழியுந் தம்முளொக்குமாறென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து அதனைவலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். எனது அலாது என்னுது எனது என்றயாட்டின். எ-து. நீ உலோகாயதநூல் கேட்குமுன்னெல்லாம் பதி மனைவிமுதலிய புறப்பொருளையே உயிரெனக்கொண்டு மயங்கிநின்றாயன்றே அக்காலத்து அவற்றை எனதல்லென வேறுகாணாது தனித்தனி எனதென்றே தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல, உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண். எ-து. உனதன்றாகிய உன் கை கால் யாக்கைகளைத் தனித்தனி எனதென்றும் அங்ஙனமறிந்த பாசவறிவை என்னறிவென்றுந் தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நீ பொருள்பொருள் வேறு நிற்கின்றாய்காண். உன்னில். எ-து. உலோகாயதநூல் ஆராய்ந்தபின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்கள் உனக்கு வேறாதல் கண்டாற்போலக் கை கால் முதலியவற்றி னியல்புகளையும் ஏதுக்கண்முதலியவற்றான் ஆராய்ந்து பார்த்தியாயின் அவை வேறாம் உணர். எ-து. அக்கைகான் முதலியன உனக்கு அன்னியமாம் அதனை யறிவாயாக. எ-று.

இன் உவமவுருபு.

உனதலாதென்பதனைக் கை கால் யாக்கைகளொடு தனித்தனி கூட்டுக.

இரண்டாமதிகரணமுடிந்தது.

## மூன்றுமதிகரணம்.

——:o.——

இனி ஐம்புலனறிதலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மேல். எ-னின். ஐம்பொறிகள் ஐம்புலன்களை யறியுமென்றல் எல்லார்க்குமொப்ப முடிந்தமையின் அவை உடல்போற் சடமன்மை பெறப்படுதலானும், அவற்றை எனதென்னும் வழக்கம் பெரும்பான்மையன்றாகலானும், அவையே உயிராதலமையுமென இந்திரியான்மவாதிகள் கூறுங்கடாவையாசங்கித்து மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-படை.

ஐம்புலனாகிய சத்தப்பரிசரூபரசகந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்ததொன்றறியாமையின் இவ்வைந்தினையும் ஐம்பயனுமறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

எ-து. பொ-ரை. எ-னின். ஐம்புலனறிதலின் ஆன்மா ஐம்பொறியின்வேறெனச் சாதித்தற்கேதுவாமாறு யாங்ஙனமென்னுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துதனுதலிற்று. இ-ள். வெ-படை.

*இனிச் செவி மெய் வாய் கண் மூக்கென்னும் ஐம்பொறிகளும் சத்தம் பரிசம் இரதம் ரூபம் கந்தமென்னும் விஷயங்கள் ஐந்தனையும் தனித்தனி அறிபவல்லனவாம்; அவை சடமெனப்படா; ஆதலால், அவையே ஆன்மாவாகுமென்று இந்திரியான்மவாதிகள் சொல்வர். ஐம்பொறிகள் ஒன்றறிந்ததனை மற்றொன்றறியாமையாலும், அவை அவற்றை வேறு வேறாக விஷயிப்பதல்லது இத்தொழிற்பாடுடையேம் யாமென்று தம்மை அறியமாட்டாமையாலும், அவ்வைம்பொறிக

* இதுமுதல் இக்குறிவரும் வரை பாஷ்யம்.

ளையுங் கொண்டங்ஙனம் அறியும் ஆன்மா வேறுண்டென்பதே தேற்றமாம். இன்னும், ஐம்பொறிகள் தத்தமக்குரிய விஷயங்களை நேரேபியைந்து நின்றறிவனவேயாம். ஒருசாத்தன் ஒருதேயத்திற்சென்றகாலத்தில் ஐம்பொறிகள் கொண்டு கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்த விஷயவனுபவங்களை மற்றோரிடத்திலிருக்கும்பொழுது நினைந்து அவ்வண்ணம் நுகர்ச்சியுறுகின்றான். அச்சாத்தன் இடம்பெயர்ந்து மற்றோரிடத்துத் தான் இருக்கும்பொழுது அத்தேயத்தில் சென்றகாலத்துத் தனக்கு நேர்ந்த விஷயங்களை ஐம்பொறிகள்கொண்டு அவ்வாறறியுமாறில்லை. என்னை? அவ்விஷயங்கள் இடத்தாலும் காலத்தாலும் அவன்றனக்கு மிக வேறுபட்டுப் பிரத்தியக்ஷம் பெறாமையாலென்க. இனிச் சென்றகாலத்துக் காட்சியுற்ற அவ்வைம்புலன்கள் சாத்தற்கு மற்றோரிடத்திலிருக்கும்பொழுது விஷயமுறுதல் அவ்விந்திரியங்களுக்கு வேறாய் அவ்விந்திரியங்களைக்கொண்டு அறியவல்ல மனக்கருவியுடைய சேதனவான்மா அவனகத்து நிலைபெறுதல்பற்றி யல்லது கூடாமையால், இவ்வருத்தாபத்தியாலும் மனக்கருவிபற்றி இந்திரியங்களின்வழி நின்றறியும் ஓர் ஆன்மாச் சாத்தன் உடம்பகத்து இந்திரியங்களுக்கு வேறாயுண்டென்பது இனிது தெளியப்படும். இவை தேகேந்திரியான்மவாதிகளை மறுத்து உடம்பகத்து ஆன்மாத்தேகேந்திரியங்களுக்கு வேறாக உண்டென்று சாதித்தவாறாம்.*

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனையவ் வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதேயாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர்.

எ-து. உம். எ-னின். இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாதென்றதாக்கும். ஐந்துமைந்துயிரெனக் கோடலின் அதனானெமக்காங்கோரிழுக்கில்லை. இனி இவ்வைந்தையும்

கொண்டு ஐம்புலனையும் ஒரு பொருளே யறியுமெனின் அதற்குப் பிரமாணங் கண்டிலம். குடத்தைத் கண்ட யானே அதனைத் தீண்டினேனென மறித்துணர்வு நிகழ்தல் ஐந்துமோருடம்பின்கண்ணே நிலைபெறு மொற்றுமைபற்றியமையுமெனக் கோடுமென்னுங்கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று. இ-ள். உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி-எ-து உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒருவிடயத்தையறிந்த இந்திரியம் மற்றொருவிடயத்தை அறியாதாய். அன்றும் புலன் ஆப் அவ்வஞ்செழுத்தை. எ-து. அங்ஙனந் தம்முண்மாறுபடுஞ் சத்தமுதலிய புலன்களைச் சூக்குமபஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டாராய்ந் தறிகின்ற அவ்வைம்பொறிகளின் றொழிற்பாட்டை. அறிதல் ஒன்று உள்ளதேயாகில்-எ-து. கண் உருவத்தையறிவது செவி ஓசையையறிவதென்று இவ்வாறுணர்தலையுடையதோர்பொருள் இல்லதோ உள்ளதோவென வினுயினுர்க்கு இல்லதெனின் இவ்வறிவு நிகழாதாதல்வேண்டுமாகலான் உள்ளதேயாமெனின்? அது நீ. எ-று அவ்வாறுணர்வதியாது அதுவே நீயாகியவான்மா அவ்வாறுணர்வனவும் அவ்விந்திரியங்களேயென்றாற்படுமிழுக்கென்னையெனின்? அவை தனித்தனிகண்டு உள்ளல். எ-து. அவ்விந்திரியங்கள் தத்தம்விடயங்களை வேறுவேறு கண்டறிதன்மாத்திரையேயன்றி இத்தொழிற்பாட்டையுடையேம் யாமெனவும் அறியமாட்டாவாகலான், ஒன்று அல்லை ஓர். எ-து. அவ்வைந்தின் றொழிற்பாட்டையுமறிந்து அவற்றின் வரும் பயன்கொள்வதாய நீ யவற்றின் வேறுவை அதனையாராய்ந்தறிவாயாக. எ-று.

ஆகியென்னுஞ் சிறப்புவினை ஆயென்னும் பொதுவினையோடு முடிந்தது; இவனுமிவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறுபறைபறைந்தும் விளையாடுப என்றாற்போல. ஆயென்பது வினைத்தொகை. அவ்வஞ்செழுத்தென்க. அஞ்செழுத்தாற்

செலுத்தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்செழுத்தென்றார். அஃதிருமடியாகுபெயராய் ஐம்பொறியின் செயிற்பாட்டை யுணர்த்திநின்றது.

உள்ளல் உள்ளலாமெனென்க.

இம்மூன் றதிகரணங்களானுஞ் சாக்கிரத்தினிகழுமியல்புபற்றி ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

மூன்றுமதிகரண முடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

—:o:—

இனி ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். * "நேசவிந்திரியங்கட்கு நிகழுறி விதனுற் காண்டும்" என நீவிருங் கோடலின் அவ்விந்திரியங்களின் வேறாய் அங்ஙனமறிவது புரியட்டகவுடம்பேயாமென வமையும் அது புறத்து நிகழாதாயினும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தியறியுமெனக் கோடுமெனச் சூக்குமதேகான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து நாலாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடலுதலிற்று. இ-ள். ஐம்பொறிகளு மொடுங்கின சொப்பனத்தானத்தின் நிகழ்ந்தவற்றையறிதலின் ஆன்மா வேறன்றே. எ-று.

ஒடுக்கம் ஆகுபெயர்.

நனவின்கட் கனவுகண்டாமென்றுங்கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மாவாமென்றது.

எ-து. பொ-ரை. எ-னின். சொப்பனத்தினிகழ்ந்தவற்றையறிவதுஞ் சூக்குமதேகமேயாகலின் இது சித்தசாதனமா

---

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம். சுச. ஓசை நற்பரிச.

மாமென்னுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துதனுதலிற்று. இ-ள். வெ-டை.

இஃதென்சொல்லியவாறோவெனின் ஒடுக்கமறிதலின் மன்றது ஒடுக்கத்தினிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கியறிதலென்னும் பொருட்டாதலாற் சித்தசாதனமாதல் யாண்டையதெனை விடுத்தவாறென்பது. கனவுகண்ட சூக்குமவுடம்பிற் நனவின்கண் அதனையறியுமாயிற் கண்டபடியறியாது மயங்கியறிதல் கூடாமையின் உயிர்க்காயின் அதுபோல் ஒருதன்மைத்தாதலின்றி அகத்துச்சேறலும் புறத்துச்சேறலும் வேறுபாடுடைமையான் அதுபற்றி மயங்கியறிதல் கூடுமாகலின் அங்ஙனமறியுமுயிர் வேறுண்டென்பது கண்டுகொள்க.

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—யவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னீயல்லை மற்று.

எ-து. உ-ம். எ-னின். கனவின்கட் செல்லுமாறும் அங்கு நிகழுமாறும் மீளவருமாறுமுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் தாங்கிடப்ப. எ-து-மேல் உயிரன்றெனக்கூறிப்போந்த தூலவுடம்பினின்று உயிர்ப்பனவாய ஐம்பொறிகள் ஆண்டே உயிர்ப்பொழிந்து கிடப்ப. அடங்கிச் செவ்விதின் அவ்வுடலிற் சென்று-எ-து. அவை யங்ஙனங்கிடந்தவழிப் புறத்து நிகழுந் தொழிற்பாடெல்லாமடங்கி அவ்வுடம்பினுள்ளால் வருத்தமின்றிச்சென்று. அவ்வுடலின்வேறு ஒன்றுகொண்டு விளையாடி-எ-து. அத்தூலவுடம்புபோல அதனின் வேறாய தோருடம்பை யெடுத்துக்கொண்டு வேறோராற்றற்கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி. மீண்டு அதனை மாறல்-எ-து. மீளவதனை மாறி மேற்சேறலான், நீ உடல்

அல்லை மற்று. எ-து. நீ அச்சூக்குமதேகமல்லை அதனின் வேறாவை எ-று.

உயிர்ப்பவென்றது அன்பெறாத அகரவிற்றுப் பலவிறி சொல். உயிர்த்தல் தொழிற்படுதல்.

தாமும் மற்றும் அசை.

மீண்டு-மீள.

மாறல் மாறலானென்க.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தினிகழு மியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

நான்காமதிகரண முடிந்தது.

---

## ஐந்தாமதிகரணம்.

—:o:—

இனிக் கண் படில் உண்டிவினையின்மையின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். சொப்பனத் தானமாத்திரையின்றித் தொழிற்படாத சூக்குமதேகம்போலன்றிச் சுழுத்தி துரியங்களினுந்தொழிற்படுவதாய பிராணவாயுவே அடங்குதல் விடுதல் செய்தறிவதாகிய ஆன்மாவாதலமையுமெனப் பிராணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தினைந்தாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-படை.

உண்டிவினை உம்மைத்தொகை. அஃது * "உண்டியும் வினையு மின்றிக் கிடந்து" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக.

---

* சிவஞானசித்தி. நான்காஞ்சூத்திரம். ௩௦. கண்டுணர்.

ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பவனாதலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

எ-து. பொ-ரை. எ-னின். கண்படைகொண்டவழி உண்டிவினையில்லையென்றது-உடற்கோ பிராணவாயுவுக்கோவென வினாயினார்க்கு உடம்பு உயிரன்மையான் அதற்கவையில்லாமைபற்றி ஈண்டைக்காவதோரிழுக்கில்லை இனிப் பிராணவாயுவுக்கென்னின் அது துயின்றெழுந்தபின்னர்ச் சுகமாகத் துயின்றேனென்றறிதல் பிறிதோராற்றாற் பெறப்படாதென்னும் அருத்தாபத்தியான் ஆண்டும் இன்பத்துன்பநுகர்ச்சியுண்டென்பது பெற்றாம். விழித்துழிப்போலவுறங்குழியும் பிராணவாயுவியங்குதலான் வினையுண்மையுங் கண்டாமாகலின் அதற்கு அவையான்றில்லையென்றல் மாறுகோள்போலுமென்னுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துதனுதலிற்று. இ-ள். ஈண்டு உண்டியென்றது விடயங்களினிடமாக வரும் இன்பத்துன்ப நுகர்ச்சியை; வினையென்றது உடம்பு சேட்டித்தலையாகலின். இவ்விரண்டும் பிராணவாயுவை யொழித்தெழுந்த கருவிகளெல்லாமொடுங்கிய துயிலிடத்து அஃதியங்காநிற்பவும் உடம்பின்கண்ணே நிகழ்தலின்மையின் அவையொடுங்காத நனவினிடத்து அவையிரண்டும் அதன்கணிகழ்தலுண்மையின் அவ்வின்மையுண்மைகட்கேதுவாகக் கருவிகளையொடுக்கியும் ஒடுக்காது நிற்பதியாது அதுவே அவ்வான்மாவென்றவாறும். கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

பிராணவாயுவை யொழித்தொழிந்த கருவிகளென்பது ஆற்றலான் வந்தது.

இன்பத்துன்பநுகர்ச்சியை இன்பத்துன்பமென்றுபசரித்தார்.

சிவனம் சிவித்தல்; சேட்டித்த லென்றதாம். செவ்வெண்டொகை விகாரத்தாற்றொக்கது.

சீவியாநிற்பதென்பது சீவியாநிற்றலென்னுந் தொழிற்பெயர்மாத்திரையாய் நின்றது. "உறங்குவதுபோலும்" என்புழிப்போல.

உளதென்றது தனித்தனி சென்றியையும்.

துயின்றுழியும் விழித்துழியுந் திரிபின்றி ஒருதன்மைத்தாதல்பற்றி உடம்பு பிரகிருதியெனப்பட்டது. பிருகிருதிக் கென்றது உருபுமயக்கம்.

இரண்டுகாலத்துமொப்ப வியங்குதல்பற்றிப் பிராணவாயுவைப் பிரகிருதியெனக்கொண்டு அதற்கவையின்மையி னென்றுரைப்பாரும், பிரகிருதிவிகாரமாகிய சித்தத்திற்கு அவையின்மையினெனவுரைத்துச் சுழுத்தியின்கண்ணுந்தொழிற்படுவதாகிய சித்தமேயுயிரென்னுஞ் சித்தான்மவாதிகளை மறுத்தற்கெழுந்த திவ்வதிகரணமென் றுரைப்பாருமுளர்.

கண்டறியு மிவ்வுடலே காட்டோடுங்கக் காணுதே
யுண்டி வினையின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யோடுங்கா துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்.

எ-து. உ-ம். எ-னின். துயிலிடத்துக் கருவிகளெல்லாமொடுங்குதலின் இன்பத்துன்பநுகர்ச்சியுஞ் சேட்டையும் பிரகிருதிக்கில்லையாயினவாகலான் அதுபற்றிப் பிராணவாயுவை யான்மாவென்றற் கிழுக்கென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று. இ-ள். கண்டு அறியும் இவ்வுடலே-எ-து. கண்டறிதற்கு நிலைக்களமாவ இவ்வுடம்பின்கண்ணே. காட்டுக் காணுதே ஒடுங்க-எ-து. காட்டாயு கருவிகள் தொழிற்படாதேயொடுங்கவும். உண்டி வினை இன்றி-எ-து. அவையொடுங்கியவழி உண்டியும் வினை

மும் பிரகிருதிக்கில்லையாகவும். உயிர்த்தலான்-எ-து பிராணவாயு நிலைபெற்று இயங்குதலான். கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு-எ-து. கண்டறியு முரிமையையுடைய உயிர் பிராணவாயுவின் வேறாயுண்டு. ஒடுங்காது உடல் கண்ணில் ஊன் உண்டி வினை உள்ளதாம்-எ-து. அவ்வுயிரொடுங்காது அவ்வுடலின்கணேயத்திற்றாயின் அவ்வுடம்பு கருவிகளின் செயழிற்பாட்டானுய உண்டியும் வினையுமுடைத்தாம். ஆம். எ-து. அதனையாராய்ந்தறிவாயாக. எ-று.

இது அருத்தாபத்தியளவை.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

இன்றியென்னும் வினைக்குறிப்புச் செயவெனெச்சத்திரிபு. சிறப்பும்மைகள் தொக்கன. அவை *“அறிந்திடா துடலுறக்கத் தறிவின்மை கரண மின்மை, யறிந்திடு முதலி யாகி னதுநிற்கக் கரணம் போகாது” என்னும் பொருள் விளைத்து நின்றன.

ஊன் ஆகுபெயர்.

உயிர் வேறுண்டென்றதனை வலியுறுத்துவார் உடம்பாட்டுமுகத்தானு மோதினர்.

இவ்வதிகரணத்தானே சுழுத்தி துரியங்களினிகழ்ச்சியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறுஞ் சார்வாகமதம் பல்லையென்றதனை வலியுறுத்தியவாறு.

ஐந்தாமதிகரணமுடிந்தது.

---

## ஆறுமதிகரணம்.

—:o:—

இனி உணர்த்தவுணர்தலின் ஆன்மாவுளது என்றது.

* சிவஞானசித்தி, மூன்றாஞ்சூத்திரம். ௪. அறிந்திடும்,

எ-து. மே-ள். எ-னின். பிரமப்பொருள் மேற்கூறிப் போந்த சடப்பொருள்கள்போலன்றிச் சித்தாகலான் அதுவே உயிராதலமையுமென விஞ்ஞானான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து ஆறுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். தொழிற்படுங்கருவிகளொன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையினின்றுழி அறியுமாறின்றிப் பின்னர்க் கலைமுதலிய கருவிகளால் அறிவிக்கவறிந்து வருதலுண்மையின் எக்காலத்துந் திரிபின்றியறிந்தாங்கறிந்து நிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு இது தகாமையான் அங்ஙனமுணருமான்மாவேறுண்டு. எ-று.

உணர்த்தவுணர்தலெனவே முன்னுணராது கிடத்தல் பெற்றும்.

அவனறிந்தாங்கறிவனென்றறிவிக்கவறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவேயவ்வான்மாவாமென்றது.

எ-து. பொ-ரை. எ-னின். அறிந்தாங்கறிவதாகிய பிரமப்பொருள் அவிச்சைக்காலத்துக் கருவிகளோடுங்கூடியன்றியறியாதெனக் கோடுமாகலின் அதுபற்றி உயிர் வேறுண்டென்றல் பொருந்தாதென்னுங்கடாவை யாசங்கித்து அவ்வளவினவன்மகிழுநகவென்னுநியாயத்தால் வேறு மதன்றூற்பரிய முணர்த்துதனுதலிற்று. இ-ள். கருவிகளோடு கூடியவழியுந் தன்னியல்புணருமாறின்றி அம்முதல்வன் இதுபோலமறந்து மறந்தறிதலின்றி அறிந்தவாறேயறிந்து நிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களானறிவிக்கவறிந்து குரவனறிவுறுக்கு முபதேசமொழியைப் பெற்றுடையதாய் நிற்பதொன்றுளதாகலின் அதுவே மேலுரையளவையாற் சாதித்துப்போந்த ஆன்மாவென்றவாறும். உணர்த்தவுணர்தலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

அறிந்தாங்கென்பது அப்பொருட்டாதல் "எண்ணிய வெண்ணியாங் கெய்துப" என்பதனானுமறிக. இதற்குப் பி

றின்-எ-து. இனி மெய்யாகிய சித்தாந்தநெறியினையுணர்ந்தோன் வேறென்னையோவென மனமொருங்கியாராயுமாயின். அது அது தான் என்னும் அகம் ஆகும்-எ-து. காட்டுமொளிக்கு வேறாய கண்ணொளிபோல அவ்வறிவிற்கு வேறாய் அதுவதுவே தானெனச் சார்ந்ததின்வண்ணமாய் நின்றறியுமியல்பையுடைய உயிராம். எ-று.

அறிந்தும் அறிவதேயாயும் என்னும் உம்மைகள் எண்ணின்கண் வந்தன. அறியாதுமென்னு மெண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. அறிந்ததையுமென்னுமும்மை இழிவுசிறப்பு. அறிவுமென்னுமும்மை இறந்ததுதழீஇயது. ஏகாரம் அசைநிலை.

அங்கு-உணர்த்துமுறைமைத் தானமாகிய இலாடத்தினென்றவாறு.

அறிந்ததையும் விட்டடங்கி யறியுமாறு வருகின்ற சூத்திரத்திறுதியினும், அதுவதுதானெனச் சார்ந்ததின்வண்ணமாமாறு உண்மையதிகாரத்தும் பெறப்படும்.

அறிந்துமறிவதேயாயு மறியாதறிந்ததையும் விட்டடங்கியறிந்ததேது என்பதற்கு ஓதியதனை ஓதியபொழுதே யுணர்ந்தும் பலகாலோதி யுணர்வதாயும் பலகாலோதியு முணர்தலின்றியும் உணர்ந்ததனையும் பின்னர் மறந்தொழிந்தும் இவ்வாறேதி யுணர்ந்ததியாதென்றுரைத்தலுமொன்று. இப்பொருட்கு அடங்கியென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப்படுத்துரைக்கவே, உணர்த்தவுணர்தலென்னு மேதுவான் முறைமையே அதீதத்தின்கணிகழு மியல்புபற்றியும் சுத்தத்தினிகழு மியல்புபற்றியும் உணர்த்துமுறைமைக்கணிகழு மியல்புபற்றியும் உயிருண்மை சாதிக்கப்பட்டது. இது சற்பரமுமல்லை தனியென்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

விஞ்ஞானமே ஆன்மாவென்னும் புத்தரின் யோகாசாரன் மதத்தை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணமெனக்கொண்டு அதற்கியைய வுரைப்பாருமுளர்.

ஆறமதிகரண முடிந்தது.

---

## ஏழாமதிகரணம்.

இனி மாயாவியந்திர தனுவினுள் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். உடம்பு முதலியவற்றுள் ஒரோவொன்றே ஆன்மாவாதலின்றென்றதொக்கும் அவற்றுள் ஒன்று குறைந்தவழியும் அறிவு நிகழாமையானும் எல்லாங் கூடியவழி அது நிகழ்தலானும் அனைத்துங்கூடிய சமுதாயமே உயிராதலமையுமெனச் சமுகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர் வைபாடிகர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னிறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவைபோலு முடம்பின்கண்ணே அவற்றிற்கு வேறாய் ஆன்மாவுண்டு எ-று.

எனவே அவையெல்லாம் மாயையின் காரியங்களாய் நிலைபெறுதனவாகலின் நிலைபேறுடைய உயிராகாவென்றவாறாயிற்று.

மாயை ஆகுபெயர் இகரம் விரித்தல்விகாரம்.

அவை தாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.

எ-து. எ-து. எ-னின். சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய *அகச்சமுதாயமைந்தும் மாயாகாரியமென்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின் அதுபற்றி ஆன்மா வேறுண்டெ

---

* அகச்சமுதாயம் ஐந்து - உருவம், வேதனை, ஞானம், குறி, வாதனை.

னச் சாதித்தலைமையுமாறென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து அவ்வளவினவன்மகிழுகவென்னு நியாயம்பற்றி வேறுமோராற்றாற் சாதித்தனுதலிற்று. இ-ள். நீ ஐந்துகந்தமெனக் கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மாவெனப் பெயர்பெறுமாறின்றி வேறு வேறு பெயர்பெற்று நிற்பனவாகலான் மாயாவியந்திர தனுவினுள் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

வேறு வேறு என்பது வெவ்வேறென மரீஇயிற்று.

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே போல—வலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதனுவாந்
தானத்தின் வேறுருந் தான்.

எ-து. உ-ம். எ-னின். அவை தனித்தனி வெவ்வேறு பெயர்பெறினுந் தொக்க சமுதாயத்தின்கண் ஆன்மாவெனப் பெயர்பெறுமெனக் கோடுமாகலின் அதுபற்றி யிழுக்கென்னையென்னுங் கடாவை யாசங்கித்து அவை வெவ்வேறு பெயர்பெறும்வழியும் அவர் கூறியவாறு பெயர்பெறுது வேறு பெயர் பெறுமாறும் அவை மாயாகாரியங்களேயாமாறும் அவை தொக்க சமுதாயத்திலும் ஆன்மாவெனப் பெயர்பெறுது வேறுபெயர் பெறுமாறுமுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். காணின் கலை ஆதி மண் அந்தம்-எ-து. அங்ஙனந் சமுதாயமாதற்குரியவை யாவையென்று அளவைகளானறியப்படுகிற் கலைமுதனிலமீறாகிய தத்துவங்களேயாம். அவை மாயை நிலையாவாம்-எ-து. அவையனைத்தும் மாயையின்காரியங்களாகலின் நிலையுதலின்றிச் சிலகாலநின்றழிவனவாம். ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில்-எ-து. அவை தொக்க சமுதாயத்தின் விளங்கித்தோன்றுவதாய ஞானத்தினியல்பை அசையாமற் கருத்தை யொருக்கி

முன்னுணர்ந்து பின் அச்சமுதாயத்தை யாதென்றாராயின், அது தீபமேபோலத் தனுவாம்-எ-து. அச்சமுதாயங் கண்ணுக்கு விளக்குப்போல உயிர்க்குத் தூலசூக்குமபரங்களாகிய உடம்பாம். தான் அதனின் வேறு ஆகும் தான்-எ-து. ஆதலாற் கண் விளக்கின் வேறாயினாற்போல உயிர் அவ்வுடம்பின் வேறாம். எ-று.

ஆமென்பது மேலுஞ்சென்றியையும்.

மாயை ஆகுபெயர்.

தானென்பது முன்னையதெழுவாய்; பின்னையது அசை.

அதனினென்பது அத்தினென மரீஇயிற்று, "இத்தைமெய்யெனக் கருதி" என்புழிப்போல.

இதனானே தனியென்றதனை வலியுறுத்தவாறு.

இவ்வாறு மூன்றுசூத்திரத்தானும் சைவாகமங்களுட் கூறப்படும் பதிமுதலிய பொருள்களதுண்மை அனுமானவளவையான் வலியுறுத்தப்பட்டது. ஆகமவளவையே யமையுமாகலின் அநுமானவளவை மிகையாம்போலுமெனின்? ஆகாது: மந்தவுணர்வுடைய மாணாக்கர்க்கு வேற்றுச்சமயநூல்களை நோக்கியவழிச் சைவாகமப்பொருளின் மலைவு நிகழாமைப்பொருட்டும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்குவகையானன்றி ஆகமங்களைக் கேட்டதுணையானே அநுபவங் கூடாமையிற் சிந்தனை செய்து வன்மைமென்மையுணர்ந்து தெளிந்துகோடற்பொருட்டுங் கருதலளவையும் வேண்டப்படுமாகலானென்க,

ஏழாமதிகரணமுடிந்தது.

மூன்றுஞ்சூத்திரமுடிந்தது.

---

பிரமாணவியன் முற்றிற்று.

---

# இலக்கணவியல்.

## நான்காஞ்சூத்திரம்.

—(:o:)—

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

எ-து. சூ-ம். எ-னின். இதுவுமது.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துதனு தலிற்று.

இ-ள். பிரமாணம் இலக்கணமிரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்றென்னு முறைமைபற்றி மேற்பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட பதி பாச பசுக்களுக்கிலக்கணம் எதிர்நிரனிறையாக வைத்துக் கூறுவான்றொடங்கி அவற்றுள் இது மேலடுக்க நின்ற ஆன்மாவினிலக்கணங் கூறுதனுதலிற்று.

சொற்பல்காமைப்பொருட்டும் ஒத்து வேறுயவழியும் இயைபுடைமையுணர்ந்து கோடற்பொருட்டும் ஈண்டு இதுவுமதுவென மாட்டெறிந்துரைத்த ஆசிரியர், இங்ஙனமுரைத்துக்கோடற் கேற்பவன்றே ஆண்டு ஆன்மாவினதுண்மையுணர்த்துதனுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது பொதுப்பட ஆன்மப்பிரகாசமுணர்த்துதனுதலிற்றென்றதூஉமென்க. இவ்வாறன்றி மேலைச்சூத்திரத்தின் ஆன்மாவினதுண்மை கூறுமுகத்தாற் றொகுத்தோதிய அஞ்சவத்தையை ஈண்டிலக்கணங்கூறுமுகத்தான் விரித்தோதப்படுதலின், இதுவுமதுவென்றது மேலைச்சூத்திரப்பொருளோடு மாட்டெறிந்தன்றுரைப்பினுமாம். இதனானுஞ் சூத்திரவியைபு இனிது விளங்கும்,

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரஞ் சித்தமென்னு நான்கனுள் ஒன்றன்றாயினும் நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய அமைச்சரோடு கூடிநின்று தன்றொழினடாத்தும் அரசன்போல, சகசமலத்தினான் உணர்வின்றிக் கஞ்சுகம்போலுங் கலாதிகளாற் பொதுவகையான் உணர்வு நிகழினுஞ் சிறப்புவகையான் நிகழுமாறு அவற்றாற் பெறப்படாமையிற் சிறப்புவகையானுணருமாறு தனக்குச் சூழ்ச்சித்துணையாகிய அவ்வந்தக்கரணங்களோடு கூடி நின்று சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுடைத்தாம். எ-று.

எனவே, அங்ஙனநின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக் கிலக்கணமென்றவாறாயிற்று. இஃது உயிர்க்குத் தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஒன்றன்றாயினும் சகசமலத்து உணராது அமைச்சரசேப்ப அவற்றொடு சந்தித்துநின்று அஞ்சவத்தைத்தாமெனவியையும்.

உணராது சந்தித்ததென்பது காரணகாரியப்பொருட்டாய் நின்றது. சந்தித்தது வினையெச்சமுற்று.

இவ்வாறன்றி ஆன்மா அவற்றினொன்றன்றாயினும் சகச மலத்துணராமையால் அவற்றொடு சந்தித்தது சந்தித்தவழி அவையுந்தானும் அமைச்சரசேப்ப நிற்றலான் ஐந்தவத்தைத்தாயிற்று எனவதிகரணம் பகுத்துக்கோடற்கேற்ப வேறு வேறு வினைமுடிபு செய்துரைத்தலுமொன்று.

வடமொழிச்சூத்திரத்தோதுதலின் ஈண்டும் ஆயினுமெனவருவித்து ஒருதொடராக வைத்துரைக்க. அந்தக்கரணமவற்றினொன்றன்றாயினுமெனவே, அவற்றினொன்றாதலும் அநுவாதமுகத்தால் ஈண்டேபெற்றாம். இஃதுணராதார் அந்தக்கரணமவற்றினொன்றன்றென்றதனை வேறுகொ

டாக வைத்துரைப்ப. அங்ஙனமுரைப்பின், முன் வருவன வற்றை அவாய்நின்று ஒருபொருண்மேல் வாராமையின் ஒரு சூத்திரமாதற் கேலாமையறிக.

அவை சந்தித்ததென்புழி ஒடுவுருபு விகாரத்தாற் றொக்கது; இரண்டாவது விரிப்பினுமமையும்.

ஆன்மாவென்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கற்பாலதாகவும், ஈண்டு வேறோதியது ஒத்து வேறுதல்பற்றியென்றுணர்க.

ஆன்மாவென்னுஞ்சொற்குப் பொருள் வியாபகமென்பதூஉம் சித்தசித்தென்பதூஉமாம்.

மலத்து மலத்தாலெனவிரிக்க.

அமைச்சரசு அமைச்சரொடு கூடிய அரசென உருபும் பொருளும் உடன்றொக்கன.

காரணப்பொருட்டாய நின்றென்னும் வினையெச்சம் அஞ்சவத்தைத்தென்னும் வினைக்குறிப்புமுற்றோடு முடிந்தது.

இதனுள் அந்தக்கரணமவற்றினொன்றன்றென்றது ஓரதிகரணம்; ஒன்றன்றாயினுஞ் சகசமலத்துணரா தமைச்சர சேய்ப்பவவை சந்தித்ததென்றது ஓரதிகரணம்; அமைச்சர சேய்ப்பநின்றஞ்சவத்தைத்தேயென்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

——:o:——

ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தியகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.

எ-து. மே-ள். எ-னின். ஏனையவெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான் உயிராகா ஆயினும் மனமுதலிய அந்தக்கரணங்கள் சிந்தையைச் சீவனென்றுஞ் சீவ

ளைச் சித்தமென்றும் இங்ஙன முயிரென்னும் பெயரானும் வழங்கப்படுதலுண்மையானும் இந்திரியமுதலியவற்றை அவ்வாறு கூறாமையின் அஃதாகுபெயரென்றற்கேலாமையானும் அவையே தனித்தனி ஆன்மாவாமென்றல் அமைவுடைத்தென அந்தக்கரணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இது மேலைச்சூத்திரத்துள் ஓதற்பாலதேயாயினும் ஈண்டிலக்கணங்கூறும் வழியும் அவற்றொடு சந்தித்து அமைச்சரசேய்ப்ப நிற்பதென அவற்றைக்கேதுவாக எடுத்தோதவேண்டுதலின் ஈரிடத்துமெடுத்தோதுதல் “சில்வகையெழுத்தின் செய்யுட் டாகிச், சொல்லுங் காலை யுரையகத்தடக்கி, நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகி” என்னுமிலக்கணத்ததாய சூத்திரத்துக் கேலாமையான் அதுபற்றி விதிமுகத்தானன்றி அநுவாதமுகத்தான் ஈண்டுணர்த்தப்பட்டது., இ-ள். வெ-டை.

ஈண்டு அந்தக்கரணமென்றது உள்ளந்தக்கரணமாகிய கலாதிகளினுஞ் செல்லாமைப்பொருட்டு மனோபுத்தியகங்கார சித்தங்களிலெனக் கொண்டெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக்கொண்டோரின் உயிர் வேறுண்டெனக்கொள்ளாதார் இன்மையின் ஆண்டாசங்கை நிகழாமையானும் அமைச்சரோடு உவமிக்கப்பட்டு அவற்றைக் கேதுவாவன அம்மனமாதியேயன்றிக் கஞ்சுகத்தோடு உவமிக்கப்பட்டு அநித்தத்தினு நீங்காது உடனிற்பனவாய கலாதிகளன்மையானும் அவற்றை ஈண்டெடுத்தோதவேண்டாமையின் மனமுதலிய புறவந்தக்கரணங்களை ஈண்டுக் கூற நின்றனவென்பது கருத்து.

அவைதாம் பிரகாசமாய்நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

எ-து. எ-று. எ-னின். * “மனமும் புத்தி யகங்காரந்

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். உ. கருவியா.

சித்த நான்கு, மருவியான் மாவே யென்ன வரும்" என நீயிரு ங்கோடலின் உயிர் அவற்றுளொன்று தலைமையுமென்றுற்படு மிழுக்கென்னையென்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று. இ-ள். அவ்வந்தக்கரணங்கடாம் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய்நின்றே தம்மை நோக்கி அசித்தாய் நிற்றலால் தன்னை நோக்கியுஞ்சித்தாய் நிற்கும் இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி ய கங்காரசித்தங்களில் ஒன்றன்றெனை மேற்கொண்டது. எ-று.

எனவே, உயிரான் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகளறி ந்த விடயங்களுள் ஒன்றனை இஃதியாதாகற்பாற்றெனச் சித் தஞ்சிந்தித்தறியும்; யான் சிந்தித்தேனென்றறியமாட்டாது. மனம் அதனை இஃதின்னதாகற்பாற்றெனவும் அஃதாமோ அன்றோவெனவும் இவ்வாறு சங்கற்பவிகற்பஞ்செய்தறியும்; யான் சங்கற்ப விகற்பஞ்செய்தேனென்றறியமாட்டாது. அ கங்காரம் அதனை இன்னதெனத் துணிவேன் யானென்று ஒ ருப்பட்டெழுந்தறியும்; யானொருப்பட்டெழுந்தேனென்றறி யமாட்டாது. புத்தி அதனை இன்னதிதுவென நிச்சயித்தறி யும்; யானிச்சயித்தேனென்றறியமாட்டாது. ஆகலான் அ வ்வாறின்றி அவற்றொடு கூடி யான் சிந்தித்தேன் பற்றினே ன் எழுந்திருந்தேன் நிச்சயித்தேனென்றும் அதன்பின் அது வதுவாய்ப் பரிணமித்துச் சுகதுக்கமோகரூபமாய்த் தன்மா ட்டு வந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதிகளோ டு கூடி நின்று இது சுகம் இது துக்கம் இது மோகமென்றறி ந்தும் யான் சுகித்தேன் யான்றுக்கித்தேன் யான் மோகித் தேன் என்றறிந்தும் இங்ஙனம் பிறவற்றை நோக்கியுந் தன் னை நோக்கியுஞ் சித்தாகிய ஆன்மாத் தம்மை நோக்கிச் சித் தாகாத அந்தக்கரணங்களின் ஒன்றுமாறியாண்டையதென மறுத்தவாறாயிற்று. *"இவன்றானும் புத்தியுஞ்சித் திவனு

* சிவஞானசித்தி, பதினொராஞ்சூத்திரம். கக. செய்யுள்.

மோ புத்தி'' என வழிநூலாசிரியர் கூறியதூஉம் இவ்வியல்பு நோக்கி.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்தென்னும் பொருளவாம்.

ஏனையோரை நோக்கி அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப்பற்றி அமைச்சரை அரசரென்று உபசரித்துக் கூறப்படுமாறுபோலப் புறக்கருவிகளை நோக்கி ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்றற்சிறப்புப்பற்றி மனம்புத்தியகங்காரஞ்சித்த நான்கு மருவி யான்மாவேயென்ன உபசரித்துக் கூறப்படுமத்துணை யென்றொழிக. சூழ்ச்சித்துணையாதல்பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரையொக்குமெனவே, ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களை ஒக்குமென்பது பெற்றாம். அது ஞானாமிர்தத்திற்காண்க.

மேலைச் சூத்திரத்தினோதிய ஏதுக்களே ஈண்டைக்குமமையுமாயினும், சிறந்தமைபற்றி வேறேதுக்கூறினார்.

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி னல்லன்—மனமே
லுதித்தோன்றை யுள்ள முணர்த லதனி
லுதிக்குங் கடற்றிரையை யோத்து.

எ-து. உ-ம் எ-னின். அவ்வந்தக்கரணங்கள் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் தம்மின் மேலுள்ளவற்றை நோக்கியுந் தம்மைநோக்கியும் அசித்தாமாறுந் தெரித்துணர்த்தி ஏனைய வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள்-எ-து. மனமுதலிய அந்தக்கரணங்களாலுணரப்படுவன ஞானேந்திரியங்களாற்றரப்பட்டுப் புறத்தே நிலைபெற்ற விடயங்களாம். உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை-எ-து. ஆன்மாவுணர்வது மனத்துக்கு மேலெனப்படும் புத்தி

யிற்றேன்றிய தொன்றனையாம். கடற்றிரையை ஒத்து உதிக்கும்-எ-து. அவ்விருவேறுணர்வுங் கடலிடையெழுந்து கரைசாருந்திரைபோலப் பரம்பரையின் ஆன்மாவின்மாட்டு வந்து தோன்றும். அதனின் மனம் ஆதி மன் புலனின் அல்லன-எ-து. அதனானே மனமுதலியன அவ்விடயங்களின் வேறாயினாற்போல ஆன்மாவும் அம்மனமுதலியவற்றின் வேறாம். எ-று.

உதிக்குமென்னும் பயனிலைக்கு உணர்தலிரண்டும் எழுவாய்.

செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது.

புலனின் இன் உவமவுருபு.

அல்லனென ஆடூஉவறிசொல்லாற் கூறியது வடமொழி மதம்பற்றி.

உதித்தவென்னும்பெயரெச்சவிறு விகாரத்தாற்றொக்கது.

புத்தியிற்றேன்றியதொன்றுவது சுகதுக்கமோகரூப விடயம்.

பரம்பரையிற் றேன்றுதலாவது முன்னர் வாயிற் காட்சியுணர்வு தோன்றி அதன்பின் மானதக்காட்சியுணர்வு தோன்றி அதன்பின்னர்த் தன்வேதனைக்காட்சியுணர்வு உயிரின்கண் வந்து தோன்றுதல்.

இதனானே அந்தக்கரணங் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் மேலுள்ளவற்றை நோக்கி அசித்தாமாறும் உயிர் அவ்வாறன்றி யாண்டுஞ் சித்தாமாறுங் கண்டுகொள்க.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு.

எ-று. உ-ம். எ-னின். மேற்பொதுவகையாற் கூறிப்போந்த அந்தக்கரணங்களினியல்பு சிறப்புவகையாற்கூறுமுகத்தான் மானதக்காட்சியுள்ளுங் கடற்றிரைபோலப் பரம்பரையின் வெவ்வேறுயுணர்வு நிகழுமாறுணர்த்தி உயிர்வேறுதலை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். உள்ளம்-எ-து. புருடதத்துவமென நின்றவுயிர். ஆங்கு-எ-து. வாயிற்காட்சியாற் கண்டவிடயங்களினொன்றனை மனமாதியானுணரும் மானதக்காட்சியின்கண்ணும் ஒருபெற்றித்தாதலின்றி, சித்தமாய்ச்சிந்தித்து-எ-து. சித்தமாய் நின்று இஃதியாதாகற்பாற்றெனச் சிந்தித்தும், மனம் ஆகிப் பந்தித்து-எ-து. அதன்பின் மனமாய் நின்றுஇஃதின்னதாகற்பாற்றெனப்பற்றியும், ஆங்காரம் ஆய்த்தெளியாது-எ-து. அதன்பின் அகங்காரமாய் நின்று இஃதாமோ அன்றோ இதனை யின்னதெனத் தெளிவேன் யானெனத் தெளிவு பிறவாதெழுந்தும், புந்தியாய் ஆய்ந்து-எ-து. அதன்பின்னர்ப் புத்தியாய்நின்று இஃதின்னதெனத் தெளிந்தும், வெவ்வேறு தானே துணிந்து இவ்வேறும்-எ-து. இங்ஙனம் வெவ்வேறுகவே யுணர்தலான் அவ்வாறுணரும் புருடன் இவ்வந்தக்கரணங்களின் வேறாம், போது அவ்வேறாம் போல்-எ-று. நாழிகைமுதலியவற்றோடு கூடிநின்ற நாழிகை நாள் பக்கந் திங்கள் யாண்டு முதலியனவாய்ப்படும் பாகுபாடுசெய்யுங் காலதத்துவம் அந்நாழிகைமுதலியவற்றின் வேறாயினாற்போல். எ-று.

ஆய்தல் ஈண்டு நிச்சயித்தற்பொருட்டு.

துணிதலென்பது அறிதலென்னும் பொருண்மாத்திரையாய் நின்றது.

தான் அசை. ஏகாரந் தேற்றம்.

இவ் அவ் என்பன வகரவீற்றஃறிணைப்பன்மைச் சுட்டுப்பெயர்.

வேறும் போதுபோலெனவே, ஆண்டு நீக்கப்பொருள் ஞாயிறுமுதலியனவென்பது தானே விளங்குமென்பது நோக்கி அவ்வெனச்சுட்டியொழிந்தார். சாரியையும் உருபும் உடன்றொக்கன.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஆங்கும் வெவ்வேறு தானே துணிந்தெனவே மானதக்காட்சியும் இங்ஙன நால்வேறுவகைத்தாய் ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம்பரையிற் றோன்றுமென்றவாறாயிற்று.

செய்யுளாகலின் முறைபிறழ வைத்தார்.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

எ-து. உ-ம். எ-னின். அம்மானதக்காட்சியினிகழுஞ் சவிகற்ப வுணர்விற்கேதுவாய் அவற்றையுடனின்று செலுத்தும் அக்கரங்களிவையென்பதும் அவற்றானுணர்வு மாறிமாறித் தோன்றுமாறு முணர்த்துதனுதலிற்று. இ-ள். வெ-டை

*"மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை, யுன்னு முகார முபகரிக்கு—முன்னுகு—மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்திடு, நீங்காத சித்தம் விந்துநேர்" என்பவாகலானும், ஈண்டோதிய முறையே முறையெனவும், †"அவ்வுடனுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்காரங்கள்" என வழிநூலாசிரியரோதியது எதிர்நிரனிறைப் பொருளெனவுங் கொள்க. "அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்கா ரங்கள்" என்றதே முறையெனக்கொண்டு அதற்கியையக் கொண்டுகூட்டி யுரைப்பாருமுளர்.

---

* துகளறுபோதம். † சிவஞானசித்தி; நான்காஞ்சூத்திரம் ௩.

பகாதிவற்றைநாடிற் பிரணவமாமெனவும் போன்று மெனவுங் கூட்டுக.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறு வார் ஒப்புமைபற்றிப் புருடனைச் செலுத்தும் அக்கரமும் உ டன்கூறினார்.

உடனின்று செலுத்துதல்பற்றி அபேதமாக வைத் தோதப்பட்டன.

* "நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதிகலையைப் ப ற்றி" அகரமுதலிய பஞ்சகலைவடிவாய் நின்று இவற்றை வே றுவேறு செலுத்துதல்பற்றிக் கணந்தோறும் நினைப்பு மறப்பு மாகிய சகலகேவலங்கள் அதிநுட்பமாய்க் கறங்கோலைபோல மாறி மாறி நிகழுமெனவும், மாசகலத்தின்கட் கணந்தோறு ம் அங்ஙனமுணர்வுதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தி ன்கட் புதிது புதிதாய்த் திரைதோன்றியும் ஒடுங்கியும் வரு மாறுபோலுமெனவுமுணர்க. கடற்றிரையுவமை மேற் பக ம்பரையாய் உணர்வு வருதற்கெடுத்துக்காட்டினார்; ஈண்டுப் புதிது புதிதாய் வருதற்கெடுத்துக்காட்டினார்; ஆதலாற் புன ருத்தியன்மை யுணர்க.

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவோடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

இ-து. உ-ம். எ-னின், அவ்வக்கரங்களுந் சடமாகலின் அவற்றை யதிட்டிக்கும் அதிதெய்வங்கள் இவையென்பது ணர்த்துதனுதலிற்று.

இ-ள். எண்ணிலவோங்காரத்து நண்ணிய விந்துவோடு [illegible]த்ததிதெய்வங் கண்ணில் ஈரொடு கூடிய சதாசிவமா-

* சிவஞானசித்தி, சூத்திரம். உச.

அகரவுகரமகரத்ததிதெய்வங்கண்ணிற் பகரயன் மாலொடு பரமனும். எ-று.

எண்ணிலவோங்காரம் எண்ணத்தின்கண் நிலவிய ஓங்காரமென வினைத்தொகை. எண்ணம் ஈண்டு மானதக்காட்சி.

ஒடு எண்ணின்கண் வந்தது.

ஈண்டு அயன் மால் பரமனென்றது சுத்தவித்தையின் வைகுவாரை. பரமன் உருத்திரன். அகரவுகரம் மகரத்தாமென்புழி மகரம் இசைப்பொருட்டாய் ஒற்றில்வழி யொற்றாய் வந்தது.

முதலதிகரணமுடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

இனி இவ்வான்மாச் சகசமலத்தினா லுணர்வின்றெனன்றது.

எ-து. மே-ள். எ-னின். ஆன்மா அந்தக்கரணங்களி னொன்றன்றாயின் அவற்றோடு சந்தித்து நிற்றற் கேதுவென்னையென் அவர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-படை.

ஆணவமலங்களி னீக்குதற்குச் சகசமலமென விசேடிக்கப்பட்டது: படவே, உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரணமுதலியவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற்களிம்புபோல வேறுகாரணமின்றி மூலமலந் தன்னோடு உடனாய்நிற்றலிற் றன்னியல்பானுணருமாறின்றிக் கருவிகளைக் கூடிநின்றுணர்வதாயிற்றெனவிடுத்தவாறாயிற்று. இதனானே மலத்துளதாமென மேற் பிரமாணத்தாற் பெறலிக்கப்பட்ட மூலமலத்திற்கு ஈண்டிலக்கணங் கூறினாரென்பதூஉம் பெறுதும். அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தினிகழுமியல்பே மலத்திற்குத் தன்னியல்பு, கருவிகளோடு

கூடி அவத்தைபுறவதாகிய விபரீதவுணர்வைச் செய்யுஞ் சகலத்தினிகழுமியல்பே பொதுவியல்பாகலான்; மலத்திற்கு இருவகையிலக்கணமும் ஈண்டே பெறப்பட்டன.

அது தான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். சகசமலத்தினல் உணர்வின்றி யொழியிற் பின் கருவிகளோடு கூடியவழி அறிவுண்டாமாறி யாங்ஙனமெனச் சற்காரியவாதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று. இ-ள். அச்சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதகமாய் அதனையில்லையென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலான், இனி இவ்வான்மாச் சகசமலத்தினல் உணர்வின்றென மேற்கொண்டது. எ-று.

மலத்தினதிலக்கணம் வடமொழிவழக்குப்பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமாயெனவும், அதனைத் தமிழ்மொழியான் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலானெனவுங் கூறினாராகலான், அது கூறியது கூறலன்மையுணர்க. திரோதகமென்னும் வடமொழி மறைத்தலைச்செய்வதென்னும் பொருட்டாய் வினைமுதன்மேனின்ற வினைப்பெயர்.

*மூலமலத்தினியல்பு சிறிது காட்டுதும். மூலமலமாவது பிராந்தி ஞானமே பிறிதில்லை யென்பரொருசாரார். ஒருசாரார் ஞானுபாவ மென்பர். ஒருசாரார் தமோகுண மென்பர். ஒருசாரார் மூலப்பகுதியிற் றேன்று மவிச்சையென்பர். ஒருசாரார் மாயை கன்மங்களென்பர். ஒருசாரார் சிவசத்தியென்ப. ஒருசாரார் ஆன்மாவின் குணமென்பர். மலமாவது இவையனைத்தினும் வேறாய் ஒன்றாய் நித்தமாய் வியாபகமாய் ஞானதிரோதகமாகிய திரவிய மென்பது தெரித்துக் காட்டுதும். மேற்கூறிய அளவைகளால் ஆன்மாத் தோற்றக்கேடின்றி நித்தமாய் வியாபகமாய் நிற்பதென்பது

* இதுமுதல் இக்குறிவரும் வரை பாஷ்யம்.

அணிபாம். இனி ஆன்மாவுக்குத் தோற்றக்கேடுக ளுளவா யின், செய்த வினை நசிப்பச் செய்யாதவினை யுண்டாமெனப் பட்டு வினை யிலக்கணத்தோடு முரணும். ஈன் றணிய குழவி தாய் முலைப்பால் பசிப்பிணி தீர்க்கு மருந்தென் றறிந்ததன்க ண் முயலுதல் காண்டும். அஃதும்மைப்பயிற்சி வயத்தா னு ளதாகிய வாசனை யில்வழிக் கூடாது. இனி நித்தப்பொரு ளை யவயவ முடைத்தெனப்பட் டழிவெய்துவதாகிய வேக தேச மென்றல் கூடாமையின், ஆன்மா வியாபியென்பதும் பெற்றும். பெறவே, அவ்வக் குணங்கள் அவ்வக் குணிக ளின் வேறன்மையின், ஆன்மாவின் குணமாகிய ஞானமும் அவ்வாறே நித்தவியாபகமாதல் பெறப்பட்டது. அறிவாவ து ஒன்றனை விடயித்தலே பிறிதன்றாகலின், அங்ஙனம் விட யிப்பதாகிய வறிவு ஒருகா னிகழ்தும் ஒருகா னிகழாதுங் காலத்தானும் இடத்தானும் ஏகதேசமாய் நிகழ்தலுங் காண் டும். அவ்வறிவு செயற்கையா னிங்ஙன நிகழ்தற்குக் கார ணமுண்டென்பது பெறப்படுதலின், அது பிராந்தி ஞான மு தலியவற்று ளொன்றென்றல் கூடாமையின், பாரிசேடிய வளவையான் அவற்றின் வேறாகிய சகசமலம் அத்தன்மைத் தா யுண்டென்பது பெற்றும்.

அற்றேல், காரணம் பிராந்தி ஞானமுதலியவற்றி னொ ன்றேயாக; அவற்றின் வேறுண்டென்பதற்குப் பிரமாண மென்னையெனின்? கூறுதும். கயிற்றை யரவெனக் காணு ம் பிராந்தி கண்ணின்கண் யாதானு மோர் குற்றமில்வழி நிக ழாமையின் அதுபோலத் தேகமே யான்மா வென்றறிதற் றொடக்கத்துப் பிராந்தி ஞானமும் ஆன்மா வின்க ணொரு குற்ற மில்வழி நிகழாமையின், அக்குற்றமாகிய சகசமலம் பிராந்தி ஞானத்தின் வேறு யுண்டென்பது பெறப்படும். இனி ஞானுபாவமே யது வெனின்? ஞானத்தின் என்றும பாவத்திற்கும் அழிவுபாட்டபாவத்திற்கும் ஒன்றினொன்ற பாவத்திற்கும் ஒருகாலு மழிவின்மையான் முத்தியென்ப

தோற்றமில்லையாய் முடியும். வீடுபேறுண்மை வேதாகமங்
களிற் பெறப்படுதலின், அதற்கேற்ப முரணுமைப் பொருட்
டு ஞானபாவமாவது ஞானத்தின் முன்னபாவமெனக் கோ
டல்வேண்டும் வேண்டவே, நித்தமாகிய ஞான முன்னில்லா
தொழிதற்கு வேறு காரண முண்டெனப் பெறப்படுதலின்,
அதுவே சகசமல மெனப்படு மென்க. இனித் தமோகுண
முதலிய வொன்றன் காரியமாய் இடையே தோன்றி யழிவ
னவாகலின், அவை யநாதியே ஞான திரோதகமாய் ஆன்மா
வைப் பந்திக்கமாட்டாமையின், சுத்தமாய் நின்ற வான்மா
வை இடையே பந்தித்து நின்றனவெனின், அவை யிடையே
பந்தித்தற்குக் காரணம் வேண்டும். காரணமின்றிப் பந்திக்
குமெனின், முத்திபெற்றவழியும் பந்திக்குமென்பது முடியு
மாகலின், அவற்றின் வேறாய் அநாதியே பந்திப்பதாகிய சக
சமல முண்டென்பது பெறப்படும். இனி மூலப்பகுதியிற்
றோன்று மவிச்சையே யதுவெனின்? மூலப்பகுதியிற் றோ
ன்றுமவிச்சை அநாதியி லான்ம ஞானத்தினைப் பந்தித்ததெ
ன்ற லெலாமையானும், அது மாயாகாரிய மாகலின், ஞான
வியஞ்சகமாவதல்லது ஞான திரோதகமாகாமையானும், அ
நாதியே ஆன்மஞானத்தினைத் தடைசெய்து நிற்குஞ் சகசம
லம் வேறுண்டென்பது பெறப்படும். இனி மாயை கன்ம
ங்கள் ஆன்மாவின் வேறுமாய்ச் சடமுமாய்ப் பந்தமுஞ் செ
ய்து நிற்றலின், அவையே யமையும்; வேறுமோர் சகசமல
முண்டெனக்கோடன் மிகையாமாலோவெனின்? அவை யஞ்
சனமாயினும், ஞானதிரோதக மல்ல வாகலான், ஞான திரோ
தகமாகிய மூலமலம் வேறுண்டென்க.

இனிச் சிவசத்தி ஞான திரோதகமாய் நிற்குமெனின்?
சித்தாகிய சிவனது சத்தியுஞ் சித்தாவதன்றிச் சடமாதலின்
மையாற் றனக்குப் பகையாகிய சடப்பொருள் சித்தைப் பந்
தமுறுத்துவதன்றிச் சித்துப்பொருள் சித்தைப் பந்தமுறுத்
துமாறின்மையானும், உறுத்துமெனின், முதல்வனது பெரு

ங்கருணைக்கிழுக்காகலானும், சடப்பொருளாய்ப் பந்தமுறு விக்குஞ் சகசமலம் வேறுண்டென்பது பெறப்படும். இனி மலஞ் சடமாய் நிற்றலின், ஆன்மாவின் குணமெனக்கோட லே பொருத்தமுடைத்தெனின்? அறியாது கூறினாய்; கு ணமாயினிடையே நீங்குதல் கூடாமையானும், ஆன்மா வறி தற்குணமுடைத்தாகலின், அறியாமையு மறிவுமாகிய விர ண்டு மறுதலைக்குண மொருபொருட்குக் கூடாமையானும் அஃதான்மாவின் வேறுபதோ ரகவிருளாகிய திரவிய மென் பது தெற்றென வுணர்ந்துகொள்க. சிவாதித்தமணிதீபிகை யுடையாரு முதலதிகரணத் திறுதியிற் பயன் கூறும்வழி, ஞானுபாவமே யஞ்ஞான மென்பாரைமறுத்து, மலந் திரவிய மென்றும், அநாதிப்பொருளென்றும், மலசத்திகள் பலவெ ன்றும், முத்தியின் மலசத்திக்குக் கேடன்றி மலத்துக்குக் கேடின்மையின் அநாதிப்பொருளாதற் கிழுக்கில்லை யென்று ம், கடா விடைகளான் விரித்துக் கூறியவாறுண்டுக் காண்க.

அஞ்ஞானமென்னு மகவிருள் ஞானுபாவ மாகாதெ ன்று இவ்வாறு மறுக்கப்படவே, அந்தகாரமென்னும் புறவி ருள் ஆலோகத்தின் அபாவமென்பதூஉ மறுக்கப்பட்ட வா றாயிற்று. அதுவுஞ் சிறிது காட்டுதும். ஆலோகத்தினபா வமே யந்தகாரமென்பார்க்கு, அம்முறை பற்றிச் சுகத்தி ன பாவமே துக்கம்; தன்மத்தின் அபாவமே அதன்மம்; சை யோகத்தி னபாவமே விபாகமென் றிவ்வாறு கோடல் வே ண்டும். அங்ஙனங் கொள்ளாமையால் அவர்க்கு மது கருத் தன்று போலுமென மறுக்க. அன்றியும், ஆண்டொளியில் லை, இருளுள்ளதென, ஒளியின்மையின் வேறு யிருளென்னு முணர்வு நிகழ்தலானும், யாட்டின் கழுத்திற் றூங்கு முலை யோ டொக்கும் அபாவத்தாற் செய்யக்கடவதொன்று யா ண்டு மின்மையானும், கண்ணொளியைத் தடைசெய்து நிற்ப தாகிய விருளை அபாவமென்றல் கூடாமை யறிக. இவ்விரு ளின துண்மை வெள்ளிடையினலரவிழித்து நோக்கியவழியு

மறைத்தற்றொழி னிகழ்தல்பற்றிப் பாரிசேடிய வளவையா
னறியப்படும், அற்றேல், நீலவடிவிற்றாய்த் தோன்றுதலின்
இருள் காட்சிப்பொருளென்றாற் படுமிழுக்கென்னை யெனி
ன்? அற்றன்று; துன்னிய விருளின்கண் விழித்துழிப்போ
லக் கண்ணிமைத்தவழியு மொருதன்மைத்தாய்த்
தோன்றுதலின், வேற்றுமை யின்மையான், அது மயக்கவு
ணர்வேயாமென்பது போதருதலின், விழித்துழி யவ்வாறு
தோன்றுவது மதுபோல மயக்கவுணர்வாவதன்றி, இருளின்
தோற்றமன்றென்பது அனுபவத்தாற் கண்டு கொள்க.

உலகாயதர் செவி முதலிய விடங்களே யிந்திரிய மெ
ன்பராகலின், கண்ணென்னு மிடத்தின் வேறாக ஒளிப்பொ
ருளாகு மிந்திரியம் உண்டென்பதற்குப் பிரமாண மென்னை
யெனின்? செவிடனுக்குச் செவியுளதாகவு மோசை கேளா
மையின், அது கேளாமைக்குக் காரணஞ் செவியென்னு மு
றுப்பின் வேறு யதனை அதிட்டித்து நிற்கு மிந்திரிய மில்லா
மையே யன்றிப் பிறிதின்மையாற் செவியென்னு முறுப்பு
இந்திரியமாகாமை எல்லார்க்கும் விளங்கக் கிடந்தது. இது
பற்றி யேனை யிந்திரியங்களும் அவ்வ விடங்களின் வேறாதல்
கண்டுகொள்க. ஞானேந்திரியங்களைந்தும் அறிதற் கருவிக
ளாகலின், சாத்துவிகாகங்காரத்திற் றோன்றியனவாம். கண்
ணிந்திரியம் ஒளிக்கருவியாகலின், உருவத்தை யறிவதாம்.
இது ஆன்மாவின் ஞானசத்தியா லதிட்டிக்கப்பட்டுப் பொரு
ள்களை விசேடண விசேடிய வியல்புபற்றி அறியுமா றின்றி
நிருவிகற்பமாயறியுங் கருவியென் றுணர்க. இது ஏனை ஞா
னேந்திரியங்களுக்கு மொக்கும். காட்டு மொளியின் வேறா
ய்க் கண்ணுக் கொளிக்குண முண்டென்றற் கேது வென்னை?
கண்ணுக் கொளிக்குண முண்டெனின்? மின்மினிக் குணை
யாயினுந் தானே விளங்குதல் வேண்டுமாலெனின்? ஆகாயத்
தின் கண்ணதாகிய சத்தகுண முரசு குணில் சையோக முத

லிய வியஞ்சகங்களான் விளக்கப்பட்டுழி விளங்கி அல்லுழி விளங்காதொழிதலே யன்றித் தினைத்துணையாயினுந் தானென விளங்குமா றின்றென்பது பற்றி வியஞ்சகத்தி னெதிரொலி வடிவாற் றோன்று மவ்வோசையை ஆகாயத்தின் குணமன் றென்பார் யாருமில்லை. அதுபோலக் கண்ணின் கண்ணதாகிய வொளியும் வியஞ்சகமாகு ஞாயிற்றி னொளிமுதலியவுள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்திரையே பிறிதில்லையாகலான், அதனைக் கண்ணின் குண மன்றென்றல் அறிவில்லார் கூற்றேயா மெனவும், அக்கண்ணொளி தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின் ஏகதேசத்து விளங்கியும் வியாபகப்பொருளாயின் வியாபகமாய் விளங்கியு நிற்கு மியல்பிற்றெனவு முணர்க. இனிக் கண்ணுக் கொளியில்லை, ஞாயிற்றினொளி முதலியனவே கண்ணின்கணின்று காண்டல் வியாபார நிகழ்த்துமெனின்? அங்ஙனமாயின், ஞாயிற்றி னொளி முதலியன கண்ணின்கணின்றே காண்டல் வியாபார நிகழ்த்துமென்னு நியமம் வேண்டா; உடம்பினுள் யாண்டாயினு மோரிடத்தைப்பற்றி நின்றுங் காண்டல் வியாபார நிகழ்த்துமென் றொழிக. அற்றேல், அவ்வாறு ஒளியுடைத்தாகிய கண்ணிந்திரியந் தன் றொழிற்பாடு நிகழ்தற்குப் பிறிதோ ரொளியி னுபகாரத்தை யின்றி யமையாதவா றென்னையெனின்? அங்ஙன மாயினுங் கண்ணிந்திரியந் தூலவொளியாகலின், தமோகுணசாரமான இருளென்னும் பகைப்பொருளின் சத்தியான் மடங்கிக், காண்டல் வியாபார நிகழ்த்துதற்கு அங்கியென்னும் பூதத்தின் கூறான ஞாயிற்றி னொளி விளக்கொளி முதலிய சூக்குமவொளி யுபகாரத்தை வேண்டற்பால தாகின்றதென் றுணர்க.*

இதனானே ஞானாபாவமே அஞ்ஞானமென்பார் பக்ஷமும் மறுக்கப்பட்டது; அபாவம் ஒருகாரியத்தைச் செய்ய மாட்டாமையின்.

மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணாதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தோன்றுங் காட்டம்
றன்னைமல மன்றணைத ரன். [போற்

எ-து. உ-ம். எ-னின். ஆகந்துகமலமே ஞானதிரோதகமாதலமையும் வேறுமோர் மலமுண்டென்றல் மிகைபோலுமென ஐக்கவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து ஆகந்துகமலத்தானுஞ் சகசமலத்தானுஞ் செயப்படுங் காரியங்கட்குத்தம்முள் வேற்றுமை பெரிதாமாறுணர்த்துமுகத்தான் வருவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். உள்ளம் மாயா தனு விளக்கு ஆக் காணாதேல் ஒன்றை ஆயாது-ஆம்- எ-று. உயிர் ஆகந்துகமலமெனப்படும் மாயாகாரியமாகிய உடம்பு தனக்குக் காட்டாகக்கொண்டு காணாதாயின் ஒருவிடயத்தையுமறிவதில்லையாம். மலம் தன்னை அன்று அணைதல் தான்-எ-து. சகசமலம் உயிரை அநாதியேபற்றிநிற்றல். அது அது ஆய் வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்று ஆம் காட்டம் போல்-எ-று காட்டமுதலியவற்றுள் அதுவதுவேயாய் நின்றுந் தனக்குக் கேடில்லாத வன்னியைத் தனக்குண்மறைத்துவைத்து ஒன்றேயாய் நிற்குங் காட்டம்போலும். எ-று.

எனவே, காட்டாய் நின்று விடயங்களையறியும் வண்ணம் உயிர்க்கறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடை செய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி; இவ்விரண்டும் இங்ஙனம் ஒளியுமிருளும்போல் இகலி நிற்பனவாகலான் அத்தன்மைத்தாய மாயை இத்தன்மைத்தாய மலமாதல் யாண்டையதென மறுத்தவாறாயிற்று.

மற்றென்பது மலமன்றணைத லென்பதனுடையைந்து வினைமாற்றின்கண் வந்தது.

முற்றும்மை சிறப்பும்மைகள் தொக்கன.

ஆழுந் தானுங் கட்டுரைக்கண் வந்த அசை.

வன்னி அது அதுவாதல் காட்டத்துண் மறைந்துழிக் காட்டமேயாயுஞ் சூரியகாந்தத்துண்மறைந்துழி அதுவேயாயும் இவ்வாறே அவ்வவற்றின் மறைந்துழித் தானெனன்பதொன்றில்லையென்னும்படி நிற்றல். அங்ஙனமாகியும் வியாமை, கடைதல் முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவழித் தோன்றுதலாற் பெற்றும். தன்னுண் மறைத்தல் வன்னியென்பதொன்றில்லையென்னும்படி பொதிந்துகொண்டு தானேயாதல். ஒன்றுங்காட்டம் ஒன்றேபோல் அத்துவிதமாங் காட்டமென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய அடையுந்தொழிலும் இயைபும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க.

மாயை கன்மங்கள்போல ஆதியன்றெனக் காலந்தானும் வேற்றுமை கூறுவார் அன்றணதலென்றார்.

இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது ஞானபாவமென்பாரும், பிராந்திஞானமென்பாரும், தமோகுணமென்பாரும், பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சையென்பாரும், மாயை கன்மங்களென்பாரும், சிவசத்தியென்பாரும், உயிர்க்குணமென்பாருமாய், அவ்வச்சமயநூல்பற்றி மயங்குவாருமுளர். அம்மலத்திற்குப் பற்றுக்கோடாகிய சூனியமுதலியவற்றின் வேறெனப்பட்ட ஆன்மாவும் இயற்கையாற் சடமென்பாரும், அறிவுமாத்திரையேயெனக் குணிப்பொருளன்றென்பாரும், சுதந்திரவறிவுடைத்தென்பாரும், அவ்வுடம்பளவிற்றென்பாரும், அணுவளவிற்றென்பாரும், உருவென்பாரும், அருவென்பாரும், உருவருவென்பாருமாய், இன்னும் பலதிறப்படக்கூறி மயங்குவாருமுளர். அவையெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

## மூன்ருமதிகரணம்.

—:o.—

இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதிதமாயுள்ள பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது.

எ-து. மே-ள். எ-னின். இருளகப்பட்ட கண் விளக்கோடு கூடியவழி விடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறவத்தைப்படுமாறில்லை அதுபோல மலத்தகப்பட்ட உயிர் கருவிகளோடு சந்தித்தவழி ஒருதன்மைத்தாயறிதலே அமைவுடைத்து அவ்வாறன்றி மேலைச்சூத்திரத்தோதிய முறையான் ஐம்புலனறிந்தும் ஒடுக்கமறிந்தும் உண்டி வினையின்றிக் கிடந்தும் உணர்ந்தவுணர்ந்தும் இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுமாறியாங்ஙனமென அவர்கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-டை.

அவத்தையெனப்படுவன பலவுளவாகலின் அவற்றுள் ஈண்டு ஐந்தவத்தையெனப்பட்டவை யாவையென்னும் ஐயநீக்குதற்குக் கிளந்தெடுத்துரைத்தார்.

அவந்திதன் என்னும் வடமொழி ஆடுஉவறிசொல்லாற் கூறியது அம்மதம்பற்றி.

அமைச்சுச்செய்ப்ப நிற்றலானென்பதூஉம் ஈண்டு வருவித்துரைத்துக்கொள்க. கொள்ளவே, *"படைகொடு பவனிபோதும்" வேந்தன் "கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டு" அந்தப்புரத்திற் செல்லுமாறுபோல ஆன்மா அங்ஙனம் அஞ்சவத்தைப்படுதல் அமைவுடைத்தென விடுத்தவாருயிற்று

அதுதான் மலசொருபத்தின் மறைந்து அருப சொருபியாய் நிற்றலான்.

---

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩௨.

எ-து. எது. எ-னின். அரசன்போல் உயிர் அங்ஙனம் ஐஞ்சவத்தைப்படுமாயின் வியாபகத்திற்கிழுக்காய் முடியும் போலுமென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தலுதலிற்று. இ-ள். அவ்வுயிர்தான் மலவடிவின் மறைப்புண்டவழி அருவுடம்பாகிய தத்துவசொரூபியாய்நிற்றலான் அத்தத்துவங்கள் தொழிற்படுமவத்தை வேறுபாடுபற்றி இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென மேற்கொண்டது. எ-று.

“சீவனே வியாபி யவத்தையி லிழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி சேருதல் பிரிதலில்லையா முறையிற்செயப் படுங் கருவியே தெரியுந், தாவிலாவறிவு தங்கினவிடமே தனதுயிர்க் கிருப்பிடம்” என்றதூஉம் இப்பொருள்பற்றி யென்க.

தத்துவவன்னரூபனாதல் வீடுபெற்றுழியும் உண்டுபோலுமென்று ஆசங்கை நிகழாமைப்பொருட்டு, மலசொரூபத்தின் மறைப்புண்டென மேற்கூறிப்போந்ததனை வழிமொழிந்து கொண்டு அரூபசொரூபியாய் நிற்றலானென்று ஏதுக்கூறினார்.

மறைந்தவழியென்றது மறைப்புண்டெனத்திரிந்து நின்றது.

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்
சென்றணையுஞ் சித்த மிதயத்து—மன்றவே
ஐயைந்தா நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

எ-து. உ-ம். எ-னின். தத்துவங்கள் தொழிற்படுதற் கண் நிகழும் அவத்தை வேறுபாடு தெரித்துணர்த்தி அவ்வவற்றுக் கிடமாகிய வரிசைப்படுத்தலுதலிற்று. நன் னுதலின் வாக்காதி மெய்யாதி மன்ற வப் ஐயைந்தாம் கண்டத்தின் வாக்காதி மெய்யாதி விட்டு அகன்று வேறு ஐயைந்தாம் இதயத்தில்

சித்தஞ்சென்றணையும் நாபியினில் உயிர் அணையும் அணையர் மூலத்து ஒன்று என வியையும்.

இ-ள். சாக்கிரத்தானமெனப்படும் இலாடத்திற் புறவிந்திரியம் பத்தினையுந் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; சொப்பனத்தானமெனப்படுங் கண்டத்தின் அப்பத்தினையும் விட்டு நீங்கி வேறாய இருபத்தைந்து கருவி தொழிற்படும்: சுழுத்தித்தானமெனப்படும் இதயத்தின் அவற்றுள் இருபத்திரண்டு கருவிகளை விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் இரண்டு கருவிகளோடு கூடிய சித்தந் தொழிற்படும்; துரியத்தானமெனப்படும் உந்தியிற் சித்தத்தையும் விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் புருடதத்துவத்தோடு பிராணவாயுக் கூடித் தொழிற்படும்; இக்கருவிகளொன்றும் அணையாத அதீதத்தானமெனப்படும் மூலாதாரத்திற் புருடனொன்றே நிலைபெறும். எ-று.

எனவே, இலாடத்தானமுதலிய ஐந்தினுநிற்குங்கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றுமென்பது போந்தவாறுணர்க.

மன்றவென்பது தேற்றப்பொருட்டாகிய இடைச்சொல்.

எய்தல் பொருந்துதல்; வினைத்தொகை.

வாக்காதி மெய்யாதியையென இரண்டாவது விரித்துரைக்க. அஃதீரிடத்துஞ் சென்றியையும்.

வருகின்ற சூத்திரத்தின் மெய் வாய் கண் மூக்கு எனச் செய்யுட்கேற்ப மெய்யை முற்கூறுதலின் அம்முறைபற்றி ஈண்டுச் செவியாதியென்னாது மெய்யாதியென்றார். அவற்றொடுகூடிய இருபத்தைந்தாவன அவ்விந்திரியம் பத்துக்கும் விடயமாகிய வசனாதி சத்தாதி பத்தும் அவற்றினுக்கு உட்கருவியாகிய அந்தக்கரணங்களைந்தும் அவற்றொடு கூடி-

அவத்தையுறுவதாகிய புருடனென்றும், அஃதவத்தையுறு தற்குரிய மதுகைக்கேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப் படும் பிராணாதி வாயுக்கள் பத்துமென இவை. ஈண்டுச் சத் தாதியென்றது வசனாதிபோலும் விடயங்களையெனக்கொ ள்க. எனவே, பூதங்களின் கூறாய் அவற்றுடனின்று தே ராழிக்குத் தேருறுப்புப்போல இந்திரியங்களின் றொழிற்பா ட்டுக்கு மதுகையை விளைத்து நிற்பனவாய புறக்கருவி யறு பதில் ஈண்டுக் கூறிப்போந்த விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும் ஒழித்தொழிந்த புறக்கருவிகள் நாற்பதும் அவற்றை யுடைய பூதங்களைந்தும் அவற்றிற்கு வழியாயுடனிற்பன வாய சூக்குமபூதமெனப்படுந் தன்மாத்திரைக ளைந்துமென்ப னும் ஐம்பது கருவிகளுங் கீழ்நோக்கிய சாக்கிரத்தானத்தில் தமது சத்திமடங்கி வினைக்கீடாகத் தொழிற்படாதொழியு மெனவும், அவை யொழிந்தவழி அவத்தைக்கேதுவாய்நின்ற ஏனைப் பொறி முதலிய முப்பத்துநான்கும் அவற்றோடு கூடி ய புருடதத்துவமும் இருவகைப் பூதங்களானும் புறக்கருவி களானுந் தரப்படும் மதுகையின்மையின் ஆண்டுப் பொறிக ளின் றொழிற்பாடு மெத்தென நிகழுமெனவுங் கொள்க கலாதிகளுஞ் சுத்ததத்துவமும் அவத்தைக் கேதுவாகாமை யான் உடனெண்ணாராயினர். ஏனையவும் விரிந்தநூல்களுட் கூறியவாறுபற்றி உணர்ந்து கொள்க.

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
யவ்வவற்றி னீங்கலது வாங்கு.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனம் அதீதத்தையெய்திய புருடன் மீளப் பிரேரக வவத்தையாகிய உணர்த்துமுறை மைச் சாக்கிரத்தைத் தலைப்படுமாறு அநுவாத முகத்தான் விளக்கி அவ்விடத்தினும் முறைமையிற் செலுத்தும் பிரேர

கக் கருவிகளோக்கின் ஹெழிற்பாடுபற்றி ஐந்தவத்தை நிகழு மென்பதூஉம் அவை இவையென்பதூஉஞ் சுத்தாவத்தையும் இவைபோலுண்டென்பதூஉங் கூறி அதனை வலியுறுத்துக ஹுதலிற்று.

இ-ள். இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்- எ-து. இலாடத்தானத்தினீங்கி ஆண்டாண்டவத்தைப்பட் டுக் கீழ்ப்போந்து மூலாதாரத்தி னெய்தியபின் மறித்தும் அவ்வாறே ஆண்டாண்டவத்தைப்பட்டு மேற்சென்று இலா டத்தானத்தின் உணர்த்துமுறைமைச் சாக்கிரத்தைத் தலைப் பட்ட புருடன், இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும்- எ-து. ஆண்டுஞ் சாக்கிரச்சாக்கிர முதலிய ஐந்தவத்தையு றும்:—இலாடத்தே அவ்வவ்விந்திரியத்து அத்துறைகள்கண் டு-எ-து. அவையாவன அவ்விலாடத்தானத்தின்கண்ணே அ வ்வப்பொறிகளான் அவ்வவ்விடயங்களையுணர்ந்து, அதுவே- எ-து. அப்போதப்போதே, அவ்வவற்றின் நீங்கல்-எ-து. அவ்வவ்விடயங்களினீங்குதலாம். அது ஆங்கு-எ-து. இனி முன்னர்க் கூறப்படும் சுத்தாவத்தையும் இவைபோல ஐவ கைப்படும். எ-று.

மேற்செல்வுழி ஆண்டாண்டுப்படு மவத்தைகளுங் கீழ்ச் செல்வுழிப் போலன்றி விசேடமின்மையின் வகுத்தோதாது இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளமென அநுவாத முகத்தாற் கூறியொழிந்தார்.

இழியுங்காலும் ஏறுங்காலுங் கண்டத்தானத்திற் கனு க்காண்டலுண்டென்பது முறையே ஞானமிர்தத்தினும்போ ற்றிப் பஃறொடையினுங் காண்க.

அவ்வவ்விந்திரியம் ஆண்டாணடு விடயித்தற்குரிய இந்திரியம்.

அவ்வவ்விடயம் ஆண்டாண்டுப் புலனுதற்குரிய விடயம்.

கண்டு நீங்கலில்லன வினையும்.

அநா அவ்வக்காலம். ஈண்டும் அடுக்கிக் கூறிக்கொள்க.

கண்ணுருபு தொகுத்து ஏகாரம் விரித்தார்.

கண்டதென் ஒருமொழியாகவைத் துரைப்பாருமுளர். குற்றியலுகரத்தின்முன் உடம்படுமெய் பெறுதற்கு ஓத்தின்மையானும் பொருட்சிறப்பின்மையானும் அஃதுரையன்மையறிக.

அப்போதைப்போதே நீங்கலாவது விடயங்களைக்கண்ட கண்டபொழுதே அவற்றை அயர்த்துவிடுதல். * "ஒன்றன்பாலும் வரும்பயன் மாறி மாறி வந்திடும்" என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கியென்க. † "கரணந்தன்னிற் செயறெறுங் கண்டுகொண்ணி" ‡ "உய்ந்திடுங் கரணந் தன்னிற் செயறெறு முணர்ந்து கொள்ளே" என்பனவுமது. இந்நுட்பமுணர்ந்து கோடற்குத் தூலாருந்ததிநியாயம் பற்றிக்கைப்பொருளை வீழ்த்தித் தெளிதன் முதலிய தூலத்துள் வைத்துக்காட்டுப.

இனி அருபசொருபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையினியல்பு கூறுதற்கெடுத்துக்கொண்ட இவ்வதிகரணத்தின் அதனோடியைபில்லாத சத்தத்தின்கட்படும் ஐந்தவத்தைகூறுதற்கு ஓரியைபில்லையாயினும் அவத்தையெனப்படுவன ஈண்டோதிய மாத்திரையே போலுமென மயங்காமைப் பொருட்டு வேறுமைந்தவத்தைகளுள அவை முன்னர்க் கூறப்படுமென்னுங் குறிப்பே கூறுவார் அதுவாங்கு என்றொழித்தார். இக்கருத்தேபற்றி *"பிறிவிலா ஞானத்தோரும் பிறப்

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம் ௮௪. ஒருபுலனுகரு.

† நான்காஞ்சூத்திரம். ௩௫. அறிதருமுதல்வ. ௪.

‡ ௩௬. உந்திடுங்கரணந்.

* சிவஞானசித்தி. நான்காஞ்சூத்திரம். ௨௫. அறிதருமுதல்வ

பற வருளாலாங்கே, குறியொடு மைந்தவத்தை கூடுவர் வீடு கூட" என்றெழுந்தார் வழிநூலாசிரியரும்.

இவ்விரண்டு வெண்பாக்களானுங் கூறிப்போந்த முந்திறத்தைந்தவத்தைகட்கு முறையே மூலமாய கேவலஞ் சகலஞ் சுத்தமென்ற மூன்றனுள் வைத்துத் தன்னுண்மையெனப்படுங் கேவலத்தினியல்பு சகசமலத்துணராதென்பதனானே பெற்றும். ஏனைச் சகலத்தினியல்பு வருகின்ற சூத்திரத்தினுஞ் சுத்தத்தினியல்பு அப்பாலைச் சூத்திரத்தினும் பெறுதும்;

மூன்றுமதிகரண முடிந்தது.

---

நான்காஞ்சூத்திர முடிந்தது.

---

# ஐந்தாஞ் சூத்திரம்.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

எ-து. சூ-ம். எ-னின். இவ்வான்மாக்களிடத்தும் தமது முதலுபகார முணர்த்துதனுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துதனுதலிற்று.

இ-ள். ஐந்தவத்தைப்படும் வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசுமேய்ப்ப நிற்பின் அவையே யமையுமாகலான் முதல்வனுல் ஆண்டைக் காகற்பாலதொரு பயனில்லை

போதுமென்னுங் கடாவை யாசங்கித்து ஆண்டும் இன்றிய மையாது வேண்டப்படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்கு முகத்தானே இரண்டாஞ் சூத்திரத்திணோதிய நிமித்தகாரண முதற்காரணங்களதிலக்கண முணர்த்துதல் இவ்வைந்தாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுளடங்குதலிற் றமது முதலுபகாரமெனப்படுந் திரோதான சத்தியதிலக்கணங் கூறவே அவற்றதிலக்கணமுங் கூறியவாறாதலறிக.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. மேலைச்சூத்திரங்களின் அங்ஙனங் கூறிப்போந்த உயிரானே மெய் வாய் கண் மூக்குச் செவியென்பன தத்தம் விடயங்களை இஃதின்னதென்று அளவிட்டறிந்தும் அங்ஙனமறியுந் தம்மையுந் தம்மையதிட்டித்து நின்று செலுத்தும் அவ்வுயிரையும் அறியமாட்டா: அவ்விந்திரியங்கள்போல் உயிர்களுந் தமதறிவிற்கு வியஞ்சகமாகிய முதல்வனது சிற்சத்தியான் மேற்கூறிப் போந்த இருவகையஞ்சவத்தையினின்று வினைப்பயன்களையறிந்து அநுபவிக்குந் தம்மையுந் தம்மைச் செலுத்துந் திருவருளையும் அறியமாட்டா; உயிர்கள் அவ்வாறுணர்தல் காந்தத்தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளப்படுமாறுபோலக் கரணத்தானன்றிச்சங்கற்பத்தான் அதிட்டிக்கு முதல்வன் சந்நிதிமாத்திரையினும் ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்று. எ-று.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்றென்பது குறிப்பெச்சம்.

செவி யென்பது சொல்லெச்சம்.

ஐம்பொறிகளைக் கூறியது உபலக்கணமாகலின் ஏனைக் கருவிகளும் அவ்வாறுதல் கொள்ளப்படும். அற்றுகலினன்றே * "பொறிபுலன் கரணமெல்லாம் புருடனு லறிந்து" என்றார் வழிநூலாலாசிரியரும்.

விடயங்களை யறிவுழி முதல்வன் உடனின்று செலுத்துவனுயின் அவ்விடயங்களோடொப்ப முதல்வனையும் அறிதல் வேண்டுமென்பாரை நோக்கி, அளந்தறிந்தென்றொழியாது அறியாவென்றார்.

ஆங்கவை ஒருசொன்னீர்மைத்து. தம்முணர்வின்றமியென்றது தமது முதலென்னும் பொருள்பட வந்த ஆரும் வேற்றுமைத்தொகை.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலால் திரோதான சத்தியின்மேனின்றது. அருளாலென விரித்து அளந்தறிந்தறியாவென உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டியுரைக்க.

இதனுள் விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக்களந்தறிந்தறியாவென்றது ஓரதிகரணம்; ஆங்கவைபோலத் தாந்தமுணர்வின் றமியருள் காந்தங்கண்ட பசாசத்தவையே யென்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

—:o:—

ஈண்டு ஐம்புணர்வுகள் ஆன்மாவாலுணருமென்றது.

எ-து. மே-ள். எ-னின். தாமரையிலைபி னீர்போற் புருடன் பற்றற்று நிற்பப் புருடன் சந்நிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறி வழியான் விடயங்களையும் அறியுமெனவமை

* சிவஞானசித்தி. ஐந்தாஞ்சூத்திரம். க.

யும் அவ்வாறன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவற்றைப்படுமென மேற்கூறிய தனையுமாறென்னையெனச் சாங்கிய நூலார் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-டை.

உணர்விற்கேதுவாகிய பொறிகளை உணர்வென்றுபசரித்தார்.

அவற்றினுன் ஆன்மா வொற்றித்துக் காணினல்லது அவையொன்றையும் விடயியாவாகலான்.

எ-து. எது. எ-னின். அதற்குப் பிரமாணமென்னையென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று. இ-ள். அவ்வைம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்றறிந்தாலன்றி அவை ஒருவிடயத்தையும் விடயிக்கமாட்டாவாகலான் ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணருமென மேற்கொண்டது. எ-று.

ஆன் உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது.

உம்மை இழிவுசிறப்பு; முற்றுமாம்.

எதிர்மறைமுகத்தாற் கூறினர், இன்றியமையாமை விளக்குதற்கு.

ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப
வைம்பெறிக ளுள்ள மறியாவா—லைம்பொறியிற்
காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்
காணுகண் கேளா செவி.

எ-து. உ-ம். எ-னின். உயிர் அங்ஙனமொற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலும் அவை உயிரையின்றியமையாமையும் எற்றாற்பெறுதுமென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அரசு ஆய்-எ-து. அரசன் அத்தானிமண்டபத்தின்வைகித் தன்கீழ்க் கருமஞ்செய்வாரை அவரவர்க்குரிய காரியங்களிற் செலுத்தி ஆளுமாறுபோல, உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப-எ-து. உயிர் ஐம்பொறிகளை அவ்வவற்றிற்குரிய விடங்களிற்செலுத்தி யாண்டு இலாடத்தானத்தி னிற்றலான், ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்-எ-து. அரசனாலேவப்பட்டோர் ஏவிய கருமமாத்திரை யினன்றி அதிகத்திற் செல்லமாட்டாமைபோல அவ்வைம்பொறிகள் உயிரையறியமாட்டாவாயின. அற்றேல், ஐம்பொறிகள் உயிரானன்றியறிதல் அமையாதாயினும் உயிர் ஐம்பொறிகளானன்றியும் அறிதலமையும்போலுமெனின்? ஐம்பொறியில் காணுதேல் காணுது உளம் காணுதேல் காணு கண் கேளா செவி-எ-து. ஒருகருமஞ் செய்தற்கண் அரசரும் அமைச்சர்முதலாயினருந் தம்முள் இன்றியமையாதவாறுபோல ஒன்றனை விடயித்தற்கண் உயிரும் ஐம்பொறிகளுந் தம்முள் இன்றியமையா. எ-று.

அன்னவாதல் உயிர் ஐம்பொறியினீங்கிச் சொப்பனத்தானத்தினெய்தியவழிக் கண்டுகொள்க.

நிற்பவென்னுஞ் செயவெனெச்சம் மழைபெய்யக் குளநிறைந்தது என்புழிப்போல நிற்றலாலெனக் காரணப்பொருட்டாய் நின்றது,இவ்வாறுரையாக்கால் இஃதேதுவின் பொருள் வலியுறுப்பதாய உதாரணமாதற்கேலாமை யறிக.

முதலதிகரண முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

—:o:—

இனி இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

எ-து. மே-ள். எ-னின். கருவி சடமாகலிற் சித்தாகிய உயிரானன்றி அமையாவாயினுஞ் சித்தாகிய உயிர் முதல்வனது உபகாரத்தையவாய் நிற்பதன்றி அவாவுமாயின் முதல்வனும் அவ்வாறே பிறிதொன்றனுபகாரத்தை அவாவுமெனப்பட்டு மேலும் வரம்பின்றியோடும் என ஈசுரவவிகாரவாதி முதலியோர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-டை.

தமது முதலென்பது யானெம்மூர் புகுவன் நீ நும்மூர்ப்புகுவை யென்புழிப்போல வேறுமுடிபு கோடலிற் பால்வழுவன்மையுணர்க.

உம்மை இறந்தது தழீஇயவெச்சம்.

இம்முறைமை தமக்கொருமுதலுடையவாற்றிற்கேயன்றி வினைப்பொருட்கின்மையின் வரம்பின்றியோடுமாறில்லென்பார், தமது முதலென்று உடம்பொடு புணர்த்தோதினர். தம்முணர்வின்றமியென்றது மது.

தத்துவங்களுமுயிருந் தமக்கொருமுதலுடையனவாதலும் முதல்வனுக்கு அஃதின்மையும் மேற்கூறிப்போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டனவென்பது கருத்து.

இவ்வான்மாத் தன்னிலே யுணருமிந்திரியங்களைப்போலத் தானுந் தன்னையுணராது நிற்றலான்.

எ-து. எ-து. எ-னின். உயிர் ஐம்பொறியிற் சடமன்மையான் அவற்றைப் பிரித்துக் காட்டி மேற்கோடல் கவ்

டைக்கமையாதென்பாரை நோக்கி அதனைச் சாதித்தனுதலிற்று. இ-ள். வெ-டை.

சடமுஞ் சேதனமுமாய வேறுபாடுபற்றித் தம்முள் ஒவ்வாவாயினுந் தம்மையுந் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் உயிருந் தம்முள் ஒக்குமாகலின், அதுபற்றி அங்ஙனமேற்கோட லமையுமென்பது கருத்து.

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணா வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணான் சிவனசத்தை யின்று.

எ-து. உ-ம். எ-னின். தன்னாலுணரும் இந்திரியங்களை ஈண்டைக்கு உவமை கூறின் அவ்விந்திரியங்கட்கு வரும்பயன் அவற்றினாலொற்றித்துக்காணும் உயிர்க்காயவாறுபோல உயிர்க்குவரும் இன்பத்துன்பப்பயனும் உயிரானொற்றித்துக்காணும் முதல்வனுக்காதல்வேண்டுமென்பாரை நோக்கி அங்ஙனமாகாமை கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். மன்னு சிவன் சந்நிதியின் மற்று உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய்-எ-து. ஈண்டுக் கூறிய கருதலளவையேயன்றி நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரவஞ்சஞ் செயப்படுகின்றதென்றோதும் வேதப்பொருளையும் அறியாது பிணங்குகின்ற பேதாய்-உளம் சொன்ன சிவன் கண்ணா வினையால் கண்டு அறிந்து நிற்கும் காண்-எ-து. உயிராவது தமக்கெனவோர் காரணமின்றித் தன்பொருட்டே அறிவனவாய அவ்விந்திரியங்கள்போலன்றி அவ்வேதத்துள் எடுத்தோதப்படும் முதல்வன் தனக்குக் காட்டாகிநிற்பத்தான் செய்த வினைக்கீடாக ஒன்றனையறிந்து நிற்கும்; அவ்வேறுபாடு அறிவாயாக. இன்று, (ஆகலாற்) சிவன் அசத்தை எண்ணான்-எ-து. அங்ஙனங் காட்டாகி நிற்பினுந் தனது சந்நிதியின் அசத்தெல்லாஞ் சூனியமாகலான்

மங்கலவடிவினனாய முதல்வன் அவ்வுயிர்போல் அவற்றை அநுபவியான். எ-று.

இதனுட் சிவனென்றது மன்னுசிவனென்புழிப் பேரின்பத்துக்குக் காரணமென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணர நின்றது; சொன்னசிவனென்புழி முற்றுணர்வினனென்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபுணரநின்றது; என்னுன் சிவனென்புழித் தூயதன்மையனென்னும்பொருட்டாய் அசத்தையெண்ணுமைக்குரிய இயைபுணர நின்றது. ஆகலாற் கூறியது கூறலன்மையுணர்க. அஃது அம்முப்பொருளுடைத்தென்பது சோமசம்புபத்ததி வியாக்கியான முதலியவற்றுட் காண்க. சிவதத்துவவிவேகத்துள் மூவகைப்படக்கோதிய பொருளும் இவையேயாமாறு கண்டுகொள்க.

ஈண்டு உலகமென்றது உயிர்களை.

மறையினியலும் பொருளை மறையினியலென்று உபசரித்தார்.

இறந்ததுதழீஇயவெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

மறந்தா யென்பது விளியுருபேற்ற பெயர்.

ஈண்டுச் சந்நிதியென்றது அதிகாரவாதிகள் கூறும் அபிமுகமாத்திரையன்றென்பார் சொன்னசிவன் கண்ணென்றார். சிவசத்தி அவ்வக்காரியங்களின் உன்முகமாதலாகிய *சங்கற்பமே ஈண்டுச் சந்நிதியெனப்படுமென்பதாம்.

நோக்கங்கண்ட பாசத்தவையேயென்றது ஒருபுடையுவமையாதல்பற்றியே பிறிதன்றென்பது கருத்து.

வினையிலென்றது ஐம்பொறிபோலன்றி உணர்த்தப் பயன் உயிர்க்கேயாதற்கேதுக் காட்டியவாறு.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

---

* சங்கற்பமென்றது வியாபகச்சிற்சத்தி சந்நிதிப்பிரகாசத்தினை,

எண்ணல் ஈண்டநுபவித்தன்மேற்று.

இன்றெனபது சாதியொருமை.

அவனெதிர் என்பது அவாய்நிலையாய் வந்தது.

ஆகலானென்பது சொல்லெச்சம். இன்றுதல் யாவை யுஞ் சூனியஞ் சத்தெதிர் என்புழிப் பெறப்படும். இக்கருத் தேபற்றி *"மாயை மருவிடான் சிவனவன்க, ணுறைதரா தசேதனத்தால்" என்றார் வழிநூலாசிரியரும். † "உன்னுத ரத் தேகிடந்த கிடமுறுவதெல்லா, முன்னுடைய தென்னுப் நீ யுற்றனையோ, மன்னுயிர்க—ளவ்வகையே காணிங் கழிவ துவு மாவதுவுஞ், செவ்வகையே நின்றசிவன் பால்." என்ற னும் இவ்வியல்பு நோக்கி.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டேனுய் மன்னுதலைக் காண்.

எ-து. உ-ம். எ-னின். உயிர் அங்ஙனமுணர்த்த வுணரு ங்கால் முதல்வனின் வேறுநின்றுணருமோ ஒன்றாய் நின்றே யுணருமோவென்பாரை நோக்கி அவ்விரண்டியல்புமின்றி நின்றுணருமாறுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். வெய்யோன் ஒளியில் ஒடுங்கி-எ-து. ஞாயிற்றின் ஒளியினடங்கி, விளங்காது-எ-து. அதனின் வேறாய் விளங் கித் தோன்றுதலின்றி, வெய்யோனை ஆகாத மீன்போல-எ-து. அதுவாயொழிதலுமில்லாத நாண்மீன்கள் அஞ்ஞாயிற் றனை ஒளியுடையவாமாறுபோல, கண்டு கேட்டு உண்டு உயி ர்த்து உற்று அறியும் ஐம்புலனை மெய் அவனில் கண்டு-எ-து.

---

* சிவஞானசித்தி, ஐந்தாஞ்சூத்திரம். ௬. இறைவன்றன்.

† திருக்களிற்றுப்படியார். அஎ.

கண்டுங் கேட்டும் உண்டும் உயிர்த்தும் தீண்டியும் அறியப்படும் ஐவகை விடயங்களையும் உமை மெய்ப்பொருளாகிய முதல்வனால் உணர்ந்து, உடனாய் மன்னுதலைக் காண்-எ-து. வேறுதலும் ஒன்றுதலுமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் அடங்கி உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக. எ-று.

உவமை யடை பொருளினும், பொருள்வினை உவமையினுஞ் சென்றியையும்.

ஐ சாரியை.

நாண்மீன்முதலியவற்றின் ஒளியெல்லாம் ஞாயிற்றுருவ ஒளியேயென்பது வேதநூற்றுணிபாகலான் அஃதிண்டைக் குவமையாயிற்று.

உயிரென்னும் எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து.

எ-து. உ-ம் எ-னின். அங்ஙனமாயினும் உயிர்கட்குப் பலவேறுவகைப்பட உணர்வு நிகழ்தலின் அஃதுணர்த்துதல் வேறுபாட்டானுப தெனல்வேண்டும் வேண்டவே, நிருவிகாரியென்னுஞ் சுருதியோடு முரணி முதல்வன் விகாரியாவான் செல்லுமென்பாரை நோக்கி விகாரியாகாமை புணர்த்தி அதனைவ யுறுத்துதனுதலிற்று.

இ-ள். அருள் ஈசற்கு அன்றே உண்டாம்-எ-து. உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற் கணுளதாகிய இரக்கம் முதல்வனுக்கு அநாதியேயுள்ளது; அதுசத்தி-எ-து. அவ்விரக்கம் வேறு பொருளன்று முதல்

வனுக்குளதாகிய சத்தியேயாம். அருளும் அவனன்றி இல்லை அருளின்று அவன் அன்றே இல்லை-எ-து. இரக்கமும் அவனுங் குணமுங் குணியுமாகலின் அவ்வருளு முதல்வனையின்றி யமையாது முதல்வனும் அதனையின்றி யமையானும்; அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன்- எ-து. ஞானக்கண்ணுடையாருணர்விற்கு ஞாயிறு தன்னொளியோடு தாதான்மியமாயியைந்து நிற்குமாறுபோல் அவ்வருளோடு தாதான்மியமாயியைந்து நிற்பன் முதல்வன்; ஆகலாற் றன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்திசங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல்கூடும். எ-று.

☞ எனவே யவ்வாறியைந்து தம்வயத்தனாய் நிற்குமுதல்வன் விகாரமின்றியே தனது சத்திசங்கற்ப மாத்திரையானனைத்துஞ் செய்வன். அவ்வாறியைந்து தம்வயத்தனாய் நிற்கு முதல்வன் விகாரமின்றியே தனது சத்தி சங்கற்ப மாத்திரையா னனைத்துஞ் செய்வனென்பது குறிப்பெச்சம்.

அருளாவது: உயிர்கட்குப் பசுத்துவநீக்கிச் சிவத்துவமளித்தற்கண்ணுளதாகிய விரக்கம்.

அன்றே யருளுண்டாமெனக் கூட்டுக.

உம்மை யெதிரதுதழீஇயது.

இன்றியென்னும் வினையெச்சக்குறிப்பு இன்றெனத் திரிந்தது. அன்றே யசை.

இவ்வியல்பு சித்தாந்தநெறி யுணர்ந்தார்க்கன்றி விளங்காதென்பார். 'அருட்கண்ணார் கண்ணுக்கிரவிபோனிற்குமரனேய்ந்து' என்றார்.

சத்திய துண்மையு மதனியல்பும் நீக்கமின்றி நிற்குமென்னு மதிகரணத்தின் விரித்துரைத்தமையி னுண்டுக் காண்க.

இரண்டாமதிகரண முடிந்தது.

---

☞ இதுமுதல் பன்னிரண்டாஞ்சூத்திர முடிவுவரை பாஷ்யம்.

சிவஞானபோதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞான யோகி செய்த சிவஞானபாடியத்தில் பொதுவதிகாரம் இலக்கணவோத்தி னிரண்டாம் பாதமாகிய விவ்வைந்தாஞ் சூத்திர முடிந்தது.

---

## ஆறாஞ்சூத்திரம்.

---

இனி யாசிரிய ராறாஞ்சூத்திரத்திற்கு வார்த்திகப் பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச் செய்கின்றார்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

எ-து. சூ-ம். எ-னின்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டென்பது சூத்திரமெனக்காட்டி யினி யதன் கருத்துரைக்கின்றார்.

சத்து மசத்தும் வரைசெய்துணர்த்துத னுதலிற்று என வரும்.

மேலைச் சூத்திரத்தி னைம்பொறிக ளான்மாவா லளந்தறிந்தறியாதவாறுபோலத் தாந்தமுணர்வின்றமியருளா னளந்தறிந்து மங்ஙன மறிவிக்கு முதல்வனையுந் தம்மையு மறியமாட்டா வென்றதுபற்றி, அற்றேல், முதல்வனெவ்வாற்றானு மறியப்படாத பொருளோவென் றாசங்கை நிகழ்ந்தவழியதனை நீக்கி இலக்கணவோத்துட் கூறுதற் கெஞ்சிநின்ற பதிப்பொருளதிலக்கணம் பாரிசேட வளவையானுணர்த்து முகத்தானே மேற் பொதுவியல்பாற் கூறிப்போந்த வான்மாவுக்குச் சிறப்பியல்பு பாரிசேட வளவையான் வருந் தந்திரத்

தின் விளக்குதற் பொருட் டவ்வான்மாவின் வேறாகிய சத்தி னையு மசத்தினையு மிலக்கணத்தாற் றம்முண் மயங்காதவாறு வரைந்துவைத்துணர்த்தி யுண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தல் இவ்வோத்தின் மூன்றும் பாதமாகிய வாறுஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

ஆசங்கைபற்றிய வியைபா னதிகரண வியைபுபெறப் பட்டது.

மேலைச் சூத்திரங்களிற் கேவல சகலங்களினியல்பு முறையே விளக்கி ஈண்டுச் சுத்தத்தினியல்புவிளக்குதல் முறைமைபற்றிய வியைபாகலானதனானே பாதவியைபு பெறப்பட்டது.

பிரமாணவோத்துட்கூறிய பொருள்களு ளேனைப்பொருள்களுக் கிலக்கணங்கூறி யெஞ்சிநின்ற பதிப்பொருளுக் கிலக்கணங் கூறுத லவாய்நிலைபற்றிய வியைபாதலா னதனானே யோத்தியைபு பெறப்பட்டது.

பதிப்பொருளுக்குப் பொதுவியல்புமேற் பெறப்பட்டமையி னீண்டுக் கூறுமிலக்கணஞ் சிறப்பியல்பெனக் கொள்க.

அற்றாகலினன்றே யிதனை முதற்கட் கூறா துண்மையதிகாரத்தைச் சாரவைத் திறுதிக்கட் கூறியதூஉ மென்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. தம்முணர்வின் றமியாகிய முதற்பொரு ளளவைகளா னறியப்படு மியல்பிற்றெனி? னங்ஙன மறியப்படும் பிரவஞ்சம்போ லழிபொருளாகிய வசத்தாம். எவ்வாற்றானு மறியப்படாத வியல்பிற்றெனி? னங்ஙன மறியப்படாத முயற்கோடு, ஆமைமயிர்க் கம்பலம்போலச் சூனியமாமாகலா னிவ்விரண்டு கூறுபாடுமன்றி யொருவாற்றா னறிபப்படாமையு மொருவாற் றா னறியப்படுதலுமென்னு மிரண்டுவகையானுஞ் சிவமாகிய சத்தாயுள்ள தெனக் கூறுவர் மெய்யுணர்வி னிலைபெற் றுயர்ந்தோர். எ-று.

உண்ருருவெனின் அசத்தென மாறுக.

எனினென்பதனையுணராதென்பனேடுங்கூட்டியுரைக்க,

இன்மையின் இல்லையாகலா னென்க.

முற்றும்மைக டொக்கன.

அல்ல தென்பது வினையெச்சக் குறிப்புமுற்று,

அன்றி யாமெனக் கூட்டுக.

ஒருவாற்ரு னறியப்படாமை, பாசஞானம் பசுஞானங் களா னறியப்படாமை.

ஒருவாற்ரு னறியப்படுதல், சிவஞானமொன்ருனே யறியப்படுதல்.

இரண்டு வகையிற் சிவசத்தாமென விசைக்குமெனக் கொண்டு கூட்டுக.

பாசஞானம் பசுஞானங்களா னறியப்படாமையிற் சிவ மாதலும், பதிஞானத்தா னறியப்படுதலிற் சத்தாதலும் பெ ற்ருமென்பார் இரண்டுவகையிற் சிவசத்தாமென்ருர்.

சிவசத்தென்னு மிருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு.

சடமாகிய சத்தி னீக்குதற்குச் சிவசத்தென்ருர்.

சிவசத்து சித்துச் சத்தென்னும்பொருட்டு.

உலகென்ற துயர்ந்தோரை.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்று வருவித்துரைக்கப் பட்டது.

இருதிறனுமன்றி யிரண்டுவகையானுஞ் சித்துமாய்ச் சத்துமாய்நிற்றன் முதல்வனுக்குச் சிறப்பியல்பென்பது போ ந்தவாறு கண்டுகொள்க.

இன்னு முதல்வனுக்குரிய வேனைச்சிறப்பியல்புக் குணா ங்களெல்லா மிவ்விரண்டனுளடங்கும்.

அற்றேல் "நின்னைக் காணு மாந்தர் தம்மையுங் காணுத்தன்மை போலே" எ-ம், "தன்னாலே தனையறிந்தாற் றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே" எ-ம், "மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை, யாப வொருபிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" எ-ம், "உன்னரிய திருவருளை யொழிபமல முளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எ-ம், "சுடரா லிருமேடச் சொல்லார்க வெந்தாய், சுடரா லிருமேடச் சொன்னாப்" எ-ம், ஓதியவாற்றானேனைப் பசுபாசங்களுஞ் சிவஞானத்தா னன்றி யறியப்படாவென்பது போதருதலி னவையு மவ்விரண்டு வகையு முடைமையாற் சிவசத்தாவான் செல்லும் பிறவெனிற்? செல்லா. என்னை? அவை சிறப்புவகையா னறியப்படுதலில் சிவஞான மொன்றானே யன்றி யாகாதாயினும், பொதுவகையானே யேனைஞானங்கட்கு விடயமாத லுண்மையி னொருவாற்றான் உணருரு வாதற் கிழுக்கின்மையானென்க.

அஃதெங்ஙனமெனிற்காட்டுதும். "ஆன்மாவினுண்மையுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்" "தருமிது பசுஞானம் பின் சிவஞானந் தனக்குமேலாம்" எ-ம், "காதலினா னன்பிரமமென்னு ஞானங் கருது பசுஞானம்" எ-ம், "ஓதுதலிற் பசுஞானத்தானே யுண்மைசுட்டு முணர்விற்கும், நான் பிரமமென்னு முணர்விற்கும் ஆன்மா விடயமாதல் பெற்றாம். "வருந்திபமெனத் தெரிந்தாங் கொருவி" எ-ம், "இவை கிழ்நாடலாலே" எ-ம். ஓதுதலின் ஒருவுதலுங் கீழ்நாடுதலுமாகிய வப்பசுஞானத்திற்குப் பாசம் விடயமாதல் பெற்றாம். இனி யிதனை யானறிந்தே னறிகின்றிலே னென்றுழி இது வென்னுஞ் சுட்டுணர்விற்கு விடயம் புறத்தே தோன்றுங் குடமும், யானென்னு முணர்விற்கு விடயம் அந்தக்கரணங்களை யதிட்டிக்கு மான்மாவும், அறிந்தேனென்னு முணர்வி

ற்கு விடயம் அவ்வான்மபோதமும், அறிகின்றிலேனென்று முணர்விற்கு விடய மறியாமையுமே யன்றி வேறின்மையின் இங்ஙன முணருமுணர் வெல்லார்க்கு மொப்பநிகழ்கின்றமையிற் பசுபாசங்கள் பாசஞானத்திற்கு விடயமாதல் கண்கூடாகப் பெறப்பட்டது.

மெய்யுணர்வில்லாதார் உடம்புமுதலியவற்றை யானென மயக்கத்தான் மதிப்பினும் இதனை யானறிந்தேனென்புழி யானென்னு முணர்விற்கு விடயமான்மாவே யென்பது அநுபவ மதன்மாட்டு நிகழ்தல்பற்றி யுணர்ந்துகொள்க.

இருளின்கட் கயிற்றை யரவெனமதித்து இது கிடக்கின்றதெனக் கூறினும் ஆண்டிதுவென்னு முணர்விற்கு விடயமாய்க் கிடந்தது கயிறே யன்றி யரவன்மையான் யாண்டு மவ்வாறே கண்டுகொள்க.

அற்றேற், சிவனுண்டு சிவனில்லையெனவும்,மெய்யுணர்வில்லாதார் வழங்கக் காண்டலிற் சிவனும் பொதுவகையானவ்வாறே பாசஞானத்திற்கு விடயமாம்போலுமெனின் அற்றன்று என்னை? குடமுண்டு குடமில்லை யென்றவழிப் புத்தி விருத்தியிற் பரிணமித்துத் தோன்றி யான்மாவின்கண் வந்தனுபவமாமாறுபோல வுலகத்துள்ளார் சிவனுண்டு சிவனில்லை யென்றவழிச் சிவப்பொருளவ்வாறு பொதுவகையானு மனுபவத்தானுணர வாராமையின் இன்னோரன்னவை யுணர்ந்துரைப்பன வெல்லாம் பேதைப்பருவத்துப் பெண் காமநூற்பொருளை யுணர்ந்துரைக்குமாறுபோல வாசகஞான மாத்திரையே யன்றி யனுபவஞான மல்லவாகலானென்க. அநுபவஞானத்திற்கு விடயமாவதீக யீண்டுணைக் குறிவென்றெடுத்துக்கொள்ளப் பட்டதென்றுணர்க.

அற்றேல், கண்டுக்கூறியவாற்றானே பசுபாசங்கள் சிறப்புவகையா னுணருநவல்லவாயினும் பொதுவகையா னுண

ருருவாமாகலின் முதல்வன்போற் சிவசத்தாவான் செல்லா வென்பது பெற்றும். அங்ஙனமாயினும் உணருருவெல்லா மசத்தென்றலி னவையு மசத்தாவான் செல்லும் செல்ல வே, முப்பொருளுஞ் சத்தென்னும் சைவசித்தாந்தத்தோடு முரணி யவசித்தாந்த மாமாலோவெனின் ? அறியாது கடா யினய், சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்திற் சத் தின் வேறாய் அசத்தென்பதொன்றின்மையிற் பிரவஞ்சமுஞ் சத்தியப்பொருளே யாமென்பது மேலே காட்டப்பட்டது. அங்ஙனமாகவும் ஒருதன்மைத்தாய் நில்லாது காரியவவத்தை யிற் றூலமாய் விளங்கிநின்ற பிரவஞ்சங், காரணவவத்தையிற் சூக்குமமாகிய சத்திவடிவாய் விளங்காது நிற்கும் வேறுபாடு டைமை மாத்திரையேபற்றி யன்றே பிரவஞ்ச மசத்தெனப் பட்டது. அவ்வாறே காரணவவத்தையின் விளங்காது சூக் குமமாய் நிற்குந் தத்த மியல்பி னீங்கிக் காரியவவத்தையிற் றூலமாய் விளங்கிநிற்கும் வேறுபாடு மாத்திரையேபற்றிச் சத்தாகிய மாயை கன்மங்களையும் ஒளிமுன்னிருள்போலப் பெத்தக்காலத்து மேற்பட்டு நின்ற தனது சத்தி முத்திக்கா லத்து மடங்கிச் சூனியம்போ னிற்றல் மாத்திரையேபற்றிச் சத்தாகிய வாணவமலத்தினையு மசத்தென்றற் கிழுக்கென்னை யென்க.

இக்கருத்தேபற்றியன்றே "பொய்யிருள் கருந்தமெய்ச் சுடரே" எ-ம். "பொய்ம்மாயப் பெருங்கடலுள்" எ-ம் பிறாண்டு மிவ்வாறோதியதூஉமென்க.

இஃதறியாது பொய்யாவது மெய்க் கெதிர்மறையாவ தொன்றென்னு நையாயிகர் முதலியோர் மதமடாதென்ப தூஉம் அபாவவாதத்தில் விரித்துக் காட்டினும் ஆண்டுக் காண்க.

இனிச் சத்தாகிய வான்மாவும் அநாதியே தனக்குரி மையில்லாத மலத்தின் மறைப்புண்டு தனது சத்திமடங்கிச்

ருளியம்போற் கிடத்தன்மாத்திரையேபற்றி யவ்வாறசத்தா
தற்கும் முத்திக்காலத்தின் மறைப்பு நீங்கியவழித் தனது
சத்தி விளங்கித் தனக்குரிய சிவானந்தத்தை யனுபவிக்கு
முதன்மை யுடைத்தாய் மீளமலத்தின் மறைப்புண்ணுதலின்
றி, யென்று மொருதன்மைத் தாதல்பற்றிச் சத்தாதற்கும்
பொதுவாய் நிற்றலிற் சதசத்தெனப்படும். "அசத்தைச்
சத்துடனின்று நீக்குந்தன்மையாற் சதசத்தாமே" யென்ற
து மிப்பொருட்டு.

இதனானே சத்தாகிய வான்மாவை யொருவாற்றா னச
த்தென்றலுஞ் சத்தாகிய மலமாயைகன்மங்களை மேற்கூறி
யவாறுபற்றி அசத்தென்றலுமமையுமாகலினவையங்ஙன
ம் பொருவகையானுணராருவாதல்பற்றிச் சித்தாந்தத்திற்
கிழுக்கென்னையென் றொழிக.

அநாதிமுத்தனாகிய முதல்வன் ஏனையபோலத் தனது
சத்தி மடங்குத லின்றிப் பெத்தத்து முத்தியினு மொருத
ன்மையனேயாய் மேம்பட்டு நிற்றலின், ஆண்டொரு வாற்றா
லு மசத்தென்றற் குரிமையின்மையின் எவ்வாற்றானுஞ் சத்
தேயாதலு மெவ்வாற்றானுஞ் சித்தேயாதலு முதல்வனுக்கே
யுரிய விலக்கணமாதல் கண்டு கொள்க.

ஆன்மாச் சித்தாயினும் "மலனுக்கிலனு மசித்தாமே"
யென் றோதுதலின், முதல்வனை நோக்கிச் சித்தாதலின்மை
யின் எவ்வாற்றானுஞ் சித்தாதலாகிய விலக்கணம் எவ்வாற்
றானுஞ் சத்தாதலாகிய விலக்கணம்போல ஆன்மாக்கண்மாட்
டுச் செல்லாமை கண்டு கொள்க.

உணருரு வசத்தென்றவழி, மலமாயை முதலியனவு
முணராருவாகலி னவையு மசத்தாவான் செல்லுமா லெனக்
கடாவினார்க்கு இங்ஙனஞ் செவ்வனே யிறுக்கமாட்டாதார்,
அபாவத்தினியல்பாவது நையாயிகர் முதலியோர் கூறியதே

போது மெனமயங்கி முப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தா ந்தத்தோடு முரணுமைப்பொருட் டுண்டுச் சதசத்தென்பன சித்தசித் தென்னும் பொருளவெனவுஞ், சுத்தமசுத்தமென் னும் பொருளவெனவும், இடர்ப்பட்டுத் தமக்கு வேண்டிய வாறே யுரைப்ப.

மூலமல முதலியன போலப் பிரவஞ்சமு மெய்ப்பொ ருளே யாயினுங் காரியவவத்தையி னின்ற தூலவடிவம் இத் துணைப்பொழுது நிற்குமென நம்மனோரா லறிய வாராது, நீ ர்மே லெழுத்துங் கனவும் பேய்த் தேரும் போல நிலைபெறு வதுபோலத் தோன்றிக் காட்சிப்புலனாய் விரையக்கெட்டு ம றைந்து போதற் சிறப்புடைமை பற்றி யசத்தென்று மழி பொரு ளென்று மிக்கு வழங்கப்படுமென்க.

அஃதங்ஙனமாக, ஆசிரியர் வடமொழி யாருஞ் சூத்தி ரத் தோதியவாறே உணருருவசித் தெனச்சூத்திரஞ் செய் யாது உணருரு வசத்தெனச் சூத்திரித்தது, முதனூலொடு முரணும்பிறவெனின்? முரணாது; அசத்தெனவே சடமென் பதுந்தானே போதரு மென்னுங்கருத்தா னவ்வாறு சூத்திரி த்தாராகலானென்க. அக்கருத்துணர்ந்துகோடற்கன்றே" அ றிபொரு ளசித்தசத்தா" மெனக்கூட்டி யுரைத்தார் வழி நூலாசிரியரும்.

அற்றேல், அம்முறைமைபற்றி யசித்தெனவே யசத் தென்பதுந்தானே பெறப்படுமென்னுமோ வெனின், என் னும், என்னை? அசித்தாகிய மல மாயை கன்மங்கள் நீர்மே லெழுத்து முதலியன போல நிலைபெறுவது போலக் காட்சிப் புலனாய்த்தோன்றிச் சடுதியின் மறைந்துபோ மசத்தாதலின் மையின் என்று மொருதன்மை யாகிய முதல்வனை நோ க்கி அசத்தெனப்படு மாயினும், அங்ஙனந் தோன்றி மறைவ தாகிய பிரவஞ்சத்தை நோக்கிச் சத்தே யாமாகலிற் சிறப்பு

வகையா னுணருருவாகிய வசத்துப் பொதுவகையானுணரு ருவாகிய சடத்தின் வியாப்பிய மாவதன்றி வியாபகமாதலின் மையானென் றொழிக.

ஈண்டசத் தென்றதற்குப் பக்கங் காரியப் பிரவஞ்ச மாத்திரையே யென்பது வருஞ் சூத்திரத்திற் காட்டுதும். இதனுள் உணருரு வசத் தெனினுணராதின்மையி னென்ப தோரதிகரணம். இருதிற னல்லது சிவசத்தாமெனவிரண்டு வகையினிசைக்குமன்னுலகே என்ற தோரதிகரணம். ஆக விரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

—:o:—

அவற்றுட் பிரவஞ்சம் போல முதல்வனு மளவை யா னறியப் படும்பொருளேயா மென்னு நையாயிகர் முதலி யோர் மதத்தை மறுத்தற் கெழுந்தது முதலதிகரணம்.

ஈண்டு அறிவினலறியப்பட்ட சுட்டு அசத்து, எனவ ரும்.

சுட்டப்படும் பொருளைச் சுட்டென்றார்; ஆகுபெய ரான்.

சிவஞானத்தாலறியப்படும் பொருளினீக்குதற்கு அறி வினாலென விசேடித்தார். ஈண்டறிவென்றது உலகத்தெல் லாரறியுமறிவை.

அறிவினைச் சுட்டென்றது அதனாற் சுட்டியறிவது வேயாகலின்.

இஃதுணர்த்து கோடற்கன்றே "அறிவினலறிந்த யாவு மசத்தாதலறிக" என்ற புடைநூலாசிரியர் "கொள்ளை யறிவதா மென்னை மூர்த்தியது வதுவாகக்காணு மறிவதா வசத்தென" என்றெடுத்துணர்த்தியது உம் மென்க.

அற்றேல், இல்லையென்னு முணர்விற்குவிடயமாயனுபலத்தியைப் பயப்பிப்பது மாத்திரையன்றே அசத்தாவ தவ்வாறன்றி இஃதுகுட மிஃதாடை யென்றாற்போல உள்ளதென்னு முணர்விற்கு விடயமா யுபலத்தியைப்பயப்பிக்கும் பிரமாணஞ்சமு மசத்தேயாயிற் சத்தசத்தென்னும் பாகுபாடே பெறப்படாமையின் உணருரு வாதல் மாத்திரையேபற்றி அறிபொரு ளசத்தென்றல் சாலா தென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி யாசங்கை நிகழ்ந்தவழி, யதனை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது.

அவைதான் பிரகாசமாய் நின்றே யப்பிரகாசமாய் நிற்றலான், எனவரும்.

இல்லையென்னுமுணர்விற்கு விடயமா யனுபலத்தியைப் பயப்பித்தலன்றே யசத்தினியல்பாவ தெனின்? நன்று சொன்னாய், அங்ஙனமனுபலத்தியைப் பயப்பிப்பது முன்னுண்டென்னு முணர்விற்கு விடயமாயுபலத்தியைப் பயப்பிக்கும் பிரகாசதகுணமிகுதிப் பாட்டினின்றபொருளேயன்றிப்பிறிதன்மையாற் பாவம்போல வபாவமு மபாவப்பொருளின் றன்மை யெய்துதற்குக் காரணம் பொருட்பெற்றியாகிய தாமதகுண மிகுதிப்பாடே யென்பது பெறப்படுதலிற் பொருட்பெற்றியின் வேறுபாடெனவொன்றின்மையானதினாலறியப்பட்ட சட்டசத்தே யென்றற்கிழுக்கின்மையென்பதாம்.

ஈண்டுப் பிரகாச மப்பிரகாசமென்பன வுபலத்தி யனுபலத்தியென்னும் பொருளவா யாகுபெயரானவை நிகழ்தற் கிடனாகிய பொருளை யுணர்த்தி நின்றன.

அற்றேல், ஒருசாரன வங்ஙனமாயினு மறியப்பட்டன வெல்லா மவ்வாறசத்தாமென்றல் பொருந்தாது; பிரமாண மின்மையின்.

அன்றியு மிவ்வேதுவேபற்றி யறியப்பட்டனவெல்லா மசத்தெனக்கொண்டு பதிமுதற் பொருள்களினுஞ் செல்லாமைப்பொருட்டு நித்தப்பொருள்க ளளவையா னறியப்படாவெனக் கொள்ளின், "அருளினலாகமத்தே யறியலாம ளவினலுந், தெருளலாம்" என்றற் றொடக்கத்துச் சுருதிகளோடு முரணி இந்நூலின் மேற்கோளுமேதுவு மெடுத்துக் காட்டுமாக வைத்துப்பதிமுதலிய பொருள்களினியல்பு வழி யளவையாற் சாதித்தற் கெழுந்த வதிகரணங்களும் பயனில வாயஃதுமக்கே யவசித்தாந்தமாமாலோவெனு மாசங்கையை நீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னுயின் எனவரும்.

அறியாய் எ-து. விளியுருபேற்ற பெயர்.

மெய்கண்டானுயி னறிவறிந்தவெல்லா மசத்தாமெனமாறுக.

அசத்தினியல்பை யறிந்தாயாயினிவ்வாறு பிணங்குவாயல்லே யென்பார் அசத்தறியாயென்றும், "எந்தைதாட்பால் வணங்கித்தலைநின்று கேட்க" வென்பார் கேளா யென்றும் உபலத்திக்கு விடயமானவை யெல்லா மனுபலத்திக்கு விடயமாகா தலொருதலை யென்பார் அறிவறிந்த வெல்லா மசத்தாகுமென்றுஞ், சத்தினியல் புணர்ந்தார்க்கன்றி யசத்தினியல் புணர வராதென்பார் மெய்கண்டா னென்றும், ஆய்தற்கருமைநோக்கி யாயினென்றுங் கூறினர். கூறவே யுபலத்திப்பட்டனவெல்லா மனுபலத்திப்படுதலு மொருதலையாகலின் அவ்வாறன்றி யென்றுமோரியல்பாய் நிற்பதாகிய பதிப்பொருளறிவினறியப்படுவ தன்றென்பதூஉம் பெறப்பட்டது."

"போதமிருக்தோர் தொகுத்த பேதமைக்கே பொருந்தினே ரிவர்க்கன்றிக் கதிப்பாற்செல்ல, வேறுநெறியெறு

மவர்கட்கு" நூலாகலின் அருளினு லாகமத்தே யறித லும் அளவினுற் றெருளுதலு முண்மை ஞானத்தைத்தோற் றுவிக்கு முகத்தானவருக்குப் பயன்படுத லுடைமையினின் டுக்கூறுமதிகரணங்கள் பயன்படாமையு மறியப்படா தென் றதனோடு முரணுதலு மின்மையா னவசித்தாந்த மாதல் யா ண்டையதென்பது கருத்து. இஃதுணர்ந்து கோடற்கன்றே "ஞானச்செய்தியாற் சிந்தையுள்ளே மருளெலா நீங்கிக்கண்டு வாழலா"மென்பதனை யவற்றின்பின்னாக வைத்தோதியதூஉ மென்க. "அருளினுலாகமத்தே யறியலாமளவினுலுந், தெ ருளலாம்" எனப்பொதுப்பட வோதி "ஞானச்செய்தியாற் சிந்தையுள்ளேமருளெலா நீங்கிக்கண்டு வாழலா" மெனவிதந் தோதுதலின் மருளெலா நீங்கிச்சிந்தையுள்ளே காண்டல் ஞானச்செய்தியொன்றானன்றி யேனையவற்றாற்கூடாதென்ப தூஉம் அவையெல்லாமனுபவ ஞானத்தைத்தோற்றுவித்தன் மாத்திரையாற் பயன்படுதலுடைய வென்பதூஉம் போந்த வாறுகாண்க.

அவை யங்ஙனம் பயன்படுதலும் அனுபவமுடைய தேசிகனரு ளில்வழிக்கூடாதென்பார் "மறையினு லயனுன் மாலான் மனத்தினல் வாக்கான் மற்றுங், குறைவிலா வளவி னுலுங் கூறெணுதாகின்ற, விறைவனூர்" எ-ம், "அருளி னுலாகமத்தே யறியலா மளவினுலுந் தெருளலாம்,, எ-ம். கூறினூர்.

இங்ஙன மசத்தென்றதுவேறுபொருளெனக்கொண்டு சத்தாகிய திரவிய முதலிய பிரவஞ்சத்தை யுணருருவாதல் பற்றி யசத்தென்றல் சாலாது; சாலுமாயினு மதுபற்றி முத ல்வனறியப்படாத பொருளென்றல் பொருந்தாதென்னுநை யாயிகர் முதலியோரை மறுத்து மேற்கோளைச் சாதித்தவ ழிச் சற்காரிய வாதத்திற் சத்தாகிய பிரவஞ்சத்தை யசத் தென்ற லவசித்தாந்தமெனச் சாங்கியர் முதலியோர் கூறு

பாசங்கையை நீக்குதற்கெழுந்த தாகலினதனையே "பெரியா ரைப் பிழையாமை" யென்புழிப்போல விரட்டுற மொழிந்து கொண்டு வேறுமோரதிகரணமாக வைத்துப் பொருள்கோ டற்பாற்று. அஃதாமாறு; அறிவி னறியப்பட்ட சுட்டு அசத்து.

அஃதெங்ஙன மெனின் மேற்கோளைச் சாதித்தற் கெழு ந்தவேது.

அவை தாம் பிரகாசமாய் நின்றே யப்பிரகாசமாய் நிற் றலான்' எனவரும்.

காரியவவத்தையிற் றூலமாய் விளங்கிநின்ற காட்சிப் புலனைச் சடிதியின் மறைந்து காரணவவத்தையின் விளங் காது நிற்கும் வேறுபாடுடைமையா னங்ஙனம் புலனாகாத காரணமாகிய மாயை முதலியவற்றை நோக்கிக் காரியமாகிய பிரவஞ்ச மசத்தாதல் சாலு மாகலி னீண்டறிவினலறியப் பட்ட சுட் டசத்தென மேற்கொண்டதென்பதாம்.

அற்றேல், அங்ஙன நிலைபெறுதல் போலத் தோன்றிக் காட்சிப்புலனாய்க்கணத்தின் மறைந்து போதன்மாத்திரையே பற்றிச் சத்தியமாகிய பிரவஞ்சத்தை யசத்தென்ப தெவ்வா றென்னு பாசங்கையை நீக்கி யுவமை முகத்தானே யவ்வே துவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

—அசத்தலாய்
நீரிலெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றோப்பு. எனவரும்.

அசற்காரிய வாதியல்லாத வறிவுடையோனே அங்ஙன ந் தோன்றி மறைவனவாகிய பிரவஞ்சம் அசத்தாமாற்றி னவை பாராயின், நீர்மேலெழுத்து முதலியனவாம் என்ப தாம்.

எனவே அப்பொழுதுள்ளனவாகிய நீர்மேலெழுத்து முதலியவற்றை யங்ஙனே சடுதியின் மறைந்து போதல்பற்றி யசத்தென்றல் எல்லார்க்கு மொப்ப முடிந்தமையி னவை போலப் பிரவஞ்சத்தையு மசத்தென்றல் சாலுமென்றவா ருயிற்று.

"உண்டுபோ லின்றாம் பண்பி னுலகினை யசத்துமென் பர்,, என்றார் வழிநூலாசிரியரும்.

உண்டுபோ லின்றுதல் இத்துணைப் பொழுதினசிக்கு மென்றறிய வாராது நெடுங்கால நிலைபெறுவன போலத்தோ ன்றிக் காலம்வந்துழி யங்ஙனே சடுதியின் மறைந்துபோதல். "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும், பெருமையு டைத் திவ்வுலகு" என்றோதியதூஉ மிவ்வியல்பு நோக்கி யென்க. அசத்துமென்ப ரென்னு மெதிர்மறை யும்மையாற் பொருட்டன்மை பற்றிச்சத்தேயா மென்பது போந்தவா றுணர்க.

அசற்காரிய வாதியை யசத்தென்றுபசரித்தார்.
நிகழென்பதனை யாண்டுங்கூட்டுக.
குவ்வுருபு விகாரத்தாற் றொக்கது.

நீரிலெழுத்துத் தோன்றியபொழுதே மறைந்து போத ற்குங், கனவிற்காட்சி முடிவுபெறுதலின்றி யிடையே மறை ந்துபோதற்கும், அருஞ்சுரத்தின்கண் முதுவேனிலின் நண்ப கற்கடுமை பற்றித்தோன்றி ஞாயிற்றின்கிரண முகிற் படல த்தின் மறைந்தவழித் தானுமறைந்து போவதாகிய பேய்த் தேர், ஒரு காரணங்காட்டி மறைந்து போதற்கு முவமை யெனக் கொள்க.

நீரினெழுத்து முதலியன பொய்யென்பாரை மறுத்த ற்கு நிகழென் றடைகொடுத்தார்.

நீரிலெழுத்து எழுதுங்கா லுள்ளதாய்த் தோன்றுதலி

ளதும்பொய்யாமா றியாண்டைய தென்பது.

கனவு மெய்யென்பது மேற்காட்டினும்.

அன்றியுங் கனவின்கண் மகளிரை மணந்து போகநுகர்ந்தவழியும் புலி முதலியவற்றைக்கண் டச்சமிக்குற்றவழியும் அவ்வனுபவக்குறி தூலவுடம்பின்க ணிகழக்காண்டலானும் இன்னோரன்னவை மெய்யாதல் பெறப்பட்டமையின் ஏனைக்காலி னிகழ்ச்சியு மவ்வாறே மெய்யா மென்பதுதானே போதரும். சூக்குமவுடம்பிற் பெறப்படு மனுபவங்கள் மிக்கு நிகழ்ந்தவழி யொற்றுமைபற்றித் தூலவுடம்பினுங் குறிநிகழும். மிக்கு நிகழாதவழித் தூலவுடம்பிற் குறிநிகழுமா றில்லையென்றுணர்ந்துகொள்க.

இனிப் பேய்த்தேரை நீரெனக்கண்டன் மாத்திரையே பொய்யாவதன்றிப் பேய்த்தேர் பொய்யன்றென்பது கண்கூடாகவறியப்படும். இங்ஙனமாகலின் நீர்மேலெழுத்து முதலியன சத்தேயாகவும் ஒருவாற்றாற் பிரவஞ்சத்தை நோக்கி யசத்தென்றற் குரிமையுடையவாயினாற்போல நாதமுதலாகிய பிரவஞ்சமுங் காரணப்பொருளை நோக்க வொருவாற்றானசத்தென்றற் குரிமையுடைமையி னதுபற்றிச் சற்காரியவாதத்திற் கிழுக்கின்மை யுணர்க.

இவ்வெண்பாவின் 'அசத்தறியாய்' எ-ம். 'அசத்தலாய்' எ-ம். வேறு வேறு விளித்தலானும் 'ஆயின் ஓரின்' எ-ம். 'அசத்தாகும் இன்றாமாறு எ-ம். ஒருபொருட்கிளவியை யிருகாற் கூறுதலானும் இதனை இங்ஙன மிருதொடராகவைத்து 'இல்பித்தநன்னி,லென்பதுபோல இரண்டதிகரணப்பொருள்பட வுரைத்துக்கோடலே யாசிரியர் கருத்தாதலறிக.

இவ்வாறன்றி யிதனை யொருதொடராக வைத்துரைப்பின் அசத்தறியாய் அசத்தலாயென்றதனால் ஒருபயன்பா

மையும் ஆமின் ஓரினின்றிருகாற் கூறுதலும் அசத்தாகும் இன்றுமென்றிருகாற் கூறுதலுங் கூறியது கூறலென்னுங் குற்றமாதலு மறிக.

இனி பொருவாற்றானு முணரப்படாத பொருள் சூனியமென்பது எல்லாச் சமயத்தார்க்கு மொப்பமுடிந்தமையி னுண்டநிகரணத்திற் குரிய வையப்பாடு முதலியன நிகழாமையானதனை வேறோரதிகரணமாக வைத்துரைத்திலர். அங்ஙனமாயினும் உணராத பொருளைச் சத்தென்றாற் படுமிழுக் கென்னையோவென மாணாக்கர்க்காசங்கை நிகழாமைப்பொருட்டு வழிநூலாசிரியர் "உணராதபொருள் சத்தென்னிலொரு பயனில்லைத் தானும்' புணராது நாமுஞ்சென்று பொருந்துவ தின்று மென்றுந், தணவாத கருமமொன்றுந் தருவதுமல்லை வானந், திணரார்பூந் தொடையு மாமைக்கெழுமயிர்க் கயிறும் போலும்" என விடுத்தொழிந்தாரென்க.

முதலதிகரணமுடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.



மேலையதிகரணத்தின் உணர்பொருளியல்பும் உணராதபொருளியல்பு முரைக்குமுகத்தான் அசத்தியனியல்பை வரைசெய்துணர்த்தியவழி, யிரண்டு மிவ்வாறாயின் முதல்வனியல்பு வேறென்னையோவென்னு மாசங்கையை நீக்கிப் பாரிசேட வளவையான் முதல்வனது சிறப்பியல்புணர்த்து முகத்தானே சத்தினியல்புவரை செய்துணர்த்துதற் கெழுந்த திரண்டாமதிகரணம்.

இனி யென்றது இவ்வியைபுணர்த்துதற்பொருட்டு. அதிகரணந்தோறும் இனியென்பன அவ்வவற்றிற்கு மேற்போந்த வதிகரணங்களோ டுளவாகிய வியைபுணர்த்துதற்

பொருளவென்பது மேலே காட்டினும். யாண்டுங் கடைப்பிடித்துக்கொள்க.

இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீதகோசரமாய் நின்றவதுவே சத்தாயுள்ள சிவமென்றுணர்தற்பாற்று. எனவரும்.

இருதிறனவன யாவை யென மலையாமைப்பொருட்டிவ்விரண்டு தன்மையுமென மேற்போந்தவற்றைச் சுட்டிக்கூறினார்.

இரண்டுவகை யாவன விவையென்பார் வாக்கு மனாதீதகோசரமா யென்றார்.

ஈண்டு வாக்கென்றது வாக்காகிய நாதமுடிவான பாசஞானத்தை.

மனமென்றது அவற்றின் வேறாகிய பசுஞானத்தை.

வாக்கு மனாதீதகோசரமாய் நின்றவென்பது அவ்விரண்டன் விருத்திகளைக் கடந் ததீதமாயும் வேறறநின் றுணரும் பதுபவஞானமாத்திரையின் விளங்கிக்கோசரிப்பதாயும் நின்றவென்றவாறு.

அங்ஙனநின்ற பொருளிதுவென வளவைகளா னறியவாராமைபற்றி யதுவெனப் பொதுப்பட மகாவாக்கியத்தாற் கூறியதனை யனுவதித்துச் சத்தாயுள்ள சிவமாதலைச் செவியறிவுறுக்கின்றாராகலி னது சத்தாயுள்ள சிவமே யெனப்பிரிநிலையேகாரத்தை மாறிக்கூட்டுக. சத்தென்னும் வடமொழிக்குப் பொருளுரைப்பார் சத்தாயென் றொழியா துள்ளவென்றார்.

என்றுணரற்பாற்று என்றுயர்ந்தோரா னறியும் பான்மைத்தென்க.

வாக்கு மனாதீதமென்றது தமிழ்நூன்முறைப் பரமைமாபடியென மரீஇயினாற்போல பனவதீதமெனற்பாலது மனாதீதமென மரீஇயிற்று.

அதீதகோசரமென்பது வடநூன்முடிபு.

வாக்கு மனாதீதப்பொருளாகலான் உணருருவாந் தன்மையும், கோசரப்பொருளாகலா னுணராதாந் தன்மையுமில்லை யென்பது பெறப்படுதலி னிவ்விரண்டு வகையுமின்றி யென்றார்.

அற்றேல், ஐந்தொழிற்கும் வினைமுதலாதல்பற்றி யுண்டெனத் துணியப்பட்ட முதல்வன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்பனென்ப தெற்றாற் பெற்றும்; ஆகமவளவையாற் பெற்றுமெனின்? வழியளவைக்கேலாவா யாகமங்களுட்கூறப்படுவனவெல்லாம் புனைந்துரைவகையானன்றிப் பிரமாணமாகாவாலென்னு மாசங்கையை நீக்கி அவ்வளவினவன் மகிழுக வென்னு நியாயம்பற்றி வாக்கு மனாதீதகோசரமாய் நிற்றலை வழியளவையாற் சாதித்து இவ்விரண்டு தன்மையுமின்றி யென்றதனை வலியுறுத்துதற் கெழுந்தவேது.

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும் என வரும்.

வாக்கு மனங்களா னேதியுணரப்படுவதாகிய பிரகாசப் பொருட்கு, முன்ன ருண்மை யதிகாரத்துட் கூறப்படுஞ் சாதகங்களினின் றறியப்படவேண்டுவதின்மையானும், ஒருவாற்றானு மறியப்படாத வப்பிரகாசப் பொருட்குச் சாதகத்தினின்று மறியப்படுந் தன்மை யின்மையி னதனானுவதோர் பயனின்மையானும், இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீத கோசரமாய்நிற்றல் பெறப்படுதலின், அங்ஙனநின்றவதுவே சத்தாயுள்ள சிவமென்பதாம்.

பிரகாசிக்கப்படுவதனைப் பிரகாசமென் றுபசரித்தார். அற்றேல், வாக்கு மனாதீத மென்றதொக்கும், கோசரமென்றல் பொருந்தாது. என்னை? பரம்பிரமப்பொருள் அவிச்சை

ப்பத்தான் ஞாதாவெனவும், ஞேயமெனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படுஞ் சாதகங்களினின் றறியவும்படும். அவிச்சை நீங்கியவழி ஞாதிருஞான ஞேயமென்னும் பாகுபாடு சிறிதுமின்மையிற் சத்தென்றுத லசத்தென்றுதல் ஒருவாற்றானு ஞேயமாமா றின்றிக் கேவல ஞானமாத்திரையேயாய் நிற்பதொன்றாகலானென மாயாவாதி மதம் பற்றி யாசங்கை நிகழ்ந்தவழி யதனை நீக்கிக் கோசரமாதலை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

எண்ணிய சத்தன் றசத்தன்று மென்றலேன்
கண்ணி யுளவென்றன் மெய்கண்டா—னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன்று ளாம். எனவரும்.

பரமார்த்தமாகிய பரம்பொருள் விவகாரத்திற் கருதப்பட்ட சத்துமன் றசத்துமன்றென்னில், அங்ஙனமொருபொருளுண்டென்றல்யாது பிரமாணங்கருதியோ வதனைக்கூறுவாயாக. பிரமாணமொன்றுண்டென்னி னதற்கது பிரமேயமெனப்பட்டு ஞேயமாதலான் செல்லுமென் றந்தி யாண்டுத் தாப் பிரமாணமில்லை யென்பையாயிற் சத்தியல்லையுமா ங்கீகாரியாய்த் தறியிற் காட்சி முதலிய பிரமாணங்களா னறியப்பட்டதூஉம் ஒருவாற்றானும் பிரமாணமில்லாத துனியமுமாகிய விரண்டு மேற்கூறியவாற்றா னசத்தேயாம். ஆதலின் சத்தென்னுஞ் சான்றோக்கிய முதலிய சுருதிகளோடு முரணுமாதலாற் சத்தென்றோதப்படு மறிவினு லறியப்படாத மெய்ப்பொருள் மேற்கூறுந் துனியமன்று சைவசித்தாந்தங்களினுஞ் சைவாகமங்களினு மன்னியமின்றி நின்றுணரு மனுபவ மாத்திரையிற் கோசரிப்பதென் றோதப்படுஞ் சிவனருளாமென்க.

அறிய வொண்ணாச் செயலினையாம் பழைய செப்பக் குறிக்கையு மென்பதற்கேற்பச் செயினென்னு மெச்சப்பொருட்டாய் நின்றது.

இரண்டுமென முற்றும்மை விரிக்க.
அசத்தாமென மாறுக.
சத்தாகிய மெய்யெனக் கூட்டுக.

"அடியளந்தான் றாயஅதெ"ன்புழிப் போல அறிவறியா மெய் யென்றது வாளா பெயராய் நின்றது. "பெயர் நிலைக் கிளவியி னாஅ குநவு" மென்ற தோத்தாகலின்.

சிவன்றாளெனச் சிவசத்தியின்மேல் வைத்துயர்த்துக் கூறினார். இறைவனார் கமலபாத மென்றதுமது.

இதனாற் போந்த பொருள் சத்து மன்றி யசத்துமன் றி யொரு பொருளுண்டென்பதற்குப்பிரமாண மென்னை? பிரமாணமில்லாத சூனிய மெனிற்? சூனியமு மழிபொருளு மாகிய இரண்டுமசத்தே யாமென்பது மேற்காட்டினமையிற் பிரமப் பொருளசத்தெனப்பட்டுச் சத்தென்னுஞ் சுருதிக ளெல்லாவற்றோடு முரணு மாகலா னவற்றிற் சத்தென் றோ தப்படும் பரம்பிரமப்பொருள் உண்மைஞானத்திற் கோசரிப் பதென யாங்கூறுஞ் சிவமேயன்றி நீ கூறுஞ்சூனிய மன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரமென்றதனை வலியுறுத் தியவாறு மென்க.

எண்ணியறிய விரண்டாமசத்தாத லென்பதற்குப் பிற ரெல்லாம் வருகின்ற வெண்பாவிற் கூறும் பொருள்படக் கூ றியது கூறலாக்கி யுரைப்ப.

அற்றேல், முதற்பொருள் கோசர மென்றல்பொருந் தும். வாக்கு மனாதீத மென்றல் பொருந்தாது. என்னை? பிர காசித்த பொருளையும் வேறோ ராற்றா னறிதுமென வேட் கை சென்றுழி அவ்வாற்றாற் புதுவதாய்ப் பிரகாசிக்கவேண் டுதலிற் பிரகாசத்திற்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையி னென்னுமேது யாண்டுஞ் செல்லாமையானும், மனத்தோடு கூடாதவழியான்மாவுக் கறிவுண்டாத லின்மையின் வாக்கு

மனாதீதமாயவழிக் கோசரமா மாறின்மையானும் ஆன்மாவி னோடுகூடி மனமுதலிய கருவியாதலவற்றோடுகூடி யான்மா வறிதலறியு மென்றல் பொருத்தமுடைத்தாகலானென நையா யிகர் முதலியோர் கூறு மதம் பற்றி யாசங்கை நிகழ வதனை நீக்கி முதற்பொருள் வாக்குமனாதீதமாய் நின்றே கோசரமா மென வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டு முதாரணம்.

உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை
யுணருநீ தானுணரா யாயி—னுணருமுனிற்
றானிரண்டா மெய்கண்டான் றன்னா லுணர்தலாற்
றானிரண்டாய்க் காணான் றமி. எனவரும்.

நின்னா லறிவனவாகிய கருவிகளெல்லா மேற்கூறியவா ற்றா னசத்தாம்; அசத்தெனவே அசித்தாதலும் பெறப்ப ட்டதாகலி னவற்றானொரு கருவியு முதற்பொருளை யறிய மாட்டாது. அவற்றா னறிகின்ற நீதானு மதனையறியமாட் டாய் நீயாய்ந் தறிவையாயின் அங்ஙன மறியப்படும் பொரு ள்கள் போல வுணர்கின்ற நின்னின் வேறாம்; ஆகவே யதனா லுனக் காவதோர் பயனின்றாம். அற்றேல், மனாதீதமாகிய வழி யான்மாவுக் கறிவுண்டாமாறில்லை. உண்டாயினும் அதனாலறி யும் வேறாய் நின்றன்றியறிதல் கூடாதாலெனின்? அற்றா ன்று; ஆன்மாவுக் கியல்பாயுள்ள வறிவினை மனமுதலிய கரு விகள் விளக்குவன மாத்திரையே யன்றி முன்னில்லதனை யுண்டாக்குவன வல்ல வென்பது மேற்காட்டப்பட்ட தாகலி னவ்வுண்மையை யுணர்ந்தோன் சத்தாயுள்ள சிவத்தை யறி தற்கட் டன்னறிவதன்க ணடங்கி அதுவாய் நின்று அதனை யேனை யறிவு மாகலா னேனைப் பொருள்களைப் போல வத்தனி முதற்பொருளை வேறாய் நின்றறியானென்க.

இதனாற் போந்தது சத்தாகிய சிவம் பாசஞானத்தானு மல் பசுஞானத்தானு மறியப்படாது. அறியப்படுஞ் சுட்ட முதலியன போல ஆன்மாவின் வேறு பரிச்சையான் வருஞ்

சுகதுக்கங்களைப் பயப்பதன்றி யவிச்சையி னீங்கிய பெரும் பயனைப் பயவாதாகலான் ஆன்மாவறியு முண்மையை யுணர்ந் தோன் ஏனையபோல வசத்தல்லாத தனிமுதற் பொருளாக லானதனை யதனானே யொற்றித்து நின்று காண்பனென நை யாயிகர் முதலியோரை மறுத்துக் கோசரமாமாறுணர்த்தி வாக்கு மனாதீதமென்றதனை வலியுறுத்திய வாறு மென்க.

உணர்பவென்பது அகரவிற்றஃறிணைப்பன்மைப் பெய ர்ச்சொல்.

ஒன்றும் என முற்றும்மை விரித்துரைக்க.

உன்னினென்னு மின்னுருபு நீக்கப்பொருட்கண் வந் தது.

ஒற்றிரட்டியாமை புறநடையாற்கொள்க.

இரண்டாதல் வேறாதல்.

தான் அசை.

தமியையென இரண்டனுருபு விரித்துரைக்க.

உணராயாயினென ஒரு தொடராக்கியுரைப்பின் உண ராதபொருளில்லை யெனவிடுத்தல்வேண்டும். அவ்வாறன்றி யிரண்டாமென விடுத்தலுணர்பொருட்கன்றி யேலாமையின் அஃதுரையன்மையறிக.

அற்றேல், தன்னை யறிந்தன்றித் தன்னாலறிதல் கூடா மையாற் றன்னாலே தனையுணருமென்பது தன்னைப்பற்றுத லென்னுங்குற்றமா மாகலின், அவ்வாறன்றி வாக்குமனாதீத மாய் நிற்கின்ற பொருள் யோகநூலிற் கூறுந்தியான பாவ னைகளிற் கோசரமாமென்றலே பொருத்தமுடைத்தெனப் பாதஞ்சலமதம்பற்றி யாசங்கை நிகழ வதனை மறுத்துத்த னாலன்றிக் கோசரமாகா தென்பதனை வலியுறுத்துதற்கெ டுத்துக்காட்டுமுதாரணம்.

பாவகமேற் றனசத்தாம் பாவனா தீதமெனிற்
பாவகமா மன்றேன்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்

பாவித்த ருனேன்னிற் பாவகமாங் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ். எனவரும்.

நீ கூறும் பாவனை யேனைப்பாவகங்கள்போல மனமுத லியவற்றோடு கூடிநின்று பாவிக்கும்பாவனையோ அவற்றோடு கூடாது நின்று பாவிக்கும் பாவனையோ விரண்டுமின்றிப் பாவிக்கும் பாவனையோ விம்மூவகையுமின்றிப் பசித்தவ னுண்டவனுகப் பாவிக்குமாறுபோல வுணராத பொருளை யுணர்ந்ததாகவைத்துப் பாவகஞ் செய்வதாகிய பாவனையோ கூறுவாயாக வென வினவிய விந்நான்கினையு முறையே மறு த்தவாறு.

அற்றேல், ஒருவாற்றானும் பாவனைக்கெய்தாதபொருள் சூனியமாம்போலு மென்பாரை நோக்கித் தன்னருளாற் பா விப்பது பரமில்பாழெனச் சித்தாந்தஞ் செய்தார்.

ஏனைப் பாவகங்கள்போல மனமுதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும்பாவகமெனின்? அறிவினலறியப்பட்ட சுட்டாகலா னச்த்தேயாம்.

தான் அசை.

பாவகமாமென்பது பாவனை மாத்திரையே யன்றிப் பய னிலை யென்பதாம்.

பாவகத்தைப் பாவித்தலென்புழிப் பாவித்தலென்பது செய்தலென்னும்பொருட்டாய் நின்றது. "உண்ணலு முண் ணேன் வாழலும் வாழேன்" "கறைமிடறணியலு மணிந்த ன்று" என்புழிப்போலக் கொள்க.

மேலைவெண்பாவிற் றன்னென்றது தனது சத்தியோ யாகலாற் றன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாமாறியாண் டையதென விடுப்பார் தன்னருளாற் பாவிப்பதென்றார்.

தன்னருளை யறியுமாறு மதனாற்பாவிக்குமாறுமுண்மை யதிகாரத்திற் பெறப்படும்.

அற்றேல், பாவனையும் பாசஞானம் பசுஞானங்களானுவ நாகலிற் சத்தாகிய சிவ மதன்கட் கோசரமாகாதென்றதொக்கும். அங்ஙனமாயினுந் தன்னருளாற் பாவிக்கவேண்டா ஆன்மாப் பசுத்துவநீங்கிய முத்திக்காலத்திற் சிவனைப்போல முற்றுமுணர்தன் முதலிய வெண் குணங்களுமுடையனென் றாகமங்களிற் கூறுதலி னுண்டான்மாவி னறிவு சிவஞானத் தோ டொத்த ஞானமேயன்றிப் பசுஞானமன்மையா னவ்வறிவா னறியப்படுங் கோசரப் பொருளென்றலே பொருத்தமுடைத்தெனச் சிவசமவாதிமதம்பற்றி யாசங்கை நிகழ்ந்தவழி யதனை மறுத்துத் தன்னருளானன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

அறிய விரண்டல்ல ளுங்கறிவு தன்னு
லறியப் படானறிவி னுள்ளா—னறிவினுக்குக்
காட்டாகி நின்றனைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு. எனவரும்.

ஆகமங்களி னத்துவிதமேகூறுதலி னான்மாத் தன்னறிவா னறிவதற்குத் தன்னின் வேறல்ல னாகலானுஞ், சமமாதலின்றித் தூலஞ்சூக்குமம் முறையிற் றன்னறிவுக்குள்ளாய் நிற்றலிற் றன்னறிவினாலறிய வாரானாகலானுந், தன்னறிவிற்கு வியஞ்சகமாயறிவித் துயிர்க்குயிராய்நிற்றலானும், அத்தன்மையனாகிய முதல்வனைப் பசுத்துவநீங்கியவழியும் ஆன்மாவினறிவு தான் கண்டறிந்து தன்குணியாகிய வான்மாவுக்குக் கோசரமாம்படி காட்டமாட்டாது, தன்னின் வேறின்றித் தனக்குண் ணிற்றலிற்றன்னாற் காணப்படாது, தனக்குக்காட்டாகின்ற ஆன்மாவை யறியமாட்டாத கண்ணொளியைப்போல வென்பதாம்,

அல்லன் படான் உள்ளான் நின்றான் என்பனகுறிப்பேதுக்களாகலி னங்ஙன மொருதொடராகக் கொண்டுரைக்க,

ஆங்கு அசை.

அறிவினுள்ளானாகலி னறியப்படானென்க.

காட்டுமுதனிலைத் தொழிற்பெயர்.

கண்டறிந்து காட்டாதெனக்கூட்டுக.

கண்டறிதல் குழிந்தாழ்ந்த கண்ணெண்புழிப் போலச் சிறப்பின்கண் வந்த மீமிசை.

கண் முதலியவற்றை நோக்கி ஆன்மாச் சத்துச்சித்தெ ன்பதுதோன்ற மெய்யென்றார்.

கண்ணறியா மெய்யென்றதற்குக் கண்ணையறியாத வு டம்புபோலவென்றுரைப்பாருமுளர்.

உடம்பிற்கறியுந்தன்மையின்மையானும், உடம்பிற்குக் கண் காட்டாதலின்மையானு மீண்டுவமையாதற் கேலாமையி னதுபோலியுரையென்றொழிக.

அற்றேல், அத்தன்மையனாகிய முதல்வனைத்தலைப்பட் டவான்மா வம்முதல்வனோ டொன்றாய்ப் போதலேயன்றித் தானெனவேறுநிற்குமாறின்மையிற் றன்னருளா லான்மாவு ணருமென வேறுபடுத்துக்கூறுதல் பொருந்தாதெனச் சிவா த்துவிதசைவர் மதம்பற்றி யாசங்கை நிகழ்வதனை மறுத்து முத்தியின் முதல்வனொடு நிற்கு மியல் புணர்த்து முகத்தா னே தன்னருளாலுணரு மான்மாவிற் கோசர மாமாறு வலி யுறுத்துதற் கெடுத்துக் காட்டு முதாரணம்.

அதுவென்னு மோன்றன் றதுவன்றி வேறே
யதுவேன் றறியறிவு முண்டே—யதுவேன்
றறிய விரண்டல்ல னுங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம். எனவரும்.

சுத்தாகிய சிவம் மாயாவாதிகள் போல நிருவசனமாகக் கூறப்படுவதொன் றன்மையான் முத்தியினு மறிபொருள் வேறுண்டென்பது துணியப்படுமென்பார் அதுவென்னு

மொன்றன் றதுவன்றி வேறே யதுவென்றறியறிவு மாங்கு ண்டென்றும், அங்ஙனமறித லறுபற்றியொன்ருய் நிற்றற் கிழுக்கில்லையென்பார் அதுவன்றறிய விரண்டல்ல னறிவுணி ற்ற லறியுமறிவே சிவமுமாமென்றுங் கூறினுர்.

உம்மை சிவமாயுஞ் சிவமாகாமையை விளக்கி நின்றது.

அறிவுமென்ற வும்மை யிறந்தது தழீஇயது.

அதுவென்னு மொன்றன்ருகலானென வேறுப்பொரு ள்படக் கொண்டுரைக்க.

இங்ஙனமைந்து வெண்பாக்களானு முறையே வாக்கு மஞதீதமென்றல் பொருந்துங் கோசரமென்றல் பொருந்தா தென்னு மாயாவாதிகளையுங், கோசரமென்றல் பொருந்தும் வாக்கு மஞதீதமென்றல் பொருந்தா தென்னு நையாயிகர் முதலியோரையும், பாவனைக்குக் கோசரமாதலே யன்றிக் க ன்ஞலுணரு முணர்விற்குக் கோசரமென்றல் பொருந்தா தென்னும் பாதஞ்சலரையும், பசுத்துவ நீங்கியவழியான்மா வின் ஞானத்திற் கோசரமாமென்னுஞ் சமவாதசைவரையும், முத்தியிற் சிவமேயன்றி யான்மாவென வேறின்மையின் ஆ ன்மாவுக்குக் கோசரமாமாறியாண்டைய தென்னுஞ் சிவாத் துவித சைவரையு மறுத்து வாக்குமஞதீத கோசரமாய் நிற் றலை வலியுறுத்துதலி னிவ்வைந்து மொருபொருண்மேல் வந்தவாறு காண்க.

அற்றேல், பொருந்துமாற்ருேடுஞ் சிவாகமங்களோடு முரணுதலான் ஏனையோர் கூறுவன வெல்லாம் பொருள்ப டாமையி னவற்றை மறுத்தலமையும். சமவாதசைவரி லொ ருசாரார் முத்திக்காலத்தி னறுவகைக் குணங்களும் விளங் கிச் சதாசிவக்கடவுளோடொப்ப நின்றைந்தொழில் செய்வ னென்பதூஉம் அவற்ருெடு முரணுதலின் மறுக்கப்படுவ தேயாம்.

மற்றொருசாரார் கூறுஞ் சிவசமவாதம் பொருந்துமாற் றிற்றுஞ் சைவாகமங்களுக்கு மியைபுடையதுபோலத் தோ ன்றுதலி னவ்வொருசாரார் மதம்பற்றி யான்மாத் தன்னறி வானே முதல்வனையறியு மென்றல் பொருத்தமுடைத்துப் போலும். அஃதெங்ஙனமெனின்? அவர் கூறுமாறு 'ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தென' வெனவாசிரியர் உருவக முகத்தா னோதிய வான்மாவி னியல்பை, வழிநூலாசிரியர் "மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப், பின்னவனு மென்மகனீ யென்ற வரிற் பிரித்துப் பெருமையொடுந்தானாக்கிப்பேணுமாபோற், றுன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையுமறி யாது துயருறுந் தொல்லுயிரை, மன்னுமருட் குருவாகி வந் தவரி னீக்கி மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்" என உவமமும் பொருளுமாகவைத்து விளங்கக்கூறினார். கூற வே மன்னர் சாதியிற் பிறந்த மன்னவன்மகன் அம்மன்ன வனோடொப்ப எல்லாக்குணங்களு முடையவனாகியும் வேட ரிடத்தே தங்குதலா னவ்வாற்றலை யறியாது மயங்கிச் சிறு மைப்பட்டு நின்று பின்னதனை யவனறிந்து பலவகை யுபாய ங்களினாலு மவ்வேடரினின்றும் பிரித்துநீயென்மகனாகலின் நீயுநானு மொருசாதியேம் என்னோடொப்ப அரசுரிமை செ ய்யு மெல்லாவாற்றலு முடையையெனத் தெரிவித்து முடி சூட்டித் தன்னைப்போலவாக்கி யுதவி செய்தவழி முன்னி ன்ற சிறுமை நீங்கி யங்ஙனமெல்லாப் பெருமையு முடைய னாய் மீளவவனுதவியை வேண்டாதுதானே சுதந்திரனா யின் புற்று வாழ்வன்; அதுபோல ஆன்மாச் சிவனோடொப்ப முற்றுமுணர்தன் முதலிய வெண்குணங்களையுமுடையனாயும் ஐம்புல வேடர் சுழலிற் பட்டமையாற் சிவனுந்தானு மொரு சாதியெனத் தன்னாற்றலையறியாது செயற்கை வயத்தாற் சிற்றுணர்வுஞ் சிறுதொழிலு முடையனாய்ச் சிறுமைப்பட்டு நின்று, பின்பு சிவன் குருவை யதிட்டித்து நின்று சிவரிங்

கை செய்து செவியறிவுறுத்தி யவ்வைம்புல வேடரினின்று நீக்கி யென்னோடொப்ப நீயு மெண்குணங்களுமுடையை யெனத் தெரிவித்துத் தன்னைப்போலாக்கி யுதவிசெய்தவழிச் செயற்கையானாகிய சிற்றறிவு சிறுதொழில்களைவிட் டியற்கையாலுள்ள பேரறிவு பெருந்தொழில்களின் பகுதியவாகிய வெண்குணங்களுமுடையனாய் மீளவுஞ் சிவனுதவி செய்யவேண்டாமையிற் பரதந்திரநீங்கிச் சிவனைப்போலத் தன்வயத்தனாய்நின் றின்புற்று வாழ்வனென்பது பெறப்படுதலானும்; “உன்னைப் போலென்னைப் பாவிக்கமாட்டேன்” எ-ம்; “எண்குணத்துளோமே” எ-ம். பிறாண்டு மான்றோ ரெல்லா மிவ்வாறே கூறுதலானுஞ், சிவாகமங்களின் ஆண்டாண்டுச் சிவசமமாதலே முத்தியென்றோதுதலானும் முத்தனாகிய வான்மாத் தன்னறிவானே சிவ முதலிய வெல்லாப் பொருளையு மறிவனென்பது.

இன்னு முத்திபெற்ற வான்மாக்கள் சிவனோடொப்பர்; மலமுழுவது நீங்கி விளங்கிய சிற்சத்தியுடைய ராகலின். யார் யார் சிவனோடொப்பரல்லர் அவர் முழுவது மலநீங்கிய சிற்சத்தியுடையரல்லர். சகலர் முதலியோர்போலும் என்னும் வழியளவையானுஞ் சிவசமமாதலே முத்தியென்பது பெறப்படும். இன்னு முத்தியிற் சிவசமமாகாதவழிச் சுதந்திரமுடையனல்லனாம். ஆகவே “பரதந்திரியங் கரைகழி பந்தம்” என ஞானாமிர்தத்திற் கூறுதலானுஞ்; சிவாகமங்களினு மிவ்வாறே கூறுதலானு முத்தியும் பெத்தமெனப்பட்டு வழுவாம். அற்றேல், முத்திபெற்ற வான்மாக்கள் சிவசமமாயவழிச் சிவனைப்போல வைந்தொழில் செய்வரெனல்வேண்டும். செய்வரெனக்கொள்ளின் அநேகேசுரவாதமாய் முடியுமாலெனின்? முடியாது ஐந்தொழில் செய்யுங்கருத்தாவாதற்றன்மை சிவனுக்குக் கருணையானுள்ளது. முத்திபெற்ற வான்மாக்களுக்குத் தள்ளப்படாமையானுள்ளதாகலான் ஐந்தொ

ழில் செய்தற்குச் சிவனொருவனே யமையுமாகலினவர் மிகை படச்செய்யுமா றின்மையானென்பது. இக்கருத்தானன்றே "உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக்குரிய னுயிர்தானுஞ் சிவா னுபவ மொன்றினுக்கு முரித்தே" யென வழிநூலாசிரியரு மோதினர். ஆண்டுச் சிவானுபவமென்றது ஆகுபெயராற்றன் னுடையதாகி யச்சிவத்துவத்தை யனுபவித்தலென்றவாறும். இன்னும் நூல்களி னாண்டாண்டுச் சிவசமமாதல் முத்தியென் பதனோடு முரணுவனவாகத் தோன்றுவனவெல்லாம் முரணா தவாறு ஆகுபெயராகவைத்துப் பொருள்கொள்ளப்படுமென் றிங்ஙனஞ் சைவரிலொருசாரார் உருவசமவாதிகளிற் சிறுபா ன்மை வேறுபடப் புதிதாக வொருமதங்கொண்டு தாங்கள் கொண்டதற்கேற்பச் சிவாகமவாக்கியங்களையுந்தமக்கு வேண் டியவாறெல்லா மிடர்ப்படுத்தி நலிந்து பொருள்கொண்டுரை செய்து தாமே தம்மில் வியந்துகொள்வாராகலா னண்டிழுக் கென்னையெனின்? நடுவுநிலைமை யுடையராய்ச் சிவாகமங் களை யோதியுணர்ந்தார்க்கு அவருரைப்பனவெல்லாம் இந்திர சாலம்போல ஆரவாரமாத்திரையேயன்றி நிலைபெறமாட்டா வாகலி னவையொரு பொருளாகவைத்து மறுக்கற்பாலன வல்ல வாகலானும்' எந்தன்மையராயினுஞ் சிவதீக்கை யுடை யராய்ச் சிவாகமத்தின் விதித்தவா றொழுகி யகச்சமயத்தினி ற்றலின் அவரைப்பழிக்க லாகாமையானும் அவரறிவு அவ்வ ளவிற்றென்று போதலே பொருத்தமுடைத்தென்றொழிக.

அற்றேல், வழியளவைக்கு மாகமவளவைக்கு மிவை யனபோல வித்துணை வலியுறுத்தி யவருரைத்தனவெல்லா மாரவாரமாத்திரையாய்ப்போமாறியாங்ஙனம் அதனையறிதுங் குறுகுல முடையே னென்னையாயிற், சிறிது காட்டுதும். மன்னவன் மகனை யான்மாவுக் குவமை கூறியதுபற்றிச் சிவ சமமாதல் முத்தியெனக்கொண்டாய் சுன்டு வினவுதும். மன் னவன் மகன் வேடரி னீங்கி மன்னவனைச் சார்ந்தவழி மன்ன வனேனவனின்று பணிந்தொழுகுவானோ மன்னவனோடொ

ப்பத் தன்னாணையுடன் செலுத்தியரசாட்சி செய்வனே கூறுவாயாக. மன்னவனேவலினின்று பணிந்தொழுகுவனெனிற் றிட்டாந்திகப்பொருளினு மவ்வாறுகொள்ளப்படும்; படவே யஃதெம்மனோர் சித்தாந்தமாகலி னுனக் கவசித்தாந்தமாம். இனி மன்னவ னேவல்வழிநின் றரசாட்சி செய்யினும் அது பரதந்திரமாவதன்றிச் சுதந்திர மன்மையானுனக்கேலாது. அதிகாரத்தைத் தன்மாட்டு வைத்து மன்னவன் வறிதேயிருப்பத் தானரசாட்சி செய்வனெனினுமது பாசுபதர் மதமாய் முடியுமாகலி னுனக்குச் சிந்தாந்த மன்று. மன்னவனே டொப்பத் தன்னாணையுடன்செலுத்திச் சுதந்திரமா யரசாட்சி செய்வனென்னில் அஃதநேகேசுரவாதிமதமாய் முடியும். அன்றியுந் தந்தையைப் பணிந்தொழுகலின்றி யவன் செய்த நன்றியுமறந்து அவனோடொப்பத் தானு மரசாட்சி செய்வனுயி னவன் நன்மக்களுள் வைத்தெண்ணப்படாமையி னீண்டைக் குவமையாதல் செல்லாது. இனிப் பணிந்தொழுகுதலுமின்றி யரசாட்சி செய்தலுமின்றித் தனக்கு வேண்டும் போகங்களை நுகர்ந்துகொண்டு சுதந்திரனு யிருப்பனெனினும் "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச், செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பனவாகலின்வேடரொடு கூடி மயங்கிச் சிறுமைப்பட்டு நின்ற தன்னையவரினீக்கிப் பெருமையொடுந் தானுக்கிப் பெரியதோ ருதவிசெய்து தந்தையு மாயினானை அவனேவல்வழி நின்று பணிந்தொழுகாது தானும் மன்னவனேடொப்பச் சுதந்திரமாய்த் தன்னாணையுடன்செலுத்தி யரசாட்சி செய்யு மகனேடொப்பவனேயாகலான் ஈண்டைக்கேலாதென் றொழிக.

அஃதேல், அநாதிமுத்தனாகியசிவனும் ஆதிமுத்தனாகிய ஆன்மாவும் ஒருசாதியென்பதுணர்ந்து கோடன்மாத்திரைக்கே மன்னவனையு மவன் மகனையு மொருபுடையொப்புமை பற்றி யெடுத்துக்காட்டியதெனின்? நன்றேகூறினாய்; ஒரு

சாதிமாத்திரையா னுனக்குப்போந்ததென்னை மன்னவனு மவன்மனைவியும் மன்னர்சாதியேயாயினும் மன்னவன் செய்யு மரசாட்சி யவன்மனைவியுஞ் செய்வாளென்றற்குரிமை யின்மையினதுபோலச் சிவனு மான்மாவுஞ் சித்தாதல்பற்றி யொருசாதியாயினும் சிவனோடொப்ப வைந்தொழில்செய்யு முரிமையுடையனல்ல னென் றொழிக.

இன்னு மன்னவன் மகன் ஏனையோர்போல ஆணையிற் பிறழுதலின்றி யந்தரங்கவுரிமையுடைமையி னம்மன்னவன் செய்யுந் தண்டத்தை நோக்கிச் சுதந்திரனே யன்றிப் பரதந்திரமுடைய னல்லனாயினு மன்னவனாணைவழிநிற்கு முரிமையுடைமையான் மன்னவனை நோக்கிப் பரதந்திரனே யாவன்; அதுபோல முத்தனாகிய வான்மாவும் ஏனையான்மாக்கள்போலப் பந்தமுற்றுப் பிழைபடுதலின்றி யிறைபணிவழுவாது நிற்கு மந்தரங்க வுரிமையுடைமையா னிலயம் போக மதிகாரமென்னு மவத்தைபற்றிப் பொதுவியல்பி னின்ற முதல்வன் செய்யு மைந்தொழிலை நோக்கிச் சுதந்திரனேயன்றிப் பரதந்திரனல்லனாயினும் இறைபணி வழுவாது நிற்றல்பற்றி யிலய முதலியவற்றினீங்கித் தன்னியல்பி னின்ற முதல்வனை நோக்கிப் பரதந்திரனே யன்றிச் சுதந்திரனல்லனென்றறிக.

இஃதுணர்ந்து கோடற்கன்றே சருவஞானோத்தரத்திற் சிவனென்றும் பதியென்றும் வேறுவைத் தெண்ணியதூஉ மென்க.

ஆகமங்களிலொரோரிடத்தி லான்மாப் பெத்தத்திற் பரதந்திரன் முத்தியிற் சுதந்திர னெனவும், பரதந்திர னாதல் பற்றி மலவுண்மை துணியப்படுமெனவுங் கூறுவனவெல்லாம் பொதுவியல்புபற்றிப் பதியென்நின்ற முதல்வன் செய்யு மைந்தொழிலின்கட் பட்டுநிற்றலு மதற்கினகப்படாது நிற்றலும்பற்றியே பிறிதில்லை யாகலி னதுபற்றித் தன்னியல்பி னின்ற முதல்வனை நோக்கியுஞ் சுதந்திரனாவன்போலுமென

மலைபற்க. இவ்வுண்மை யுணராததூஉமன்றி, விஞ்ஞானதீக்கையின் உடல் பொருள்களோடொப்பச் சற்குரவன்கையிற் றானஞ்செய்தளித்துந் தானஞ்செய்தளித்த பொருளென்றறியு மறிவு சலியாமைப்பொருட்டு நாளு நாளுஞ் சிவபூசையிற் செபங்கன்மங்களோடொப்பச் "சிவோதாதா" வென்னு மந்திரமோதி யான்மாவையுஞ் சிவனுடைமையாகப் பூநீரொடுந் தானஞ் செய்தளித்துந், தான் சுதந்திரனே சிவனுடைமையல்லனெனப் பிணங்கிப் பரமசற்பாத்திரத்திற் றானஞ்செய்த பொருளை யபகரிக்க நினைக்கும் நினைவுடையோரோடு பேசினு முய்தியில்லதோர் கொடியபாவமா மென்றொழிக.

தன்னைத் தானஞ்செய்தலாவது, தான் சிவனுக்குப் பரதந்திரனென்றறிந்து அவனருளாலல்ல தொன்றையுஞ் செய்யானாகி நிற்றலே யாமென்றுணர்க.

அற்றேல், மலவாசனை நீங்குதற்பொருட்டுத் தன்னைத் தானஞ் செய்ததாகப் பாவித்தன்மாத்திரையே யாகலினதுபற்றி யிழுக்கென்னை யெனின், அங்ஙனமாக அப்பாவனை போலியோ வுண்மையோ வெனக்கடாயினார்க்கு உண்மையெனிற் பரதந்திரனாதற் கிழுக்கில்லை. போலியெனிற் பசித்தவனுண்டான்போல வெத்துணைப் பாவகஞ் செய்யினும் பசிநீங்குதல் கண்டிலமாகலி னதுபோலப்போலிப்பாவனையான் மலவாசனை நீங்குமாறின்மையின், அது வீண்டொழிலாய் முடியும். இன்னும் பாவனை போலியென்பார்க்குப் பாவனையின் வழி யவர் செய்யுமந்திரங் கிரியைகளும் போலியாய்முடியும் முடியவே, பாவனை முதன்மூன்றனும் அவர்செய்யுஞ் சிவதீக்கையுஞ் சிவபூசையுஞ் செபந்தியானமுதலிய வெல்லா வாசாரங்களு மங்ஙனம் போலியாச் செய்வது, தமக்கானும் பிறர்க்கானும் பயன்படுமாறின்மையின் மாணாக்கரை வஞ்சித்துப் பொருள்கொண்டு தம்முடம்பை யோம்புதற்பொருட்டுச் செய்யு மாரவார மாத்திரையே போலுமென்றொழிக.

அற்றேல், கருடபாவனை செய்வோன் கருடனாதல் கண்டிலம். அப்பாவனையால் விடந்தீருதல் கண்டாமாகலிற் போலிப்பாவனையும் பயன்றருமென்பது பெறப்படுமாலெனின்? அறியாது கூறினாய்; மாந்திரிகன் றன்னுடம்பைக் கருடனாகப்பாவிப்பனல்லன். மற்றென்னையோவெனிற்? கருடனுக்கதிதெய்வமாகி நிற்கு மந்திரமூர்த்தியாகத் தன்னான்மாவைப் பாவிப்பன். அங்ஙனம் பாவித்தவழிச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கு மியல்புடைய ஆன்மா ஆண்டம்மந்திரரூபியாய் நிற்றற் கிழுக்கின்மையினது பற்றி யாசங்கையின்மையுணர்க.

இன்னும் பாவனைகளு முபாசனைகளுங் கற்பித்துக்கொண்டு செய்யும்போலியென்றல் மாயாவாதி கூறுங் கூற்றாகலினது சைவசித்தாந்தத்திற்கேலாமையறிக.

அற்றேல், ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்குமியல்புடையதென்றற்கும், அதனானே தன்னாற் கணிக்கப்படு மந்திரரூபியாய் நிற்பனென்றற்கும், விலங்குபுள்ளுக் கதிதெய்வமாய் நின்றதிட்டிக்கு மந்திர முண்டென்றற்கும், பிரமாண முண்டாயி னன்றே யதுபற்றிக் கருடபாவனை முதலாயின உண்மைப்பாவனை யென்று கொள்ளப்படுமாகலி னிவற்றிற்குப் பிரமாண மென்னையெனில்? சருவஞானோத்தர முதலிய வாகமங்களே பிரமாணமாமென்றறிக.

அஃதெங்ஙனமெனிற் காட்டுதும். சருவஞானோத்தரத்திற் பசுவும், பாசமும், அதிகாரஞ்செய்து நிற்பதாகிய பதியும், அதிகாரத்தினீங்கி நின்ற தனியியல்பினிற்பதாகியசிவமும் எனப் பதார்த்தம் நான்கென்றெடுத்துக்கொண்டு அவற்றிற்குத் தனித்தனி யிலக்கணமு முணர்த்திப் பின்பதனோடொப்ப வுருகுகைக்கடைதற்கு அங்ஙனம் அப்பிரமேயமா பொருந்து நிவர்த்திக்கப்படாதது பதித்துவமாய் வியாபகமாய்த் தனியியல்பினிற்குஞ் சிவத்தையறியுமா றெங்ஙனமென் றாச

ங்கை நிகழாமைப்பொருட்டுச் சிவப்பொரு ளத்தன்மைத்
தாயினு மதனை யறிதற்குபாயங் கூறுகின்றாம்; அவ்வுபாயம்
வாதிகளெவராலு மறியப்பட்டதன்றாய்க் குருபரம்பரையி
னறியப்படுவது. ஒருவர்க்கும் யாங்கூறினே மல்லே மதனை நீ
கேட்பாயாகவென் றதன்பெருமை யெடுத்துக்காட்டி. அநாதி
முத்தனாய் நின்ற சிவனுக்குரிய தன்மைகளு மத்தன்மைய
னாகிய சிவனே நானெனச் சிவோகம்பாவனை செய்யுமாறும்
அவ்வாறன்றித் துவிதபாவனை செய்தாற் படுமிழுக்கும் விள
ங்க விரித்துணர்த்தித் துவிதபாவனையைக் கைவிட்டுச் சிவோ
கமென அத்துவிதபாவனை செய்வோன் ஏகதேசமாய் நின்ற
றிவதாகிய சிற்றறிவினீங்கிமுழுவதும் வியாபகமாய் நின்றறி
வதாகிய முழுதுணர்வு விளங்கிச் சிவனை யறிந்து தான் சிவ
னே யாவனெனச் சிவனை யறிதற்குபாயங் கூறிப், பின்னது
கேட்ட வறுமுகக்கடவுட்கு மேலுத்தேசங் கூறும் வழியு
மிலக்கணங்கூறும்வழியுஞ் சிவனுமான்மாவுமிருபொருளென
வைத்தோதுதலிற் சிவனின் வேறாகிய வான்மாச் சிவோக
மெனப் பாவிக்கு மத்துவிதபாவனையாற் சிவனேதானாக ஐக்
கமாமா றெங்ஙனமென் றாசங்கை நிகழாமைப்பொருட்டு ஆ
ன்மாத் தன்னியல்பை யறியாது பசுத்துவத்தோடு கூடியவ
ழிப் பசுவாய் நின்று ஏதுபோலத் தன்னையறிந்து சிவத்துவ
த்தோடு கூடியவழிச் சிவமாய்நிற்பதற் கையமில்லையாகலாற்
றன்னையுந் தலைவனையும் பராபரபேதத்தானுந் தூலசூக்கும
பேதத்தானு மெப்பொழுதும் பயின்றறிதல்வேண்டுமென்
றோதி, அற்றேல், ஆன்மாவினியல்பு தனித்துநில்லாது பசுத்
துவத்தோடுகூடிப் பசுவெனவுஞ் சிவத்துவத்தோடுகூடிச்
சிவமெனவும் பலதன்மைப்பட்டு நிற்குமாறென்னையென்று
மீளவு மையுறுமைப்பொருட்டு "அதவா" வென்றெடுத்துக்
கொண்டு தெளிவுபிறவாது மீளமீள மயங்குதற்கேதுவாய
வார்த்தைகளை விகற்பித்திங்ஙனம் பலவாச்சொல்லியென்னை
யெனக்கூறி யொழித்தெல்லாச் சங்கைகளுநீங்கித் தெளிவு

பிறத்தற்கேதுவாய்த் தொகுத்தொருவார்த்தையினுணர்த்து
வான் புகுந்து............................................................
........................................................................
என்றருளிச்செய்தார். இதன் பொருள் ஆன்மா வங்ஙன
மிருதன்மைப்படுமாறென்னை யென்றையுறுதுகேள் எல்லாப்
பொருளின்றன்மைகளு மான்மாவுக்குளவாம். அஃதெங்ஙன
மெனின், ஆன்மா யாதனை யாதனைப்பற்றினன் அதனதன்
சுபாவமே தன்சுபாவமாந் தன்மையுடைமையா னதுவதுவா
யே நிற்பன். என்றிங்ஙன மான்மாவை யறியுமாறு தொகு
த்துக் கூறினுங் கண்டுகொளென்பதாம்.

இங்ஙனந் தொகுத்துணர்த்திப் பின்னு மிவ்வாறறியு
மான்மஞானத்தின் பெருமையு மதனாற்பெறும்பேறு மதனை
யறிதற் குபாயமும் அறிந்தானது பெருமையும் விரித்துக்
கூறி யிதற்கு மேற்சொல்லற்பாலது சிறிதுமில்லை யாகலான்
மனோவிகற்பங்களை யொழித் திங்ஙனந் தன்னுண்மை யறிந்
துபாயங்களைச்செய்வோனிங்கே சீவன்முத்தனு யகம்புறமெ
ங்கும் வியாபித்துத் தற்றருமதருமியாய்த் தற்றருமமெனப்
பட்ட முற்றுணர்தன் முதலிய வெண்குணங்களு முடையனு
யங்ஙனஞ் சிவத்துவத்தைப் பெற்றுச் சிருட்டிப்படுந் தன்
மை முதலியன வின்றிச் சிவசம மாவன். இத்தன்மையுடை
யானுக்குத் தவஞ் செபந்தியானம் பூசை முதலிய வொன்று
ம் வேண்டா சத்தியஞ், சத்தியஞ், சத்திய முக்காலுஞ் சத்
தியம் இதற்கு மேலறியற்பாலன வொருநூலினுமில்லையென
வலியுறுத்திப், பின்னு மான்மாவெல்லாவற்றினு மதுவது
மாய் நிற்குமாற்றைப் பூதான்மா முதலறுவகைப்படுத்து விரி
த்தின்னுங் கூறுதுங்கேட்பாயாக வென்றெடுத்துக்கொண்டு
பூதபரிணாமமாகிய வுடம்பினியல்புகளும், ஆன்மா வவ்வுடம்
பைப்பற்றியவழிப் பூதான்மாவென நிற்குமாறும, அகத்தின்
கண்ணவாகிய வாக்குக்களினியல்பும் ஆன்மா வவற்றைப்பற்
றி யந்தரான்மாவென நிற்குமாறும், சூக்கும, பூதமுதலிய

தத்துவங்களினியல்பும்,ஆன்மா வத்தத்துவங்களைப்பற்றியவ ழித் தத்துவான்மாவென நிற்குமாறும், தத்துவங்களுள்ளு மான்மா எவ்வெத்தத்துவங்களைப் பற்றின னவ்வத்தத் துவ மயமேயாய் நிற்பனென்பதூஉம், ஆன்மாப் போத்திரு த்துவ மெய்திப் புருடதத்துவமென நிற்குமியல்பும், அங்ங னம் புருடதத்துவமாய் நின்று பிரகிருதி குணங்களைப் பற் றி யின்பத்துன்பங்களை நுகரும்வழிச் சீவான்மாவெனநிற்கு மாறும், சுரர் நரர் விலங்கு புள்ளுத்தாபரம் எல்லாவற்றிற்கு மதிதெய்வ மந்திரங்களுளவெனவுந், தாபரசங்கமங்களுள் ம ந்திரங்களா னதிட்டிக்கப்படாத வுயிர்களில்லை யெனவும், மந் திரங்களை யுச்சரிக்கு முறைமை யிவ்வாறெனவு, மிவ்வாறு மந்திரங்களினியல்பும்,அவ்வம்மந்திரங்களைக் கணிப்புழி யான் மாப் படிகம்போல வவ்வம்மந்திரமயமேயாய் மந்திரான்மா வெனநிற்குமாறுந், தன்னின் வேறாகிய விவ்வைவகைப் பெ யரு நீங்கியவழி, மேற்கூறிய வத்துவிதபாவனையாற் பரமா ன்மாவென நிற்குமாறும், விரித்துந் தொகுத்துங்கூறி ஆன் மாச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்குமென மேற்கூறியதனை மீளவும் வலியுறுத்தி யிவ்வறுவகையு ளேனைய வெல்லா மு பாதிபற்றிச் செயற்கையாதலும், அத்துவிதபாவனையாற் பர மான்மாவென நிற்றல் சித்தென்னுஞ் சாதிப்பொதுமை பற் றிய வியற்கையாதலுந் தெரித்துணர்த்தி யிங்ஙனமாகலா னத்துவித பாவனையுடையோன் ஞானக்கண்ணாற் சிவனை யா ன்மாவிற்கண்டு முழுதும் வியாபகமாய் நின்றறிவதாகிய மு ற்றுணர்வுடையனா யவ்வப்பொருளியல்பெல்லாமறிந்து மல வாசனைநீங்கிக் கேவலமாய்நின்று முடிவுகாண்கில்லாப்பேரின் பத்தைப் பெறுவனென முடிந்தது முடித்துக்காட்டி யிங்ங னஞ் சிகண்டருத்திரநாயனா ரறுமுகக்கடவுளுக்குச் சறுவஞா னோத்தரத்தின் ஞானபாதஞ் செவியறிவுறுத்தருளினார். இ ன்னு மிதனை யீண்டுரைத்தவாறு பற்றி விரித்துரைத்துக் கொள்க.

இவ்வாகமத்து ளித்துணை வலியுறுத்திச் சிவனோடொற்றுமைப்பட நின்று தன்னைப் பாவிப்பதாகிய வான்மஞானமொன்றே யப்பிரமேயமாய் ஒன்றோடு முவமிக்கப்படாது நின்ற அச்சிவனையறிதற் குபாயமென்று, மங்ஙனம் பாவிக்குமவ,னச்சிவனோடொற்றுமைப்பட்டுப் பேரின்பத்தைப்பெறுவனென்றும், அசுத்தப்பொருளோடொற்றுமைப்பட்டுநின்ற வான்மாச் சுத்தப்பொருளோ டொற்றுமைப்பட்டு நிற்குமாறெங்ஙனமென்னு மையநீக்குதற்குத் தொகுத்தொருவார்த் தையாற் கூறுதுமென்றெடுத்துக்கொண்டு ஆன்மா எதனையெதனைச் சார்ந்தா னதனதன் சுபாவமே தன்சுபாவமா யதுவதுவாய் நிற்பனென்று, மிங்ஙனமாகலாற் சிவனோடொற்றுமைப்பட்டு நிற்புழிச் சிவன் குணங்களாகிய வெண்குணங்களுந் தன்றன்மையாகக்கொண்டு சிவனேயாய் நிற்பன். இதுவே சிவத்துவத்தைப் பெறுதலென்றும் இதற்குமேலறியற்பாலன வொருநாலினுமில்லை முக்காலுஞ் சத்தியமென்று வலியுறுத்தியும், ஆன்மா எல்லாவற்றினு மதுவதுவாய் நிற்குமாற்றை யின்னும் விளங்கக் கூறுதுமென் றெடுத்துக்கொண்டு பூதான்மாத்’ தத்துவான்மா, மந்திரான்மா, அந்தரான்மாச், சிவான்மா, பரமான்மாவென வறுவகைப்படுத்து அவ்வவற்றிற்கூடியவழி அவ்வப் பெயர்பெற் றதுவதுவாய் நிற்பனென ஆண்டாண்டு நிற்குமாறு விரித்துணர்த்தியும், படிகத்தை யுவமைகூறியு, மிங்ஙன மேனை யாகமங்கள்போலப் பொருள் கவர்ச்சிப்படுதற் கிடங்கொடாத வண்ண மறுமுகக்கடவுண்மாட்டுவைத்த கருணைமிகுதியா னங்கையி னெல்லிக்கனிபோல வான்மாவி னியல்புவிளங்க வுணர்த்திப் பலகாலும் வலியுறுத்தி யெல்லா வாகமங்களினு மிது சிறந்ததென்பது தோன்றச் சருவஞானோத்தர மென்னப் பெயருமிட்டருளிச்செய்த சீகண்டருத்திரக் கடவுளின் றிருவுளக்குறிப்பொடு முரணாத் தமக்கு வேண்டியவாறே யிவ்வாகமத்திற் கூறப்படும் வாக்கியப்பொருளை யெல்லா மிடர்ப்படுத்தி நலிந்து பொருள்கொ

ண்டுரைசெய்வாருமுளர். அவருரைபோலி யென்பது சொற்கிடக்கை முறையானு மேற்பாயிரத்துட் கூறிய நியாயத்தானும் விளங்கக்கிடந்தவா றறிக.

இன்னு மதமு மறுப்புமாக வைத்தோதப்படும் பவுட்கரம், மதங்கம், மிருகேந்திரமுதலிய சிவாகமங்கட்குச் சுபக்கம் பொதுவகையாற் கூறிவைத்துப் பலவாற்றானும் பரபக்கங்களை மறுப்பது மாத்திரையே கருத்தென்பதூஉமவ்வாகமங்களானே பரபக்கங்களினுளவாகிய வையப்பாட்டி னீங்கிச் சுபக்கத்தைச் சிறப்புவகையானறிய லுறுவார்க்குத் தூலாருந்துதி நியாயம்பற்றி யதனைச் சிறந்தெடுத் தோதுத லுபதேச மாத்திரையானுணர்த்துவனவாகிய சறுவஞானோத்தரந் தேவிகாலோத்தர முதலிய சிவாகமங்கட்குக் கருத்தென்பதூஉம், இங்ஙனமாகலாற் பவுட்கர முதலியவற்றி னோதப்படுஞ் சுபக்கப்பொருள் சறுவஞானோத்தர முதலியவற்றின் பொருள்பற்றியே தெளிந்துகொள்ளப்படுமென்பதூஉ, மாறிக்கொள்ளின் வழுவாமென்பதூஉ மவ்வச்சிவாகமங்களி னியல்புநோக்கி வன்மை மென்மை பற்றி யுணர்ந்துகொள்க.

இன்னும் பவுட்கரத்திற் காட்சிப்பிரமாணத்தினியல்பு கூறும்வழி இந்திரியத்திற்கும் விடயத்திற்கு முளவாகிய சம்பந்தஞ் சையோகமுத லறுவகைப்படுமென நையாயிகர்மதம் பற்றிக்கூறி யுதாரணமு மவ்வாறே காட்டப்பட்டன. ஆங்காரத்தின் காரியமாகிய சோத்திரத்திற்கும் ஆகாயத்தின் குணமாகிய வோசைக்குஞ் சமவாய சம்பந்தங்கூறுதல் மேற்பாசபடலத்துக் கூறிப்போந்ததனோடு முரணுதலி னது சித்தாந்தமன்று; பிறர் மதம்பற்றிப் பொதுவகையாற் கூறியதென்பதுனக்குமொட்பமுடிந்தது. குணகுணிகளுஞ் சாதிவடிவுகளுந் தம்மின் வேறல்லவென்பதூஉ, மாண்டுக்கூறிப்போந்தமையின் ஈண்டு வேற்றுமைப்படுத்துக் குடவுருவத்தைக் கண்காணுங்காற் சையுத்தசமவாயமென்றும், உருவத்தன்

மையைக் காணுங்காற் சையுத்தசமவேதசமவாய மென்று மோதியதூஉஞ் சித்தாந்தத்திற் கேலாமையிற் பிறர்மதம்பற் றிப் பொதுவகையாற் கூறியதே யாமெனக் கொள்ளப்படும். சுத்தமாயையி னுண்மைக்குப் பிரமாணங் கூறும்வழி சுத்தா த்துவாவிற் கன்மமில்லையெனச்சாதித்தது, பிறர்மதம்பற்றிப் பொதுவகையாற் கூறியதே யாமென்பது இருவினையதிகரண த்திற் காட்டினும். இன்னோரன்னவையெல்லா முபசாரம் பற்றிப் பொதுவகையாற் கூறப்பட்டனவன்றிச் சித்தாந்த மல்லவென்ப துனக்கு முடம்பாடே யாமாகலிற் சுபக்கப் பொருளைப் பொதுவகையானாட்டிவைத்துப் பலவாற்றானும் பரபக்கங்களை மறுத்தற்பொருட்டே யெழுந்த சிவாகமங்கள் பற்றிப் பொருளுண்மை தெளியப்படாதென்பதூஉ, மவற் றையு முன்னொடுபின் மலைவற வுய்த்துணர வல்லார்க்குச் செ ம்பொருளினிது விளங்குமென்பதூஉம், பரபக்கங்களைச் சிறி துந் தீண்டாது சிறப்புவகையாற் சுபக்கமாத்திரையே கூறுத ற்பொருட் டெழுந்த சறுவ ஞானோத்தர முதலாயவற்றின் அங்ஙன முய்த்துணர வேண்டாது சித்தாந்தப்பொருளினிது விளங்குமென்பதூஉங் கண்டுகொள்க.

அற்றாகலி னன்றே பவுட்கர முதலியவற்றின் இத்து ணை வலியுறுத்தி யெடுத்துக்கொண் டோதாததூஉஞ், சறுவ ஞானோத்தர முதலியவற்றி னிதற்கு முன்னொருவர்க்குங் கூறினே மல்லேம் அதனை நீ கேட்பாயாகவெனவும், இதற்கு மேற்சொல்லற்பாலன வொருநூல்களினுமில்லை யெனவுந் தெ ளிவு பிறவாமைக் கேதுவாய்ப் பலபடச்சொல்லி, யென்னை யென் றெடுத்துக்கொண்டு சார்ந்ததன் வண்ணமாய் நிற்றல் ஆன்மாவினியல்பா மிங்ஙனமான்மாவினிலக்கணந் தொகுத் துரைத்தா முணர்ந்துகொள்ளெனவுஞ், சத்தியஞ்சத்திய முக் காலுஞ் சத்தியமெனவும் இத்துணைவலியுறுத்தியோதியதூஉ மென்க.

அற்றேல், இங்ஙனங் கூறியவாற்றாற் சர்வஞானோத்தரத்திற்குச் சொற்கிடந்தவாறன்றிவலிந்து பொருள்கோடல் பொருந்தாதென்ற தொக்கும். ஏனையவெல்லாஞ் சொற்கிடந்தவாறே வேறுபொருள்படாவாயினு மாண்டுத் தற்றரும தருமியென்றது தற்றருமத்தோடொத்த தருமத்தையுடையனென வேறுபொருள்படுமென்றற் கிழுக்கென்னையெனின்? அறியாது கூறினாய்; அங்ஙனம் பொருள் கொள்ளிற் படிகம் போலத் தன்னாற் சாரப்பட்டபொருளின்றன்மையே தன்றன்மையாகக் கொண்டதுவதுவாய் நிற்பது ஆன்மாவினிலக்கணமெனத் தொகுத்தொருவார்த்தையின் விளங்கமேலோதிய வாக்கியத்தோடுமுரணுதலை மறந்தாய்போலும். இன்னுமான்மாச் சார்ந்ததன் வண்ணமாய் நின்றறிவன் ஒன்றறியும் வழி மற்றொன்றனையறியாமையின்; யாவன்சார்ந்ததன் வண்ணமாகாது நின்றறிவா னவனொன்றறியுங்கால், மற்றொன்றனையறியாதா னல்லன் சிவன்பேர்லு மென்னும் வழியளவையும் இவ்வாகமவளவையை வலியுறுத்தியவாறுகாண்க.

இத்துணே தற்றருமதருமியென்றதும் பின்னதனையெண்வகைப்படுத்தோதியதூஉம் மிருகேந்திரத்திற்கலை முதலியவற்றைச் சிற்சங்க சித்தென்றதுபோல வைத்துப் பொருள்கோடலே பொருத்தமுடைமை யறிக.

இன்னுந் தற்றருமதருமி யென்பது தற்றருமத்தாற் றருமியென வேற்றுமைத்தொகைப் பொருள்படாது, தற்றருமம்போலுந் தருமத்தையுடையனென் றன்மொழித்தொகைப்பொருள் படுமாயின் ஆண்டுத்தற்றருமதருமா வென நிற்பதன்றி அன்மொழித்தொகைமே லுடைப்பொருள்விகுதி வாராதென்னும் வடமொழி வியாகரணவிதியொடு முரணித் தற்றருமதருமி யெனவுடைப் பொருள் விகுதிபெற்று நிற்றல் பொருந்தாமையிற் சொல்லியல்பானும் அது பிறிது பொருள்படுதற் கேலாமையறிக. அற்றேற் சார்ந்ததன் வண்

ணமாய் நிற்றல் ஆன்மாவினியல்பன்று செயற்கை யென்றற்படுமிழுக்கென்னையெனின்? அவ்வா றோதாமையானுந், செயற்கை யின் றோதுதற் கோரிணை யின்மையானுஞ், செயற்கையாயவழி யத்துவிதபாவனையா லிருபொருளொற்றுமைப்பட நிற்ற லெவ்வாறென மேலோதியதுபற்றி நிகழுமாசங்கைக்கு விடையாகாமையானுஞ், சார்ந்ததன் வண்ணமாய் நிற்கு மாற்றைப் பூதான்மாமுதற் பரமான்மா விறுதவறுவகைப்படுத்தின்னும் விரித்துக்காட்டுகின்றேமென வியற்கை செயற்கை யிரண்டினுஞ் சேறற்குரிய விலக்கணமாகவதனைக் கூறுதலானும், மலத்தானாய செயற்கை யறியாமையாதலுங், கலை முதலிய கருவிகளானாய செயற்கையேகதேச வறிவாதலு மாத்திரையே யாகலின், இவற்றின் வேறாகிய சார்ந்ததன் வண்ணமாந்தன்மை யிவைபோல மலமுதலியவற்றானாகிய செயற்கை யென்றற்கோரிணை யின்மையானும், அஃதான்மாவினியல்பென்ப தன்றிச் செயற்கை யென்றற்கேலாமையறிக.

அற்றேல், அவ்வவற்றின் குணமே தன்குணமாதலன்றித் தனக்கென வேறுகுணமில்லைபோலு மெனின்? ஆன்மாவுக்கு விசேடகுணமில்லையாயிற் குணகுணிகட்கு வேற்றுமையில்லை யென்பது மேற்காட்டுதலிற் குணமில்வழிக் குணியுமில்லை யெனப்பட்டுச் சிவாத்துவித மதமாய்முடியு மாகலி னதுபொருந்தாது. படிகத்திற்குச் சார்ந்ததன் வண்ணமாதல் மாத்திரையேயன்றி யதனைப்பற்றுந் தன்மையுங் கண்ணுக்குச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்றன் மாத்திரையேயன்றி யவ்வாறு நின்றவ்வப்பொருள்களைக் காணுந்தன்மையும் வேறுளவாயினாற்போல ஆன்மாவுக்குச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்றன் மாத்திரையேயன்றி யவ்வாறு நின்றவற்றையறியுந்தன்மையாகிய விசேடகுண மதற்றின் வேறுண்டென்க. இவ்வுண்மை விளங்கப் புடைநூலாசிரியரும் " இ

னொளியலாக் கண்டன்மையதா" மெனச் சித்தாந்தஞ் செய்தார்; இதனானே தனித்துநின்றறியு மறிவுஞ், சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியு மறிவு மெனச் சித்திருவகைப்படுமாறு, மிரண்டுந்தம்மு ளொவ்வாதவாறும், படிகம் மாணிக்கத்தைச் சார்ந்தவழி மாணிக்கவண்ண முழுதுந் தன்வண்ணமாகக்கொண்டு நிற்றல்பற்றிப் படிகத்தை மாணிக்கமேயென வதனோடொப்புமைகூறுத லமையு மதுபற்றி மாணிக்கத்தைப் படிகத்தோடொப்புமை கூறுத லமையாதவாறுபோல ஆன்மாச்சிவத்தைச் சார்ந்தவழிச் சிவத்தின் குணமுழுவதுந் தன்குணமாகக்கொண்டு நிற்றல்பற்றி யான்மாச் சிவமேயெனச் சிவத்தோடொப்புமை கூறுத லமையு மதுபற்றிச் சிவத்தை யான்மாவோடொப்புமைகூறுதல் சாலாதென்பதூஉம், படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கு மான்மா மலமுழுவது நீங்கித் தன்னறிவு வியாபகமாய் விளங்கியவழியுந் தன்னாற் சாரப்பட்ட சிவத்தை மாத்திர மறிதலின்றி மற்றொன்றனை யறிதல் செல்லாதென்பதூஉம், இதுபற்றியன்றே சிவனுக்கடிமை யெனப்பட்ட தென்பதூஉம் இன்னோரன்னவை பிறவு மறிந்து கொள்க.

இக்கருத்தேபற்றி "சிவன் சீவனென்றிரண்டுஞ் சித்தொன்றுமென்னில் அவனுக் கிவனு மசித்தா" மென்றார் வழிநூலாசிரியரும். இதனானே முழுவது மலநீங்கிய சிற்சத்தியுடைமைபற்றி யான்மாவுஞ் சிவமுந் தம்முளொப்பரென்றோதிய வழியளவையும் போலியா யொழிந்தவாறுணர்க. என்னை? மலநீங்கித் தன்னறிவு முழுவதும் விளங்கியவழியு மதுவதுவாய் நின்றறிதலே யான்மாவினியல்பாதலி னவ்வாறன்றித் தனித்து நின்றறிவதாகிய சிவமுந்தானுந் தம்முளொத்தல் சாலாமையா னென்பது.

இன்னு மிதனானே நீரொடுநீரும் பாலொடு பாலுஞ் சேர்ந்தாற்போலென ஐக்கவாதங் கூறுவார் மதமும், குடமு

டைந்தவழிக் குடாகாய மாகாயத்தோடு கூடி யொன்றுமாறும், சிறைமுறிந்தவழி யாற்றுநீர் கடனீரோடு கூடி யொன்றுமாறும்போலெனச் சிவாத்துவிதங் கூறுவார் மதமு மறுக்கப்பட்டன. ஆகமங்களி னவ்வாறவற்றை யெடுத்துக்காட்டிய தொற்றுமைப்படச் சேர்தன்மாத்திரைக் கொருபுடை யொப்புமையாதல்பற்றியே பிறிதில்லை யென்க.

இன்னுந் தற்றருமதருமியென் றோதியதனை மீளவும் அதனை விரித்துணர்த்துவான் புகுந்து முற்றுணர்தன் முதலியனவாக வெண்வகைப்படுத்தோதி, யவற்று ளநாதிபோதமென்றொருகுணம் முற்றுணர்வு முதலியவற்றின் வேறுவைத்தெண்ணப்பட்டது; படவே அஃதநாதிமுத்தத்தன்மையென்னுங் குணத்திற்குப் பரியாயப்பெயரா னநாதியே ஞானம் விளங்குதலெனப் பொருடருவதே யாமாகலி னக்குணமநாதிமுத்தனாகிய சிவனுக்கன்றி யிடையே முத்திபெற்ற வான்மாவுக்கில்லை யென்ப தனக்கு மொத்தலா னநாதிபோத னல்லாத வான்மாவுக்கு அநாதிபோதத் தன்மைகூறியது, மாணிக்கவொளி முழுவதுந் தன்னைச்சார்ந்த படிகத்தின் விளங்கினாற்போலச் சிவனுக்குரிய தருமந் தன்னைச்சார்ந்த வான்மாவின்மாட்டு விளங்குதன்மாத்திரையே பற்றியாகலி னேனைக்குணங்க ளான்மாவிற் கோதியநூஉ மவ்வாறே யாமென்பது தெளியக்கிடந்தவா றறிக.

இன்னும் பவுட்கர மதங்க முதலியசிவாகமங்களிற் சிவனுக்குரிய வெண்குணங்களை யன்றி யவற்றோ டொப்பவேறு யான்மாவுக்கெண்குணங்களுளவென யாண்டானுமோதாமையானுந் தற்றருமதருமியென்பதற்குத் தற்றருமமே தனக்குத் தருமமாக வுடையனென்றுநு, தற்றருமமாகிய சிவத்துவத்தோ டொப்ப வதனின் வேறு தருமமாகிய சிவத்துவமுடையனெனப் பொருள்செய்த லவசித்தாந்தமென்றொழிக.

அதுவதுவேயாய் நின்றறித லான்மாவி னியல்பாதலின் ஆன்மா மலமுழுது நீங்கிச் சிவத்தைச் சார்ந்தவழித் தன்னறிவு முன்போ லேகதேச மாதலின்றி வியாபகமாய் விளங்கினும் மாணிக்கத்தை முழுவதும் பற்றிய படிகம் அம்மாணிக்க மாத்திரையேயன்றி மற்றொன்றனையும் பற்றாதவாறுபோல அச்சிவத்தையேயன்றி மற்றொன்றனையு மறியுமாறில்லையெனவு, மாணிக்கத்தினொளி படிகத்தின் முழுவதூஉம் விளங்காதவழி விளங்காத பாகத்தான் மற்றொன்றனைப்பற்றுமாறுபோலச் சிவத்துவமாகிய வெண்குணங்களுந் தன்பால் முழுவதும் விளங்காதவழி மற்றொன்றனையுமறியும்; அறியவே அதுவதுவா யழுந்துந்தன்மையானது பெந்தத்திற்கேதுவா மாகலி னங்ஙன மாகாமைப் பொருட்டுச் சிவத்துவமுழுவதுந் தன்பால் விளங்கும்படி சிவோகம் பாவனையி லுறைத்து நிற்றல் வேண்டுமெனவு மறிக.

அற்றாகலி னன்றே சிவதீக்கையிற் பிராசாதநெறியானே யான்மாவைச் சிவனிடத்தில் யோசித்துப் பின்னுஞ் சிவனுடைய வெண்குணங்கள் தன்மாட்டு முழுவதும் விளங்கும்படி பொரோவொன்றனை மும்மூன்றாகுதியான் விளக்குவித்துச் சிவசமமாகச் செய்வதூஉ மென்றுணர்க. இவ்வாறன்றிச் சிவன் குணத்தோடொப்ப வேறுகுண முடைமையே சிவசமமென்னுஞ் சொற்குப்பொரு ளென்பாரைக் குணங்களொருபுடை யொத்தலாற் சிவசமமோ முழுவதுமொத்தலாற் சிவசமமோ வெனக் கடாயினர்க்கு ஒருபுடையொத்தலாற் சிவசமமென விடுப்பின் ஒருபுடையொக்குமென்பதெல்லா வாதிகட்கு முடம்பாடாதலி னதனானுனக்குப் போந்ததொன்றின்மையானும், முழுவதுமொத்தலாற் சிவசமமெனின் முழுவதுமொத்தவழி யொன்றேயாதலின் இருபொருளாய் நிற்குமாறின்மையானுங் குணங்களான் வேற்றுமையின்றெனினுங் குணிப்பொருள் வேறாதலையுமெனிற் சைவசித்

தாந்தத்திற் குணமே குணியுமாய் நிற்பதாகலினதனை மறந்து நையாயிகர்மதத்தில் வீழ்ந்து குணமுங் குணியுந் தம்முள் வேறெனக்கொண்டு இரண்டிற்குங்குணங்களொன்று குணியான் வேறென்றல் பொருந்தாமையானுங் குணங்களின் வேற்றுமையில்வழிக்குணிகளின் வேற்றுமை பெறப்படாமையானும், நித்தப்பொருள்களின் வேறுபாடு தெரிப்பதற்கு விசேடமென்றொருபதார்த்தமுண்டெனத் தார்க்கிகர் கொண்டது போலச் சைவசித்தாந்தத்திற் கொள்ளாமையி னிலக்கணவேறுபாடே யிலக்கியத்தின் வேறுபாட்டைத் தெரிவிப்பதாகலானும், இதனானே யதுவதுவாய் நின்றறிதலாகிய பொதுவிலக்கணமாத்திரையேயன்றி யான்மாக்களுக்குத் தனித்தனி சிறப்பிலக்கணங்க ளுளவென்பதும் பெறப்படும். அற்றாகலினன்றே மலசத்திகள் பலவாயின. அவையிவையென்பதுண்மை யதிகாரத்திற் காட்டப்படு மாகலினதுபற்றி யாசங்கையின்மையானும், இன்னுஞ் சிவமும் ஆன்மாவும் இலக்கணத்தாலென்றாயவழிப் பதிபசுவென வேறுவைத்தெண்ணுதல் பொருந்தாமையானும், பசுத்துவசாதிவேறாகலி னதுபற்றி வேறெண்ணிய தெனிற் பசுத்துவ முபாதியாவதன்றிச் சாதியாகாமையி னங்ஙனங்கூறுதல் சாதியிது உபாதியிது எனவேறறியாதார் கூற்றேயாகலினதுபற்றி வேறென்னுதல் பொருந்தாமையானும், இதனானே பசுவாய்நின்ற வான்மாச்சாதி வேறு சிவமாய்நின்ற வான்மாச்சாதி வேறெனக்கொண்டவ்விரண்டற்கு மத்துவிதங்கூறுதல் சருவஞானோத்தரத்தின் கருத்தெனத் தமக்குரியபக்கத்தைவிட்டு மாயாவாதிமதம்பற்றி யுரைசெய்தலும் போலியாகலானும், இன்னுஞ் சிவனுமான்மாவு மிலக்கணத்தாலொன்றாயவழிச் சிவனை மறைக்கமாட்டாத வாணவமலம் ஆன்மாவுக்காவாரகமாதல் செல்லாமையானும், ஞாயிற்றையிருள் மறைத்தல் கண்டிலமாகலானுஞ், சிவனுங்கொப்பாரு மிக்காரு மில்லையென வெல்லாச் சிவாகமங்களு முழக்குதலானும், பிறவாற்றானுஞ், சிவசமமென்னுஞ் சொற்கு அதுபொருளன்மை யுணர்ந்துகொள்க.

இங்ஙனஞ் சிவாகமங்களையும் பொருந்துமாறுகளையு முன்னொடுபின் மலவறநோக்கிப் பொருண்மை துணியமாட்டாதா ரைந்தொழிலி னேவப்பட்டுப் பிணிப்புண்டு முன்னின்ற பரதந்திரத்தை நோக்கி முத்திபெற்ற வான்மாச் சுதந்திரனென்றோதப்படும்.

அங்ஙனமாயினு மதுவதுவாய் நிற்குமியல்பானே யுபாதியினீங்கிச் சிவமேயாயவழிச் சிவமொன்றனையேயறிந்து நிற்பதாகலிற் சிவனுக்கடிமையாமென்னு முணர்வு நிலைபெறும்படி சிவதீக்கையினுஞ் சிவபூசையினு மந்திரமுதலிய மூன்றானுந் தானஞ்செய்தளித்த பொருளாகலா னதனைநோக்கிப் பரதந்திரனேயாமென்பது முணராது "துன்பமாமெல்லாம் பரவசனாய்த்தான்றுவளி னின்பமாந் தன்வசனாயேயிருக்கில்" என்றது மிக்கருத்தேபற்றி யோதியதென்பதற் காண்டுத்துவளினென்றதே சான்றாமென்பது முணராது மாசுநீங்கியவழி யாடையின் வெண்மை யாடைமுழுவதும் விளங்கினாற்போல மலநீங்கியவழி, யான்மவியாபக முழுதினும் விளங்கிநின்ற ஆன்மஞானமுன் னேகதேசத்தின் விளங்கிச் சிற்றறிவாய் நின்றதனைநோக்கிப் பேரறிவெனப்படும்.

அங்ஙனமாயினும் வியாபக முழுதினுஞ் சிவமாய்நின்று சிவமொன்றனையே யறிவதன்றி மற்றொன்றனை யறியுமாறின்மையின் முழுது மொருங்கேயுணரும் பேரறிவாகிய சிவஞானத்தை நோக்கிச் சிற்றறிவேயாமென்பது முணராது, "பண்டைச் சிற்றறிவொழிந்து ஞானம்பெருகி யென்றது" மிக்கருத்தேபற்றியோதிய தென்பதற்கு "நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமா" மென வாண்டோதியதே சான்றாமென்பது முணராது, சிவத்துவ முழுவதுந் தன் மாட்டு விளங்குதலாற் சிவனதாகிய சுதந்திரமு முற்றுணர்வுந் தானுடையனாயினும் "ஆழவமுக்கி முகக்கினு மாழ்கடலி னாழிமுகவாது நானாழி" யென்னு நியாயத்தாற் றன்னாலறியற்பாலது

சிவமொன்றே யென்பது முணராது, தனக்கு வேண்டும் பெரும்பயனிற் சிறிதுங் குறைவின்மையி னேனையவற்றை யறியாமைபற்றி யொருதாழ்வில்லை யென்பது முணராது, அதுவதுவாய் நின்றனுபவிக்கு மான்மா வேனையவற்றையு மறிவுழிச் சிவானுபவ விளைவிற் குறைபடு மாகலி னேனையவற்றை யறிதல் முத்திப்பெரும்பயனுக் கிடையூறென்பதும் ஏனையவற்றை யறியாமையே முத்திப்பெரும்பயனுக்குச் சிறந்த காரணமென்பது முணராது, இக்கருத்தேபற்றியன்றே "இன்பங்கொடுத்தலிறையித்தை விளைவித்தன் மல"மென்றோதியதென்பது முணராது, எண்குணங்களி னநாதிபோதமெனமுற்றுணர்வின் வேறுவைத்தெண்ணியது அநாதிமுத்தத்தன்மைக்குப் பரியாயப்பெயரேயாகலி னதுவு மதனோடுடனெண்ணிய வேனைக்குணங்களு மநாதிமுத்தனாகிய சிவனுக்கே யுரியகுணங்களென்பது முணராது, அக்குணங்கள் முழுவதும் படிகம்போலப்பற்றியதன்வண்ணமாய் நிற்குமியல்புடைய வான்மாவின்மாட்டு விளங்கிய வுபசாரத்தா லவையே யான்மாவுக்குரிய குணங்களுமாமென்பது முணராது "வளம்படவேண்டாதார் யார்யாருமில்லை" யென்னு முறையானே முடவன் மலையிற்றேனை யாவாவிவாயூறினாற்போலச் சிவனோடொப்ப யாமும் எல்லாமறிந்தைந்தொழில் செய்வே மாகவென்றெண்ணு மாசைமிகுதிப்பாட்டாற் சிவாகமங்களினோரோரிடங்களி னான்மாமுத்தியிற் "சுதந்திர" னெனவு "முற்றுணர்வின" னெனவும் "எண்குணமுள்ளா" னெனவுஞ் "சிவசமமாவ" னெனவு மேற்கூறியமுறைமைபற்றி யோதிய வாக்கியங்கள் மாத்திரையே யெடுத்துக்கொண்டு தமக்கு வேண்டியவாறெல்லாம் வலியுறுத்தி யுரைசெய்து சிவகதி, சிவலயம்,சிவயோகம்,சிவசாயுச்சியம், சிவானனனியம்,சிவதாதான்மியம், சிவைக்கியம் என்பனவும் ஆகுபெயராற் சிவசமமென்னும் பொருள்பயக்குமென மாறிக்கூறித்தாமே தம்மை வியந்துகொள்வர். அதனாற் றன்மானுக்கரை வஞ்சித்

தன் மாத்திரையேயன்றித் தம்மாசை நிரம்புமாறில்லையென்றொழிக.

அற்றேல், ஆன்மாச் சிவனோடத்துவிதமாய் நிற்பனென்பது பெறப்படு மாயினன்றே யதுபற்றிச் சிவசமமென்று பசரித்துக் கூறியதென்றதமையும். அத்துவிதமாய் நிற்குமாறெங்ஙனமெனி? னஃதத்துவித மென்னுஞ் சொற்குப்பொருளுணரவே யினிது விளங்கும்.

அற்றேல், அதற் கென்னையோ பொருளெனிற்? காட்டுதும். அத்துவிதமென்னுஞ் சொல்லின் நகரம் இன்மை, அன்மை, மறுதலையென்னு மூன்றனு ளொருபொருள் பயக்கும். அவற்று ளின்மைப்பொருள்கொண்ட மாயாவாதிகள் இரண்டின்மை யொருபொருள் மாத்திரையினன்றி யிரண்டு முதலியவா யெண்ணப்படும் பொருள்களி னில்லாமையா னத்துவிதமென்னுஞ் சொற்குப்பொரு ளொன்றென்பதேயாமெனவும், ஒருபொருளாயினுங் குணங்குணியென வேற்றுமை தோன்ற நிற்பிற் கேவலமொன்றாத லின்மையி னத்துவிதமென்ற துபசாரச்சொல்லாய் முடியுமாகலாற் றன்னின் வேறுயொருபொருளுமின்றித் தானுங் குணமுடைப்பொருளென விசேடிக்கப்படுதலின்றி நிருவிசேடமாய் நிற்கும் பரம்பிரமப்பொருளென்பது அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளெனக் கோடலி னவர் கேவலாத்துவிதிகளென வழங்கப்படுவர். இராமாநுசர் சிவாத்துவிதசைவர்முதலியோரும் அவ்வாறே யின்மைப்பொருள்பற்றி யொன்றெனப் பொருள்கொண்டு சத்திசங்கற்ப முதலியகுணங்கள் பரம்பிரமப் பொருட்குளவென்றுபநிடதங்களிற் கூறுதலானு, மவை செயற்கைக்குண மென்றற்கோரியை பின்மையானும், பசுபாசங்களதுண்மையு முபநிடதங்களு ளோதப்படுதலானும், அவற்றோடு முரணிக் கேவலாத்துவிதமெனக்கோடல் பொருந்தாமையிற் றன்னோ டியைபுடைய பசுபாசங்களானுந், தன்குண

க்களாகிய சத்திசங்கற்ப முதலியவற்றானும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்ற பரம்பிரம மிரண்டில்லை யொன்றெ ன்பதே யத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளென விசி ட்டாத்துவிதங் கோடலி னவர் விசிட்டாத்துவிதிகளென வ ழங்கப்படுவர். பேதவாதிகள் மறுதலைப்பொருள்பற்றி யிர ண்டன் மறுதலையாகிய வொன்றெனப் பொருள்கொண்டு அ ங்ஙனங்கொள்ளவே, அவ்வொன்றன் மறுதலையாகிய விரண் டாவது முண்டென்றற் கிழுக்கின்மையின் அத்துவிதமென் பதுந் துவிதமென்னும் பொருளைப் பயக்குமென்றுபோவர் அவரெல்லாரும் அத்துவிதமென்ற சொற்குப்பொருளொன் றென்பதேயாமெனக்கொண்டு தத்தமதங்களோடு முரணு மைப்பொருட்டுக் கேவலமென்றும் விசிட்டமென்று மறுத லையென்று மடைகூட்டி யிடர்ப்பட்டுப் பொருள்கொள்வர். அவருள் மாயாவாதி கூறுங்கேவலமும், பேதவாதிகள் கூறு மறுதலையுஞ் சுருதிகளோடு முரணுதலினீண்டைக் கேலாவா ம். ஏனையோர் கூறும் விசிட்டமென்பது பொருந்துமாயினும் அத்துவிதமென்னுஞ் சொற்குப்பொருளொன்றெனக் கோ டல் பொருந்தாது. என்னை? யொன்றென்பது பொருளாயின் ஒன்றெனவே விளங்கக்கூறவமையும். அவ்வாறன்றி யத்துவி தமென வுய்த்துணரவைத்தோதவேண்டாமையானும் ஒன் றெனப் பொருள்கொள்ளின் மகாவாக்கியப்பொருள் பயப்ப தோர் விசேடமின்மையின் அத்துவிதமென்றதுபற்றி யா ண்டொருபயன்படாமையானு மென்க.

மற்றென்னையோ வத்துவிதமென்னுஞ் சொற்குப் பொ ருளெனிற் சித்தாந்த சைவருரைக்குமாறு காட்டுதும். "அ துநீயாகின்றாய்" எ-ம், "அதுநானாகின்றேன்" எ-ம், "அ துவிதுவாகின்றது-எ-ம் மூவிடம்பற்றி நிகழுந்தத்துவமசிமு தலிய மகாவாக்கியங்களைக் கேட்டவழி அதுவென்பதொரு பொருள் நீயென்ப தொருபொரு ளாகலின் ஒருபொருள் ம

ற்றொருபொருளாமாறி யாங்ஙனமென்னு மையநீக்குதற் கெ
ழுந்ததாகலின் அதுவிதுவாதற் கேதுவாயவ்விரண்டிற்கு மு
ளதாகிய சம்பந்த விசேடமுணர்த்துதலே யத்துவித மென்
னுஞ் சொற்குப்பொருளென்றுணர்ந்து கொள்க.

அற்றேல், அத்துவிதமென்னுஞ் சொல்லாற் பெறப்படு
ஞ் சம்பந்தம் ஐக்கமோ தாதான்மியமோ சமவாயமோ சை
யோகமோ சொரூபமோ வேறோ வெனக்கடாயினூர்க்கு யாற்
றுநீருங் கடனீருந் தம்மிற் சேர்ந்தாற்போலவும், குடாகாய
மு மாகாயமுந்தம்மிற் சேர்ந்தாற்போலவும், ஐக்கமெனி
னங்ஙனஞ் சேர்ந்தவழி யொருபொருளேயாகலி னொன்றெ
னவே யமையும் அத்துவிதமென்றுய்த்துணரவைத்தோத
வேண்டா. அன்றியு மொன்றுயவழி அதுவதுவாய்நின்றறித
லாகிய வான்மாவினிலக்கணம் முத்திக்காலத்தில்லை யெனப்
பட்டு வழுவாமாகலி னதுபொருந்தாமையானும், குணகுணி
கட்குத்தம்மினுளதாகிய சம்பந்தம் போலுந்தாதான்மிய மெ
னின் ஆன்மா முதல்வனைப்போலக் குணகுணிப்பொருளாய்
நிற்பதன்றி முதல்வனுக்குக் குணமாகாமையி னவ்வாறியை
தல் கூடாமையானுந், தாதான்மியத்தின் வேறுய நையாயிகர்
கூறுஞ் சமவாயமென்ப தொன்றின்மையானும், விரலும் வி
ரலுஞ் சேர்ந்துநின்றாற்போலச் சையோகமெனின் அவ்வியா
ப்பிய விருத்தியாகிய சையோகம் வியாபகப்பொருள்கட்குக்
கூடாமையானும், யாதானுமோரியைபுபற்றிக் கூறப்படுஞ்
சொரூபமெனின் அதுமகாவாக்கியப்பொருளை வலியுறுத்து
தற்கெழுந்த வத்துவித மென்னுஞ்சொற்குப் பொருளாகா
மையானுஞ், சொரூபசம்பந்தமாத்திரையாற் சிவானந்தத்தை
யனுபவித்தல் கூடாமையானும், இவற்றின் வேறுயின்னதெ
ன்றறியவாராத வநிருவசனமெனி னங்ஙனங்கூறுதல் மாயா
வாதிகூற்றுய் வழுவாமாகலானு மவையெல்லா மீண்டைக்கே
லாமையின் வேறு விடுக்குமா றென்னையெனிற்? கூறுதும்.

ஒருபொருளே யவயவ வவயவிகளாயாதல் குணகுணிகளா யாதல் வேற்றுமைப்பட்டிரண்டாய் நிற்றற் கேதுவாகிய தாதான்மியமும், அதுபோல விருபொருளே யதுவதுவாயொற்றுமைப்பட் டொன்றாய் நிற்றற் கேதுவாகிய தாதான்மியமுமெனத் தாதான்மிய சம்பந்த மிருவகைப்படும். அவற்றுண் முன்னையது தாதான்மிய மென்றும் பின்னையது அத்துவித மென்றும் வழங்கப்படும்.

அத்துவிதமென்னுஞ் சொல்லியல்பு மேற்கூறியவாற்றான் வேறுபொருட்கு மாறின்றி யன்மைப்பொருள்பற்றி யிரண்டென வேற்றுமைப்படாமையை விளக்கிநிற்றலானென்க. இதுவே ஆசிரியர்கருத்தென்பது "அத்துவிதமென்ற சொல்லே யன்னியநாத்தியை யுணர்த்துமாயிட்" டென்றதனானும், புடைநூலாசிரியர் "பிறிவருமத்துவிதமாகுஞ் சிறப்பினதாயென்" றுடம்பொடு புணர்த்தோதியதனானு மறிக.

இவ்வத்துவிதம் அபேதசம்பந்தமாகிய ஐக்கமுமன்றிப் பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமுமன்றிப் பேதசம்பந்தமாகிய சையோகமுமன்றிக் கலப்பு முடனாதலும் வேறாதலுமாகிய மூன்றுந் தன்கட்டோன்ற நிற்றல்பற்றி யம்மூன்றற்கும் பொதுவாகக்கூறப்படுமாகலா னவ்வத்துவிதத்திற்கு ஒரோரிடங்களின் "அலைகடலிற் சென்றடங்குமாறுபோல்" எ-ம், "வானத்தில் வானும் மணத்தில் மணமும்போல்" எ-ம், அபேதவுவமையும் 'பண்ணையு மோசையும்போலப் பழமதுவ்' மென்னுஞ் சுவையும்போல்-எ-ம், "நிருமிதமும்போலாங் காணரனரருள்"-எ-ம், பேதாபேதவுவமையும், இரும்பைக்காந்தம் வலித்தாற்போ லியைக்" தெனப் பேதவுவமையும், ஒருபுடை யொப்புமைபற்றி யெடுத்துக்காட்டுப வாகலின், அங்ஙனந் தம்முண்முரணுவன போல வேறுவேறெடுத்துக்காட்டுதல்பற்றி மலைவுற்க; இம்

மூன்றினையுந் தன்கட்டோன்ற விவற்றிற்கு வேறாய் நிற்கும் அத்துவிதத்திற்குச் சிறந்தெடுத்துக் காட்டப்படுமுவமையாவது, ஆன்மபோதமுங் கண்ணொளியுந் தம்முளத்துவிதமாய் நிற்றலாமென்க. 'காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற் காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின்' எ-ம், "காட்டக் கண்டிடுந்தன்மையுடைய கண்ணுக்கேயு முயிர்காட்டிக் கண்டிடுமாபோல வீசனுயிர்க்குக்காட்டிக் கண்டிடுவன்" எ-ம், "அறிவொளிபோற் பிறிவருமத்துவிதமாம்" எ-ம் மூன்று நூலாசிரியருஞ் சித்தாந்தமுடிபுணர்த்தும்வழி யிதனையே யெடுத்துக்காட்டியவாறறிக.

இவ்வத்துவிதம் ஏனையோர் கூறு மத்துவிதம்போலக் கேவலமென்றுதல் விசிட்டமென்றுதல் மறுதலையென்றுதல் யாதானு மொன்றான் விசேடிக்கப்பட்டு நின்று பொருளுணர்த்தாது சுத்தமாய் நின்றேபொருளுணர்த்துதலிற் சுத்தாத்துவிதமென வழங்கப்படும். ஈண்டுச் சுத்தமென்றது யாதானுமொன்றான் விசேடிக்கப்படாது நிற்றலை. அது "விசிட்டசத்தை," "சுத்தசத்தை" யெனத்தார்க்கிகர் கூறும் வாய்பாட்டானு மறிக. ஏனையோர் கூறு மத்துவிதங் கேவல முதலியவற்றான் விசேடிக்கப்படாதவழி, யவர்கூறும் பொருடருதற்கேலாமையி னவையெல்லாஞ் சுத்தாத்துவித மாகாமையுங்காண்க.

இங்ஙன மொருபொரு ளிருதன்மையான் வியாபகமும் வியாப்பியமுமாய் வேற்றுமைப்பட்டு நிற்குந்தாதான்மியம்போல வியாபகமும் வியாப்பியமுமான விருபொருளொருதன்மையா னொற்றுமைப்பட்டுநிற்குந் தாதான்மிய சம்பந்தமொன்றுண்டெனவும், அதுவே யன்மைப்பொருள் பற்றி யத்துவிதமென்னுஞ் சொல்லானுணர்த்தப்படுவதெனவு மறியமாட்டாதா ரத்துவிதமென்னுஞ் சொற்குத்தத்தமக்கு வேண்டியவாறே பொருள் செய்வாரும், " தில

தின்கண்ணே தயிலம்போல முதல்வ னெல்லாப்பொருளி
னும் அகமும் புறமுமாய் விரவிநிற்ப" னென்னுஞ் சுருதியும்,
"ஆன்மா எதனை யெதனைப்பற்றினன் அதனதன் வண்ண
மே தன்வண்ணமாக்கொண் டதுவதுவாய் நிற்ப"னெனத்
தொகுத்தொருவார்த்தையிற் றெளிய வுணர்த்துஞ் சுருதியு
ம், முப்பொருளுஞ் சமவியாபகமாயினும் "நீரும் எண்ணெயு
ம்போல ஒன்றற்கொன்று தூலசூக்குமங்களா மியல்புடை
மையின் அதுபற்றி வியாப்பியமும் வியாபகமுமாய் நிற்பன
வா" மென்னுஞ் சுருதியும், இன்னும் இவை போல்வன பிற
வும் பயின்றறியாமையிற் "கற்றதூஉ மின்றிக் கணக்காய்
வார் பாடத்தாற், பெற்றதாம் பேதையோர் சூத்திரம்—மற்
றதனை, நல்லாரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன், புல்
லறிவுகாட்டிவிடும்" என்னு முறைமை யராய்த் தாங்கற்றது
கொண்டு முன்னொடு பின் மலைவறநோக்கு மாறின்றிச் சிவ
தீக்கையி னத்துவாசுத்திசெய்தபின் ஞன்மாவைத்துவாத
சாந்தத்திற் சிவனொடுசம்பந்தப்படுத்திச் சிவனுக்குரிய வெ
ண்குணங்களையு மான்மாவின்மாட்டு விளக்கிச் சிவசமமாகச்
செய்த முறைமையு மறந்து சாங்கியர் மதத்தில் வீழ்ந்து
முப்பொருட்குஞ் சன்னிதி மாத்திரையே சம்பந்தம் பிறி
தில்லையெனத் தம்மறிவின்மையைப் புலப்படுத்திச் சுத்தாத்
துவிதமெனச் சைவத்திற் கூறும் வாய்பாட்டோடு மூர
ஞமைப்பொருட்டு அநாதிமுத்தனாகிய சிவனும் இடையே
முத்தனாகிய வான்மாவுஞ் சுத்தமாதற்சாதியொருமையேபற்
றிச சுத்தாத்துவிதமென வழங்கப்படுமேயென்று போவாரு
மாயினுமென் றொழிக. முப்பொருள்களு ளான்மாச் சார்ந்த
தன் வண்ணமாய் நிற்குமியல்புடைமையி னெவ்வெவற்றைச்
சார்ந்தா னவ்வவற்றோடு மாத்திரையே யத்துவிதமாய்த் த
ந்தம் வண்ணமாகச் செய்யு மவ்வவற்றை நோக்கித் தூலமாத
லுடைமையி னவ்வவற்றின் வியாப்பியமேயாய் நிற்பனென்
றுணர்க. இப்பொருளே பயப்ப "வசித்திடவரும் வியாபி"

யென்றார் வழிநூலாசிரியரும். அங்ஙனநிற்கு முறைமையுள்ளுந் தனக்கந்நியசாதியாகிய வேகதேசப் பொருள்களைச் சார்ந்தவற்றின் வியாப்பியமாய் நிற்றல் மலத்தானாகிய செயற்கையெனவும், சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியு மறிவாகிய தன்னை நோக்கிச் சூக்குமமாய்த் தன் சாதியாகிய சிவத்தைச் சார்ந்ததனின் வியாப்பியமாய் நிற்ற லியற்கையெனவுந் தெரிந்துணர்ந்துகொள்க. இவ்வாறன்றித் தன்சாதியாகிய சிவத்தின் வியாப்பியமாய் நிற்றலும் ஏனையவற்றின் வியாப்பியமாதல்போலச் செயற்கையென்றல் சார்ந்ததன் வண்ணமாய் நின்றறிதல் செயற்கையென்பார் கூற்றேயாகலி னதுபொருந்தாமை மேற்காட்டியவாற்றானறிக.

அற்றேல், ஈண்டோதியனவெல்லா மொக்கும். முத்தியிலான்மாச் சிவானந்தத்தை யனுபவிப்ப னென்றற்குப் பிரமாண மென்னை யெனிற்? "சிவானுபவஞ் சுவானுபூதிகமா" மென்றற் றொடக்கத்துச் சுருதியே பிரமாணமென்க. இன்னுஞ் சிவானந்த மான்மாவா லனுபவிக்கப்படும் ஆனந்தமாகலின், உலகானந்தம் போலு மென்னும் வழியளவையும் பிரமாணமாதல் கண்டுகொள்க. அற்றேல், அனுபவிக்கப்படுவென வெல்லாஞ் சடமாதல் காண்டுமாகலி னதுபோலச் சிவானந்தமுஞ் சடமாவான் செல்லும் பிறவெனின்? அவ்வாறே யறியப்படுவன வெல்லாஞ் சடமாதல் காண்டுமாகலினது போலச்சிவமும் அறியப்படிற் சடமாவான் செல்லுமென்பது பற்றி, சிவம் ஞேயப்பொரு ளன்றென்றல் வேண்டும்; வேண்டவே, யுணராதபொருள் சூனியமெனப்பட்டவசித்தாந்த மாமாகலி னதுகடாவன்றென்க.

அற்றேல், சத்தாகியசிவ மேனையபோ லன்றிச் சுட்டிறந்துநின் றறியப்படும் வேற்றுமை யுடைமையா னவைபோலச் சடமாவான் செல்லாதெனின்? நன்று சொன்னாய்; சுட்டிறந்துநின் றறியப்படும் பொருள் சுட்டிறந்து நின்றறி

ந்தே யனுபவிக்கப்படுவதாகலிற் சுட்டியறிந் தனுபவிக்கப்படு மேனைய பொருள்கள்போ லன்றி வேற்றுமை யுடைமையா னவைபோலச் சடமாவான்சேறல் யாண்டையதென்க.

இன்னு மான்மா லறியப்படும் பொருளெல்லா மவனா லனுபவிக்கப்படும் பொருளே யாமென்னு மவினா பாவத்திற் கியாண்டு மிழுக்கின்மையானும் ஆன்மாவாலறியப்படுஞ்சிவானந்த மவனா லனுபவிக்கப்படுமென்றற் கையமென்னை யென்றொழிக.

இதனானே சிவானந்த மனுபவப் பொருளாயிற் போக்கிய ரூபமோ போகரூபமோ வென்றாசங்கித்துக் கூறுவார் கூற்றும் போலியாய வாறுகாண்க. ஆன்மாவுக்குப் பிரமேய ரூபமாய் ஞேயமெனப்பட்டன வெல்லா மவனுக்குப் போக்கியமா மென்க.

அற்றேல், இம்முறைமை பற்றிச் சிவனுக்கு ஞேயமெனப்பட்ட பசுபாசங்க ளவனுக்குப் போக்கியமாம் போலுமெனின்? அறியாது கூறினாய்; அறிந்த பொருளி னழுந்தி யதுவே யனுபவமெ தலே சார்ந்ததன் வண்ணமாயறிதல்; அதுவே யனுபவமென்னுஞ் சொற்குப் பொருளாகலி னவ்வியல்பு ஆன்மாவுக்கே யன்றிச் சிவனுக் கின்மையாற் சிவனுக்கெல்லாப் பொருளு மறிப்படும் ஞேயமாதல் மாத்திரையே யன்றி யனுபவிக்கப்படும் பிரமேய ரூபமாத லின்மையிற் போக்கியமாவான் செல்லாமை யுணர்க. இன்னும் பிரமாண ரூபமாகிய ஆன்மசிற்சத்தி சிவனுக்காகத் தனக்காகத் தன்னோடொத்த பிறவான்மாக்களுக்காக மெய்யாகிய நினைவுணர்விற்கு விடயமாதல் போல்வதோர் ஞேயமாதல் மாத்திரையே யன்றிப் பிரமேய மாதலில்லை யென்பதற்குப் பவுட்கரத்தில் ஆன்மாவே பிரமாதா, வியஞ்சகத்தால் விளங்குவதாகிய வான்மஞானமே பிரமாணம், அதனறிதல் வியாபாரமே பிரமிதி, யேனைய வெல்லாம் பிரமேயமென்னுஞ் சுருதியும் ஒருவாற்

றுனும் பிரமாணம் பிரமேய மாகாது. பிரமேயம் பிரமாண மாகாதென வரைசெய்து வைத்தோதி, யிதனானே பிரமேய மாயறியப்படுவன வாகிய வைம்பொறி முதலியவற்றைப் பிரமாணமென்றல் பொருந்தாதென நையாயிகர் முதலியோரை மறுத்துச் சித்தாந்தம் வலியுறுத்திய சுருதியுமே சான்றாகலான், ஒருவாற்றான் ஞேயமாயினும், பிரமேயமாதல் பெறப்படாத வான்ம சிற்சத்தி தன்னானுதல் பிறதோரான் மாவானுதல் சிவசத்தியானுத லனுபவிக்கப்படும் போதுமெ ன்றுசங்கித்தற்குச் சிறிது மேலாமை யறிக.

அற்றேல், இன்பமெல்லாம் வினையின் பயனாதல் காண்டு மாகலிற், சிவானந்தமு மின்பமாயி னதுவும்வினையின் பயனாய் முடியுமா லெனின்? னறியாதுகூறினாய்; என்னை? தோன்றி யழியுஞ் சடவின்ப மாத்திரையே வினையின் பயனாவதன்றி யதனின் வேறாய் நித்தியானந்தமான சித்தின்ப மதுபோல வினையின் பயனும்போலுமென் றெண்ணுதற் கோரியைபின் மையானென்க. அற்றேல் சிவானந்த மின்பப்பொரு ளென் றற்குப் பிரமாண மென்னை? யானந்த மென்னுஞ் சொல்லே பிரமாணமெனின் ஆனந்த மென்னும் வடசொற்கு நிறைத லென்பதே பொருளாகலினது பிரமாண மாகாதா லெனின்? அற்றன்று. தாதுக்கள் பலபொருள் விளக்குமென்பது வட நூலார் துணிபாகலி னுண்மை யுணர்த்தி நிற்கும் பவமென் னுஞ்சொல் அநுபவம், பரிபவம், விபவமென வுபசர்க்கங்க ளோடு கூடியவழி வேறுபொருளுணர்த்தி நின்றாற்போலநி றைதலை யுணர்த்தி நிற்கும் நந்தமென்னுஞ்சொல் ஆவென்னு முபசர்க்கத்தோடு கூடிய வழி யின்பமென்னும் பொருளு ணர்த்தி நிற்றல் சாலும். அற்றாகலி னன்றே யின்ப மானந்த மென்பன வொரு பொருட்கிளவியாக வைத்து யாண்டும் வழங்கப்பட்டனவாகலான், அதுவே பிரமாண மென்க.

இன்னுஞ்சருவ ஞானோத்தர முதலியவற்றின் ஆன ந்தமென்னுஞ்சொன்மாத்திரையா னன்றி முத்தியிற் பரம

சுக முண்டெனச்சுகமென்னுஞ் சொல்லானும் பெரும்பாலு மோதுதலின், ஆனந்தத்திற்குப் பொரு ளின்பமன்றெனக் கொண்டதனானும் நின்கருத்து நிரம்புமாறில்லை யென்க. அற்றேல், உலகத்திலின்பமென்னும் பொருளாவது புறப்பொருள்களைப்பற்றிவந்த புத்தி தத்துவத்தின் பரிணமத்தாகிய சத்துவகுணத்தின் விளக்கமே வேறொன்றன்றாகலின் முத்தியினு முற்றுணர்வு முதலிய வெண்குணங்களின் விளக்கமே யின்பமாவதன்றி வேறுயின்பமென்ப தொன்றில்லையெனின்? நன்று சொன்னாய்; ஆன்மாவின் வேறாகிய மூலப்பகுதியின் கண்ணதாகிய சாத்துவிக குணம் ஆன்மாவின் மாட்டு மேம்பட்டு விளங்குதலே யுலகவின்பம். அதுவதுவாய் முந்திநின்றறிதலே யனுபவமெனப்படுமாகலி னதுபோல ஆன்மாவின் வேறாய்ச் சிவன்கண்ணே யுளவாகிய முற்றுணர்தன் முதலிய வெண்வகைக் குணங்களு மான்மாவின் மாட்டு மேம்பட்டு விளங்கும் விளக்கமே சிவானந்தவின்பம். ஆன்மாவதுவாயமுந்திநின் றவ்விளக்கத்தை யறிதலே யனுபவமெனப்படுமென்பதெம்மனோர் சித்தாந்த மாகலி னதனானெக்குப்போந்த தென்னையென்பது.

அற்றேல், சாத்துவிக குணம் ஆன்மாவின் குணமே மூலப்பகுதியின் குணமன்றென்றாற் படுமிழுக்கென்னையெனின்? அது சிவாகம வழக்கோடு முரணுவார் கூற்றாமென மறுக்க. அற்றேல், பசுத்துவமாய் நின்ற வான்மஞானமே சிற்றின்பமெனப்படும்; அதுபோலச் சிவத்துவமாய் நின்ற வான்மஞானமே முத்திபின்பமெனக் கோடுமெனின்? அற்றன்று. ஆன்மாவின் ஞானமே யின்பமாயி னதனையறிந்தனுபவிக்கு ஞானம் வேறியாதோவெனக் கடாயினார்க்குக் குணியாய் நின்ற ஞானமே யதனையறிந் தனுபவிக்குமென விடுப்பிற் குணியாய் நின்றஞானம் அறிவு மாத்திரையாய் நிற்பதன்றி மேனோக்கமாய் நிற்ற லின்மையானு மெதிர்முக மாகாமையு

மாதலுமாகிய வியல்பு பற்றியே ஞாதாவெனவு ஞானமென வும் பகுத்தோதியதனை மறந்து ஞாதாவு மதனை யெதிர்முக மாகுமென முரணிக்கூறினை ஞாதாவும் ஞானமாவான் சென் றிலக்கணவழுவா மாகலானும், அதுவுஞானமே யாயவழி ஞா தாவென்ப தொன்றின்றாய் முடியு மாகலானுங் குணகுணிக ளிரண்டிற்கு மிடையே பொதுவாக வொருஞானமுண் டது வே யாண்டு ஞாதாவெனப்படு மெனின்? மேலுமவ்வாறன வத்தையாய் முடியு மாகலானும் ஒருபொருள் குணங்குணி யென்றிருபகுதிப் படுவதன்றி மூன்றுவதொருபகுதியுண்டெ ன்று கூறுவார் யாண்டுமின்மையானும் குணம் குணி இர ண்டற்கும் பொதுவாக இடையே ஞானம் ஒன்றுண்டென்று கூறுதல் அவசித்தாந்தமென்க.

† இவ்வாறு நாலாஞ்சூத்திரமுதலிய மூன்றினும் மேற்பி ரமாணத்தாற்கூறிப் போந்த பசுபாசபதிகட்கு இலக்கணங்கூ றுமுகத்தான் முறையே கேவலஞ் சகலஞ் சுத்தமென்னும் மூன்றவத்தையுங் காட்டப்பட்டன. இம்மூன்றனுட் கேவல ம் மருட்கேவலமும், சகலகேவலமும், பிரளயகேவலமும், விஞ்ஞானகேவலமும், அருட்கேவலமுமென ஐவகைப்படும். அவற்றுள், மருட்கேவலமாவது அநாதிகேவலம். சகலகேவ லமாவது சங்கரித்தபின்னர்ப் புனருற்பவத்திற் கேதுவாய்ப் படுங்கேவலம். ஆண்டுச் சூக்குமவைந்தொழிலுண்டென மிருகேந்திரத்துட்கூறுதலின் அநாதிகேவலத்தோடு இதனி டை வேற்றுமையாமாறு கண்டுகொள்க. பிரளயகேவலமா வது மாயையோடு இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். வி ஞ்ஞானகேவலமாவது மாயைகன்மங்களென்னும் இரண்ட னோடும் இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். அருட்கேவ லமாவது தத்துவசுத்திப் பின்னர்ப்படுங் கேவலம். அநு துகளறுபோதத்திற்காண்க. இனிச் சகலமுஞ் சகலத்திற்

† இதுமுதல் இக்குறிவருவரை சிற்றுரை.

கேவலம், சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தமென மூவகைப்பட்டு ஒரோவொன்று ஐந்துவகைப்படும். அவற்றுட் சகலத்திற்கேவலமைந்தும் "ஒன்றணையாமூலத்து "என்றதனுட்காண்க. சகலத்திற் சகலமைந்தும் "இலாடத்தேசாக்கிரத்தை "என்றதனுட்காண்க. சகலத்திற் சுத்தமைந்தும் "யோகிற்றருவதோர் சமாதி "என வழி நூலாசிரியர் தொகுத்தோதியது சித்தாந்தசாராவலி யோகபாதத்தின் வகுத்துக்கூறுதலான் ஆண்டுக் காண்க. இனிச் சுத்தமுஞ் சீவன் முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி இலயமுத்தி பரமுத்தியென் றைவகைப்பட்டுச் சாக்கிரமுதலிய பெயர் பெறும்; அவற்றை முன்னர் வகுத்தோதுப†.

இரண்டாமதிகரணமுடிந்தது.

முதலாவது பொதுவதிகார முடிந்தது.

---

சிவஞானபோதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞான யோகிசெய்த சிவஞானமாபாடியத்தில் பொதுவதிகாரம் இலக்கணவோத்தின் மூன்றும் பாதமாகிய விவ்வாறுஞ் சூத்திர முடிந்தது.

---

## உ-வது உண்மையதிகாரம்

# சாதனவியல்.

## ஏழாஞ் சூத்திரம்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

எ-று. சூ-ம். எ-னின். இவ்வதிகாரந் நூலாருந்தநியாயம்பற்றி மேலையதிகாரத்தின் முப்பொருள்களின் பொதுவியல்பு பிரமாணமுகத்தானு மிலக்கணமுகத்தானு முணர்த்தி

ய வாசிரிய ரவற்றது சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன்முகத்தானு முணர்த்துவா னெடுத்துக்கொண்டாராகலி னுண்மையதிகாரமென்னும் பெயர்த்து. சிறப்பியல்பு பொதுவியல்புபோ லிடையே நீங்குதலின்றி யெக்காலத்து மொருதன்மைத்தாயுள்ளதுபற்றி யுண்மையெனப்படுமாகலி னப்பெயர்த்தாயிற்று. இதனானே யதிகாரவியைபு மினிதுவிளங்கும்.

இதனு ளிம்முதலோத்து மேற்பொதுவியல்பாற் பெறப்பட்ட முப்பொருள்களி னுள்ளும் விள்ளற்பாலதனை விண்டு அதனான்வருந் துன்பத்தி னீங்குதலுங், கொள்ளற்பாலதனைக்கொண்டு அதனான் வருமின்பத்தை யுறுதலுமாகிய பயன் பெறுதற்கேதுவாகிய சாதனஞ்செய்யுமா றுணர்த்துதலிற் சாதனவியலென்னும் பெயர்த்து. “ உழப்பின்வாராவுறுதிகளுளவோ, கழப்பின்வாராக் கையுறவுளவோ ” என்பவாகலிற் பெரும்பயன் பெறுதற்குரிய முயற்சிசெய்த பின்னர்த்தேயாகலி னிவ்வோத்து முன்வைக்கப்பட்டது. ஒருபொருட்கிலக்கண முணராதவழி அதனான் வரும்பயன் பெறுதற்குரிய சாதனஞ்செய்யுமா றியாங்ஙனமெனச் சாதனத்தையவாவுத லொருதலையாகலி னவ்வவாய்நிலைபற்றிய வியைபானே யோத்தியைபு கண்டு கொள்க. இதனு ளிம்முதற்பாதமாகிய வேழாஞ் சூத்திரம் அஃதாசிரியர்தாமே யுரைக்கின்றமையி னினிது விளங்கும்.

வரலாறு, மேலதற்கோர் புறனடையுணர்த்துத னுதலிற்று.

எ-து. கருத்துரை. எ-னின். சூத்திரக்கருத்துரைக்கின்றது. இ-ள். மேலைச்சூத்திரத்தினுணருரு வசத்தெனவும், இருதிறனல்லது சிவசத்தெனவும் வரைசெய்துணர்த்தியவழி யவ்வாறுணரும்பொரு ளவ்விரண்டினு ளொன்றோ வே

றே யென்றாங்கை நிகழுமன்றே அதனை நீக்கி அச்சூத்திர த்திற்குப் புறனாக வெடுத்தோரொழிபாகிய சதசத்தி னிய ல்பு வரைசெய் துணர்த்துமுகத்தானே மேற்பொதுவியல்பு கூறிப்போந்த வான்மாவுக்குச் சிறப்பியல்பு கூறுதனுதலிற் றிச்சூத்திரம் எ-று.

அதிகாரம் வேறாயவழியும் பாதவியை புணர்ந்துகொட்ட ற் கிவ்வாறுரைசெய்தாரென்பது.

புறனடையை வடநூலார் வாக்கியசேடமென்ப. இத னுட்கூறப்படு மூன்றதிகரணமும் மூன்றுபுறனடைபோலு மென்னு மலையாமைப் பொருட்டோர் புறனடையென்றார். முன்னைய விரண்டு மிறுதியதிகரணத்தைச் சாதித்தற் கேது வாயோர்பொருண்மேல் வந்தனவேயாமென்பது கருத்து.

ஒன்றனை யறிந்தவழி யதனான் வரும் பயன்பெறுதற் குரிய முயற்சிசெய்யலுறுவார்க்கதனைச் சாதிக்குமாற்ற றமக் குண்டென்பதூஉஞ், சாதித்தால் வரும்பய னிதுவென்ப தூஉம், அதனைப் பயப்பித்தற்குச் சிறந்தசாதனமாவதிது வென்பதூஉம், அதுவருவாயு முணர்ந்தாலன்றி யதன்கண் மனவெழுச்சி செல்லாமையி னீண்டோதப்படுஞ் சாதனஞ் செய்து பயன்பெறுதற்குரிய வதிகாரியை யுணர்த்துவதாகிய விது சாதகவோத்தின் முன்வைக்கப்பட்டது.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு மேலையதிகரண த்துட்கூறிய விரண்டனுள் வாக்குமனாதீதமாகிய சிவசத்தின் சந்நிதியி னுணருருவாகிய வசத்தெல்லாம் பாழேயாகலிற் ச த்தாகிய சிவ மசத்தாகிய பாசத்தை யறிந்தனுபவியாது. அச த்தாகிய பாசமறிவில்லாத சடமாகலிற் சத்தாகிய சிவத்தை யறிந்தனுபவியாது. ஆதலாற் பாரிசேடவளவையானே யிரு திற னறிவுளதொன் றுண்டென்பது பெறப்படுதலி னதுவே சத்தாதற்றன்மையு மசத்தாதற் றன்மையுமாகிய விரண்டு மன்றி யுள்ள வான்மாவா மென்றவாறு.

இரண்டினு ளொன்றனைப் பிரிக்கின்றமையிற் சத்தே யென்னுமேகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

அசத்திலதாகலி னென்றுரைக்க.

அசத்துச் சத்தையறியாமைக்குஞ் சத்தெதிர் சூனியமாதலே யேதுவாதலமையு மாயினும் வலியுறுத்துதற் பொருட்டு வேறுமோரேதுக்கூறினர். இக்கருத்தேபற்றிச் "சத்தின்முன் னிலாமையானுந் தனைக்கொடொன்றுணர்தலானு" மென விரண்டனையு முடனெடுத்தோதினர் வழிநூலாசிரியருமென்க.

அறிதலீண் டனுபவித்தன் மேற்று.

இனைத்தென வறிபொருட்கு வினைப்படு தொகுதிக்கண் வேண்டப்படு முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

இதனுள் யாவையுஞ் சூனியஞ்சத்தெதிராகலிற் சத்தேயறியா தென்ற தோரதிகரணம்; அசத்திலதறியா தென்ற தோரதிகரணம்; இருதிற னறிவுளதிரண்டலா வான்மாவென்ற தோரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்த திச்சூத்திரமென்றுணர்க.

அவற்றுள் "மண்டிய வுணர்வுயிர்க்காய் மன்னிநின்றறியு" மென்னுஞ் சிவாத்துவித சைவரை மறுத்தற் கெழுந்தது முதலதிகரணம்.

அஃதாமாறு. சிவாத்துவித சைவர்மேலைப் பொதுவதிகாரத்திற் கூறியவாறே பதிபசு பாசங்களதியல்புந் தத்துவங்களுக்குத் தோற்ற வொடுக்கங்களும் அஞ்சவத்தைப்படும் வேறுபாடுகளு மனைத்துஞ் சித்தாந்தசைவரோடொப்பக் கொண்டு பசுபாசங்கள் பதிவியாபகத்தின் வியாப்பியமாய் நிற்பனவன்றித் தனித்த முதலன்மையின் முப்பொருட்குந் தம்முள் வேற்றுமை குணகுணிகளுக்குத் தம்முளுளதாகிய வேற்றுமைபோல வட்பேதமேயன்றிப் புறப்பேதமின்மை

பான் மரத்தின் வியாப்பியமான கவடு, கொம்பு முதலியன வெல்லாம் மரமேயாமாறுபோலச் சதசத்து மசத்துமாகிய வினைத்துஞ் சத்தெனவே படுமெனவும், படவே பதித்தன் மையின் வேறுப்ப் பசுவுக்கறியுந் தன்மையுண்டெனிற் றனித்த முதலெனப்பட்டு வழுவாமாகலிற் சத்தாகிய பதிப் பொருளே யான்மாவினிடமாக நின்றறியுமெனவும், அனைத் துஞ் சத்தாயவழிச் சத்தின்வேறு யறியப்படும் பொருளொ ன்றின்மைபி னஃதறியுமா றியாங்ஙன மெனக்கடாயினார்க் குப் புறப்பேதமின்றாயினு மகப்பேதமாகிய சத்தாகிய பாச முண்மையின் அதனையதறிதல் கூடுமெனவும், சத்தின் முன் னரசத்தெல்லாஞ் சூனியமாகலி னஃததனையறிதல் கூடாதெ னிற் சத்தின் முன்னசத்துச் சூனியமென்றல் "தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே,, யெனவும் "கூடுமொ ளிவளர் குடிலை மாயை மேவி"யெனவும் 'தாரகமா மத்தன்று ளிற்ற'லெனவும் "விமலனுக்கோர் சத்தியாய்" எனவும் "உலகமே யுருவமாக" எனவும் "அத்துவா மூர்த்தியாக" வெனவும் "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி" யெனவும் வரு மித்தொடக்கத்துச் சுருதிகளெல்லா முரணி மாபாவாதி கூற் றுப் முடியுமன்றே யெனவுங் கூறுவராகலா னதனைமறுத்துச் சத்தேயறியா தென்னு மேற்கோளைச் சாதித்தற் கெடுத் தோதிய வேதுவை வலியுறுத்துகின்ற திவ்வதிகரணமெனக் கொள்க.

அதிகரண வியைபுபற்றியுந் தலைமைபற்றியுஞ் சத்தினி யல்பு முதற்கணெடுத்துக் கொள்ளப்பட்டது.

வரலாறு, சத்தினிடத் தசத்துப் பிரகாசியாது எனவ ரும்.

வாக்குமனாதீத கோசரமாய்ச் சுட்டுணர்வின்றி நின்ற றியப்படுஞ் சிவசத்தின் முன்னர்ச்சுட்டியறியப்படு மசத்தா கிய பாசம் விளங்கித்தோன்றா தென்பதாம்.

ஈண்டுச் சூனியமென்றது விளங்காமைப் பொருட்டென்பார் பிரகாசியாதென்றுரைத்தார். "முனைத்திடா" தென்றார் வழி நூலாசிரியரும்.

முனைத்திடாமையாவது: இதுகுடம் இஃதாடை யென நம்மனோராற் சுட்டியறியப்படுமாறுபோல முதல்வனாற் சுட்டியறியப்படுவதாய் வேறு நில்லாமை யென்க. எனவே யீண்டுச்சத்தெதிர் யாவையுஞ் சூனியமென்றது கொண்டு "தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே" யென்றற்றொடக்கத்துச் சுருதிகளோடு முரணுதலும், மாயாவாதி கூற்றாதலு மின்மைபி னிவ்வேதுவானே யிதுகுட மிஃதாடையென்றிவ்வா றசத்தின்கண் ணிகழுஞ்சுட்டுணர்வுடையது சிவசத்தென்றல் பொருந்தாமையிற் சத்தேயசத்தை யறியுமா றியாங்ஙனமெனச் சிவாத்துவித சைவரை மறுத்தவாறு காண்க.

அற்றேல், அசத்துவிடயமாய் விளங்குதற்குரிய சிற்றுணர்வு சிவசத்துக்குண்டென்றாற் படுமிழுக்கென்னையென்னுமாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது.

மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான் எனவரும்.

இ-ள். ஆன்மாவுக்குச் சிவத்தைச் சார்ந்து சுட்டிறந்தறிவதாகிய தன்னியல்பு விளங்கினவிடத்துச் சுட்டியறிவதாகிய பொதுவியல்பு விளக்கமின்றி நிற்றலானீண்டுச் சத்தினிடத் தசத்துப்பிரகாசியாதென மேற்கொண்டதென்றவாறு.

எனவே முத்திநிலையி லான்மாச் சிவத்தைச்சார்ந்து தன்னியல்பைத் தலைப்பட்டவழிச் சுட்டுணர்வு நிகழாதென்பது இருவர் மதத்தினு மொக்குமாகலான் ஆன்மாவுக்கு ஆண்டுச் சுட்டுணர்வு நிகழாமை பிறிதொன்றாற் பெறப்படாமையின்

அநாதிமல முத்தனாகிய முதல்வனுக்குச் சுட்டுணர்வில்லையெ ன்பது பெறப்படுதலின், அத்தன்மையனாகிய முதல்வனிட த்தசத்துச் சுட்டியறியப்படுவதாய் விளங்கி வேறுநிற்பது பாங்கனமென மேற்கோளைச் சாதித்தவாறு காண்க.

எக்காலத்து நிலைபெற் றுள்ளதாகிய தன்னியல்பே மெய்யெனப்படும் இடையே விளங்கி மறைவதாகிய பொது வியல்பே பொய்யெனப்படுமென்பது மேலையதிகரணத்துள் சற்காரிய வாதத்தும் அபாவவாதத்து முரைத்தாங் கடைப் பிடிக்க.

மெய்யினிடத்து மெய் பிரகாசித்தவிடத்தெனவுரைக்க.

மெய்பிரகாசித்தவிடத்தென வான்மாவுக்கென்பது பெ ற்றும்.

இவ்வாறுரைக்க அறியாதார் மேற்கோளுமேதுவு மொ ருபொருளே பயப்ப வுரைசெய்வர். அவ்வாறுரைப்பின் ம லைதீயுடைத்துத் தீயுடைமையானென்பதுபோல மேற்கோ ளைச் சாதிக்கு மேதுவாதல் செல்லாமையறிக.

அற்றேல், இதுபற்றி முதல்வனசத்தை யறியானெனி னவனது முற்றுணர்வுடைமைக் கிழுக்காமாலென்னு மாசங் கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதா ரணம்,

அந்நிய மிலாமை யரற்கோன் றுணர்வின்று
மந்நியமி லானசத்தைக் காண்குவனே—லந்நியமாய்க்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று. எனவரும்,

தன்னுள் வியாப்பியமான பசுபாசங்களோடு வேற்று மை யில்லாத முதல்வனுக்குச் சுட்டியறிபக்கிடப்ப தொன் றில்லையாகலா னத்தன்மையனாகிய முதல்வ னசத்தை யறிப னுறுவானாயிற் சுட்டுணர்வின்றி நின்றவாறே யறிவானன்றி

யெம்மனோர்போலத் தனக்கு வேறாகச் சுட்டியறிவா னல்லன். நன்மை யில்லாத வசத்து ஞாயிற்றின் முன்னிருள்போல அவனெதிர் விளங்குதலில்லை யாகலானென்க. எனவே சுட்டுணர்வு முற்றுணர்வைத்தடுப்ப தாகலான் அஃதில்லாமை முற்றுணர்வுக்கு மேம்பாடாவதன்றி யிழுக்கன்மையா னதுபற்றி யாசங்கையில்லையென்பது வலியுறுத்தவாறுகாண்க.

"மாயாதனுவிளக்காய்" எ-ம், "ஆதலா லிரண்டுஞ்சோதியிருளென வேறாம்" எ-ம், "இகலிவருமிவை யுணரிலிருள் வெளியாந்தன்மை" எ-ம் ஓதுதலின் மாயையு மதன்காரியமும் மலம்போல முதல்வனுக்கு மறுதலைப்பொரு ளன்மையா னீண்டுக்கதிர் முன்னிருள்போல வென்றது விளங்காமை மாத்திரைக்கொருபுடை யுவமையாக வெடுத்துக்காட்டியதேயாமென வவற்றோடு முரணாதவாறு காண்க.

மற்று அசை.

மற்றுக்காண்குவனே லென மேலே கூட்டியுரைத்து வினைமாற்றின் கண்வந்த தெனினு மமையும்.

மாணா வென்பது பெயரெச்சவெதிர்மறை.

இன்மை யின்மையா னென்க.

முதலதிகரண முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

——(:o:)——

மேலையதிகரணத்திற் சிவாத்துவித சைவரை மறுத்துச் சத்தேயறியா தென்றதனைச் சாதித்தவழி யதனை யுடன்பட்டுச் சிவசங்கிராந்தவாதசைவர் ஆன்மா விளக்குப்போல விகாரமின்றி யறிவுமாத்திரையாய் நிற்பதன்றி, யொன்றனை யறியுமாறில்லை யவ்வான்மாவின் சந்நிதியிற் காந்தபசாசம் போல வுடலியங்குழியதன்க ணின்று கருவிகளே விடயங்க

ளை யநுபவிக்கு மெனவும், மலநீங்கும்வழிக் கண்ணாடியின் முகவொளி தோற்றுமாறுபோல முதல்வன் றிருவருள் ஆன்மாவின்மாட்டுச் சங்கிரமித்துத் தோன்றுமெனவும், அவ்வழியுப்பளத்திட்டவையெல்லா முப்பாமாறுபோல ஆன்மாச் சிவமேயா யவ்வான்மாவின் சந்நிதியி லறிவனவாகிப் பசுகரணங்களுஞ் சிவகரணங்களாய் மாறிச் சிவத்தை யறியுமெனவுங் கூறுவர். அவற்றுட் சந்நிதிமாத்திரையானே கருவிகள் விடயங்களை யறியுமென்பது ஐம்பொறிக ளான்மாவாலுணருமெனச் சாங்கியரை மறுத்தவதிகரணத்தானே மறுக்கப்பட்டமையின் அவையே சிவகரணங்களாய்ச் சிவத்தையறியுமென்பதனை மறுத்து அசத்தறியா தென்றதனைச் சாதித்தற் கெடுத்தோதிய வேதுவை வலியுறுத்துதற் கெழுந்த திரண்டாமதிகரணம். இவ்வதிகரண முன்வைக்கற் பாலதாயினுஞ் சத்ததிகாரப்படாமையி னவ்வியைபுபற்றி யதனை முன்வைத்தாரென்பது.

அசத்தினுக் குணர்வின்று எனவரும்.

ஈண்டசத்தென்றது தத்துவப்பிரவஞ்சத்தை.

அதனைப்பிரவஞ்சத்திற் கறிவுண்டெனக்கொள்வார் யாருமின்மையா னுண்டையப்பாடு நிகழாமையி னதனையோ ரதிகரணமாகவைத்துச் சாதிக்கவேண்டாமையா னென்பது.

சூத்திரத்தினில்லதென்றது அறிவில்லதென்னும் பொருட்டென்பார் உணர்வின்றென வுரைத்தார்.

அற்றேல், ஆன்மசந்நிதியில்வழித் தத்துவங்களுக்குணர்வில்லையென்ற தொக்கும். அஃதுள்வழியு மவற்றிற்கறிவில்லையென்றல் பொருந்தாது. என்னை? பதிஞானம் பசுஞானங்களோடொப்பப் பாசஞான மொன்றென வைத்தெண்ணுதலி னவற்றிற்கறிவுண்டென்பது பெறப்படுமாலெனின் னாசங்கை நிகழ்ந்தவழி, யதனைநீக்கி யம்மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது. அதுவாவிருப்பிக்கில் இன்றகலான் எனவரும்.

இ-ள். அவ்வசத்தாகிய தத்துவப்பிரவஞ்சமானது பொதுமையா னேக்கும்வழி யறிவுடையதுபோலத் தோன்றினும் ஐயந்திரிபின்றி மாசறுகாட்சியா ளுராயும்வழி யறிவில்லதாகலா னசத்தினுக்குணர்வின்றென மேற்கொண்ட தென்றவாறு.

எனவே பாசம் வாயிலாய் நிகழும் பசுஞானமே பாசஞானமென்று பசரித்துக் கூறப்படுமதனைப் பாசத்திற்குள்ள ஞானமெனக்கொண்டல் நிரூபியாதவழிப்படு மடமையே பிறிதில்லையென்றவாறாயிற்று.

அற்றேல், உள்ளதுபோலத் தோன்றி யில்லாதாதல் யாங்ஙனமென்னு மாசங்கையை யுவமைமுகத்தானீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

பேய்த்தேர்நீ ரேன்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதேனக் காண். எனவரும்

பாலைநிலத்தின்கட் காணப்படும் பேய்த்தேரை நீரென்றுகருதி யதனையுண்ணவருகின்ற நீர்வேட்கையுடைய படவோனுக்கு அதனையடுத்தவழி, தன்னாலணையப்பட்ட அப்பேய்த்தேர் நீராதலின்றி யசத்தாந்தன்மைபோலக் குரவனறிவுறுக்கு முபதேசமொழி கிடைத்து அவ்வசத்தினியல்பை யாராய்ந்தறிவாரின்றி யறியமாட்டதாருள்வழி, யவர்க்கவ்வசத்தின்கண் ணறிவில்லதா யசத்தாந்தன்மை யின்றி யறிவுள்ளதாய்ச் சத்தாந்தன்மையே காணப்படும். குரவனறிவுறுக்கு முபதேச மொழிகிடைத்து அவ்வசத்தினியல்பை யாராய்ந்தறிய வல்லார்க் கஃதறிவில்லதே யாமென்றறிவாயாகவென்க.

மற்று வினைமாற்றின்கண் வந்தது.

மை பகுதிப்பொருள் விகுதி.

இன் உவமவுருபு.

வாய்த்தல் கிடைத்தல்.

இல்வழியி னென்பதூஉம், அசத்தின்மை யென்பதூஉம் மறுதலைப்பொருளுணர நின்றன.

நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது "ஐந்தவித்தா னாற்றல்" என்புழிப்போல.

இரண்டாமதிகரண முடிந்தது.

---

## மூன்றாமதிகரணம்.

—:◌:():◌:—

மேலையதிகரணங்களாற் சிவசத்தின்றன்மையே யான்மாவுக்குந் தன்மையன்றி வேறில்லை யென்னுஞ் சிவாத்துவித சைவரையும், ஆன்மாவுக்குத் தன்மையென்பதொன்றில்லை யென்னுஞ் சிவசங்கிராந்த சைவரையுமறுத்துச் சத்துமசத்துந் தம்முளொன்றனை யொன்றறியுமாறில்லை யெனச் சாதித்தவழி, யிரண்டு மிவ்வாறாயி னிவற்றை யறியும்பொருள் வேறென்னையென்னு மாசங்கையை நீக்கிப் பாரிசேடவளவையாற் சதசத்தாகிய வான்மாவினியல்பை வரைசெய்துணர்த்துதற் கெழுந்தது மூன்றாமதிகரணம்.

இருதிறனறிவுள திரண்டலா வான்மா எனவரும்.

ஈண்டுச்சத்தெதிர் நில்லாத வசத்துஞ் சத்தா லறியப்படாமையான் ஆன்மாவாலு மறியப்படாதவழியவை யுபயமன்றிச் சூனியமாய் முடியுமாகலா னிரண்டலா வான்மா விருதிற னறிவுளதேயாம். தம்முளொன்றா னொன்றனுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையு மனுபவிக்குங் கண்போலுமென வனுமானங்கூறிக்காண்க.

ஈண்டிருதிற னறிவுளவென்னுந் தொகைச்சொல் விரியுங்காற் படும் பொருள் வேறுபாடுரைக்கு முகத்தானே யான்

மாவினியல்பு வேறு வேறு கூறுஞ்சமயங்களெல்லா வற்றை யுமறுத்தவா றுணர்த்தற் கெழுந்த பொழிப்புரை.

இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசியாய் நின்ற அவ் வறிவு இரண்டன்பாலு முளதாய் உள்ளவதுவே அவ்வான் மாவாமென்றது எனவரும்.

இ-ள். மேற்கூறிப்போந்த சத்து மசத்துமாகிய விவ்வி ரண்டினையு மறியுந்தன்மைத்தாய் அறிவிக்க வறிவதாகிய வுபதேசியாய் நிலைபெற்ற சத்தசத்திரண்டன்பாலு மனுபவ வறிவுளதாயுள்ளவதுவே சத்துமசத்துமல்லாத சதசத்தா கிய வான்மாவென்றவாறு மிருதிற னறிவுள திரண்டலாவா ன்மாவென மேற்கொண்டது.

ஆயென்னும் வினையெச்ச மிரண்டும் நின்றவென்னும் பெயரெச்ச வினையொடு தனித்தனி முடிந்தன.

நின்றவென்னும் பெயரெச்சம் உளவென்பதன் முடி பாகிய வதுவென்னும் பெயர்கொண்டு முடிந்தது.

இருதிறனறிவென்னுந் தொகைச்சொல் ஈண்டு மூன்று பொருளின் மயங்கிற்றென்னுங் கருத்தா னிவ்வாறுரைக்கப் பட்டது. அவற்றுளிருதிறனையு மறியுமறிவென்னு மிரண் டாம் வேற்றுமைத்தொகைப் பொருள்பற்றி யிரண்டினையு மறிவதாய் நின்றவறிவெனவும், இருதிறனால் விளங்கிய வறி வென்னு மூன்றும் வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி யுபதேசியாய் நின்றவது வெனவும், இருதிறனிலு முள்ள வறிவென்னு மேழாம்வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி யிரண்டன்பாலு முளதாயுள்ள வதுவெனவு முரைத்தாரெ னக்கொள்க.

இரண்டினையு மறிவதாய்நின்ற வதுவென விரண்டாம் வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி யிரண்டு மிவ்வாறுபி னிவற்றை யறியும்பொருள் வேறென்னையென்னும் வினவு

க்கு விடைகூறி யவ்விருவர் மதங்களையு மவற்றோடொரு தன்மையவான புறச்சமயங்களையு மறுத்தவாறு.

உபதேசியாய் நின்ற வதுவென மூன்றும் வேற்றுமைத்தொகைப்பொருள் பற்றி ஆன்மா வறிவிக்கவேண்டாது தானேயறியு மியல்பிற்றென்னுஞ் சமவாதசைவர் ஈசுரவவிகாரவாத சைவர் ஐக்கியவாதசைவர் மதங்களையு மவற்றொடொரு தன்மையவான புறச்சமயங்களையு மறுத்தவாறு.

இரண்டன்பாலு முளதாயுள்ள வதுவென வேழாம் வேற்றுமைத்தொகைப்பொருள்பற்றி யான்மாவினறிவு சத்தோடு கூடுமாறில்லையென்னும் பாடாணவாதசைவர் பேதவாதசைவர் மதங்களையும் சத்தினோடு கூடியவழியொன்றாய்ப்போதலேயன்றி யதன்பா லுளதாமாறில்லையென்னும் சுத்தசைவர் மதத்தையு மவற்றொடொரு தன்மையவான புறச்சமயங்களையு மறுத்தவாறு.

இவ்விரண்டினையு மறிவதாயெனவே அவ்வறியுந்தன்மை யிவ்விரண்டின் றன்மை போலன்றி யிருளொளியலாக்கண் டன்மைபோல வேறாயதோர் தன்மை யென்பதூஉம், உபதேசியாய்நின்ற வெனவே யத்தன்மை யாகாயத்தன்மையாகிய வோசைபோலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சகமுள்வழியே விளங்குவதோர் தன்மை யென்பதூஉம், இரண்டன்பாலுமுளதா யெனவே யதுபடிகம்போலச் சார்ந்ததன் வண்ணமா யழுந்துவதோர் தன்மையென்பதூஉம் பெற்றாம்.

இனி இம்மூன்றனு ளிரண்டினையு மறியுமென்றதனை வலியுறுத்தி யிரண்டலாமையை யுணர்த்துதற் கெடுத்துக்காட்டுமுதாரணம்.

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்றருகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றேக்கு. எனவரும்.

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா வருவுருவ மன்றாகும்-எ-து. நானுகிய நூல்களை யாராயுமான்மாவே, யருவாகிய சத்தினையு முருவாகிய வசத்தினையுமறிவதாகலா னஃதவ்விரண்டு மன்றி வேறாமென்க.

அற்றேல், அவ்வான்மாத் தன்னையறியுமோ அறியாதோவெனக் கடாயினார்க்கு அறியுமெனிற் றன்னோடுளப்படமூன்றனையு மறிவதென்றா தவ்விரண்டனையு மறிவதாறென்றல் பொருந்தாது. அறியாதெனின் அறியாதபொருள் சூனியமெனப்பட்டு வழுவாமாலெனின், உண்மை யருவுருவாய்த் தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது தோன்றல் பலர்மணம்போற் றெக்கு-எ-து. ஆன்மாவி னுண்மைத்தன்மை சத்துமசத்தும்போல விளங்கித்தோன்றி யவற்றொடொப்ப நிற்பதுமன்று விளங்கித் தோன்றாது சூனியமாய் நிற்பதுமன்றாய் மலரின்கண் வாசமிவ்விருவகையு மன்றியதன்கண்ணடங்கித் தோன்றுமாறுபோலச் சத்தினு மசத்தினுஞ்சார்ந்ததன் வண்ணமா யடங்கித்தோன்றுவதோ ரியல்பாமாகலா னஃதவ்விரண்டினையு மறியுமுகத்தா னறியப்படுவதன்றி யவைபோலத் தனித்தறியப் படுவதொன்றன் றென்க; ஆகலா னஃதவ்விரண்டினையு மறியு முகத்தானறியப்படுவதன்றி யவைபோலத் தனித்தறியப்படுவ தொன்றன்றென்பது குறிப்பெச்சம்.

சுட்டி யுணரப்படாமைபற்றிச் சத்தை யருவென்றுஞ் சுட்டப்படுதல் பற்றி யசத்தை யுருவென்றுங் கூறினார். உணருரு வசத்தென்புழி யுருவென்றது மதுபற்றி.

அறிதலானன்றாகு மெனக்கூட்டுக.

இழை நூலாகலானீண்டுச் சாத்திரத்தை யுணர்த்திற்று.

ஆய்தல் நுணுகுதல் "ஒய்தலாய்த னிழத்தல் சாஅ, யாவயினான்கு முள்ளதனுணுக்கம்" என்றார் தொல்காப்பியனாரும்.

ஆயிழையெனப் பொருளினுறுக்கம் நூன்மேலேற்றப்பட்டது.

இழையையென விரண்டாவது விரித்துரைக்க ஆன்மாவுக் கறியுந்தன்மை யுண்டாகலானன்றே வேதாகம முதலிய நூல்களுளவாயினவென வதனை வலியுறுத்துவார் ஆயிழைபா யான்மாவென வுடம்பொடு புணர்த்தோதினர்.

“பலகலையுலகி னிலவுதலானு” மென்றார் புடைநூலாசிரியரும். இவ்வாறின்றி ஆயிழைபா யென்பதனை மகடூஉ முன்னிலையாக வைத்துரைப்பின் இவ்வுதாரணம் வலியுறுத்துதற்கெழுந்த தன்றாய்க்கூறியது கூறலென்னுங் குற்றப்படுமென்றொழிக.

அருவுருவாயென்புழி, யாக்கச்சொல் உவமப்பொருள் குறித்து நின்றது.

“ஆள்வாரிலி மாடாவேனோ” வென்புழிப்போல நோக்குத் தோன்றலெனக்கூட்டுக.

அற்றேல், ஆன்மாவுக்கவ்வறியுந் தன்மை சிவசத்தோடொப்பச் சுதந்திரமா யுண்டென்றாற் படுமிழுக்கென்னையோவென்னு மாசங்கையை நீக்கியுபதேசியா யென்றதனை வலியுறுத்தி யிரண்டலாமையை யுணர்த்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமைதான். எனவரும்.

நீயறியுமுறைமை சொல்லி லறிவை விளக்குதற்குரிய வியஞ்சக மில்வழி யொருவிடயத்தை யின்னதென்றறியமாட்டாது மயக்கத்தை யுற்றும் பசிநோய்க் கன்னம்போல அம்மயக்க நோய்க்கு மருந்தாகிய வியஞ்சகமுள்வழி யப்பய

க்கநீங்கி யதனையின்னதெனெ நிச்சயித்தும், இங்ஙனமறிவுழியு மொருங்கே யறியமாட்டா தொருவிடயத்திற் சென்ற வறிவைமாற்றி மற்றொரு விடயத்தை யறிந்து வருகின்றாயாகலி னிவ்வாறு மாறிமாறி யொன்றொன்று யுணர்கின்ற நீ யெல்லாவற்றையு மொருங்கே யோரியல்பா னுணர்வதாகிய சத்தின்றன்மையுடையா யல்லை. அற்றேல், வியஞ்சக முள்வழியன்றி யறியமாட்டாதயான் சத்தின்றன்மை யுடையேனாவேனோ வெனின் வியஞ்சக முள்வழியும் நீமுன்னறிந்துசெய்த வினைகளை யிப்பொழுது நீயே யறிந்தனுபவிக்கின்று யன்றி யசத்தாகிய பிரவஞ்ச மறிந்தனுபவித்த லின்மையா னவ்வசத்தின்றன்மை யுடையாயுமல்லை வியஞ்சக முள்வழி அறிதலொப்புமையாற் சத்தாதலும் அஃதில்வழி யறிவுநிகழாமையொப்புமையா லசத்தாதலுமாகியதோர் தன்மையுடையநீ யவ்விரண்டினும் வேறாகிய சதசத்தாவையென்க.

பேசில் நீ யசத்தாகாய் துய்யாமையா லசத்துமலை வேறெனக்கூட்டுக.

வியஞ்சகமில்வழித் தலைப்படுவதும், அஃதுள்வழி நீங்கியு நிற்பதாகிய மயக்கம் உண்டியில்வழித் தலைப்பட்டுஅஃதுள்வழி நீங்கியுநிற்பதாகிய பசியொடொத்தலி னதனைப் பசி நோயாகவும் தீர்த்த லொப்புமைபற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்கு மருந்தாகவு முருவகஞ்செய்தார்.

இது ஏகதேசவுருவகம்.

மருந்தெனப்பொதுப்பட வுருவகஞ் செய்தாராயினும் பசிநோய் தீர்க்குமருந்தே யீண்டைக் கேற்புடையதாகலி னேற்புழிக்கோடலா னவ்வாறுரைக்கப்பட்டது.

அது பகுதிப்பொருள் விகுதி.

தானென்பது, முன்னையது எழுவாயுருபுபட நின்றது பின்னையது அசைநிலை.

துவ்வாமை துய்யாமை யெனமரீ இயிற்று.

அற்றேல், இம்மயக்கம் ஆன்மாவுக்கே யன்றிச் சிவத்துக்கில்வழி யிரண்டற்குந் தம்மு ளியைபுகூடாதாகலிற் சிவசத்துக்கு மஃதுண்டெனக் கோடல்வேண்டுமென்னு மாசங்கையை யுவமமுகத்தா னீக்கி யான்மாவிரண்டின்பாலு முளதாதலை வலியுறுத்தி யிரண்டலாமையை யுணர்த்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்:

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளமுள வாய்த் தான். எனவரும்.

மேலைவெண்பாவிற் பெறப்பட்ட மயக்கமாகிய வறியாமை வியஞ்சகமில்வழித் தலைப்பட்டும் அஃதுள்வழி நீங்கியு மிவ்வாறு நிலைபேறில்லதாகலா னஃதெப்பொழுது மொருதன்மைத்தாய் நிலைபெற்று விளங்கு ஞானமாகிய சிவசத்தின்கண்ணே நிகழ்தலின்றி, மெய்ஞ்ஞானமாகிய அச்சிவசத்துள்ள அநாதியே தானே குளிர்ந்த கடலின்கண் மருவாது கடலிடத்துளதாகிய நீரின்கண்மருவு முப்புப்போலத் தான் பொருந்துதற்குரிய சதசத்தாமியல்புடைய வான்மாக்களு முள்ளனவாக வவ்வான்மாக்களைப் பொருந்துமாற்றை யறிவாயாக வென்க.

அஞ்ஞான மசத்தாகலான் மெய்ஞ்ஞானந்தன்னில் விளையாது.

மெய்ஞ்ஞான முள்ளவன்றே தானேயென்புழித் தானே யென்பது கட்டுரைக்கண் வந்தது.

தானே யுளமுளவாத்தானென்புழித் தானென்பது, முன்னையது எழுவாய் பின்னையது அசைநிலை.

ஏயுளம் வினைத்தொகை.

ஆயணைதலெனக்கூட்டுக.

ஆபணதலென்பது மழைபெய்யக் குளநிறைந்த தென்றாற்போலக் காரண காரியப்பொருட்கண்வந்தது.

கடலென்றது நீர்க்கிடங்கொடுத்துநிற்கு மாகாயம்.

உப்புத் தான்மருவுதற்குரிமையில்லாத கடலின்கணின்றிக் கடலோ டியைபுடைத்தாயுந் தான்மருவுதற்குரிமையுடைய நீரின்கண்ணே யுளதாயினாற்போல அஞ்ஞானமுந் தான்மருவுதற்குரிமையில்லாத மெய்ஞ்ஞானத்தின்கணின்றி யம்மெய்ஞ்ஞானத்தினோ டாகியே யியைபுடைத்தாயுந்தான் மருவுதற்குரிமையுடைய வான்மாவின்கண்ணுளவாதலமையு மென்பார் தண்கடனீருப்புப்போ லென்றார்.

இதனானே வியாபக வியாப்பியங்களாமாறும் பெறப்பட்டது. இதனு ளான்மாவுக்கு இரண்டின்கண்ணு மியைபுடைமை கூறவே யிரண்டின்பாலு முளதாதலே வலியுறுத்திய வாறுகாண்க.

இவ்வதிகரணத்தி னிருதிறனையு மறியு மறிவுளதெனவே யிருதிறனாகிய சத்து மசத்துமெனப்பட்டன வெல்லாம் பிரமேயமென்பதூஉம், அவற்றை யறியு மான்மாவே பிரமாதா ஆன்மாவி னறிவாகிய சிற்சத்தியே பிரமாணம் அவ்வறிவு நிகழ்ச்சியே பிரமிதி யென்பதூஉம், இருதிறனால் விளங்கு மறிவுளதெனவே யிரண்டனுள் அசத்தான் விளங்கும்வழி தனக்கு வேறாய்நின்று விளக்குங் காட்சியு மனுமானமு மாகமமு மெனப்படும். அசத்தாகிய பாசஞான மூன்றுஞ்சத்தான் விளங்கும்வழி, அன்னியமின்றித் தனக்காதாரமாயுடனின்று விளக்குஞ் சிவஞானமுந் தானே வியஞ்சகமாமாகலினதுபற்றி யவையும் பிரமாணமென் றுபசரித்துக் கூறப்படு மென்பதூஉம், இருதிறனினு மறிவுளதெனவே யிரிடத்துங் கேடின்றி யசத்தான் விளங்கி யசத்தை யறிவுழி யசத்தின்பாலும் சத்தான் விளங்கிச் சத்தையறிவுழிச் சத்

கின்பாலு மதுவதுவாய் நின்றானென்பதூஉம் பெறப்படும்.

இவ்வாறன்றி வியஞ்சகங்களே பிரமாண மென்னுந் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தாமையும், அவ்வியஞ்சகங்களா னிகழும் பிரமிதி வேறுபாடு மவற்ற தியல்புகளுமீண்டு விரிப்பிற்பெருகும் பவுட்கர முதலிய சிவாகமங்களிற் காண்க

மூன்றமதிகரண முடிந்தது.

---

சிவஞான போதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞான யோகி செய்தசிவஞானமா பாடியத்தில் இரண்டாவது உண்மையதிகாரத்திற் சாதனவியலில் முதற்பாதமாகிய வேழாஞ் சூத்திரம் முடிந்தது.

# எட்டாஞ் சூத்திரம்.

**ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்**
**டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.**

என்பது சூத்திரம் எ-னின்.

ஞானத்தினை யுணரு முறைமையினை யுணர்த்துத னுதலிற்று.

மேலைச் சூத்திரத்தாற் சாதிக்கப்பட்ட வதிகாரந் தனைக் கண்டென் றறிந்த வான்மாவுக்குச் சாதித்ததனாற் பெறப்படும் பயனிது வென்பதூஉம், அதற்குச் சிறந்த சாதனமாவதிதுவென்பதூஉம், அதுவருமா றுணர்த்து முகத்தானே யவ்வான்மாவின் ஞானம் மேலிருக்கிற வென்றதனுள் அரந்தான் விளங்கிய சத்தின்பா லினைப் பாதத்தினையறிந்து நின்

றவாறுஞ், சத்தான் விளங்கிச் சத்தின் பாலுளதாய்ச் சத்தினைப் பற்றிந்து நிற்குமாறுந் தெரிசிக்கு முறைமையினை யுணர்த்துதல் சாதனவியலி னிரண்டாம் பாதமாகிய விவ்வெட்டாஞ்சூத்திரத்தின் கருத்தென்க.

மேலிருதிற னறிவுள தென்றவழித் தம்முள் மாறுபட்ட பொருளிரண்டின் பாலுமறிவுளதாமா றியாங்ஙனமென்னு மாசங்கையை யீண்டு நீக்குதலி னவ்வாசங்கைபற்றிய விஷயபானே யதிகரண விஷயபும், மேலான்ம ரூப மூணர்த்தியீண்டதனைத் தெரிசிக்குமா றுணர்த்துதன் முறைமையாகலி னம்முறைமைபற்றிய விஷயபானே பாதவிஷயபும், மேலைச் சூத்திரத்தாற் சாதித்தற்குரிய வதிகாரியை யுணர்ந்தவழி யேனைப்பயனும், சாதனமும், வருவாயும் யாவையென விவற்றை யவாய் நிற்றலின் அவ்வவாய் நிலைபற்றிய விஷயபானே யோத்தியையும் பெறப்பட்டன.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஆன்மா முன்னே செய்துகொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தா னிப்பொழுது தமக்கந்தரியா மியா யுண்ணின் றிதுகாறு முணர்த்திவந்த பரம்பொருளே குருவடிவங்கொண் டெழுந்தருளிச் சிவதீக்கைசெய்து மன்னவகுமாரனாகிய நீ யைம்பொறிகளாகிய வேடரோடுகூடிவைகி வளர்ந்து நின்பெருந்தகைமையறியாது மயங்கி யிடர்ப்பட்டாய் நின்பெருந்தகைமை யாவதிவ்வியல்பிற் றென்றறிவுறுப்ப வறிந்த மாத்திரையே யவற்றைவிட்டு நீங்கி அன்னியமின்றி யன்னியமாந்தன்மையினிலைபெற்று அம்முதல்வன் றிருவடிகளை யணையுமென்றவாறு.

ஆன்மாவென்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது.

தவத்தினிற் றம்முதல்குருவுமாய் ஐம்புலவேடரின் வளர்ந்தயர்ந்தனையென வுணர்த்தவிட்டன்னிய மின்மையி னரன்கழல் செலுமெனக் கூட்டுக.

மன்னவ குமாரனாகிய நீயென்பது தோன்றா வெழுவாயாய் நின்றது.

புலன் ஆகுபெயர்.

வளர்ந்தயர்ந்தனை யென்பது ஈந்து புகழ்பெற்றனென் புழிப்போலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

அயர்த்தல் மறத்தல்.

தம்முதலென்றது வேறுமுடிபாகலின், யானெம்மூர்ப்புகுவன் என்புழிப்போலப் பால்வழுவின்மைகண்டு கொள்க.

குருவுமென்ற வும்மை யிதுகாறு முயிர்க்குயிராயுண்ணின்றுணர்த்தியதூஉ மன்றி யென விறந்தது தழீஇயிற்று. சிறப்புமாம்.

அன்னிய மின்மையி னென்பது, அயரா வன்பினென்பதுபோலச் சேறற் கேதுவாய் நின்றது.

அன்னியமின்றாந் தன்மையுடையவனாகிச் செல்லுமென்பதாம்.

அரனென்பது சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. "கற்பாடழித்த கனமாமணித்தூண்செய்தோளா" னென்புழிப்போல.

வெண்கொற்றக்குடையும் மணிமுடியுஞ் சிங்காதனமும் மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம்; அதுபோலப் பிரபஞ்சமெல்லாவற்றிற்கு மூலகாரணமாதலாகிய வொருபெரு வெண்கொற்றக்குடையும், எவற்றையு மொருங்கே யோரியல்பானறியும் பேரறிவாகிய வொருபெருஞ் சுடர்முடியும், எவற்றினையு மங்ஙனே யுயிர்க்குயிராய் நின்று செலுத்துதலாகிய சிங்காசனமும், பிறர்க்கின்றித் தனக்கே யுரிமையாகச் சிறந்தமைபற்றிப் பசுக்களுக்குப் பாசங்களை யரித்தலா லரனென்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வமுழுதுந் தன

ஞேயாகக்கொண் டனுபவிக்குஞ் சுதந்திரமுடைமையுஞ், சித்தெனப்படுஞ் சாதியொப்புமையும்பற்றி, ஆன்மாவை மன்னவ குமாரனாகவும், அவ்வான்மாவை யறிவுப் பெருஞ்செல்வமுழுவது மாறலைத்துக்கொண்டு சிறுமை யுறுத்துதலும் விதிவிலக்கைபிழுப்பித்திழிதொழிலி னிற்பித்தலுமாகிய வியல்புபற்றி யைம்பொறிகளை வேடராகவும் உருவகஞ்செய்தார்.

இஃதேகதேசவுருவகம்.

“மன்னவன்றன் மகன் வேடரிடத்தே தங்கி” யென வழிநூலாசிரிய ரோதியது முற்றுருவகம்.

ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந்தென வெனவே ஐம்புலவேடரின் வளர்ந்தயர்தலும் அனுவாதமுகத்தா னீண்டே பெற்றாம்.

இதனுள் தவத்தினி லுணர்த்தவென்பதோரதிகரணம்; தம்முதல் குருவுமா யுணர்த்தவென்பதோரதிகரணம்; ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந்தென்பதோரதிகரணம்; விட்டன்னியமின்மையி னரன்கழல் செலுமேயென்பதோரதிகரணம் ஆக நான்கதிகரணத்ததிச் சூத்திரமென் றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

அவற்றுளீண்டைக்குச் சிறந்த சாதன மிதுவென்பதூஉம் அதுவருவாயு முணர்த்துதற் கெழுந்தது முதலதிகரணம்.

இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானநிகழும் எனவரும்.

இவ்வான்மாக்களுக்குச் சாதிக்கு மாற்றலாகிய வதிகாரமுள்ளனவென மேலைச்சூத்திரத்தாற் பெறப்பட்டமையின் ஈண்டு ஞானமாவது சாதனமாகிய ஞானமென்க.

ஆளுடைய பிள்ளையார் முதலிய நாயன்மார்க்குத் தவமின்றியு ஞான நிகழ்ந்ததாலோ வென்னு மாசங்கையை நீக்குதற்கும் படிமுறையானன்றி யிவ்வொரு பிறவியிற்செய்த தவந்தானே யமையாதென்ப துணர்த்துதற்கும் முற்செய்தவமென விசேடித்தார்.

ஈண்டு ஞானமென்றது: குரவனுணர்த்தியவாறு சிவஞானங்கண்ணாகக் கொண்டறிவதாகிய வறிவினை.

நிகழ்தல் ஐயந்திரிபின்றி விளங்குதல்.

அற்றேல், "மும்மை நற்பதிக டம்மின் முளைத்தவா முடிந்தோர் மூவர், செம்மை நற்கழல் கண்டோர்கள் சிவத்தினைச்சேர்வர்" எ-ம், "சிறந்தடி காணச் சீவன் முத்தராய்த் திரியலாமே" எ-ம், "சிவார்ச்சன மார்ச்சன மாகிற் பவமகலும் பரபோகம் பெறலாகும்" எ-ம், "ஆதாரயோக நிராதாரயோகமென, மீதானத்தெய்தும் விதியிரண்டே" எ-ம் பிறாண்டு மிவ்வாறோதுதலின் வீடுபேற்றிற்குக் காரணம் இத்தன்மையவாகிய தவங்களொன்றே யமையுமன்றி ஞானங் காரணமெனினும் இவற்றோடொப்பது ஒருகாரணமே யெனவமையும்; அவ்வாறன்றிச் சிறந்த சாதனமென்றற்குப் பிரமாணமென்னை யெனவும், "பொருவி னிருவாண மறுவகையு மொருவி நினைவரிதாம் பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று" மென இவ்வாறு சிவாகமங்களினுந் தீக்கையே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமென் றோதுதலி னதுவேயமையும் ஏனைச்சரியை கிரியாயோக ஞானங்களெல்லாந் தீக்கைக் கங்கமாக விதிக்கப்பட்டன வெனக்கோடல் பொருத்தமுடைத்து அதனையொழித்து ஞானமே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமென்றற்குப் பிரமாண மென்னை யெனவு மாசங்கை நிகழ்வழி யதனை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த வேது.

மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறி

யாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா வாகலான். எனவரும்.

இ-ள். வெளிப்படை.

தவமெனப்பட்டன விவையென்பார் சரியை கிரியா யோகங்களை யென விதந்துரைத்தார்.

கிரியா யோகங்களென வும்மைத்தொகை வடநூன் முடிபு.

சரியை யென்பது தொகைநிலைச்சொல்.

கிரியை யோகமிரண்டற்குந் தீக்கை யொன்றே யென் பது தோன்ற அவ்விரண்டினையுந் தொகுத்தோதிச் சரியை யை வேறுவைத்தார்.

மேற்கோளின் முற்செய்தவத்தா னென்றதற்கேற்ப ஈண்டும் மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழியென் றார்.

மேலாகிய வுண்மைச் சரியைகிரியா யோகங்களை யெ ன்றுரைப்பினு மமையும்.

கொடா வென்னும் பயனிலைக்கெழுவாய் அவையென் றெடுத்துக்கொள்க.

காட்டிக்கொடுக்க வெனற்பாலதனை யீண்டெதிர்மறை யாற் கூறினார். ஞானத்தினை யின்றி யமையாமை யுணர்த் துதற்கு.

சரியைகிரியா யோகங்களைச் செய்துழி என்ற தூபலக் கணமாகலிற் றீக்கை செய்துழியதுவும் ஞானத்தைக்காட்டி யல்லது மோட்சத்தைக் கொடாதெனவு முரைத்துக்கொ ள்க.

அவையெல்லாம் ஞானத்தைக்காட்டி யல்லது மோட்ச த்தைக்கொடாமையை வலியுறுத்துவார் நன்னெறியாகிய வென ஞானத்தை விசேடித்தார். நன்மை யெனப்படுவன

வெல்லாவற்றுள்ளுஞ் சிறந்த நன்மையெனப்படுவது விடுபே றென்ப; அதனைத் தலைப்படுதற் கேதுவாய்ச்சிறந்த நெறி யாகலின் ஞான நன்னெறியெனப்பட்டது.

விழுச்சுடர்ச் செம்பொன்மேருமால்வரையைத் தலைப் படலுறுவாராய்த் தென்றிசைக்கணின்றும் வழிவினாய்க் கொண்டு சென்று நாவலந்தீவிற் பாரதவருடத்தினை யெய்தி யாண்டுநின்று நெறிவினாயினார்க்கு அஃதறிந்துள்ளார் ஆண் டுக்காட்டியநெறியே யதற்குச் சென்னெறியாயினும் அந்நெ றியிமயத்தையிடையிட்டுக் கிம்புருடவருடத்திற் செலுத் தும், ஆண்டுநின்றுஞ் செல்லுநெறி யேமகூடத்தை யிடையி ட்டரிவருடத்திற்கொண்டு செலுத்தும், ஆண்டுநின்றுஞ் செல்லுநெறி நிடதத்தை யிடையிட்டு இளாவிரதவருடத் திற்கொண்டு செலுத்தும், ஆண்டுநின்றுஞ் செல்லுநெறி யி டையீடின்றி மேருமால்வரைக்கே கொண்டு செலுத்தும். இவ்வாறு நாற்றிசையுள் யாண்டுநின்றெய்தினும் நாவலந்தீவி னைத்தலைப்பட்டு இளாவிரதவருடத்திற் கொண்டு செலுத் தும் ஆண்டுநின்றுஞ் செல்லுநெறி யிடையீடின்றி மேருமா ல்வரைக்கே கொண்டுசெலுத்தும், இவ்வாறு நாற்றிசையுள் யாண்டுநின்றெய்தினும் நாவலந்தீவினைத் தலைப்பட்டு இளாவி ரதகண்டத்தினைத் தலைப்பட்டன்றி மேருமால்வரையை யெ ய்தல்கூடா தென்பதூஉம், கூடாதாயினு மவையெல்லாம் இ ளாவிரதகண்டத்திற் செலுத்துமுகத்தான் மேருமால்வரை க்கு வழியேயாமென்பதூஉம் எல்லார்க்கு மொப்பமுடிந்தது; அதுபோல விடுபேற்றைக் காதலித்து அவ்வச்சமயந்தோறு முளவாகிய பந்தமும் பிரிவுந் "தெரிபொருட் பனுவற் படி வழிச்சென்று சென்றேறி"ச் சைவத்தினெய்தப் பெற்றோர் ஆசிரியன் காட்டுஞ் சைவாகம நெறியிற் சமயதீக்கையுற்றுச் சரியைநெறியைத் தலைப்பட்டு அதுமுற்றியபின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியை நெறியைத் தலைப்பட்டு அதுமுற்றிய பின்னர் யோகநூல்கேட்டு யோகநெறியைத்தலைப்பட்டு இம்

மூன்றுமுறையான் முற்றியபின்னர் நிருவாணதீக்கை பெற்றுன் ஞானநெறியைத் தலைப்பட்டு வீடுபேறடைவன்,

இவ்வாறன்றி வீடுபேறடைதல் கூடாதென்பதூஉம், கூடாதாயினு மவையெல்லாம் ஞானத்திற்கு நிமித்தமா முகத்தா னேதுவாதல்பற்றி யவையவையே வீடுபேறடைவிக்குமென்பதூஉஞ் சாலுமென்றுணர்த்துவார் நெறியென்று உருவகஞ்செய்தார்,

இக்கருத்தேபற்றிப் "புறச்சமய நெறிநின்று மகச்சமயம்புக்கும் புகன்மிருதிவழி யுழன்றும் புகலுமாச்சிரம, வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள்பல தெரிந்து மாரணங்கள் படித்துஞ், சிறப்புடைய புராணங்களுணர்ந்தும்வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றுற் சைவத், திறத்தடைவரிதிற் சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற்சிவனடியைச் சேர்வர்" என்றும், "சன்மார்க்கஞான"மென்று மோதினுர் வழிநூலாசிரியரும்.

நன்னெறி சன்மார்க்க மென்பன வொருபொருட்கிளவி.

"சென்றுற் சைவத்திறத்தடைவ ரிதிற் சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர்" எ-ம், "படிவழிச்சென்று சென்றேறி" எ-ம் ஓதிய விதனுனே முதல்வன் வியாபகமாய் நின்றவாறே விளக்கினுமான்மாக்களி னறிவு தூலவறிவாகலின் அவ்வாறு விளங்கமாட்டாது, தத்தமக்கேற்ற சோபானமுறையே சிறிது சிறிதாக வேகதேசமாய் விளங்கி விளங்கி மேம்பட்டுவந்தே வியாபகமாய் விளங்குவ தோரியல்பிற் றென்பதூஉம், அத்தன்மை நோக்கியதற் கேற்பச் சோபானமுறையாய்த் தானே, முதல்வனது சிற்சத்தியு முற்பக்கத்திற் றிங்கள் போலத்திரோதான சத்திரூபமாய் நின்றறிவிக்கு மென்பதூஉம்,எனவே ஆன்மாக்களினறிவு அங்ஙனம் விளங்காதவழி நிகழுமறியா

ணம்பாகிய மலமும் அதற்கேற்ற பலபலசத்திக ளுடைத்தா யம்முறையே சிறிது சிறிதாக முற்பக்கத்திருள்போலக் கீழ்ப்பட்டுத் தேய்ந்து தேய்ந்து முடிவின்கட் பற்றறக்கழியு மென்பதூஉம், அது தேயத்தேய வதற்கேற்பத் திரோதான சத்தியு மம்முறையே சிறிது சிறிதாகத் தன்றன்மை நீங்கிச் சிற்சத்திரூபமாய்ப் பதிந்து பதிந்து முடிவின்கண் அதிதீவிரசத்தியாய்ப் பதியு மென்பதூஉம், அது பதியப் பதிய வம்முறையே விடயவெறுப்புண்டா மென்பதூஉம், அதுவுண்டாக வுண்டாக அம்முறையே வீட்டின்கண் விருப்ப நிகழு மெனவும், அது நிகழ நிகழ வதற்கேற்ப ஆண்டாண்டுப் பல வேறுவகைப்பட வுபதேசங்கள் சோபானமுறையான் மேற்பட்டுளவா மென்பதூஉ, மதற்கேற்ப ஆன்மாவின்கணனுபவ ஞானங்களு மவ்வாறே மேற்படு மென்பதூஉங் கண்டுகொள்க.

இனித் தீக்கையும் ஞானத்திற் கங்கமாய் நின்றே வீட்டினைக் கொடுக்குமென்பது பாயிரத்திறுதியிற் காட்டினாங் கடைப்பிடித்துக்கொள்க.

அற்றேல், காரணமுள்வழிக் காரியநிகழ்ச்சிக் கிடையீடின்மையின் முற்செய்த சரியை கிரியா யோகங்கள் ஞானத்தைக் காட்டுநிமித்த மென்பார்க்கு அவை செய்து கொண்டபொழுதே யிடையீடின்றி ஞானநிகழ்தல் வேண்டும்; அவ்வாறன்றி மற்றொரு பிறவியின் ஞானநிகழுமாறென்னை யென்னு மாசங்கையை நீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெழுந்த வுதாரணம்.

> தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
> பவஞ்செய்து பற்றறுப் பாராகத்—தவஞ்செய்த
> நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
> கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு. எனவரும்.

சரியை கிரியா யோகங்களாகிய தவத்தினைச் செய்தவர் ஒருதலையாக வவ்வத் தவப்பயன்களை யெய்தற்குரிய

வுலகத்தினை யெய்தி யாண்டவற்றை நுகர்ந்து வைகி மீளநில த்தின் வந்து பிறத்தலைச் செய்தே யெஞ்சிய வினைப்பயன் களை நுகர்ந்து விடயப்பற் றறுத்தற் பொருட்டவ்வாறு தவ ஞ்செய்து தோன்றிய நல்வினைத்தின் வந்து பிறந்து அவற்று ன் விடயப்பற்றறுத்து ஞானத்தினைத் தலைப்படுவ ரென்ப தனை வீட்டுநூலை யுணர்ந்தாரது சூழ்ச்சி யந்நூலின் கருத்து ணர்ந்து சொல்லுமென்க.

நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதல் தவ முதிர்ச்சி யுடையார்க்கன்றிக் கூடாதென்பார் தவஞ்செய்தா ரென்றும், தவமாகப் பிறிதொன்றுக இவ்வுலகத்துடம்பொடு நின்றீட்டிய வினைகள் அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம் பயனுகர்விக்கப் படுதலை யொரு ஞான்றும் பிறழமாட்டா ரென்பார் என்றுந் தவலோகஞ் சார்ந்தென்றும், அத்தவஞ் செய்துழியும் ஞானநிகழ்ந்தா லன்றி யேகதேசப் பற்றறுதல் கூடாமையி னதுபற்றி யவ்வுடம் பிறக்குஞான்று மனமொ ருவிடயத்திற் சென்று பற்றியதாயி னதனை யனுபவித்தற் குத்துணையா யெஞ்சிநின்றவுடல் வினையொடு மாண்டுப் பிற ந்தனுபவித்தன்றி யவ்விடயப் பற்றறுதல் கூடாதென்பார் பவஞ்செய்து பற்றறுப்பாராக வென்றும், தவஞ்செய்தார் மனம் நல்விடயங்களி னன்றிப் பற்றுதலின்மையி னவற்றை யனுபவித்தற் குரித்தாய்ச் சிறந்த பிறவியெய்துவ ரென்பார் தவஞ்செய்த நற்சார்பில் வந்துதித் தென்றும், தவமுதிர்ச்சி யுடையார்க் கெழுந்த நுகர்ச்சி மெலிதாய்க் கழிந்தொழிவ தன்றி யேனோர்க்குப்போல முறுகுத லின்மையி னிடையீ டின்றி ஞான நிகழுமென்பார் ஞானத்தை நண்ணுதலை யென் றும், இவையெல்லாம் வேதாகம நூற்றுணிபென்பார் கற்றூர் சூழ்கண்டு சொல்லுமா மென்றுங் கூறினர்.

ஆகவென்னுஞ் செயவெ னெச்சம் உண்ணவந்தானெ ன்புழிப்போலத் தற்பொருட்டாய் நின்றது.

கற்றாரது சொல்லுதற் றொழிலைச் சூழ்ச்சிமேலேற்றிக்கூறினார்.

கற்றார் தமது சூழ்ச்சியா லுணர்ந்து சொல்லுவரென்பது.

ஆம் அஞ்ச.

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்தெனப் பொதுப்படக் கூறினாராயினுஞ் சரியைக்குச் சாலோகமுங் கிரியைக்குச் சாமீபமும் யோகத்திற்குச் சாரூபமுமா மென்பது "சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சிய மென்று சதுர்விதமா" மெனவும் உண்மைச் சரியை கிரியா யோகத் தன்மையோர்க்குச் சாலோக சாமீப சாரூபங்கள் மருவிடு" மெனவும் வழிநூலாசிரியர் புடைநூலாசிரியர் விதித்தோதிய வாற்றானறிக.

அற்றேல், "பால்போ லொருதன்மையாகு மறவினை யாபோலுருவு பலகொள லீங்கு" என்பவாகலின், நல்வினை யெனப்பட்டன வெல்லாம் புண்ணியங்களா மன்றே அவற்றுளேனையவற்றை யொழித்துச் சரியை கிரியா யோகங்கள் மாத்திரையே யீண்டுத் தவமென விதந்தெடுத்துக் கொண்டோதிய தென்னையோவென்னு மாசங்கையைநீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெழுந்த வுதாரணம்.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி லின்ப—மிசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனா ஞானத்தை வந்து. எனவரும்.

நல்வினை செய்யத் தொடங்கி யறநூலையாய்வா ரதுணர்விற்கு விடயமாய் வரும்பொழுதே தம்மாற் றலைப்படுங் காமியப் பயனைக் கூறிக்கொண்டே வருவனவாகிய புண்ணியங்களா னுளவாய வின்பம் பசித்துண்டு பின்னும் பசிப்

பாலுக் கவ்வுண்டியான் வருமின்பத்தை யொக்கு மாதலான் ஒருவனுக்குப் பந்தமுறுத்துதற்கட் பொன்விலங்கு மிருப்பு விலங்கும் போலத் தம்முட் சமமாகச் சொல்லப்பட்ட புண்ணிய பாவங்களிரண்டுந் தம்மைப் போற் கெடுதலில்லாத சரியை கிரியா யோகங்களானே துலையொப்ப நேராயின் அத்தவங்களின் பயனாகிய பதமுத்திகளை யனுபவித்து வைகுமாண்டே தானே ஞானநெறியைத் தலைப்படுவன்; அவை யங்ஙனநேராகா விடின் மீள நிலத்தின்கண் வந்து பிறந்து வினையொப்பு நிகழ்ந்து குரவன் றிருவருள் பெற்று ஞானத்தைத் தலைப்படுவ ரென்க.

பொருளுக்கோதிய பயனை யுவமையினுங் கூட்டியுரைக்க.

அறநூலுட் கூறப்படு நல்வினையின் பயனெல்லாம் அழிவெய்துவன வென்பதற் கவ்வறநூல் சான்றென்பார் இசைத்து வருவினை யென்றார்; எனவே வேள்வி முதலியவற்றை விதித்த வறநூலே யவற்றிற்குப்பயன் காமியமென்பதூஉ முடன் கூறுதலிற் காமியப் பொருளெல்லா மழிவெய்து மென்ப தெல்லார்க்கு மொப்ப முடிந்தமையா னவ்வழிவெய்துவன வற்றைப் பயப்பன வாகிய புண்ணியங்களழிவின்றி நிலைபே றுடைத்தாகிய ஞானத்தைப் பயக்கமாட்டா வென்ற வாறாயிற்று.

இசைத்து வருதல் ஆடிவருதல் பாடிவருதல் போல உடனிகழ்ச்சி வினை.

நூலின் வினை வினைமே லேற்றப்பட்டது.

சரியை கிரியா யோகங்களான் வரும் பயனிவைபோலழிவெய்துவ தன்றென வேற்றுமை கூறுவார் இறப்பிறவ மென்றார்.

இசைத்துவருவினையி னின்பம் நிலைபெறுமை பசித்துண்டு பின்னும் பசிப்பார்க் கவ்வுண்டியான்வரு மின்பத்தை யொக்

றுமெனவே யிறப் பிறவத்தான் வருமின்ப நிலைபெறுடைமை, பசித்துண்டு பின்னர்ப் பசியாதாராகிய கடவுளர்க் களித்த வுண்டியான்வரு மின்பத்தை யொக்கு மென்பதூஉ மாயிற்று.

சரியை முதலியவற்றிற்குச் சிறந்த பயன் ஞானமே யாதலிற் சாலோக முதலிய பதமுத்திகள் அவாந்தரப்பய னென்றுணர்ந்து கொள்க.

பின்னுமென்ற வும்மை யிறந்தது தழீஇயது.

ஒப்பிலென்பது செயினென்னும் வினையெச்சம்.

தவத்தா னென்பதனைத் தவத்து ஆன் எனப்பிரித்துத் தவத்தென்பதற் கேழுப்பொருட் கண்வரு மின்னுருபு விரித்துரைக்க.

ஆன் அவ்விடம்.

“ஆன்வந்தியையு முதனிலையானு” மென்றார் தொல்காப்பியனாரும்.

ஒப்பிலென்றதனால் ஒவ்வாவிடி லென்பது வருவித்துரைக்கப்பட்டது.

ஆம் அசை.

தவத்தா னெனக்கூட்டி யெழுவாயாக வைத்துரைப்பாரும் ஆனுருபேற்ற சொல்லாக வைத்துரைப்பாரு முளர்.

ஈண்டுக் கூறப்பட்ட இருவேறு புண்ணியங்களு ளிமைத்து வருவினைக ளெல்லாம் பசுக்களை நோக்கிச் செய்யப்படுதலிற் பசுபுண்ணிய மெனவும், இறைப்பிறவைக ளெல்லாஞ் சிவனையே நோக்கிச் செய்யப்படுதலிற் சிவபுண்ணிய மெனவும் பேர்பெறும்.

அற்றேல், “யாதொரு தெய்வங் கொண்டீரத் தெய்வமாகி யாங்கே, மாதொரு பாகனார் தாம் வருவ” ரென்பு

வாகலிற் பசுக்களை நோக்கிச் செய்தலுஞ் சிவபிரானே யென்று கோடலிற் பசுபுண்ணியமுஞ் சிவபுண்ணிய மாலோ வெனின்? அறியாது கூறினாய். ஈண்டுப் பசுபுண்ணியஞ் சிவ புண்ணிய மெனப்பகுத் ததுசெய்வாரது கருத்து வேறு பாடு பற்றியேயன்றி யென்றுகோடல் பற்றியன்று. செய் வாரது கருத்து வேறுபா டுணர்ந் தவற்றிற்கிசையவே முத ல்வன் பயன் கொடுப்ப னாகலானென்பது.

அற்றாகலி னன்றே மகவெனப் பல்லுபி ரனைத்தையு மொக்கப் பார்க்கு மெய்ஞ்ஞானிகள் பசுக்கண்மேல் வைத்த கருணையா லவற்றின்கட் செய்தனவுஞ் சிவபுண்ணியமே யாயின வாறு.

அற்றாயினுந் தண்ணீர்ப் பந்தர் முதலிய வுலகவினை போலன்றி வேள்வி முதலிய வைதிகவினை சிவனை நோக்கி யவிப்பாகங்கொடுத்தலும், வழிபடுதலு முடைமையி னவை சிவபுண்ணியமு மாமென்றற் கிழுக்கென்னை யெனின்? அற் றன்று; ஆண்டுச் சிவபிரானுக்கு அவிப்பாகங் கொடுத்தலும், வழிபடுதலும் பசுக்களாகிய வேனைக் கடவுளரோ டொப்ப வைத்துச் செய்தலே யன்றிப் பொதுநீக்கிப் பசுபதியென் னுங் கருத்தாற் செய்தலின்மையி னவையெல்லாங் கருத்து வகையாற் பசு புண்ணியமேயாம்.

ஆண்டுச் சிவபுண்ணியமும் அபுத்திபூர்வமாய் நிகழ்தலி னது புத்தி பூர்வமா யினிச் செய்யக் கடவனவாகிய சிவ புண்ணியங்களுக் கேதுவாதன் மாத்திரையாற் பயன்படுத லுடைத்தென்க.

அவ்வேள்வி முதலியனவுஞ் சிவபிரானை நோக்கிப் பொதுநீக்கிச் செய்யின் அஃதேனைய போலப் பசுபுண்ணிய மாதலின்றி முன்னர்க் கூறப்படும் பொதுச் சிவபுண்ணியமா மெனக் கொள்க.

இஃதுலக வினைக்கண்ணு மொக்கும். "வேம்பினொடு தீங்கனியும் விரவி யெனைத்தீற்றி" யென்றோதியதூஉ மிவ் வியல்பு நோக்கி யென்க.

இனிச் சிவபுண்ணியம் அபுத்தி பூருவம் புத்தி பூருவ மென் றிருவகைப்படும்; அவற்றுள் அபுத்தி பூருவம் வேள்வி முதலியவற்றுட் போலப் பொது நீக்கி யறியுமா றின்றிச் சிவபிரானை நோக்கிச் செய்வதூஉம், அந்நோக்கமு மின்றி மாவலி முன்னைப் பிறப்பிற் செய்தது போலச் செய்தவினை யாதானு மோராற்றாற் சிவபிரானுக்குரிய பணியாய் முடிவ தூஉமென விருவகைப்படும்.

இனிப்பொது நீக்கிச் செய்யப்படுவதாகிய சிவபுண்ணியமும் பொது சிறப்பென் றிருவகைத்து; அவற்றுட் பொதுவாவது சிவபுண்ணியத்திற் கங்கமாகிய சிவ தீக்கை யின்றி யவ்வாறு செய்வது. சிறப்பாவது சிவபுண்ணியத்திற் கங்கமாகிய சிவதீக்கை யுடையரா யவ்வாறு செய்வது. இவ் விரண்டும்பத்தி காரணமாக வுண்மையாற் செய்வதூஉம், புகழ் முதலிய வுலகப்பயனை நோக்கிச் செய்வதூஉ மென வெவ்வே றிருவகைப்படும். அச்சிறப்புச் சிவபுண்ணிய மிர ண்டுஞ் சரியையுங் கிரியையும் யோகமும் அவற்றி னிகழு ஞானமுமென வொரோவொன்று நந்நான்காய் அந்நான்கினு ள்ளுஞ் சரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், கிரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், யோகத்திற் சரியை கிரியை யோகம் ஞானம், ஞானத்திற் சரியை கிரியை யோகம் ஞா னமென வொரோவொன்று நந்நான்காய் முப்பத்திரண்டு வகைப்பட்டு விரியானின்னும் பலதிறப் படுமென்றுணர்க.

அவற்றுட் டிருக்கோயி லலகிடன், மெழுகன் முதலி யன சரியையிற் சரியை. ஐனைபத்த மூர்த்திகள், விநாயகக் கடவுள் முதலிய வாவரண மூர்த்திகளி லொருமூர்த்தியைப் பூசித்தல் சரியையிற் கிரியை. செந்நிறக்கண் ணுருத்திராக்

கடவுளைத் தியானஞ் செய்தல் சரியையில் யோகம். அத்தி யானபாவனையி னுறைப்பா னோரனுபவவுணர்வு நிகழ்தல் சரியையின் ஞானம். சிவபூசைக்கு வேண்டப்படு முபகரண ங்களெல்லாஞ் செய்து கோடல் கிரியையிற் சரியை. சிவாக மத்தின் விதித்தவாறே யைவகைச்சுத்தி முன்னாகச் சிவலி ங்கவடிவிற் செய்யும் பூசனை கிரியையிற் கிரியை. அகத்தே பூசை யோமந்தியான மூன்றற்கு மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படு மந்தரியாகங் கிரியையில் யோகம். அவ்வந்தரி யாக வுறைப்பின்கண் ணிகழுமோ ரனுபவவுணர்வு கிரியை யின் ஞானம். இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமமென்னு நான்கும் யோகத்திற் சரியை. பிரத்தியாகாரமுந் தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில் யோகம். சமாதி யோகத்தின் ஞானம். இந்தயோகஞ் சகளஞ் சகளநிட்களங் களைப் பற்றிநின்று செய்யுஞ் சாலம்பயோகமும்; நிட்களத் தைப் பற்றிநின்று செய்யும் நிராலம்ப யோகமு மென்றிரு வகைப்படும். இயம முதலிய வட்டாங்கங்களி னியல்பெல் லாம் ஈண்டுவிரிப்பிற் பெருகும். சிவாகமங்களுட் காண்க.

இனிக்கேட்டன் முதலிய நான்கனுட் கேட்டல் ஞான த்திற் சரியை. சிந்தித்தல் ஞானத்திற் கிரியை. தெளிதல் ஞானத்தில் யோகம். நிட்டைகூடுதல் ஞானத்தின் ஞானமெ ன்றுணர்ந்து கொள்க.

இவற்று ளுபாயச் சரியையிற் சரியைமுதல் உபாய ஞானத்தின் ஞானமீறாகிய பதினாறு வகையி னின்றும் பல வேறு வகைப்பட விரியுஞ் சிவபுண்ணியங்களுக் கெல்லாம் பயனவ்வவற்றிற் கேற்பக் காலாக்கினி யுருத்திரர் முதல் சுத்தாதத்துவ மத்தகத்திற் சிகண்ட புவனத்தின் கீழுள்ள வுருத்திரரீறான வவ்வப் புவனபதிகளுலகத்திற் சாலோக முதலியவற்றைப் பெறுதலாம். உண்மைச்சரியையிற் சரி யைமுதல் உண்மையோகத்தின் ஞானமீறாகிய பன்னிருவ

கையினின்றும் பலவேறுவகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பய னவ்வவற்றிற் கேற்பச் சீகண்ட புவனமுதற் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவன பதிகளுடைய சிவலோகத்துச் சாலோகமுதலிய பதமுத்திகளைப்பெறுதலாம். உண்மைஞானத்திற் சரியை முதலிய மூவகையினின்றும் பலவேறு வகைப்படுஞ் சிவபுண்ணியங்களுக் கெல்லாம் பயன் அவ்வவற்றிற் கேற்பச் சுத்தவித்தை முதலிய வதிகாரதத்துவம் போகதத்துவங்களின்வைகும் மந்திரர் மந்திரமகேசர் முதலியோர் புவனத்துச் சாலோகமுதலிய வபரமுத்தியைப் பெறுதலாம்.

இனிப்பலவேறுவகைப்பட விரியு ஞானத்தின் ஞானங்களுள் முடிவாகிய ஞானத்திற்குப் பரமுத்தியே பயன்; ஏனையவற்றிற்கு இலயதத்துவத்திற் பலவேறு வகைப்பட்ட வபரமுத்தி பயனெனக்கொள்க.

உண்மைச்சரியை முதலியவற்றிற்குச் சுத்த வித்தை முதலிய தத்துவத்துச்சாலோக முதலியவற்றிற் சேறல் பயனென்றுரைப்பாருமுளர். சிவதத்துவபுவனங்கள் ஆணவமல நீங்கி வாசனை மாத்திர முடையவராலெய்தப்படும் அபரமுத்தித்தானமன்றி யேனையோ ரெய்தும் பதமுத்தித்தான மன்றென்பது சிவாகமங்களுக் கெல்லாமொப்ப முடிந்ததாகலின் ஞானத்திற் றலைப்பட்டன்றி மலநீங்குதல் கூடாமையானும், "ஈசன் யோகக்கிரியா சரியையினி னின்றோர் ஊனமிலா முத்திபதம் பெற்றுலகமெல்லா மொடுங்கும்போ தரன்முனிலாமொழியின் ஞானநெறி யடைந்தடைவர் சிவனை" எனப் பதமுத்திகளைப் பெற்றோர்க்கு மீட்சி கூறுதலிற் சுத்தவித்தை முதலிய தத்துவ புவனங்களி னெய்தினோர்க்கு ஆண்டு நின்றவாறே பரமுத்தியைத் தலைப்படுதலன்றி யொருவாற்றானும் மீட்சியில்லையென்பது சிவாகம நூற்றுணி பாகலானுஞ் சிவாகமங்களோடு முரணி யவ்வாறு கூறுதல் பொருந்தாமை யுணர்க.

சரியை முதலியவற்றி னின்றோர்க்குப் பயன் சுத்தத்துவ புவனத்துச் சுத்தசாலோக முதலாயினவெனச் சிலவிடங்களிற் கூறியது, ஞானத்திற் சரியை முதலியவற்றி னின்றோர்க்கென்னுங் கருத்தே யாமென்றொழிக.

சரியை முதலியவற்றி னியல்பென்னை யெனிற் கூறுதும். அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபிரான் உயிர்கள் சோபானமுறையா னுணர்ந்துய்தற் பொருட்டுத் தூலமாகவுஞ், சூக்குமமாகவும், அதிசூக்குமமாகவு மூவடிவங் கொண்டருளி, யவ்வடிவங்களின் வழிபடு முறைமையும் வேதாகமங்களி னவனால் வகுத்தருளிச் செய்யப்பட்டன வாகலா னம்மூவகை வடிவின் வைத்துப் பக்குவமுறைமையான் மேம்பட்டு நிகழும் நுண்ணுணர் வின்மையிற் சகளமாகிய தூலவடிவ மாத்திரத்தைப் பொருளென் றுணர்ந்து காயத்தொழின் மாத்திரையா னாகமத்தின் விதித்தவாறு வழிபடுவது சரியை.

அஃதடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ விசேடத்தா னுண்ணுணர் வுடையராய்ச் சகள நிட்களமாகிய சூக்கும வடிவமே பொருள் சகளவடிவ மதனை வழிபடுதற்கிடமாகிய திருமேனியென் றிவ்வாறுணர்ந்து புறத்தொழிலானு, மகத்தொழிலானும் விதித்தவாறே வழிபடுவது கிரியை.

அஃதடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ விசேடத்தா னதிநுட்ப வுணர்வுடையராய் நிட்களமாகிய வதிசூக்கும வடிவமே பொருள் சகளமுஞ் சகளநிட்களமும் அதனை வழிபடுதற்கிடமாகிய திருமேனியென் றிவ்வாறுணர்ந்து அகத்தொழின் மாத்திரையா னன்மைக்கு விதித்தவாறே வழிபடுவது யோகம்.

மூன்றுமிவ்வாறு முறையே யடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ முதிர்ச்சியானே யுள்ளவாறுணர்வு விளங்கி அதன்

டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பே சொரு மேனிச் சகளமுதலிய மூன்றுந் தூலாருந்ததி நியாயமாகவுத னையுணர்தற் பொருட்டும், வழிபடுதற் பொருட்டுங் கொண் டதிருமேனியென்றிவ்வா றுணர்ந்து காயத்தொழின் மனத் தொழிலிரண்டையுங் கைவிட்டுக் கேட்டன் முதலிய வறிவு த்தொழின் மாத்திரையான் வழிபடுவது ஞானம்.

ஆகலா னறிதலொப்புமையாற் சரியை முதலிய நான் கு ஞானமேயாமெனவும், ஆயினும் அரும்பு, மலர், காய், கனி யாதல்போலச் சோபான முறையாகிய தம்முள் வேறுபாட் டான் முறையே யொன்றற் கொன்றதிகமாய் நான்கா மென் னு முறைமைக்கண் ணின்ற ஞானமே முடிவாகிய ஞானமா மெனவும், எனவே யிந்நான்கினுமறிவு நுணுகி வரவர அறி யாமையாகிய மலமும் அம்முறையே தேய்ந்து தேய்ந்து வ ருதலின் இவற்றின் பயனாகிய சாலோக முதலிய நான்கு முத்தியே யாமெனவும், ஆயினும் அம்மல நீக்கமு மவ்வாறு நிகழுஞ் சோபான முறையானே யவையொன்றற் கொன் றேற்றமா யவற்று ணான்கா மென்னு முறைமைக்க ணின்ற சாயுச்சிய மொன்றே முடிவாகிய முத்தியாமெனவு முணர்ந் துகொள்க.

சாலோகமுதலிய நான்கனு ளவ்வச்சரியைக்கேற்ப அவ் வப் புவனபதியுலகங்களி னெய்தி யொருவர்மனையிற் பணி செய்யு மகத்தொண்டர்க்குளதாகிய வுரிமைபோலவவ்வவுல கத்துள் யாண்டுந் தடையின்றியியங்கி யவ்வப்போகங்களை நுகர்ந்து வாழ்வது சாலோகம்.

அவ்வளவினன்றி மைந்தர்க்குளதாகிய வுரிமைபோல அவ்வப்புவன பதிகளுக் கணுக்கராய் வைகியவ்வப் போக விசேடங்களை நுகர்ந்து வாழ்வது சாமீபம்.

அவ்வளவினன்றித் தோழர்க்குரிய வுரிமைபோல அவ்வ

புவன் பதிகளோடொத்த வடிவமும், ஒத்தவணிகலனு,மொ த்த போகநுகர்ச்சியும் பெற்றுவாழ்வது சாரூபம்.

இம்மூன்று முரிமை விசேடம்பற்றி முறையேதொண் டர் முதலியோரியல்பை யொத்தலினிவற்றை யடைதற்கு நெறியாகிய சரியை முதலிய மூன்றுந் தாதமார்க்கம் புத்திர மார்க்கஞ் சகமார்க்கமெனப் பெயர்பெற்றன வென்பது.

இனிச்சரியையின் ஞானமுதல் யோகத்தின் ஞானமீறாகிய ஞானவிசேடங்கட்குப் பயனெனப்படுஞ் சாயுச்சியமாவது ஒத்த வடிவினராய் வாழ்தல் மாத்திரையேயன்றி யவ்வப்புவ னபதிகளா னதிட்டிக்கப்பட வவ்வதிகாரங்களை யவ்வவர் போலவே செய்துகொண்டு வாழ்வதென்றுணர்க.

அற்றேல், இவ்வாறன்றிப் புவனபதிகளுடைய சாயுச் சியமாதலாவது: அவ்வப் புவனபதிகளா னதிட்டிக்கப்படுவதி ன்றியே யவரோடொப்ப வதிகாரஞ்செய்யு மாற்றலுமுடை மையென்னூற் படுமிழுக்கென்னை யெனின்? நன்று சொன் ஞய்; அவ்வச் சாயுச்சியத்தினின்ருேர் அவ்வப் புவனபதிக ளா னதிட்டிக்கப்படுதலின்றியே அவரோடொப்ப வதிகாரஞ் செய்யு மாற்றலுடைய ராயவழிவறிதே யிருப்பரோ அதிகா ரஞ் செய்துகொண்டிருப்பரோ வெனக்கடாயினுர்க்கு வறி தேயிருப்பரென விடுப்பின் அவ்வாற்றலாற் போந்த பயனெ ன்னை? அல்லதூஉம் வீடுபயக்கும் மெய்யுணர்வு நிகழுங்கா லும் மேன்மேலவாச்சேற லொருதலையாகலின் ஆற்றல்பெற் றுழி வறிதே யிருத்தல்கூடாது.

இனியதிகாரஞ்செய்துகொண் டிருப்பரென விடுப்பின் அவ்வப்புவன பதிகளதிகாரத்தை மாற்றி முழுவதுந்தாமே யதிகாரஞ்செய்வரோ அவருமதிகாரஞ் செய்யத் தாமும் அதி காரஞ்செய்வரோ அவரதிகாரத்தை மாற்றித் தாமே யதிகா ரஞ்செலுத்துவரெனின், அவ்வப்புவன பதிகளாதலைசாயுச்

சயமெனப்பட்டு வழுவாம். அன்றியும், பிரளயாகலர் விஞ்ஞானகலரிற் புண்ணியப் பேறுடையார்க்கன்றிச் சகலரிற் புண்ணியப்பேறுடையார்க்குப் புவனபதிகளாதல் கூடாது. அவ்வாறின்றி யவருமதிகாரஞ் செலுத்தித்தாமு மதிகாரஞ் செலுத்துவரெனின், ஒருகம்பத்தி னிரண்டானைபோலவும் ஒருகரியினிருவேந்தர் போலவு மாறுதலேயன்றி யவ்வதிகாரமினிதுசெல்லாது; அல்லதூஉந் தமக்குப் பாதியதிகாரமாய் முடியுமப்புவனபதிகட்குப் பாதியதிகாரங் குறையுமென்றிவ்வாறெல்லா மெள்ளலாய் முடியுமாகலி னவ்வப்புவன பதிகளோடொத்த வாற்றலுடைமை யவ்வச் சாயுச்சிய மென்றல் போலியென்றொழிக.

இனி முடிவாகிய ஞானத்திற்குப் பயன்படுஞ் சாயுச்சியத்தினியல்பு முன்னர்க்காட்டுதும். சரியை முதலியவற்றிற்குச் சாலோக முதலியன வவாந்தரப் பயனென்னவும்; ஞானமொன்றே யுண்மைப்பயனென்னவுங் கொள்க.

இனித்தவ மிவ்வாறு சரியைமுத னால்வகைப்பட்டு அவற்றுள்ளும் பலவேறுவகைப்பட்டு நிகழ்தற்கேற்பப் பக்குவ மாதற்பொருட்டு மலத்திற்கனுகூலமாய் நின்று நடாத்திய திரோதான சத்திமலம் பரிபாகமெய்தியவழி யக்கருணைமறமாகியசெய்கை மாறிக் கருணையெனப்படு முன்னைப் பராசத்தி ரூபமேயா யான்மாக்கண் மாட்டுப்பதிதலாகிய சத்திநிபாதமுஞ் சோபானமுறையான் மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரமென நால்வகைப்பட்டு அவற்றுள்ளும் பலவேறுவகைப்பட்டு நிகழுமெனக் கொள்க.

எனவே சத்திநிபாதத்திற்குக் காரணம் மலபரிபாகமென்பதூஉ, மதுவுமவ்வாறு பல வேறுவகைப்பட்டு நிகழுமென்பதூஉம் பெறப்பட்டன.

சத்திநிபாதமென்னுஞ் சொல்லியல்பு சத்தியினதுவீழ்ச்சியென்றவாறு.

நி யென்பது ஏற்றமாகவெனப்பொருள் குறித்துநின்ற தோரிடைச்சொல்.

ஓரவைக்களத்தி னடுவே ஒருகல் வந்துவிழ்ந்தா லவ்வி ழ்ச்சி யவ்வவைக் களத்துள்ளாரை யாண்டுநின்று மகல்விக் கும்; அதுபோலச் சத்திநிபாதம் நிகழ்ந்த மாத்திரையே அஃதவ்வான்மாவை மனைவிமக்கண் முதலிய வுலகத்துழனி யினச்ச நிகழ்ந்து அவ்வவ்வுலக வாழ்க்கையினின்று வெரீஇப் பெயர்ந்துண்மைக் குரவனை நாடிச்செல்லுமாறு செய்வித்த லினவ்வொப்புவமை தோன்றச் சத்திநிகழ்ச்சி யென்னுது சத்திவிழ்ச்சியென் றோதப்பட்டது.

மலபரிபாகமாவது; தனதுசத்தி தேய்தற்குரிய துணை க்காரணங்க ளெல்லாவற்றோடுங் கூடுதலேயாம்.

இனி யிறப்பிறவத்தா னிகழு மிருவினை யொப்பாவது யாதெனிற்? கூறுதும். சஞ்சிதமா யீட்டப்பட்டுக்கிடந்த விருவினைகளும் பக்குவமுறையானே பயனுய் வரும்வழி நல் வினையுண்மிக்கதாகிய பரிமேதவேள்விப் புண்ணியமுந், தீவி னையுண்மிக்கதாகிய பிரமக்கொலைப்பாவமு மொருங்கே பக் குவமெய்திப் பயன்படுதற்க ணொத்தனவாயின் அவைதம்மு ளொன்றினென் றடிக்கப்பட்டுச் சுந்தோபசுந்த நியாயமாய்க் கெட்டொழியுமாகலி னவை யவ்வாறு தம்முளொத்தலே யிருவினையொப்பென்ப ரொருசாரார். சஞ்சிதமாய்க் கிடந்த புண்ணியங்களும் பாவங்களு மிகுதிகுறைவின்றித் தம்மு ளொத்தல் இருவினை யொப்பென்ப ரொருசாரார். மிக்கவினை யிரண்டுந் தம்முளொத்துக் கெட்டனவாயினு மவை யொழி த்தொழிந்த புண்ணியபாவங்க டத்தம்பயனைத் தருதற்கிடை யீடின்மையானு மிருவினைகண் முழுதுந்தம்மு ளொக்குமாறி ல்லை; யொக்குமெனினு மதுபற்றி யாணவமலம் நீங்குமாறி ன்மையான் விஞ்ஞான கலராவாரன்றி முத்தியெய்துதல் கூடாமையானு, மிவ்வாறு பௌட்கரத்து ளெடுத்தோதி யவ்

விரண்டினை யுறுத்தலானும் ஈண்டோதிய விருவினை யொப் புக்கவை பொருளல்ல வென்றொழிக.

இனியிவ்விரண்டு மிவ்வாறாக வேறு வேறு பொருள் படுதற் கேலாமையானுந், சிவப்பிரகாசத்தில் "எதிர்வினையு [illegible] வினை யுநலமுபமனேராக" வென வினைவினைகள்போல ஆகாமியவினையு மூடிவினையுமொத்தல் வேண்டு மென்றோது தலி னஃதொத்தல் பிறிதோராற்றாற் பெறப்படாமையா னும், மலபரிபாகக்குறி சத்திநிபாதக்குறி சிவபுண்ணியக் குறிக ளெல்லாம் ஆன்மா வறிவின்கண் விளங்குமாறுபோல இருவினை யொப்புக்குறியுந் தன்னறிவின்கண் விளங்கு மாறில்லையாயி னதுமுத்திக் கேதுவாதல் கூடாமையானும், ஒன் றின் விருப்பும் ஒன்றின் வெறுப்பு மாதலின்றிப் புண்ணிய பாவ மிரண்டனு மவற்றின் பயன்களினும் ஒப்ப வுவர்ப்பு நிகழ்ந்து விடுமேவான தறிவின்கண் ணவ்விருவினையும் அவ் வாறொப்ப நிகழ்தலே யீண் டிருவினை யொப்பென்றதற்குப் பொருளென நுண்ணுணர்வாற் கண்டு கொள்க.

"எதிர்வினை நேராக" வெனப் புடைநூல் செய்த வாசிரியர், இஃதறியாது வேறு வேறுரைப்பாரை நோக்கி யன்றே "இருவினை தூக்க வருவினை நில்லா ஒருவினைபுரிகா விருவினைபாகா வொப்புறுமாறு செப்புக" வென்று சங்கற்ப நிராகரணத் தோதியதூஉ மென்க. "இனையபல பிறவிகளி" னென்னுஞ் செய்யுளின் எதிர் வினையு மென்பதற்கு வேறு ஏதுவாக வைத்துத் தமக்கு வேண்டியவாறே யுரைப்பாரு முளர்; அது பொருந்தாமை சொற்கிடக்கை முறைநோக்கி யுணர்க.

ஆண்டிருபயனு மென்ற வும்மை யேனை யிரண்டுமன்மை களோ டொப்ப வென்னுமும்மையாதலே பொருத்த முடைத் தாகலி னதனை வேறு பிரித்து முற்றும்மையாகக் கொண் டுரைத்தலும் பொருந்தாமை யறிக. இன்னுமவர் "உம்மு

ந்தாகு மிடனு மாருண்டே" யென்னுஞ் சூத்திர விதிபற்றி "நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து" என்றாற்போல நுகரு மென்னும் பெயரெச்சத்தை நுகருந்தன் வைத்தோதிய வாசிரியர் கருத்துணராது நுக ரென்பதனை முதனிலைப் பெயராக்கிக் கண்ணுருபு விரித்திடர்ப் பட்டுரைப்பர். "ஒரு காலத்து." எ-ம், "முந்த." எ-ம்; ஓதிய சொற்குறிப்பு மறிந்திலர் போலும். அன்றியு மவ்வாறுரைப் பார்க்கு அந்த முற வந்த வினையு மெனவே யமையு மாகலின் ஒரு காலத்த நுந்த முந்தநுகருந்துபபனென்றசொன்முழுவதும் வெற்றெனத் தொடுத்தலாய் முடியுமாகலானும் அவ்வுரை போலியென் றொழிக.

இனியிருவினைகள் பசுநல்வினை தீவினையென்றுஞ், சிவ நல்வினை தீவினை யென்றும் இருவேறு வகைப்படு மெனவே யிருவினை யொப்பு மவ்வாறு பசுநல்வினை தீவினைகள் தம்மு ளொத்தலாகிய விருவினை யொப்பென்றுஞ், சிவநல்வினை தீவினைகள் தம்மு ளொத்தலாகிய விருவினை யொப் பென்றும் இருவேறு வகைப்படு மென்பதூஉம் பெற்றாம்.

சிவநல்வினை தீவினைக டம்மு ளொத்தலாவது: சிவநல் வினையுந் தீவினைபோலத் தமது முதலுபகாரத்தை மறந்து பிறவிக் கேதுவாய்ப் பசுபோத முனைத்துச் செய்யப் படுவ தொன் றெனத் தெளிந்து உவர்த்து விடுவோனது அறிவின் கண் ணவ்வாற்று ளொப்ப நிகழ்தல்.

இவ்விருவகை வினையொப்புண் முன்னையது பக்குவத் தானிகழும் பசு புண்ணியத்தினும் நிகழ்வனவா யுளவென மேற்கூறப்பட்ட அபுத்தி பூருவம் புத்திபூருவ மென்னும் பொதுச் சிவபுண்ணியத்தா னுண்டாவதாய் மலபரிபாகத் தைத் தோற்றுவிக்கு முகத்தானே மந்ததர மெனப்படு முத ற் சத்திநி பாதத்தில் பின்னையது பலதிறப் படுவனவாகிய நால்வகைச் சத்திநி பாதத்தா னவ்வாறே நால்வகைப்பட்ட

முறையா னிகழ்ந்து முடிவின்கண் ஞானத்திற் கேதுவா மென்றுணர்க.

இனி ஞானத்திற்குக் காரணங் கிரியை முதலியன வென்பதூஉம், சரியை முதலிய வற்றிற்குக் காரண மந்ததர முதலிய சத்திநிபாத மென்பதூஉம் யாண்டு மினிது விளங்கக் கிடந்தன.

இவை யெல்லாவற்றிற்கு மூலகாரண மெனப்பட்ட பக்குவமாவது தமக்குரிய சோபான முறையா னன்றி யறிய மாட்டாததோரியல்புடைய வான்மாக்களுக் கம்முறையா னிகழு மாறறிய.........வல்லுதலே யாமென்பதுமே லாண்டாண்டுக் கூறியவாறு பற்றியுணர்ந்து கொள்க. அவ்வல்லு தற்குக் காரணங் கேவலக் கிடையினு நீங்கா துடனாய் நின்று நோக்கிவரு முதல்வனது கருணை நோக்கத்தி னடிப்பாடென வறிக.

முதலதிகரண முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

—:*:—

மேலையதிகரணத்தின் உயிர்க்கு வீடுபயக்கு நல்லறிவு தவத்தினாலே வருமெனச் சாதித்தவழி, அற்றேல், மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழிப் பிறிதுகாரணம் வேண்டா தவைதாமே ஞானத்தைக்காட்டும்போலு மென்னு மாசங்கையை நீக்குதற் கெழுந்தது இரண்டாமதிகரணம்.

இனி யிவ்வான்மாக்களுக்குத் தமது முதல்வனே குருவு மாயுணர்த்தும் என்றது.

இது மேலை யதிகரணத்தோதிய சரியை முதலியவற்றா னிகழும் ஞானங் குரவனையின்றியமையாதவாறு மற்றவனியல்பு முணர்த்துகின்றது.

இனியென்றது சரியை முதலிய மூன்றுஞ்செய்து முற்றியபின் னென்றவாறு.

இவ்வான்மாக்களுக் கென்பது இம்முற்றுப்பேறுடைய வான்மாக்களுக் கென்றவாறு.

தமக்கு முதலாயிதுகாறு முண்ணின் றுணர்த்தி வந்த பரம்பொருட்கன்றி யேனையோர்க் கவ்வியல்பறிந்துணர்த்துதல் கூடாதென்பார் தமது முதருனே யென்முர்.

ஏனையோரிற் பிரித்தமையி னேகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

இக்கருத்தேபற்றி " அகத்துறு நோய்க்குள்ளினரன்றி யதனைச் சகத்தவருங்காண்பரோதான் " என்முர்புடைநூலாசிரியரும்.

இனித்தானே யென்பதனைத்தாமே தருபவரை யென்புழிப்போலக் கொண்டுரைத்தலு மொன்று.

இதனுனே கருணைமிகுதி கூறியவாருயிற்று.

உம்மைக்குப் பொருள் மேலுரைத்தாம்.

ஈண்டுக்குருவடி வென்றது மானிடவடிவினை.

அற்றேல், மாயாவுருவன் மாயாவுருவினை யேய்வனாயி னெம்மனோரி லொருவனுய் முடியும். அல்லதூஉம் ஆகமங்களின் ஆசான் மூர்த்தியாகிய வாதாரத்தை யதிட்டித்து நின் றுணர்த்துவன் முதல்வனென வேற்றுமைப்படுத்தோதலி னீண் டிவ்வாறு கூறுத லவற்றெடுமுரணுமாலென்னு மாசங்கை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்ததேது.

அவனன்னிய மின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான். எனவரும்,

இ-ள். அம்முதல்வன் வேற்றுமையின்றி யுடலின்க ணுயிர்போல்வதோர் கலப்பினு லான்மாவே திருமேனியாக வுடையனுய் நிற்றலான் இனி யிவ்வான்மாக்களுக்குத் தமது

முதற்றானே குருவுமா யுணர்த்துமென மேற்கொண்ட தென்றவாறு.

முதல்வன் கலப்பினா லவையேயாதல் பொதுவதிகாரத்துட் பெறப்பட்டமையி னீண்டதனை யேதுவாகவைத்து மேற்கோளைச் சாதித்தார்.

ஈண்டுச் சைதன்னிய மென்றது ஆன்மாவை. அறிவொளிபோலென்றதற் குருடக்கத்துப்போல வேற்புழிக் கோடலாற் பெறப்படும்.

இவ்வாறன்றி யறிவு சொரூபியாயெனப் பொதுப்படவுரைப்பி னவ்வேது ஆன்மாக்கண்மாட்டுஞ் சேறலி னீண்டெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்கமாட்டாது அநேகாந்திகமாய் முடிவதூஉ மன்றி மேற்கூறிய வாசங்கைக்கு விடையாகாமையு முணர்க.

அற்றேல் இது விடையாமா றியாங்ஙன மெனிற்? கூறுதும். சிலவாகமங்களிற் குருமூர்த்தி யாகாரத்தையதிட்டித்து நின் றுணர்த்து மென்றது பொருட் டன்மையாற் றானேயாமென மேலோதிய விசைவுபற்றி. யீண்டுத் தம்முதலே குருவுமா யுணர்த்து மென்றது, கலப்பினாலவையே யாமென் கூறிய வியல்புபற்றி. ஆகலி னிரண்டுந்தம்முண் முரணாமையின்மையானும் "மானுட மாமானுட மாயா வருவிருவினையின் மைய்மை, மாயவாருயிரின் மேவு மருளொளிலொளியாய் நிற்கு" மென்ப வாகலின், முதல்வனுக்குத் திருமேனியாகிய சைதன்னிய முதல்வனைச் சார்ந்தவன்ன மயமாழி யவ்வுடம்புமவ்வா றருண்மயமே யாகலி னிருக்கின்மையா னவ்வுடலிடங்கோடல் பொருத்தமுடைமையானுந், தம்முதலே குருவுமா யுணர்த்துமென மேற்கொண்டது சாதுமென் விடுத்தவா றென்றறிக. "மானுட மாமானுட" மென்னுஞ் செய்யுள் வேறு பொருள்படுதற் கேலாமை மேலை நூலின் யதிகரணத்தின் விரித்துரைத்தாங் கடைப்பிடிக்க.

அற்றேல்; சிலவான்மாக்களுக்குக் குருவடிவங்கொண் டுணர்த்துத லின்றியு ஞானநிகழ்த லுண்மையின் ஈண்டுக் குருவடிவங் கொண்டுணர்த்திய பின்னன்றி ஞான நிகழாதென வரைந்தோதியது யாண்டுஞ் செல்லாதாலென்னு மாசங்கையை நீக்கியதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்:

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன். எனவரும்.

விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும் அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன்னுணர்த்தும்; அஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்ப்பின் மெய்ஞ்ஞான முணர்த்து மெனமாறுக.

எளிதி னடப்படுதனோக்கி அரிசிதானே யடப்பட்ட தென்றாற்போல எளிதின் விளைவிக்கப்படுதனோக்கி மெய்ஞ் ஞானந்தானே விளையுமென்றார். அரசனெடுத்த வாலயமென் புழிப்போல விவ்விகுதி குன்றிநின்ற தென்றலுமொன்று. இவ்வாறுரையாது வியஞ்சகமின்றித் தானே விளையுமென் றுரைப்பிற் சிவாகம மெல்லாவற்றோடு முரணுமென்றொழிக.

தானே விளைதலாவது: வேறிடத்தினில்லாது தன்மையி னின்றே விளைப்ப விளைதல்: "உண்ணின் றறுத்தருளி" யென்றார் புடைநூலாசிரியரும். பிரளயாகலருக்குத் தான் குருவாய் நின்று முன்னுணர்த்துதலாவது; விஞ்ஞானகலர்க் குள்ளின் றுணர்த்திய வாறுபோலன்றி நாற்றோளு முக்கண்ணுங் கறைமிடறு முதலிய வுறுப்பிற்றாய் முத்தொழி லடாத்தி நின்ற தனதியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னின் றுபதேச முகத்தா னுணர்த்துதல்.

சகலர்க்குக் குருவாய்ப் பின்னுணர்த்துதலாவது: அவர் வடிவுபோலுங் குருவடிவாகிய மானுடப்போர்வையின் மறைந்துநின் றுபதேசமுகத்தா னுணர்த்துதல்.

மெய்ஞ்ஞானம் வீடுபயக்கு முணர்வு.

ஈண் டஞ்ஞானமென்றதவிச்சையை.

சகலர்க்கே விசேடணமா யோதுதலா னென்பது.

அச்சகலர் மேற்கூறிய சரியை கிரியா யோகங்கள் செய்து முற்றிய சகலர்.

அக்குரு மேற்கோளிற் கூறிப்போந்த குருவென்க. எனவே யீண்டுச் சரியை கிரியா யோகங்களைச் செய்தோர்க்குத் தம்முதல் குருவுமா யுணர்த்துமெனச் சகலர் வர்க்கமே யெடுத்துக்கொண்டோதிய தாகலி னஃதேனைப் பிரளயாகலர் விஞ்ஞானகலர் வர்க்கத்துச் செல்லாமைபற்றி யிழுக்கில்லை யென விடுத்தவாறுணர்க.

செய்யு ளிறுதியின் முன்னென்றது முன்னாகிய முதல்வ னென வெழுவாயாய் நின்றுணர்த்துமென்னும் பயனிலைகள் கொண்டன.

இம்மூவருட் சகலர்க்குணர்த்துங்கால் இயற்கை வடிவை யொழித்துப் பிறிதொரு மானுடவடிவ மாதாரமாக நின்றுணர்த்துதலினது சாதாரமென்றும், ஏனையிரண்டு மன்னவல்லவாதலா னிராதாரமென்றுங் கூறப்பட்டன.

அற்றேல், மூவகை யான்மாக்களுக்கு மோரியல்பாய் நின்றுணர்த்தவமையும், அவ்வாறன்றி விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும், பிரளயாகலர்க்கு முன்னிலையினும், சகலர்க்குப் பின்னிலையாகிய படர்க்கையினுநின் றிவ்வாறுணர்த்துத லெற்றுக் கென்னு மாசங்கையை ஆன்மாக்களது சிறப்பியல்பும் அவற்றிற்குத் தம்முள் வேறுபாடு முணர்த்து முகத்தா னீக்கி யவ்வேறுபாட்டிற்கேற்ப வெவ்வேறாய்நின் றுணர்த்து

தலே யமைவுடைத்தென வதனே வலியுறுத்துதற்கெடுத்துக் காட்டு முதாரணம்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறைவுடைய சோற்கோள்ளார் கோள்பவத்தின் வீடேன்
குறைவில்சகன் சூழ்கோள் பவர்க்கு. எனவரும்.

ஆன்மாக்கள் துவதுவாய்ச் செறிந்தறிவனவன்றி முதல்வன்போலச் செறியாது நின்றறிவன வல்ல வாகலானம் முதல்வன் வியஞ்சகமாய் நின்று படிவழிபோல வைத்து முறையான் விளக்கினலன்றி யவற்ற தறிவு விளங்காதென்பது பெறப்படும். அவ்வறிவுகளவ்வாறுபடிவழி முறைபோல விளங்குதலு மொருதன்மையானன்றிக்கல்விக்குறைவுடைய கணக்காய்வார்போல முன்னும் பின்னுமாய் விளங்குந் தாரதம்மிய முடையனவாம். ஆகவே அவ்வறிவுகள் விரியாற் பலவேறுபாடுகளுடையவாயினு மவ்வாறுணர்தற் கேற்ப நிகழும் பந்தவேறுபாடுபற்றி விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென வகையான் முத்திறப்படுமென்பதூஉம்பெறப்பட்டது.

அவ்வான்மாக்களுட் பலவாற்றானுங் கேட்டுச் சிந்தித்தன்றித் தெளியப்படாத குறைபாடுடைய நூல் வேண்டாத நுண்ணுணர்வுடையார்க்கு முதல்வனாற் கொள்ளப்படுமுண்மை மாத்திரையானே முத்திகூடுமென் றறிவாயாக; நூல் வேண்டுந் தூலவறிவுடைய சகலர்க்கு ஞானத்தாற் குறைபாடில்லாத சகத்தின்கண்ணுளதாகிய குரவனுல் முத்திகூடுமென்றறிவாயாக வென்க.

உளங்கள் செறியுமாகலானெறியி னறிவிக்கவன்றி யறியாவெனக்கொண்டு கூட்டியுரைக்க.

அறிவித்தற்கெழுவாய் மேலேவெண்பாவினின்றும் வருவிக்கப்பட்டது.

அன்றி, [illegible] நெறி மறையாற் கூறினர் இன்றி யமையாமையுணர்த்துதற்கு.

நெறியின் இன் உவம்வுருபு.

முன் பின்னாகவென ஆக்கச்சொல் வருவித்துரைக்க.

குறை வுடையார்களைக் குறைகளென உபசரித்தார் போலவென்பது சொல்லெச்சம்.

குறைகளுஞ் சொல்லும் சூழும் ஆகுபெயர்.

"கொள்ளார்க்கென நான்கனுருபு'; ஐந்தவித்தானாற் றலென்புழிப் போல விகாரத்தாற் றொக்கது.

பவம் சம்பவம் உண்மை யென்பன வொருபொருட் கிளவி.

ஈண்டுண்மை யென்றது நிராதாரத்தை.

ஈண்டுச் சகமென்றது நிலவுலகத்தை.

சகனுமென்க.

வீடென் என்பதனை யீரிடத்துங் கூட்டுக.

நூல் குறைவுடையதாயினும் அதனைக் கேட்பித்துச் சிந்திப்பித்துத் தெளிவிக்குங் குரவனதறிவ னதறிவாற்ற லிற் குறைபா டின்மையிற் றெளிந்து வீடெய்தல் கூடுமென் பார் குறைவில் சகனென விசேடித்தார். குறைவில் சகனென் புழிச் சீர்சிதையாமை முன் செய்வினை மாயையென்பதற்குரைத்தவாறுபற்றி யுணர்ந்துகொள்க. கொள்ளார் கொள்பவரென ஆடூஉவறி சொல்லாற் கூறியது வடமொழி மதம் பற்றி.

ஆன்மா வதுவதுவாய்ச் செறியுமாறும், அதனனே ப விவிக்கும் வியஞ்சகத்தை யின்றியமையாதவாறும், வியஞ்சகத் தானறிவு விளங்கும் வழியு மொருங்கே முழுவதும்விளங் காது படிவழி யேற்றம்போல அடிப்பட்டு வரவர மெல்ல மெல்ல விளங்குமாறும், அவ்வாறு விளங்கு மறிவுகளும் ஒன் று போலன்றிக் கணக்காய்வாரறிவின் மந்ததீவிரங்கள்போல

முன்னாகவும் பின்னாகவும் விளங்குமாறு, மதற்கேற்ப மல சத்திகளும் பலவாமாறு மாண்டாண்டு விரித்துரைத்தாங் கடைப்பிடித்துக் கொள்க.

இதனாற் போந்தது தத்தமக்கேற்ற சோபான முறை யானறிவு விளங்குதலுடைய மூவகை யான்மாக்கண்மாட் டும் விரவி நிற்கு மூலமலமாகிய வறியாமைப் பொருளொன் றே யாயினு மவ்வான்மாக்கள தபக்குவ பக்குவ தாரதம்மிய ங்கட் கேற்பப் பலவேறு வகைப்படப் பிணிக்கு மலசத்திக ள் தூலசூக்கும வேறுபாட்டாற் பலவேறு வகையவாகலி ன வற்றின் விஞ்ஞான கலர்க்குப் பிணிப்பாகியமலசத்தி சூக்கு மம், பிரளயாகலர்க்குப் பிணிப்பாகியமலசத்தி தூலம், சகலர் க்குப்பிணிப்பாகிய மலசத்தி தூலதரமாம். அற்றாகலினன்றே விஞ்ஞான கலர்க்கு மாயை கன்மங்க ளுளவாகவு மவரவற் றாற் பிணிப்புண்டு மயங்குத லின்றி மலமாத்திரையாற் பிணி ப்புண்டதூஉம், பிரளயாகலர்க்கு மாயை யுளதாகவும் அவர தனிற் பிணிப்புண்டு மயங்குதலின்றியேனையிருமலத்தானும் பிணிப்புண்டதூஉஞ், சகலரவ்வாறின்றி மூவகையானும்பிணி ப்புண்டதூஉ மாகலானம் மூவகைமலசத்தியுட் சூக்கும மல சத்தியுண்ணின்றுணர்த்தியவாறேயுளிதி னீங்குதல் கூடுமா கலானுந், தூலமலசத்தி யெதிர்நின்றுபதேச முகத்தாற் றெ ரித் துணர்த்தியவழியன்றி நீங்குதல் கூடாமையானும், தூல தரமலசத்தி உபதேச முகத்தானும் நூன்முகத்தானும் அனு பவமுகத்தானும் பலவேறு வகைப்படவலியுறுத்தி யுணர்த் திய வழியன்றிநீங்குதல் கூடாமையானு மவ்வேறுபாட்டிற் கேற்பத் தம்முளிருவேறு வகைப்படும்நிராதாரமாயுஞ் சாதா ரமாயு நின்று அறிவை யுணர்த்துவன்முதல்வ னெனமேலை வெண்பாவிற்கூறிய பொருளை வலியுறுத்திய வாறுமென்க.

அவ்வா றுணர்த்தும்வழிச் சூக்கும மலமுடைய விஞ் ஞான கலர்க்குந் தூலமல முடைய பிரளயாகலர்க்கும் மலபரி

பாகத்திற் கேற்ப நாலாஞ் சத்திநிபாதந் தீவிரமாயுந் தீவிரதரமாயு நிகழுமாகலி னவ்விருவகைச் சத்திநிபாதம் பற்றியுணர்த்தித் தீவிரத்தா லுணர்த்தப்பட்டார்க்கு அபரமுத்தியுந் தீவிரதரத்தா லுணர்த்தப்பட்டார்க்குப் பரமுத்தியும் பயக்கு மெனவும், தாலதர மலமுடைய சகலர்க் கம்மல பரிபாகத்திற் கேற்ப மந்ததர முதலிய நால்வகைத்தா நிகழுமாகலின் அந்நால் வேறுவகைச் சத்திநிபாதம் பற்றி யுணர்த்தி மந்ததரத்தாற் சாதக நிலையும், மந்தத்தாற் சீவன் முத்தி நிலையும், தீவிரத்தால் அபரமுத்தி நிலையுந், தீவிரதரத்தாற் பரமுத்தி நிலையும்பயக்கு மென்றறிக.

ஈண்டுச் செய்யப்படுந் தீக்கையினியல்பெல்லாம் மேற் பாயிரத்துள் விரித்துரைத்தாங் கடைப்பிடிக்க.

இவ்வெண்பாவிற்கு இவ்வாறன்றி யான்மாக்களறிவித்தாலன்றி யறியா வாகலா னவற்றிற் கறிவிக்கவே முந்துநூல்களனைய வெல்லா மவ்வச்சமயநெறியின் முன்னொடு பின்னிணங்காது மாறுபடுங் குறைகள் செறிவனவா மாதலி னக்குறைபாடுடைய நூல்களைக் கொள்ளாது குறைபாடில்லாத முதல்வனது சித்தாந்த நூல்களைக்கொள்பவர்க்குக் கொண்ட பிறவியிற் றானே வீடுபேறு மென்றுரைப்பாரு முளர்.

அற்றேல், நூல் கொள்பவராகிய சகலர்க் கந்நூலானே யறித லமையுமாகலாற் குரவன் மிகையாமா லென்னு மாசங்கையை நீக்கு முகத்தாற் றமது முதற்றானே குருவாமாற்றை யுவமையின் மேல் வைத்துத் தெளிவித்து வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டுமுதாரணம்.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்நிழல்போ—லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று. ஞானவரும்;

தவத்தானன்மையுடைய மாணுக்கனே ஏந்திய விழைகளை யுடையாட்குக் குழவிமாட்டுளதாகிய வருவாகிய வன்பினை வெளிப்படுத்தற் கவ்வன்பின்வடிவாகிய முலைப்பாலுங் கண்ணிருங் குழவியைக்காணு முன்னவண்மாட் டில்லாவாய்ப் பின்னுளவா மதுபோல நீரின்கண் ணிழல்போ லான்மாவின்மாட்டுப் பொருந்தி வெளிப்படுத லில்லாத வருவமாய் நின்ற முதல்வனை யார்தா மறிவா ரம்முதல்வன் ருனேகுரு வடிவாய்த் தோன்றி நின்றுணர்த்தா னுயினென்க. ஒருவரு மறிவாரில்லை யென்பதாம். ஆகவே யருவாய் நின்ற முதல்வனை யறிவித்தற்கு நூன்மாத்திரையா னமையாமையி னம்முதல்வனே குருவாய்த் தோன்றி யுணர்த்தல் வேண்டுமென விடுத்தவாறுயிற்று.

எதிர்மறையாற் கூறினு ரின்றியமையாமை யுணர்த்துதற்கு.

பொருள்வினையை யுவமையினுங் கூட்டியுரைக்க.

முலைப்பாலுங்கண்ணீருமன்பை விளக்குமென்பது "சுரந்த திருமுலைக்கே துய்யதிரு ஞானஞ், சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த, தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த, மனமுடையா ளன்பிருந்த வாறு" என்பதனுனும் "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர் புன்கணீர் பூசறரும்" என்பதனுனுமறிக. அவ்விரண்டு மன்பின் வடிவே பிறவல்லவென்பது அன்பை வெளிப்படுத்தற்குரிய காரணமுள்வழி வெளிப்பட்டஃதில்வழி வெளிப்படாத வொற்றுமைநோக்கிக் கண்டுகொள்க.

இவ்வொற்றுமை யுணர்த்துவார் இல்லாவா யுளவா மென்றார்.

இல்லாவென்பது வினையெச்சக்குறிப்பு முற்று.

ஆல் அசை.

இவ்வுவமையானே முதல்வன் குருவாதல் கூடுமாறியாங்ஙனமென்னு மாசங்கையு நீக்கப்பட்டது.

இஃதெடுத்துக்காட்டுவமை.

நீரகத்தியங்கு முயிர்கட்கிடங்கொடுத்த லுண்மையான் நீரின்கண் வெளியுண்டென்பதூஉம், உண்டாகவே யாண்டு நீர்ந்த நிழலுண்டென்பதூஉம் பெறப்பட்டன.

அந்நிழல் வேறுநில்லாது நீரின்கண் விரவிநிற்றலி னீர் போலப்புலப்படாதாயிற்று. அதுபோலச் சிவசைதன்னிய மும் யானென்னு முணர்விற்கு விடயமாய்ப் புலப்படுமான்ம சைதன்னியத்தோடும் விரவிப்புலப்படாது நிற்பதொன்றெ ன்பார் நீர்நிழல்போ லுற் றில்லாவருவாகி நின்றனை யென் றார்.

அருவப்பொருள்போற் புலப்படாத வியல்புபற்றி முத ல்வனை யருவென்றல் சாலுமென்பார் இல்லாவருவாகி யென் றார்.

நீர் நிழல் தோன்றாமை மாத்திரைக் கொருபுடையுவ மையாகலாற் றேன்றுதற் குவமை வேறுகூறினர்.

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

## மூன்று மதிகரணம்.

—:():—

இரண்டாமதிகரணத்தின் உயிர்க்கு முதல்வனே சற்கு ருவாய் வந்துணர்த்துவனெனச் சாதித்தவழி, அற்றே, லிது காறும் பசுகரணமாய் விடயங்களை யுணர்த்திநின்றன ஐம் பொறி முதலிய கருவிகளாமன்றே, அவை பாகம் வந்துழிச் சிவகரணமாய்நின்றுண்மை ஞானத்தினை யுணர்த்துதற் கமை யுமாகலிற் றம்முதல் குருவுமா யுணர்த்துதல் மிகையாமாலெ ன்னு மாசங்கை நீக்குதற் கெழுந்தது மூன்றுமதிகரணம்.

இனி யிவ்வான்மாக்களையுணர்வுகளான் மயங்கித் தம் மை யுணரா எனவரும்.

இனியென்ற திவ்வினையுணர்த்துதற் பொருட்டு:

இவ்வான்மாக்கள் தம்முதல் குருவுமாயுணர்த்த வுணரு மியல்புடைய வான்மாக்கள்.

ஐவகை யுணர்விற் கேதுவாகிய பொறிகளை யையுணர் வென் றுபசரித்தார்.

ஐம்பொறி யென்றது உபலக்கணம்:

மயங்கி யுணரா வென்றது ஓதியுணர்ந்தானென்பதுபோ லக் காரண காரியப் பொருட்டாய் நின்றது.

அற்றேற், சகசமலத்தா லுணர்வின்றி நின்ற வான்மாக் கள் கருவிகளா னறிவு விளங்கி யறியுமென்பதுமேற் பொது வதிகாரத்துட் கூறிப்போந்தமையி னீண்டையுணர்வுகளா லா ன்மாக்கள் மயங்குமென்றல் முரணுமாலென்னு மாசங்கை யை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த வேது.

அவை தாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டிநிற்றலான் எனவரும்.

இ-ள். பளிக்குக் கல்லிற் சேர்த்திய பலவேறு வகைப் பட்ட நிறங்க ளப்பளிங்கி னொளி தோன்றுதவா றடக்கித் தம்மா லதன்கண் விளக்கப்பட்டதத்த மியல்பினையே விளக் கிநிற்குமாறுபோல அவ்விந்திரியங்கடா மான்மசொரூபம் வி ளங்காதவா றடக்கி யவ்வான்மாவின்மாட்டுத் தம்மால் விள க்கப்பட்டதத்தம் விடயமாத்திரையே விளக்கி நிற்பனவாக லான் இனி யிவ்வான்மாக்களையுணர்வுகளான் மயங்கித் தம் மை யுணராவென மேற்கொண்டதென்றவாறு.

விடயங்களுள்ளும் அவ்வவ்விடய மாத்திரையே யவ்வ வ்விந்திரியங்காட்ட வல்லுமென்பார் காட்டிற்றையென வொ ன்றறி சொல்லாற் கூறினர். கூறவே யொன்றறிந்த தொன் றறியாதாகிப் பளிங்கிலிட்ட வன்னம்போ லான்மாவினியல்

னை மயக்கி விடயக்காட்சிக்கே யேதுவாகிய கருவியானான் மாவினியல்பு விளங்குமாறில்லையென வவற்றதியல்பைத் தெரித்துக்காட்டி யான்ம சொரூபத்தை யுணர்த்துதற்குக் குரவனொருதலையான் வேண்டுமென மேலையதிகரணத்தை வலியுறுத்தவாறு.

இங்ஙன முரையாதார்க்கு இனியென்பதனானுணர்த்தப்படு மேலையதிகரணத்தோடுளதாகிய வியைபு கூடாமையறிக.

அற்றேல், குருவாகி வந்துணர்த்தியவழியுங் காட்டுற்றையே காட்டிநிற்கு மிந்திரியங்களுள்வழித் தன்னியல்பு விளங்காது, அவைநீங்கியவழிக் கேவலமாய் முடியுமாகலி னறியுமாறியாங்ஙன மென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு. எனவரும்.

தன்னைச் சார்ந்த பல வேறுவகைப்பட்ட வன்னங்களையே தன்மாட்டுக்காட்டு மியல்புடைய படிகம்போல ஆன்மாத் தன்னைச்சார்ந்த விந்திரியங்களினியல்பே தன்மாட்டு விளக்குவதாகிய தனது சார்ந்ததன் வண்ணமாந்தன்மை முன்னர்ச் சிந்தித் துணர்ந்துகொண்டு பின்னர்ப் பல வேறுவகைப்பட்ட வியல்புடைய பொதுவியல்பைச் செய்யு மிந்திரியங்களைத் தனக்கு வேறாகக் கண்டவற்றானாகிய பொதுவியல்பு பொதுவியல்பேயா யொழியுமாறு தனது சிறப்பியல்பை யுணர்ந்தானாயினவன் பரம்பொருளாகிய சிவத்துக்கடிமையாய்ப் பரம்பொருளினியல்பு தன்மாட்டு விளங்கச்செய்வன். அப்பொழுது முன்விளங்கிய பொதுவியல்பு தனக்கு வேறா யொழியு மென்க.

ஆமென்பதனைப் பின்னுங் கூட்டுக.

ஈண்டுப் பொய் மெய்யெனப்பட்டன அப்பொருளவா தல் மேலே காட்டினாங் கடைப்பிடிக்க.

ஆகவென்பது கடைக்குறைந்தது.

பொய் பொய்யாக வென்பது நிலம் வலிதாயிற்றென்ப துபோலக் கொள்க.

இதனாற் போந்தது, கருவிகள் செயற்படாது தன்னி னீங்கிய வழியே. கேவலமாம் அவ்வாறின்றி யவை தத்தந் தொழிற்பாட்டின் மடங்காது நிற்புழியவற்றதியல்பைக் குரு வாய்வந் துணர்த்த வுணர்ந்து தானவற்றை விட்டு நீங்கிய வழிச் சுத்தமாதல் கூடுமாகலா னவை காட்டுற்றைக் காட்டி நிற்றல்பற்றி யாண்டுத் தன்னியல்பு விளங்குதற் கிழுக்கில்லை யென வலியுறுத்தவாறு மென்பது.

மூன்றமதிகரணம் முடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

மூன்று மதிகரணத்தி னுயிர் பஞ்சேந்திரியங்களிற் பற் றுவகையாற் றன்னை யறியமாட்டாதெனக் கருவிகளினியல்பு கூறி யதனானே குருவாய்வந் துணர்த்துத லொருதலையான் வேண்டுமென விரண்டாமதிகரணத்திற் போந்த பொருளை வலியுறுத்தியவழி அற்றேற், குருவாய்வந் துணர்த்தினும் இனையவையொழிய வறிகுவதெவ்வாறு அறியினும் விட்டுச் செல்லுமாறுதா னெவ்வாறென்னு மாசங்கையை நீக்குதற் கெழுந்தது நான்காமதிகரணம்.

இனி யிவ்வான்மாத்தன்னை யிந்திரியத்தின் வேறுவான் காணவே தமதுமுதல் சீடாதத்தை யணையு மெனவரும்,

ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணராவெனப்பட் டவான்மா சித்தாய் வியாபகமாகிய தன்னியல்பைச் சடமா

யேகதேசமாகிய விந்திரியத்தின் வேறாக வுணரும் வியாபக வுணர்விற்கு இந்திரியத்தானாகக்கடவதொன்றின்மையிற் சற் குரவரவ்வாறுணர்த்தவே பிறிதுகாரணம் வேண்டாது தன க்காதாரமாகிய முதல்வனது திருவடியினைத் தலைப்படுமென் பதாம்.

தமது முதலென்பது வேறு முடிபாகலின் வழாநிலையா தலறிக.

அற்றேல், அவ்வாறுணர்தல் கூடுமாயினுஞ் சேறற்குரிய முயற்சியின்றி யறிந்தமாத்திரையே செல்லுமாறியாங்ஙன மென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழு ந்தவேது.

ஊசல் கயிறற்றாற் றாய்தரையே யாந்துணையா லென வரும்.

இ-ள். ஒருவனேறியிருந் தாடாநின்ற வூசல் கயிறற்ற தாயினவனுக் கற்றுழி யுதவுந் தாய்போ லாண்டுத்தாரகமா வது நிலனேயன்றிப் பிறிதில்லையென்னு மொப்புமையால் இனி யிவ்வான்மாத்தன்னை யிந்திரியத்தின் வேறுவான் காணு மேல தமது முதல் சிபாதத்தை யணையுமென மேற்கொண்ட தென்றவாறு.

இதனைப் போந்தது, கருவிகளான்மாக்களா லறியப் படாது நீங்கியவழி மலந்தாரகமாம் அறியப்பட்டு நீங்கிய வழிச் சிவமே தாரகமாமாகலின் றான்பின் செய்யக்கடவதோர் முயற்சி வேறில்லையென்பதாம்.

அற்றேல், கருவிகளினீங்கி மலந்தாரகமாய்க் கேவலப்பட் ட வுயிர் மீளவுங் கருவிகளைக் கூடிச் சகலப்படுமாறுபோலக் கருவிகளினீங்கிச் சிவந்தாரகமாய்ச் சுத்தப்பட்ட வுயிரும் மீண்டுங் கருவிகளைக் கூடிற்போலு மென்னு மாசங்கையை யுவமைமுகத்தா னீக்கி யதனை வலியுறுத்தற் கெடுத்துக் காட்டு முதாரணம்.

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றேடுங்கு மாறுபோன் மீளா
துலைவிலரான் பாதத்தை யுற்று. எனவரும்.

ஒருவ னணையை யுயர்த்துக்கட்டித் தடைசெய்ய ஆண்டுத் தடையுண்டு தங்கிநின்ற நீர்போலக் கருவிகளாகிய பாசஞானந் தனது வியாபகத்தைத்தடுப்ப வதன்கண்ணே யேகதேசமாய்த் தடையுண்டுநின்ற வான்மா அவ்வணை முறிந்து தடைவிட்டொழிந்தவழி யிடையீடின்றிக் கடலிற்சென்றடங்கி அந்நீரேயாய்ப் பின்பு மீளுதல் செய்யாத வாற்றுநீர் போலக் கருவிகளாகிய பாசஞானத் தடையினின்று நீங்கியவழிச் சிவபிரானது திருவடியைப் பொருந்தி யத்திருவடி நிறைவேயாயடங்கிப் பின்பு மீளுதல் செய்யாது நிலைபெறு மென்க.

சிறை செய்யநின்ற செழும்புனலி னுள்ளஞ் சிறைவிட்டலைகடலிற் சென்றடங்கு மாறுபோற் சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்துலைவிலரன் பாதத்தை யுற்று மீளாதெனமாறுக.

புனலின் இன் உவமவுருபு.

தேகத்தின் மிகுதி யுணர்த்துவார் செழும்புனலென்றார்.

மலசத்திக்குக் கேடின்மையிற் கேவலப்பட்ட வுயிர் கருவிகளின் மீளுதல் கூடும் சிவசத்திக்கவ்வாறு கேடின்மையிற் சுத்தப்பட்ட வுயிரதுபோன் மீளுதற்கோ ரியைபில்லை யென்பார் உலைவிலரனென விசேடித்தார்.

அடங்கு மென்னும் உவமவினையைப் பொருளினும் மீளாதென்னும் பொருள்வினையை யுவமையினுங் கூட்டியுரைக்க.

அற்றேல், "மருவு பசுகரணங்கள் சிவகரணமாகத்துன்னிய சாக்கிரமதனிற் றுரியாதீதந் தோன்றமுயல்" எ-ம், "மா

யை மாமாயை மாயா வருவிருவினையின் வாய்மை, யாயவா ருயிரின் மேவு மருளெனிலொளியாய் நிற்கும்" எ-ம், இவ்வாறோதுதலின் ஆண்டுப்பசுகரணம்போலப் பாசஞானமுஞ் சிவஞானமேயா மென்பது பெறப்படுதலின், ஆற்றுநீர் கடற்கே பாய்ந்தநீ ரந்நீராய்மாறி யவ்வாற்றான் மறித்தாற்போல உலைவிலரன் பாதத்தையுற்ற வுயிர் புலன்வழிமீளினும் அதனாற்போந்த விழுக்கென்னை யென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

எவ்வுருவுந் தானேன்னி லெய்துவா ரில்லைதா
ளிவ்வுருவில் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல். எனவரும்.

இனியீண்டுக் கூறுவது பதிப்பொருட்கே யன்றிப் பசுபாசங்களுக் கொருதன்மை யில்லை யெனக்கொண் டிவ்வாறுகூறிற் பசுஞானம் பாசஞானங்களுஞ் சிவஞானமேயா மென்பதோ, அன்றிப் பசுபாசங்களுக்குப் பதிப்பொருளை யன்றித் தமக்கெனவமைவுள வெனக்கொண் டிவ்வாறாயினும் உப்பளத் தடுத்த புற்பலாலங்க ளவ்வுப்பே யாமாறுபோலப் பசுஞானம் பாசஞானங்களிற் சிவஞானஞ் சங்கிரமமாய்ப் பற்றுதலா னவையுஞ் சிவஞானமே யாமென்ப தோசொல்வாயாக. பசுபாசங்களினுளவாகிய தன்மைகளெல்லாம் பதிப்பொருளின் றன்மையே பிறிதில்லை யென்னிற், பசுவுக்கொரு தன்மையில்வழிப் பசுக்கள் பாசத்தைவிட்டுப் பதியினடையுமாறில்லையாய்ப் "பாசத்தைப் பசுக்கள்விட்டுப் பதியினையடைய முத்தி" யென்னும் வேதாகம வசனங்களோடு முரணும், இனிப் பதிப்பொருளை யின்றி யமையுந்தன்மை யவற்றிற்கு வேறுள வெனக் கொள்ளி னப்பொழுது பசுபாசங்களின் றன்மைகட்குச் சிவனு லாகப்படுவ தொன்றின்மையிற் சிவனுக்கிறைமை யின்றாய் முடியுமாகலி னவ்விரண்டுங்கூடா

வேறென்னையோ விடுக்குமா றெனின், ஆன்மாவை யின்றிய மையாவா யான்மாவா லதிட்டிக்கப்படு மைவகையுறுப்புக்க ளுள்ளும் மெய் வாய் மூக்குச் செவி யென்னு நான்குறுப்புக் களுந் தம்மாட்டுவந்தவிடயங்களை யியைந்தறியுந் தன்மையன வன்றிக் கண்ணுறுப்புப் போலச் சேய்மைக்கண்ணுளதாகிய விடயத்தையும் வியாபித்தறியுந் தன்மையுடையன வல்ல. கண்ணுறுப் பவ்வாறின்றிச் சேய்மைக்கண்ணு மொளியாற் சென்றிசைந்தறியுந் தன்மைத்து. அற்றேல், ஒளிமழுங்கிய கண்ணுக்கு ஏனையுறுப்புக்களோ டொப்பத் தன்கண்வந்த விடயத்தை மாத்திரமே காண்ப தன்றிச்சேய்மைக்கண்ணும் வியாபித்துக் காணுமாறில்லையாலெனின்? மாசுமிகுதியாற் கண்ணொளி யிழந்தார் கண்பெற்றவிடத் தவ்வியல்பிற்றாகிய கண்ணினது வெற்றிப்பாட்டைக் காண்பாயாக வென்க.

எனவே யதுபோல முதல்வனை யின்றியமையாவாய் முதல்வனு லதிட்டிக்கப்படும் பசுபாசஞானங்களுட் பாசஞா ன மேகதேசமாய் விளங்கு மியல்பிற்றன்றிப் பசுஞானம் போல வியாபகமாய் விளங்குமியல்பிற்றன்று. பசுஞான மவ் வாறின்றி வியாபகமாய் விளங்கு மியல்பிற்று. அற்றேற், பசு ஞானம் பாசஞானம்போ லேகதேசமாயன்றி விளங்கக் கண் டிலமாலெனிற்? பசுத்துவத்தா னவ்வான்ம ஞானத்தை யிழந் தார் பசுத்துவ நீங்கி ஆன்மஞானத்தைப் பெற்றவழி வியா பகமாய் நிகழும் தனது வெற்றிப்பாட்டை யறிவாயாகவெ னப் பொருளினு முரைத்துக்கொள்ளப்படும்.

இஃதொட்டெடுத்துக் காட்டலங்காரம்.

இஃதென் சொல்லியவாறோவெனின்? ஆன்மாப் பசுத் துவ நீங்கிச் சிவத்துவம் பெற்றவழிப் பசுகரணமுஞ் சிவகர ண மாயவாற்றா னவ்வழிப் பசுஞானத்தோ டொப்பப் பாச ஞானமு முப்பளத்தடுத்த பொருள்போலச் சிவஞானமே யாமென்பது சிவாகம நூற்றுணிபாகலினவ்வைம்பொறியின்

மீளினு மிழுக்கின்மையின் மீளாதென மேலைவெண்பாவிற் கூறியதெற்றுக் கென்னுஞ் சங்கிராந்தவாத சைவரை மறுத்து முதல்வனே பசு பாசமென்றபேதங் கூறுதலும், முதல்வன் வேறு பசுபாசம் வேறெனப் பேதங் கூறுதலு மேலாமையின் முதல்வனுக்கும் பசுபாசங்கட்குஞ் சரீர சரீரிபாவத் தாற் பேதங்கூறுதல் வேண்டும். வேண்டவே, சரீர சரீரிபாவத்தின் ஆன்மா வைம்பொறிகளோ டபேதமாய் நிற்பினு மவை தத்தந் தன்மையிற் றிரியாவாய் விடயங்களைநின்றியைந்தறிதலுஞ் சென்றியைந் தறிதலுமாகிய விருவே றியல்புடைமையாகிய பேதங் கண்ணொளி மயங்கியவழிக் காணப் படாததாயினும் ஒளிபெற்றவழிக் காணப்படுதலி னவ்வாறே பசுஞான பாசஞானங்களிற் சிவஞான மபேதமாய் விளங்கினும் அவைதத்த மியல்பிற் றிரியாவாய்ப் பாசஞானத்துக் கேகதேச விளக்கமும், பசுஞானத்திற்கு வியாபகவிளக்குமாகிய பேதமுடைமை பசுத்துவ நீங்காத பெத்தநிலைக்க ணறியப்படாதாயினும் பசுத்துவ நீங்கிய முத்திநிலைக்க ணறியப்படுமாகலினவ்வியல்பிற்றிரிகிய வான்மஞான மவ்வியல்பினவாகிய வையுணர்வுகளை மீளப்பற்றுமா றில்லையென மேலை வெண்பாவின் பொருளை வலியுறுத்த வாறுமென்க.

இவ்வாறுரையாதார்க்குச் சொற்கிடக்கைமுறை யேலாமையும், மேலைவெண்பாவினோ டியைபின்மையு முணர்க.

“ எங்குந்தானென்னினு மெய்தவேண்டா ” வென்னும் வழிநூலுமிவ்வாறே பொருள்படுமா றுணர்ந்துரைத்துக்கொள்க.

ஏனை நான்கிந்திரியமும் விடயங்களினின் றுங்குநின்றியைந்தன்றி யறியமாட்டாமையுங், கண்ணிந்திரிய மவ்வாறின்றிச் சேய்மைக்கண்ணுஞ் சென்றியைந்தறியும் வெற்றிப்பாடுந் தத்துவங்களி னியல்புரைப்புழிக்காட்டினுங் கடைப் பிடித்துக்கொள்க.

உருவென்றவற்றுள் முன்னைய விரண்டும் பொருட்டன்மையை யுணர்த்தின பின்னைய துறுப்பின்மேற்று.

உறுப்பாதாரமாக நிற்றலானும், உறுப்புப்போறலானும் இந்திரியங்களை யுறுப்பெனவும், கழலணிதற் கேதுவாகிய வெற்றிப்பாட்டைக் கழலெனவு முபசரித்தார்.

கழல் காலணி மணிவடம்,
சுட்டு சிறப்பின்கண் வந்தது,
காண் முன்னிலை யேவல்.
பேறே யென்னு மேகாரம் ஏழனுருபின் பொருளுணர நின்றது,
ஒற்றிரட்டியாமை இலேசாற்கொள்க,

அற்றேல், "நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள யானைம் புலன்கள் கொண்டு, விடுந்தகை யேனை விடுதி கண்டாய்" எனப் பிறுண்டு மிவ்வாறேதுபவாகலின் ஒழிவிலரன் பாதத்தை யுற்றோர் மீளுதலுமுண்மையின் மீளாதென்பதமையாதா லென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்,

ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து. எனவரும்.

நீ நின்னாலதிட்டிக்கப்பட்டவழியும் ஏகதேசவறிவைச் செய்வனவாகிய வைம்பொறிகள்போலல்லை, யவற்றின் மேம்பட்டு வியாபகமாயறியும் வெற்றிப்பாடுடையையென மேலை வெண்பாவா லுணர்த்தப்படுந் தீவிரதரத்திற் றீவிரதரமான சத்திநிபாதமுடையோனே! யவ்வியல்பினவாகியவைம்பொறிகளைக் கைவிட்டே சிவன்றிருவடியையெய்தி முன்னவ்வைம்பொறியினின் றுங்கதுவா யுறைத்து நிற்பாயாக;அவ்வாறணை

ந்துநின்றாயாயிற்சகலனை யைம்பொறிவிட்டுநீங்காதவாறுபோல அச்சிவனுன்னை விட்டு நீங்கான் கல்லெறிவுழிநீங்கி யல்லுழிப் பரக்கும் நீரின்கட் பாசிபோல நீயவ்வாறுறைக்கு நிற்புழி நீங்குவனவாகிய மலகன்மமாயைகள் பயிற்சிவயத்தானோரோவழி யங்ஙனே நிகழ்ந்தமைபற்றிவந்துகூடுமாயின் நின்னிலே குலைந்தவழியும் நின்னைவிட்டு நீங்காத வம்முதல்வனை யுணருமாறு முன்னர்க் கூறப்படு முபாயத்தினின்று சாதித்து அவற்றை நீக்கிக்கொள்கவென்க.

ஐம்பொறியினல்லையெனு மந்தரமென மேலைவெண்பாவிற் போந்த பொருளை யநுவதித்துவிட்டன்றிச்சேறல் கூடாதென்பார் சிவனை யைம்பொறியைவிட்டங்கணை யென்றும், சிவனை யைம்பொறியின் விட்டவழி மீளாமையை வலியுறுத்துவார் சகலனைம் பொறியினீங்கானென்றும், ஒரோவழி மீட்சியுளதாயி னதற்குக் காரணமிஃதென உவமைமுகத்தா னுணர்த்துவார் நீர்ப்பாசிபோலென்றும், ஐம்பொறியின் மீளுமாயினவற்றிற்கு மூலமாகிய மலகன்மமாயைகளும் அதுபற்றுகவந்து தலைப்படுமென்பார் மலகன்மம் வரினென்றும், அம்மீட்சியை நீக்குதற்குபாயங் கூறுவார் நீங்கானை நினைந்துநீங்கென்றுங் கூறினார்.

இன் இரண்டு முவமவுருபுகள்.

அந்தமென்றது நாலாஞ் சத்திநிபாதத்தை.

அதுவு நால்வகைப்படுமாகலி னவற்றுள்ளு மேம்பட்ட சத்திநிபாதமுடையாயென்பார் அந்ததர என்றார்.

சகலனை என்னு மிரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது.

மலகன்ம மெனவே யினம்பற்றி மாயையுங்கொள்ளப்படும்.

நீங்கானை நீங்கு நினைந்தெனவே வருகின்ற பாதத்திற்குத் தோற்றுவாய் செய்ததுமாயிற்று. "மங்கலமென்ப மனைமாட்சிமற்றத, னன்கலனன் மக்கட்பேறு" என்புழிப்போல.

இம்மூன்றுபாட்டும் முறையே திருவடிஞானத்தைப் பெற்ற வுயிர்மீளப் பாசஞானத்திற் சேறலில்லையெனவும், பாசஞானத்தின் மீளுதலிழுக்கெனவும், ஒரோவழிப் பயிற்சி யைத்தான் மீளுமாயின் மீளாது செய்துகொள்ளற்பாற்றென வுங் கூறித், தாய் தரையே யாமென்னும் பிரிநிலையேகாரப் பொருளை வலியுறுத்தியொரு பொருண்மேல் வந்தவாறுகா ண்க.

சிவஞானபோதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞான யோகி செய்த பாடிய மிரண்டாவ துண்மையதிகாரத்துச் சாதனவியலி லிரண்டாம் பாதமாகிய விவ்வெட்டாஞ் சூத்தி ரம் முடிந்தது.

மூன்றுமதிகரணம் முடிந்தது.

---

# ஒன்பதாஞ்சூத்திரம்.

—:o:—

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

எ-து. சூத்திரம் எ-னின். ஆன்மசுத்திபண்ணுமாறுண ர்த்துதனுதலிற்று. மேற்பொதுவதிகாரத்துட் கூறிப்போந்த முப்பொருள்களுள் விள்ளற்பாலதனை விண்டதனுன்வருந் துன்பத்தி னீங்குதலுங் கொள்ளற்பாலதனைக் கொண்டத னுன் வருமின்பத்தைப் பெறுதலுமாகிய வீடுபேறடைதற் குரிய வியல்பு தனக்குண்டென வேழாஞ் சூத்திரத்தாற் தெ ளிவிக்கப்பட்ட வான்மாவுக் கவ்வீடு பேற்றைப் பயப்பித் தற்கட் சிறந்த சாதகமாவது விள்ளற்பாலதாகிய பகைப்பொ ருளிது கொள்ளற்பாலதாகிய நட்புப் பொருளிது வெனக்

குருமுகத்தான் விவேகித் தறிவு ஞானமொன்றே யாமெனவும், அவ்வறிவு பாசப் பற்றற்ற லன்றிநிகழாமையிற் பாசஞானத்தா லெய்தற்பாலதன் றெனவும் மேலைச் சூத்திரத்தா னுணர்த்தியவழி அற்றேற், பாசஞான மேகதேச வுணர்வாகலினதனல் வியாபகப் பொருளை யறியுமவிவேக ஞான நிகழாதாயினும், பசுஞானம் வியாபக வுணர்வாகலினதுவே யதற்கமையு மென்னு மாசங்கையை நீக்குவதாகிய வான்மசுத்தி செய்யுமா றுணர்த்துமுகத்தானே யச்சாதகத்தை நிகழ்விப்பதிது வென்பதூஉம், அதனைப்பெறுமாறு; மதுநிலை பெறுமாறுமாகிய சாதிக்கு முபாயம் வகுத்துணர்த்துதல் சர்த்தவோத்தின் மூன்றும் பாதமாகிய விவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

மேலைச்சூத்திரத் திறுதியதிகரணத்தாற் பாசஞானப் பற்றற்றலன்றியறியக் கூடாதென்றவழி அற்றேற்; பசுஞானத்தாலறிதல் கூடும்போலு மென்னு மாசங்கையை யீண்டு நீக்குதலின், அவ்வாசங்கை பற்றிய வியைபானே யதிகரணவியைபும், மேலான்மதரிசனமாமாறுணர்த்தி, யீண்டான்மசுத்தியாமா றுணர்த்துதல் முறைமையாகலின் அம்முறைமை பற்றிய வியைபானே பாதவியைபும், மேற்சாதகமாவ திது வென்றுணர்த்தியவழி யதனைச் சாதிக்குமா றியாங்ஙனமென்றவாய் நிற்றலின் அவ்வவாய் நிலை பற்றிய வியைபானேயோத்தியைபும பெறப்பட்டன.

அற்றேல், பசுத்துவமுடைய ஞயவழியே யான்மாப் பசுவென நிற்பதாகலிற் பாசப் பற்றறுதிகூறவே, பசுப்பற்றறுதியும் பெறப்படுதலி னாசங்கை நிகழாதாலெனி னவ்வியல்பு முன்னர்க் கூறப்படுதனேக்கி நிகழுமென்ப துணர்ந்துகொள்க.

அஃதங்ஙனமாக, சிவப்பிரகாசத்தில் தான் பணியை ரித்ததே யான்மசுத்தியென் றோதுதலின், அத்தன்மைக்

தாகிய வான்மசுத்தி வருகின்ற சூத்திரத்தின் இறைபணி நிற்க வென்பதனாற் பெறப்படுவதெனவே கொள்ளற்பால தாகலானும், அழுக்கு நீங்குதலே யறுவைக்குச் சுத்தியாமாறுபோலப் பாசக்ஷயம் பண்ணுதலே யான்மாவுக்குச் சுத்தியா மாகலானு மதனை யான்ம சுத்தி பண்ணுமாறுணர்த்திற்றெனல் வேண்டும்.

அவ்வாறுரையாது பதியை நாடியெனவும், தன்னிழலாம் பதியெனவும் சிவதரிசனம் பண்ணுமாறே யுணர்த்துதற்கெழுந்த விச்சூத்திரத்தை யான்ம சுத்திபண்ணுமாறுணர்த்திற்றெனல் மலைவாம் பிறவெனின்? ஆகாது; சிவதரிசனம் பண்ணுமா றுணர்த்திற்றென்பது சூத்திரத்தானினிதுவிளங்குதலி னதனை யெடுத்துரையாது சிவதரிசனம் நிகழ்வது ஆன்ம சுத்தியென்னு முடனிகழ்ச்சி யுணர்த்துதற்குந் தம்முள் வேறுபாடு சிறுபான்மையுடையனவாகிய விவ்விருசூத்திரமும் ஒருபொருண் மேலனவென்பதுணர்ந்து கோடற்கும் அவ்வா றுரைத்தாராகலின்.

அஃதங்ஙனமாக; ஆன்மாத்தன்னை யிந்திரியத்தின் வேறுவான் காணவே தமதுமுதல் சீபாதத்தை யணையுமென்றமையிற் றமதுமுதல் சீபாதத்தை யணைதற் கான்மதரிசனமே யமையு மான்மசுத்தி வேண்டுவ தெற்றுக்கெனின்? அஃதொக்கும். திரியக்காண்டலும், இரட்டுறக் காண்டலும், தெளியக்காண்டலு மெனக்காட்சி மூவகைப்படும்; இம்மூன்றும் அதிபரிபக்குவ முடையார்க்குக் கேட்ட மாத்திரையே யொருங்கு நிகழும் ஏனையோர்க்குச் சோபான முறையாற் கேட்டல் சிந்தித்த றெளிதலென்னு மிம்மூன்று முறையே நிகழ்வனவாகலின், ஆன்ம தரிசனத்தைப் பயக்குஞ் சிவரூபத்தின்பின் ஆன்மசுத்தியைப் பயக்குஞ் சிவதரிசன மொருதலையான் வேண்டப்படுமென் றுணர்ந்துகொள்க. இதனானே யுருவதரிசன சுத்திகட்குத் தம்முள் வேறுபாடுங்

காண்க. "நேசமுடன் திருவடிக்கீ ணீங்காதே தூங்கு நிலையுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி, யாசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்" என வழிநூலாசிரியர் கூறியது மிக்கருத்தேபற்றி யென்க.

இம்மூவகைக் காட்சியுமே யுருவ தரிசன சுத்தியெனப்படுமென்பது.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு, பசுஞானத்தானும் பாசஞானத்தானு மறியப்படாத முதல்வனை யம்முதல்வனது ஞானக்கண்ணானே தன்னறிவின்கண்ணே யாராய்ந்தறிக. அப்பதி ஞானத்தைப் பெறுமாறியாங்ஙன மெனின்? நிலமுதலாகிய மீறுகிய பாசக்கூட்டம் நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் ணதிவேகமுடைய பேய்த்தேரி னியல்பிற்றாய்க்கழிவ தென்றறிந்து நீங்கவே, யப்பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அங்ஙனம் விளங்கிய ஞானத்தான் நேயத்தைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்து விதிப்படியறிந்து கணிக்கப்படு மென்றவாறு.

நாடியென்பது "நன்றுமன்னிது நாடாய்கூறி" யென்புழிப்போல இகரவிற்று முன்னிலையேவல்.

நாடியென்னு மெனக்கூட்டி வினையெச்ச முடிபாகவைத்துரைப்பினு மமையும்.

சிந்தையின்கண் ணென்னுமேழ னுருபு தொக்கது.

உரா முதனிலைத் தொழிற்பெயர்.

கண்ணுருபு விரித்துரைக்க.

பறவாக்குளவி, பாயாவேங்கை யென்றாற்போல ஒருவரா னூரப்படாத வேகத்தையுடைய தேரெனச் செயப்படு

பொருட்கண் வந்த பெயரெச்ச மறையாக வைத்துரைப்பினு மமையும்.

இப்பொருட்குத் திருத்தார் நன்றென்றேன் றியேனெ ன்புழித் தியேனென்பது போல உராவென்பது குறுக்கல் விகாரம்.

பின்வந்த பதி, யாகுபெயர்.

ஞானக் கண்ணினிற் சிந்தை நாடிபெனவே யேனைஞான ங்களானறிய வாராமை பெறப்படுமாயினு, மினிது விளங்கு தற்பொருட் டதனை யறுவாதமுகத்தா னோதினர்.

உணரா பதியையென்பதனை வேறுதொடராக வைத் துப் பொருள்பட வோதுவாருமுள ரஃதாசிரியர் கருத்தாயி னதனை வேறோரதிகரணமாக வைத்துரைப்ப ரவ்வா றுரை யாமையானும், ஞானக்கண்ணினி னடியெனவே யேனைஞான ங்களா னடைப்படாமைதானே பெறப்படுதலி னதனை விதி முகத்தா னோதவேண்ட மையானும், வடமொழிச் சூத்திரத் திற்கும், "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனை" யெனும் வழிநூற்கு மேலாமையானும், அதுபா டமன்மையறிக.

இதனுளுனக்கண் பாசமுணரா பதியை ஞானக்கண்ணி னிற் சிந்தைநாடி யென்பதோ ரதிகரணம். உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதியென்ப தோரதிகரணம். விதியெண்ணு மஞ்செழுத்தே யென்பதோ ரதிகரணம். ஆகமூன்றதிகரணத்த திச்சூத்திர மென்றுணர்க

---

## முதலதிகரணம்,

அவற்றுண் முதலதிகரணமேற்பாசஞானத்தா லறியப்ப டாதென மேற்கூறிப்போந்த முதல்வனைப் பசுஞானத்தா னறிதல் கூடுமென்னுஞ் சிவசமவாத சைவரை மறுத்தற்கெ ழுந்தது.

ஈண் டம்முதலை ஞானக்கண்ணாலே காண்க எனவரும்.

அம்முதலை யென்றது ஊனக்கண் பாசங்களா னுணரப் படாதெனப்பட்ட முதலை. ஊனக்கண் பாசங்களை யெடுத்தோதி விலக்கினமையின் ஈண்டு ஞானக்கண்ணென்றது சிவஞானத்தையெனக்கொள்க.

ஏனை ஞானங்களிற் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக் கண் வந்தது.

அற்றேற், பாசஞானம் பசுஞானங்களா னறியப்படாத பரம்பொருள் சிவஞானத்தா னறியப்படு மென்றற்குப் பிரமாணமென்னை யென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது.

அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான் எனவரும்.

இ-ள். சத்திகாரத்திற் காட்டினாம்.

வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றல் ஆண்டு பெறப்பட்டமையி னதனை ஈண்டேதுவாக வைத்து மேற்கோளைச் சாதித்தார். வாக்கு மனாதீதமாயுங் கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையிற் சிவஞானத்தானே யறியப்படு மென்பது தானே போதருமென அருத்தாபத்தி யளவை காட்டியவாறு.

அற்றேல், வாக்குமனாதீதப்பொருள் கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாதென்ற தென்னை? பசுத்துவமுள்ள வழிச் செயற்கையா னேகதேசத்தின் விளங்கும் பசுஞானம் அப்பசுத்துவ நீங்கியவழிச் சிவஞானத்தோடொப்ப எங்கும் வியாபகமாய் விளங்குமென்பது சிவாகம நூற்றுணிபாகலின் அவ்வழிச் சுட்டிறந்தறிவதாகிய பசுஞானத்திற்குக் கோசரமாதல் பெறப்படுமா லென்னு மாசங்கையை நீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோர்
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணு
ரேன்னு மேனவறிவா ரின்று. எனவரும்.

நாடி முதலியவற்றுள் யான்யார் என்னைத்தேடியு மறிகின்றிலே னென்றிவ்வாறு தேர்கின்ற தேர்ச்சிக் கூறுபாட்டை யிங்ஙன மொன்றிற் றெளிவு பிறவாது மயங்கிநின்று சூழுஞ் சூழ்ச்சிக் குறைபாட்டா னமக்கெய்தியதென்றுராய்ந்துபார்த்து அங்ஙனம் பார்த்தவழி "உன்னறிவை நீயேயுணர்வையேயாமாகில், நீநெடுநாட்பாசத்திசையாயே-புன்னறிவு, நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ, லாங்கா ணரனுரு" ளென்பவாகலி னத்தன்மைத்தாகிய சிவஞானத்தைப் பெருமையா லெய்திய தெனக்குருவருளா னுணரப்படுஞ் சிவஞானத்தானே சிவனையறிந்தவ ரச்சிவனில் வியாப்பியமாய் நின்றங்ஙனமறியும் பொருளாகிய தம்மையு மறிவர். அப்படியறியாதார் மற்றெவ்வியல்பினரென்று தம்மையறியவல்லுவரிம் முக்திக் காலத்தென்க.

நாடி யென்றது இடை பிங்கலை சுழுமுனை முதலியநாடியை.

நரம்பெனவே யடங்குமென்னுந் தலைமைபற்றி வேறு கூறினர்.

சீ புண்ணீர்.

கோழை ஐ.

ஓகாரம் தெரிநிலை.

நாடியோ வென்போ நரம்பு சீ கோழையோ வென்றது உபலக்கணமாகலின் ஏனைத்தத்துவ தாத்துவிகங்களையு மவ்வாறு தெரிதல் கொள்ளப்படும்.

என்றென்பது சொல்லெச்சம்.

ஒற்றுமைபற்றி யரனது ஞானத்தை யரனென் றுபசரித்தார்.

உண்மை எதிரது தழீஇயது.

எவனென்னும் வினாவினைக் குறிப்புப்பெய ரீண்டாகு பெயராய் என்னென்மரீஇயிற்று.

ஆம் அசை.

இது தம்மையறியுமாறு கூறுமுகத்தானே தலைவனை யறிந்த பின்னறியப்படுவதாகிய தம்மறிவுகொண்டு தலைவனை யறியுமாறியாங்ஙனமெனச் சிவசமவாத சைவரை மறுத்துச் சிவஞானத்தானன்றி யறியப்படாமையை வலியுறுத்தவாறு.

அற்றேல், நாடியெலும்பு நரம்பு முதலிய தத்துவதாத் துவிகங்களை யறிதற்குச் சிவஞானத்தை யின்றியமையும் ஆன்மா சிவனையறிதற்கண்ணு மவ்வாறமையு மென்றற் கிழுக் கென்னை? யெதிர்முகத்தொருபொருளைக்கண்டகண்ணே மறி ந்து நோக்கியவழிப் பிற்பக்கத்துப்பொருளையுங் காண்டற் கமையுமா லென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்த தற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

காட்டிய கண்ணே தமைக்காணு கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணு—காட்டிய
வுள்ளந் தனைக்காணு வுள்ளத்தின் கண்ணுய
கள்வன்று னுள்ளத்திற் காண். எனவரும்.

எதிர்முகத்துப் பொருள்போல வெளிப் புறத்துப் பொரு ளும் புறத்துத் தோன்றும் விடயமே யாகலிற் கண்ணவ்வி டயத்தினையு மொப்பக்காண்டலமையும் காண்கின்ற தன்னைக் காணமாட்டாது தனக்குக் காட்டா யுண்ணின்று செலுத்து முயிரையுங் காணமாட்டாது; அதுபோலத்தனக்கு வேறாகிய நாடியெலும்பு முதலிய தத்துவதாத்து விகங்களைத் தற்போ தத்தாலறிகின்றவுயிருந் தன்னையறியமாட்டாது தன்னைச் செலுத்து முதல்வனையு மறியமாட்டாதுதானே. அங்ஙன மாயினுங் கண்போலுயிர் சடமன்மையிற் கண்ணிடத் தாயி

நிற்குமாறுபோலன்றி யுயிர்க்கதனறிவாகி யுடனின்ற கள்வ னாம் முதல்வனாகலா னவனை யுன்னறிவின்கட் காண்பாயாக வென்க.

காட்டிய வென்பது தன்வினைப் பொருள்பட நின்றது; "வாணிகமொன்றுந் தேற்றாய்" "தேற்றாவொழுக்கம்" "தேற்றார் மாட்டு" என்புழிப்போல.

ஏகாரம் அசைநிலை.

காணு தென்னுந் துவ்வீறு தொக்குநின்றது; "முறை காக்குமுட்டா செயி" னென்புழிப்போல.

ஒருமைப் பன்மை மயக்கமென்பாரு முளர்.

கண்ணுய அறிவாய என்க.

உடனின்றும் பசுஞானம் பாசஞானங்களா னறியப் படாமை பற்றிக்கள்வ னென்றார். "கண்ணுகிக் கரணங்கள் காணுமனிற்ப" னென்றார் வழிநூலாசிரியரும்.

தான் அம்முதல்வன்.

காட்டிய வுள்ளத்தைக் கண்காணு வெனவுவமைக் கேற்பவாறு பொருளினும் வருவித்துரைத்துக் கொள்க.

இது எடுத்துக்காட்டுவமை.

முதலதிகரணம் முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

மேலையதிகரணத்தினிந்திரியத்தின் வேறுவான் காணப்பட்ட தன்னறிவின்கண்ணே சிவஞானத்தாற் சிவனைக்காண்டலொன்றே சிவப்பேற்றிற்குச் சிறந்த சாதனமென்றுணர்த்தியவழி, அற்றேற், சிவஞானத்திற் காணுமாறியாங்ஙனமென்னு மவாய்நிலையை நீக்குதற்பொருட்டு மேலதற்குப் புறனடையாக வெழுந்தது இரண்டாமதிகரணம்.

இனியசத்தாயுள்ள வன்னபேதங்களை யசத்தென்று காணவுளதாய் நிற்பது ஞானசொரூபமென் றுணர்தற்பாற்று எனவரும்.

இ-ள். படிக சொரூபத்தைக்காட்டாது மறைத்துநின்ற வேற்று நிறங்களை யிவை நிலையுதலிலவாகிய வேற்றுநிறங்களெனக்கண்டு நீத்தவழி நிலையுதலுடைத்தாய் விளங்கிநிற்குமப்படிக சொரூபம்போல நிலையுதலுடைய ஞானத்தினுடைய சொரூபத்தைக்காட்டாது மறைத்துநிற்கும் நிலையுதலில்வாயுள்ள பிரவஞ்சத்தை யிவை நிலையுதலுடையன வல்லவென்று விவேகித்தறியின் அவ்வழி நிராலம்பமாய் விளங்கித்தோன்றுவது: அச்சிவஞானத்தினுடைய சொரூபமென்றறியும்பான்மைத்தென்றவாறு.

வன்னபேதங்கள் சித்திரமெனப்பொருள் கொண்டவழி நிலையுதலுடைய பித்தியின் சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிலையுதலிலவாயுள்ள சித்திரங்களை இவை நிலையுதலுடைய வல்லவென்று கண்டவழி யொருதன்மையாய் விளங்கித்தோன்றும் பித்திபோல வென்றுரைத்துக்கொள்க.

ஆசிரியர் சொற்பல்காமைப்பொருட் டிவ்வா றேகதேசவுருவகமாகவைத் துடம்பொடு புணர்த்தோதிய வேதுவைமேலையதிகரணங்களுட்போல மேற்கோளின் வேறுவைத்துக்காட்டுமாறு,

இனி யசத்தாயுள்ள பிரவஞ்சத்தை யசத்தென்று காணவுளதாய் நிற்பது ஞானசொரூபமென்றது வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பினுளதாய் நிற்பது படிக சொரூபமாந் துணையான் எனவரும்.

வன்னபேதஞ் சித்திரபேதமெனப் பொருள்கொள்ளின் வேற்றியல்பாகிய சித்திரங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பினுளதாய்நிற்பது பித்தியின் சொரூபமாந்துணையான் எனவரும்,

ஈண்டுப் பாசமென்றது காரியப்பிரவஞ்சத்தை யென்பார் அசத்தாயுள்ளவென்றும், ஏதுப்பொருளை யுடம்பொடு புணர்த்துக்காட்டுவார் பிரவஞ்சத்தையென்னாது வன்னபேதங்களை யென்றும், வியாபகப்பொருளுக்கு ஒருவுதலாவது காட்சி விசேடமே யாமென்பார் அசத்தென்றொழியவென்னாது அசத்தென்று காணவென்றும், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்றென்பார் உளதாய் நிற்பதென்றும், ஈண்டுப்பதியென்றது பதிஞானத்தையென்பார் ஞானசொரூபமென்றும், இஃ தனுபவத்தினன்றிச் சொல்லளவையி னறியுவாராதென்பார் உணர்தற்பாற்றென்று முரைத்தார்.

அசத்தினியல் பிதுவென்பது அசத்ததிகாரத்திற் காட்டப்பட்டது கடைப்பிடிக்க.

அசத்தெனப்பட்ட காரியரூபப் பிரவஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஆசிரிய னறிவுறுத்த வுபதேசப்பொருளினுறைத்துநின்று அட்டகுண மெட்டுச்சித்திக் கோகனதன்முதல்வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து நெறியறுவகையு மேலொடுகீழடங்கக் காரணரூபத்தினில்லாமையால் வெறும் பொய்யென நினைந்திருந்தல்.

அற்றேல், அவனை யவ்வாறுகண்டவழித் தோன்றுவது இன்னதென்றறியவாராத சூனியமேயன்றிப் பிறிதில்லையாலோ வென்னு மாசங்கையை நீக்கியதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

> நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
> தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
> லானா வறிவா யளவிறந்து தோன்றானே
> வானே முதல்களையின் வந்து. எனவரும்.

அசத்தெனப்பட்ட மூவகைப் பிரவஞ்சத்துள் அசுத்தப் பிரவஞ்சமெல்லாம் முக்குணமயமாகலிற் சத்துவகுண

விருத்தியாகிய பிரகாசரூபம், சாந்தரூபம், சுகரூபமாய்த் தா
ன், இராசதகுணவிருத்தியாகிய பிரவிருத்திரூபம், கோரரூபம்,
துக்கரூபமாய்த்தான், தமோகுணவிருத்தியாகிய மனரூபம்
மூடரூபம், மோகரூபமாய்த்தானளவிட்டறியப்படும் முதல்வ
னிம்முக்குணங் கடந்தவ னாகலா னிவற்றுளொன்றாக வறியப்
படா னென்பார் நிர்க்குணனா யென்றும், மிச்சிரப்பிரவஞ்
சம், முக்குணங்களைக்கடந்து நிர்க்குணமாயுள்ள தொன்றாயி
னும் மலகன்மங்களோடு விரவிநிற்றலின் மலகாரியமாகிய
மோகமுதலிய வெழுவகையுருவமாகத்தான், கன்மகாரிய சுக
ரூபந் துக்கரூபமாகத்தா னளவிட்டறியப்படு முதல்வன் மல
கன்மங்களையும் கடந்துநிற்றலான் அவற்றுள்ளுமோ ரியல்பு
பற்றி யறியப்படானென்பார் நின்மலனாயென்றும், சுத்தப்
பிரவஞ்சம் மலகன்மங்களையுங் கடந்து நின்மலமாயுள்ள தொ
ன்றாயினுங் காரியப்பட்டநித்தமாமியல் புடைமையிற் சாதி
சயானந்தரூபமா யளவிட்டறியப்படும் முதல்வன் காரியப்பா
ட்டின துபசாரத்தனையுங் கடந்தவனாகலா னவ்வாறு மறியப்
படானென்பார் நித்தியானந்தனா யென்றும், ஆன்மாவு மிம்
மூவகைப் பிரவஞ்சத்துட்பட்டுச் சகுணனாயுஞ் சமலனாயும்
சாதிசயானந்தனாயும் பொதுவியல்புபற்றியறியப்படும் முத
ல்வ னவ்வாறு மறியப்படானென்பார் பரமாய் நின்றவென்
றும், அங்ஙனநின்றநிலை யொன்றோடுவமித் தறியப்படாமை
பற்றித் தனிமுதல்வனென்றும், இத்தன்மையனாகிய முதல்
வன் நிலமுதலாதமீறாகிய பிரவஞ்சங்களை யசத்தென்றுகளை
ந்தவழிப் பயின்றறியாமையி னின்னதென்றறிய வாராத கு
ணியம்போலச் சுட்டறிவி னளவினைக்கடந்து தோன்றிப் பி
ன்னர்ச் சுட்டிறந்தறியு மறிவின்கண்ணே சோதிக்குட் சோ
தியாய் வெளிப்பட்டுத்தானே விளங்கித் தோன்றுவ னென்
பார் வானே முதல்களையின் அற்புதம்போலளவிறந்து ஆன்
மறிவாய்வந்து தோன்றினனென்றுங்கூறினர்.

கண்டுக்குணமென்றது முக்குணங்களை.

அவ்வாறன்றி நிர்க்குணமென்பது ஒருகுணமுமில்லா னென்றுரைப்பி னதுதன்வயத்தனாதன் முதலிய வெண்குணங்களையியல்பாக வுடைய முதல்வனுக் கேலாமையின் மாயாவாதிமுதலியோர் கூற்றாய் முடியுமென்றொழிக.

தற்பரம் தனக்குப் பரமென நான்கனுருபு விரித்துரைக்க.

தன்னென்றது ஆன்மாவை.

அற்புதமென்றது ஈண்டுச் சூனியத்தின்மேற்று.

ஆனவறிவு தன்னறிவின்க ணீங்காது நிலைபெறுமறிவு.

ஓகார மெதிர்மறை.

வானே முதலென்றதனானே தோற்றமுறைபற்றி வானுக்குக் கீழுள்ள பூதங்களும் ஒடுக்கமுறைபற்றி வானுக்கு மேலுள்ள தத்துவங்களு முடன்கொள்ளப்படும்.

ஏகாரம் அசைநிலை.

முதல் ஆகுபெயர்.

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய்த் தற்பரமா யென்புழி ஆக்கச்சொல் உண்மை குறித்துநின்றது வடமொழிமதம்.

ஆனவறிவா யென்புழி ஆக்கம் முன்னர்ச்சூனியம்போற் றோன்றுவோன் பின் ஆனவறிவாய்த் தோன்றுவானென வேறுபாடு குறித்துநின்றது.

குணகுணிகட்கு வேற்றுமை யின்மையின் முதல்வன் ஞானத்தை முதல்வனென்றுபசரித்தார்.

அற்றேல், வானே முதல்களைந்தவழி அங்ஙனந் தோன்றும் பொருளும் வேறொன்றெனக் கோடும் ஞானசொரூபமே யதுவென்றற்குப் பிரமாணமென்னை யென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண் — சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் போய்விட்டுப் போம். எனவரும்;

ஏகதேச வுணர்வாற் சுட்டியுணரப்படும் நிலமுதற் சிவ மீறாகிய பிரபஞ்சத்தை அசத்தெனக் கரணத்திற் கூறிய வியல்பு பற்றி யொரோ வொன்றாகச் சுட்டி யசத்தென்று கண்டு கழித்துக்கொண்டு சென்றவழி முடிவின்கட் கோசரமாவது வேறின்மையிற் பாரிசேட வளவையானது சத்தேயாமென்று செம்மையே யறிவாயாக.

அற்றேல், அசத்தின் வேறா யங்ஙனங் கோசரமாவது சத்தேயாமென்ற தொக்கும்; அது முதல்வனன்று உயிரே யாமென்றாற் படுமிழுக் கென்னையெனின்? நிலைபேறின்றி யொரோ வொன்றாகச் சுட்டியறிந்து வந்தநீயென்று மொரு தன்மைத்தாய் நிலைபெற்று நிகழுமறிவாகிய சத்தாவாயல்லை; அசத்தை யசத்தென்று கண்டு நீக்கிய வழியுளதாகிய சத்தினை யடிமையாகச் சென்று தலைப்பட்டதனாற் சுட்டியறிவாகிய வேகதேச வறிவைச்செய்யும் பொதுவியல்பு நின்னை விட்டு நீங்குமாகலி னசத்துமல்லை யென்க.

ஆகலி னசத்துமல்லை யென்பது குறிப்பெச்சம்.

எனவே யசத்தைச் சத்துடனின்று நீக்குந்தன்மையாற் சதசத்தாவையென்பதாம்.

மயக்கமற்று மருந்திற் றெளிந்து, மென்ற வெண்பாவாற் பெறப்பட்டதனையே யீண்டுக் கடைப்பிடித்தற் பொருட்டுச் சுட்டியுணர்ந்த நீ சத்தல்லை யுண்மையைத் தைவம் புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போமாகலி னசத்துமல்லை யெனா வேறோராற்றானுந் தெளிவித்தா ராகலினிது கூறியது கூறலன்மையுணர்க.

சட்டமென்பது செப்பப் பொருட்டாய தோரகரவீற்றிடைச்சொல். அது சட்டமென இழிவழக்கின் மகரவிருய்மரீஇயிற்று.

அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

தேவனதுடைமை தைவமென்பது வடமொழி.

வாதனையுமின்றிப் பற்றறக் கழியுமென்பார் விடுமென்னுது விட்டுப்போமென்றார்.

இனி யசத்தை யசத்தென்று கண்டு நீக்குமாறும், நீங்கியவழி யுண்மையைத் தைவம் புணருமாறும், புணர்ந்தவழிப்பொய்விட்டுப் போமாறுந் தெரித்துணர்த்தி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டுமுதாரணம்:

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா
யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த
வூனத்தைத் தான்விடுமோ றுத்தமனி லோண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றன். எனவரும்.

சுட்டுணர்விற்கு விடயமான பிரவஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்றென வொரோ வொன்றாகச் சுட்டி அசத்தாகக்கண்டு விட்டுநீங்கி யங்ஙன மறிந்து நீங்கிய தன்னறிவின் கண்ணே சுட்டுணர்விற்கு விடயமாகாத முதல்வனைப்பாராய்ந் தச்சிவஞானத்தானே ஆசாரியன் சிவோயமெனத் தன்னுள்ளே பாவித்துச் சிவத்துவமசி யென்றறிவுறுக்குஞ் சித்தாந்த மகாவாக்கியப் பொருளை நாடோறும் பயின்று சிவோகமெனப் பாவிப்பனாயி னந்தப்பாவகத்தின் விளங்கு முதல்வனு லனாதியே கூடிய பொதுவியல்பையு மதற்கேதுவாகிய மலமாயா கன்மங்களையுந் தான்விட்டு நீங்குமாறு ஒள்ளிய கருட தியானத்தில் விளங்குங் கருடனு லப்பாவகன் விடத்தைத் தீர்துக்கொள்ளுமாறு போலாமென்க.

ஆகவென்பது ஆயெனத்திரிந்து நின்றது.

தான் முன்னையது எழுவாய் பின்னையது அசை.

உத்தமனது ஞானத்தை யுத்தமனென் றுபசரித்தார்.

சானம் பாகதச்சிதைவு.

இதனானே வருகின்ற வதிகரணத்துக்குத் தோற்றுவாய் செய்ததூஉமாயிற்று.

ஈண்டுக் கருடபாவனையென்ற தியாதெனிற் கூறுதும். ஆதிபௌதிககருடன் ஆதிதைவிககருடன் ஆத்தியான்மிக கருடனெனக் கருடன் மூன்றுவகைப்படும். இவ்வாறு பொருடோறுங் கண்டுகொள்க. அவற்றுளுலகத்திற் காணப்படுங் கருடன் ஆதிபௌதிககருடன், அதற்கதி தெய்வமாய் மாந்திரிக னுள்ளத்தினதுபோல வைத்துத்தியானஞ்செய்து கணிக்கப்படும் மந்திரம் ஆதிதைவிக கருடன், அம்மந்திரத்தினிடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிககருடனெனப்படும். அவற்று ளீண்டுக் கருடனென்றது கருடனுக்கதி தெய்வமாய் மாந்திரிக னுள்ளத்திற் காணப்படு மந்திரரூபமாகிய ஆதிதைவிககருடனை. அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்றுவந்த பயிற்சி விசேடத்தா லம்மந்திரரூபமே தானாக வனன்னியபாவனை செய்து தன்னறி வதன் வசமாம்படி யுறைத்துநிற்றல். அங்ஙனநின் றந்தமந்திரக்கண்கொண்டு பார்ப்பவே யஃதவ் விடவேகத்தை மாற்றுத லொருதலையாகலின் அப்பாவனை யீண்டைக் குவமையாயிற்று.

இதனானே கருடபாவனை சத்தியமா மென்பதூஉம், அதனையசத்திய மென்பார் மதம் போலி யென்பதூஉந் தெற்றெனவுணர்க. புள்ளுவிலங்கு மரமுதலிய சராசரங்களுக்கெல்லாம் அதிதெய்வ மந்திர முளவென்பதூஉம், படிகம்போ லதுவதுவாமியல்புடைய ஆன்மா அவற்று ளெவ்வெம் மந்திரங்களைக் கணிப்பி னவ்வம்மந்திர சொரூபியாவ னென்பதூஉஞ் சருவஞானோத்தர முதலியவற்றுட் காண்க.

இரண்டாமதிகரணம் முடிந்தது.

## மூன்று மதிகரணம்.

—:*:—

மேலையிரண் டதிகரணங்களானுந் தன்னை யிந்திரியத் தின் வேறுவான் கண்ட வான்மா அக்காட்சி, நிலைபெறுமா றசத்தாயுள்ள பாசத்தை யசத்தென்று கண்டொருவுக ஒரு வியவழியுளதாய் நிற்கும் ஞானக்கண்ணினால் ஒருவிய தன் னறிவின்கண்ணே தனக்கு ஞேயமாகிய முதல்வனை நாடுக இவ்விரண்டு மக்காட்சியை நிலைபெறுத்தி யரன்கழல் சேறலா கிய சிவானந்தப் போகப்பயனைப் பயப்பித்தற்கு முறையே சாதகமாமென் றுணர்த்தியவழி அற்றேல், அப்பயனைப் பயப் பித்தற்குரிய விவ்விரண்டனையுஞ் சாதித்தோர்க்கு இனிச் சாதிக்கக்கடவ தொன்றில்லைபோலுமென மாணாக்கனுக்கு நிகழு மாசங்கையை நீக்குதற் கெழுந்தது மூன்றுமதிகரணம்,

இனி யிவ்விடத்து சீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்ச ரிக்க வெனவரும்,

இனி யென்ப தியைபுணர்த்துதற் பொருட்டெனமே லேயுரைத்தாங் குடைப்பிடிக்க,

இவ்விடத்தென்றது ஆன்மாப் பாசமொருவி ஞானக் கண்ணினால் ஞேயமாகிய முதல்வனைக் கண்டவிடத்து என்ற வாறு,

சீ பஞ்சாக்கரத்தை யென்றது முத்திபஞ்சாக்கரத்தை யென்றவாறு.

விதிப்படி யுச்சரிக்கவென்றது ஆன்மாப் பாசமொருவி ஞானக்கண்ணினிற் பதியிற்சிந்தை நாடுக வென வீண்டுவிதி த்த விதியின்படியே யோதுக வென்றவாறு.

பஞ்சாக்கரத்தாற் சாதிக்கப்படும் பொருளு மதுவேயா கலான் வேறு வகுத்துக்கூறுது விதிப்படியென மாட்டெறிந் தொழிந்தார்.

இங்ஙன மாசிரியர் மாட்டெறிந்ததூஉ முணரார்தார் சாதித்து நிற்குமுறை வேறே போதுமுறைவேறே யெனச் சித்தாந்த வழக்கோடு முரணிக் கூறுவர். நிற்குமுறையு மோதுமுறையுந் தம்மு ளியைபில்வழி அஃததற்குச் சாதனமாமாறியாண்டைய தென்றொழிக. இன்னுமித னியல்பனைத்தும் உண்மைவிளக்கஞ், சிவப்பிரகாசந், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுள் விரித்தோதுதலி னவையெல்லா மாண்டுக்காண்க. ஈண்டுவிரிப்பிற் பெருகும்;

மானத, மந்த, முரையென வுச்சரிக்குமாறும் மூவகைப்படும். அவற்றுட் சுத்தமானத மெனப்படு மறிவாற்கணித்தலே ஈண் டுச்சரித்தலென்பார் சூத்திரத்துள் உச்சரிக்கவென்னு தெண்ணுக வென்றார், வடமொழிச் சூத்திரத்துச் சாணிக்கவென்றது மது.

அற்றேல், மேலையதி கரணங்களி லோதியவற்றாற் பாசமொருவி ஞானம் பிரகாசித்து ஞேயத்தைக் கண்டுழி யவ்வாவினமையாது திருவஞ்செழுத்தானு மதனைச் சாதிக்கவென்றல் மிகையுமாய்ச் சித்தசாதனமு மாமாலென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது.

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலி னதனை நீக்குதற் கெனக்கொள்க.

இ-ள். வேம்புதின்றபுழு அதனை நீக்குக் கரும்பினிற் மேற்பட்டதன் சுவை தெரிந்துழியும் பயிற்சிவயத்தான் முன்னர்த் தானேக்கிய வேம்பின் சுவையைநோக்கி நிற்குமாறுபோல மேலையதிகரணங்களிற் கூறிப்போந்த சாதகங்களைச் செய்து முற்றிய வான்மாக்களுக் கச்சாதகங்களான் ஞானம் விளங்கி ஞேயங்காட்சிப்பட்டவிடத்தும், பயிற்சிவயத்தான் முன்னர்த்தா னேக்கிய பாசத்தை நோக்கி நிற்கு மாகலி னத்

நோக்கமாகிய வாசனையைநீக்குதற்குரிய சாதகமதுவாகலான் இனி யிவ்விடத்து சீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்று மேற்கொண்டதெனக் கொள்க வென்றவாறு. எனவே யிரண்டுமொரு தன்மையவாயினும் மேலே விதிக்கப்பட்ட சாதகருக்குப் பயன் ஞானம் பிரகாசித்து நிலைகூடுதலும் ஈண்டு விதிக்கப்படுஞ் சாதகத்திற்குப் பயனது கூடியவழியுந் தாக்குவதாகிய வாசனையை நீங்குதலுமாகிய பயன் வேறுபாடின்மையின் ஒருதலைபாற் சாதிக்கக்கடவதாகிய திருவஞ்செழுத்தோதுதல் மிகையாதலுஞ், சித்தசாதனமாதலும் யாண்டையெனமாணாக்கனுக்காசங்கையை நீக்கியவாறுமிற்று; ஆகவே யந்நிலை கூடப்பெற்றவர்க்கன்றி யேனையோர்க் கிஃதேலாதென்பது கண்டுகொள்க.

ஈண்டு நோக்கென்றது மனவெழுச்சி விசேடத்தை "வானோக்கி வாழு முலகெல்லா" மென்புழிப்போல.

அற்றேல், இச்சாதகம் வாசனையை நீக்குமாறியாங்ஙனமென்னு மவாய்நிலையை நீக்கி யேதுவை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டு முதாரணம்.

> அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
> யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
> குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
> லண்டனுஞ் சேடனு மங்கு. எனவரும்.

ஆன்மாச் சிவனுக்கு அடிமையாதலை யஞ்செழுத்தை யுச்சரிக்கு முறையில் வைத்துக்கண்டு தன்னுடம்பினகத்தே யிதயம், நாபி, புருவநடு, வென்னு மூன்றனையு முறையே பூசைத்தான மோமத்தானந் தியானத்தானமாகக் கருதிக்கொண்டு புறம்பேஞான பூசைசெய்யு முறைப்படி, யிதயகமலத்திற் சிவனை யவ்வஞ்செழுத்தா னமைந்த திருமேனியிற் கொல்லாமை, யைம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம்,

றுவமையில் வைத்துணர்த்தியதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

இந்துவிற் பானுவிலி ராகுவைக் கண்டாங்கு
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாணு மோதஞ் செழுத்து. எனவரும்.

அந்தரத்தியங்கு நவக்கோள்களுள் ஏனைக்கோள்போலக் காணப்படாத இராகு கேதுக்களை உபராகத்திற் சந்திராதித்தரிடத்திற் காணுமாறுபோலப் பதிபசுபாசங்களுள் யானறிந்தேனறிகின்றிலேனென்னு முணர்விற்கு விடயமாகக் காணப்படும் பசுபாசங்களோடொப்ப வேறு காணப்படாத பதிப்பொருளாகிய முதல்வனைத் தன்னிதயத்தின்கண் அஞ்செழுத்தோது முறையாற் காணுமாயிற் கோலைநட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே காட்டத்தினின்றுந் தோன்றுமங்கிபோல முதல்வ னுண்டுத்தோன்றி யறிவுக்கறிவாய் விளங்கியிருக்கும். அப்பொழுது தானுங்கனலைச்சேர்ந்தவிரும்புபோலத் தன் சுதந்திரத்தைவிட்டு முதல்வனுக்கு அடிமையாமாகலா னவ்வஞ்செழுத்து விதிப்படி யொருதலையாக வோதுக வென்க.

கேதுசாயாக்கிரகமாதலின் வேறுகூறா திராகுவையே யெடுத்தார்.

கண் அறிவு.

தோன்றி யாமெனக் கூட்டுக.

உந்துதல் ஈண்டுக்கடைதல் மேற்று.

காட்டாக்கினிபி னென்பது காட்டாக்கினென்ன விகாரமாயிற்று.

இன் உவமவுருபு.

தான் எழுவாய்.

ஈண்டுமோதஞ்செழுத்தென்றது வலியுறுத்தற் பொருட்டு.

அற்றேல், தத்துவ முப்பத்தாறுக்கு மப்பாற்பட்ட முதல்வனை இதயத்துட்கண்டு பூசிக்குமா றியாங்ஙனமென்னு மாசங்கையை நீக்கி அண்டபிண்டமவை சமமாகலா லண்டத்திலுள்ளனவெல்லாம் பிண்டத்துள்ளுஞ் சூக்குமரூபமா யுண்மையின் அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்துவங்களு மிதயத்திற் கமலரூபமாய் விளங்குமாகலின் முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேற்பட் டங்ஙனம் வியாபகமாய் வயங்கு முதல்வனை அவ்விதய கமலத்தின்மே லலரக்கண்டு பூசித்த லமையுடைத்தெனத் தெளிவித்தற்பொருட் டவ்விதய கமலத்தி னியல்புணர்த்தி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

> மண்முத ளுளமலர் வித்தை கலாரூப
> மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
> கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
> நிலையதிலா மச்சிவன்ரு ணோர். எனவரும்.

இதயகமலத்தி னியல்பை யுற்றறியப்புகின் நிலமுதலிய விருபத்து நான்குதத்துவமும் நாபியினின் றுந் தோன்று மெண்விரலளவைத்தாகிய நாளவடிவும், வித்தியாதத்துவமேழுஞ் சுத்தவித்தையுமாகிய வெட்டும் எட்டிதழ்வடிவும், அவற்றின்மேற் கருதப்பட்ட ஈசுரதத்துவமுஞ் சதாசிவதத்துவமும் அறுபத்துநான்கு கேசரவடிவும், சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டுவடிவும், சிவதத்துவம் அப்பொகுட்டினுட் காணப்படு மைம்பத்தொரு பீசவடிவுமா மாகலா னம்முப்பத்தாறு தத்துவமு மாசனமாகக்கொண்டவற்றின்மேனிற்கு முதல்வன் திருவடிக ளவ்விதயகமலத்தின்மேனிற்கும்; அதனையறிந்து பஞ்சாக்கரத்தாற் பூசை செய்வாயாக வென்க.

வித்தை யென்பதனை யிரட்டுறமொழிந்துகொண்டு வித்தியாதத்துவமெனப்படுங் கலாதியுஞ், சுத்தவித்தையுமென் றுரைத்துக்கொள்க.

"மூட்டுமோகினி சுத்தவித்தை" யென்னுஞ் சிவஞான சித்தியில் மோகினியென்றதூஉம் ஆகுபெயரா னதன்காரிய மாகிய கலாதிகளின்மேற்று.

இனி, இவ்வாறன்றி நிலமுதலிய முப்பத்தொரு தத்துவமெனப்படும் எட்டுக்கோத்தும் எண்விர ளைவடிவம், நாளத்துக்கு மவற்றிற்கு மேலாகிய அசுத்தமாயாதத்துவம் நாளத்துக்கு மலருக்கு நடுக்கண்டமாகிய கிரந்தவடிவம், அதற்குமேற் சுத்தவித்தையின் வாமை முதலிய வெட்டும் எட்டிதழ்வடிவமாமென்றுரைப்பாரும், அசுத்தமாயைகிரந்தி னதச்சதனம், சுத்தவித்தை யூர்த்துவச் சதனமென வைத்து அதற்குமே லீசுரதத்துவத்தி லனந்தன் முதலிய வெட்டுமே யெட்டிதழ்வடிவம் சதாசிவதத்துவ மொன்றுமாத்திரமே கேசரவடிவமெனக் கொண்டதற்கியையக் கொண்டு கூட்டியுரைப்பாரும், கலாரூபமென்றது நிவிர்த்தி முதலிய கலைகளை யெனவும் அஃதியாண்டும் கூட்டி யுரைக்கப்படுமெனவுங் கொண்டவ்வாறு கோடலான், மண்ணு மண்ணைமுதலாக வுடைய வேனை யிருபத்து மூன்று தத்துவமுமாகிய கலாரூபமாவன நிவிர்த்தியும் பிரதிட்டையுமேயாகலா னவையிரண்டும் முறையே நாளமு மலருமாம் வித்தியாதத்துவமாகிய கலாரூபமாவது வித்தியாகலை சுத்தவித்தையோடுகூட்டி யெண்ணப்பட்ட ஈசர் சதாசிவமாகிய கலாரூபமாவது சாந்திகலை ஆகலா னவையிரண்டும் முறையே கலையெனப்படுங் கேசரமும் கலைக்குள் ளுருவெனப்படும்பொகுட்டுமாம் நாதமுஞ் சத்தியுமாகிய கலாரூபமாவது சாந்தியாதீத கலையாகலா னது பொகுட்டின்கண்ணுகிய பீசமாம் என்றிவ்வா றுரைப்பாருமுளர். இவையெல்லா மவ்வவாகம பேதம்பற்றிக் கொள்ளப்படும்.

கலையறுபத்து நான்காகலான் அஃதறுபத்து நான்காகிய கேசரங்களுக் கத்தொகைபற்றிக் கூறப்படு மாகுபெயராயிற்று.

சமென்றது ஆகுபெயராய் அவற்றிற்கப்பாலிந் தத்துவத்தை யுணர்த்திற்று.

கமலபுரு கமலக்குள் ளருகுமென உள்ளுருபுவிரித்துரைக்க. கமலக்குள் ளருக் கேசரங்களுக்கு நடுவாய் விளங்கும் பொகுட்டென்பது.

கமலபுருவாஞ் சத்திநாத மதன்கண்ணுமென மாற்றியுரைக்க.

ஆமென்பதனை நாளமலர் கலாருப மென்பவற்றோடுங் கூட்டியுரைக்க.

இந்நாளம் முதலாக மேனோக்கித் தோன்று முலகத்திற் கமலம்போலாது கண்முதலாகக் கீழ்நோக்கித் தோன்றுந் திவ்விய கமலமென்க.

மூன்றமதிகரணம் முடிந்தது.

---

சிவஞானபோதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞானயோகி செய்த சிவஞானபாடியத்தில் இரண்டாவ துண்மையதிகாரத்துச் சாதனவியலில் மூன்றம்பாதமாகிய வொன்பதாஞ் சூத்திரம் முடிந்தது.

## பத்தாஞ்சூத்திரம்.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

எ-து. சூ-ம். எ-னின், பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்துத லுதலிற்று. மேலையோத்தின் மூன்றுபாதத்தானும் முறையே சாதிக்கும் பொருளினியல்புஞ் சாதித்துப்பெறப்படும் பொருளினியல்புஞ் சாதிக்குமாறு முணர்த்தி [illegible] சாத

கத்தா னாகிய பயனியல்பு வகுத்துக்கூறுவா னெடுத்துக்கொண்டமையி னிவ்வோத்துப் பயனியலென்னும் பெயர்த்து.

பாசவீடுஞ் சிவப்பேறுமெனப் பயனிருவகைப்படு மாகலா னவ்விரண்டனுட் பாசவீடாகிய பயனைப்பெறுமாறுணர்த்து முகத்தானே சிபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்கும் வழிச் செய்யற்பால திதுவென வஞ்செழுத்ததிகரணத்தி னொழிபாய் வைத்துணர்த்துதல் பயனோத்தின் முதற்பாதமாகிய விப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

மேற்சாதக முணர்த்திய வழிச் சாதகத்தாற் பெறப்படும் பயனியாதோவெனப்பயனை யவாய்நிற்றலி னவ்வவாய் நிலை பற்றியவியைபானே யோத்தியைபும், ஆன்மசுத்தி கூறிப்பின் ஆன்மலாபங் கூறுதன் முறைமையாகலின் அம்முறைமை பற்றிய வியைபானே பாதவியைபும், விதிப்படி பஞ்சாக்கரத்தை யுச்சரித்தால் வாதனா மலம்போ மென்றவழி, அங்ஙன முச்சரிக்குங்கால் நிற்குநிலையு, மிவ்வாறுகற் பாற்றென்பது கூறுக்கால் உச்சரித்தார்க் கெல்லாம் வாதனாமலம்போதல் வேண்டுமென்னு மாசங்கை நிகழ்தலி னவ்வாசங்கை பற்றிய வியைபானே அதிகரண வியைபும் பெறப்பட்டன.

அற்றேல், 'விட்டன்னியமின்மையி னரன்கழல் செலு' மெனப் பயனுமாண்டே கூறிப்போந்தமையின் ஈண்டதனை யவாவுமா றியாங்ஙன மெனின்? பயனை யறிவித்தாலன்றிச் சாதனஞ் செய்தற்கண் மனவெழுச்சி செல்லா தென்பது பற்றி யாண்டும் பொதுவகையாற் கூறிப்போந்ததனை ஈண்டுக்கிளந்தெடுத் தோதாக்கால் விடுமா றியாங்ஙனஞ் செல்லு மாறியாங்ஙன மென்றவாய் நிற்ற லொருதலையென விடுக்க. ஏனையவு மியைத்துணர்ந்து கொள்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஞானக்கண்ணினிற் சிந்தை நாடப்பட்ட வம்முதல்வன் பொருட் டன்மை

பால் வேறே யாயினும் வேறு காணப்படாது யானே கண்டேனென்னும்படி யுயிர் தானேயாய் நின்ற வப்பெத்ததியே போல ஈண்டுத் தானென வேறுகாணப்படா தம்முதல்வனோ டாம்படி யொற்றுமைப் பட்டவ்விறை பணியின் வழுவாது நிற்பின் உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவிய வழிப் வாதனையால் வந்து தாக்கும் மலமாயை யென்னு மிரண்டனுடனே வலிய கன்மமலமு மில்லையாய்ப் பற்றறக் கழியு மென்றவாறு.

ஏகாரந் தேற்றம்.

நெறி யுவமவுருபு.

வினையை வேறு பிரித்தமையின் இன்றேயென வொன்றற் சொல்லாற் கூறினார்.

ஈண் டேகனாகி யொற்றுமைப் படுதலாவது: குடமுடைந்தவழிக் குடாகாயமு மாகாயமு மொன்றுதல் போல வொற்றுமைப் படுதலோ, அன்றி வெள்ளியை யிப்பியென்பது போலத் திரிவுகாட்சியா னொற்றுமைப் படுதலோ! அன்றி மண்ணை குடமென்பது போல ஒன்று திரிந்தொன்றாயொற்றுமைப் படுதலோ, அன்றி வெள்ளையுந் தாமரையு மென்பது போலக் குணகுணித் தன்மையா னொற்றுமைப் படுதலோ, அன்றித் தீயு மிரும்பும்போல வொன்றினொன்று விரவுதலா னொற்றுமைப் படுதலோ, பாலு நீரும் போலப் பிரிக்கப்படாத சையோகத்தா னொற்றுமைப் படுதலோ, கருடனு மாந்திரிகனும்போலப் பாவனை மாத்திரத்தா லொற்றுமைப் படுதலோ, அன்றிக் காய்ச்சிய விரும்பி னீர்போல வொன்றி னொன்றி லயமா யொற்றுமைப் படுதலோ, பேயும் பேய்பிடி கொணடவனும் போல ஆவேசத்தா னொற்றுமைப் படுதலோ, அன்றிக் காட்டத்தி னெரிபோல விளங்காமையா னொற்றுமைப் படுதலோ, அன்றி ஞாயிற்றொளியின் விளக்கொளி போலச் சத்தி கெட்டு நிற்றலா னொற்றுமைப் படு

ந்மேலா, அன்றித் தலைவனுந் தலைவியும்போல வின்பநுகர்ச்சி மாத்திரையா னொற்றுமைப் படுதலோ, அன்றி நட்டோரிருவர் போல நட்பின் மிகுதியா னொற்றுமைப் படுதலோ, அன்றியாவும் ஆமாவும் போல வொப்புமை மாத்திரையா னொற்றுமைப் படுதலோ என அவ்வச் சமயவாதிகள் மதம்பற்றி நின்று மின்னோரன்ன வாசங்கைகளை யெல்லாம் நீக்குதற் பொருட்டு அவனே தானேயாகிய வந்நெறியென வுவமை யெடுத்துக் காட்டியோதினர்.

அற்றேல், மீண்டுச் சம்பந்த மென்னையெனி னதுவருகின்ற சூத்திரத்தி னுவமை முகத்தானோதுகின்று ராகலினாண்டுக் காட்டுதும்.

இதனுள் அவனே தானேயாகிய வந்நெறி யேகனாகிநெ ன்பதோரதிகரணம். இறைபணிநிற்க மலமாயைதன்னொடுவல்வினை யின்றே யென்பதோ ரதிகரணம். ஆகவிரண்டதிகரணத்த திச்சூத்திர மென்றறிக.

## முதலதிகரணம்.



அவற்றுண் மேலைச் சூத்திரத்தின் வாசனாமல நீங்கியான்ம சுத்திபாதற் பொருட்டு சீ பஞ்சாக்கரத்தைப் பாசமொருவிப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடுகவெனச்சிவதரிசனம் பண்ணுமாறோதிய விதிப்படியே மகாவாக்கியப் பொருள் பயப்ப வுச்சரிக்கவென் றுணர்த்தியவழி வாதனாமல நீங்குதற் கெவ்வா றுச்சரித்தன் மாத்திரையே யமையும் போலுமென்னு மாசங்கையை நீக்கி மேற்செய்யுமா றிதுவென்பதாய சித்தாந்த முணர்த்துதற் கெழுந்தது முதலதிகரணம்.

ஈண்டுப் பரமேசுர னிவ்வான்மாவாய் நின்ற முறையாலவனிடத் தேகனாகி நிற்க எனவரும்.

ஏகனாகி நிற்றலாவது "திரண்டாம் பயனென்னுந் திருவருடெளிவிற் சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாமென்றிறை யியற்கை யியம்புதற்கும்" எனச் சங்கற்ப நிராகரணத்துப்பரம சித்தாந்தமாக முடிவின்கணோதியவாறே திருவஞ்செழுத்தி னுய்த்துணர்ந்து நிற்றலென்க.

அற்றேல், வாதனாமலநீங்கி ஆன்மசுத்தி பண்ணுதற்குஞ் சிபஞ்சாக்கரத்தை யவ்விதிப்படி யுச்சரித்தலே யமையுமாதன்மேலு மேகனாகிநிற்ற லெற்றுக்கென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த வேது.

அவ்வாறு நிற்கவே யானென தென்னுஞ் செருக்கற்றவனது சிபாதத்தை யணையுமாதலான் எனவரும். இ-ள். ஏகனா யப்படி நின்றாலே யன்றி யானெனப்படும் ஞாதாவும் எனதெனப்படும் ஞானமு மதற்குவிடயமா யெனதெனப்படும் ஞேயமும் எனப்பகுத்துக் காணு மயக்க வுணர்வுக்கேதுவாகிய மலவாசனை நீங்காது; அது நீங்கினாலன்றி முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தை யனுபவித்தல் கூடாதாகலான் அம்மல வாசனை நீங்கிச் சிவானந்தத்தை யனுபவித்தற்கு அதுவே சாதகமென்பது பெறப்படுதலான் ஈண்டுப் பரமேசுர னிவ்வான்மாவாய் நின்ற முறைமையா னவனிடத்தேகனாகி நிற்கவென மேற்கொண்ட தென்றவாறு.

செருக்கு ஆகுபெயர்.

அற்றேல், ஞாதுரு ஞானம் ஞேய மெனப் பகுத்துக்காணுங் காட்சிமயக்க வுணர்வாமா றியாங்ஙன மென்னு மாசங்கையை நீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டுமுதாரணம்.

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதலானவனோன் றின்றியே தானதுவாய்த்-தானெனவொன்
றில்லென்று தானே பெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானா மிறை. எனவரும்,

யானென்று மவனென்றும் பகுத்தறிந்து நிற்பார்க்கும் யானேயென நிற்பார்க்கும் போல நாடுகின்ற வான்ம போத முனைத்துத் தோன்றும தலா னதுதோன்றும் வழித் தானென் றொருமுதல் காணப்படுமாறின்றித் தானவ்வுயிரேயாய்க் காணப்பட்டும் யானென் றொருமுதல் காணப்படுமாறில்லை யென்றறிந்து தான் முழுவதுமெனக் காண்பவனை யவ்வாறே வேறு காணப்படுமாறில்லை யென்று தனது திருவடி வியாபகத்து ளடங்கி நிற்கச்செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்ப னிறைவனென்க.

ஆய் ஆமெனக் கூட்டுக.

௯௯. ஆயாமென்புழிச் செய்தெ னெச்சங்கால முணர்த்தி நின்று மற்று நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க்கமிழ் தொக்கு மிவனென்புழிப்போலத் தன்வினையாதல் மாத்திரையே யுணர்த்தி நின்றது.

தூலவொளியாகிய கண்ணொளியும் சூக்கும வொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்குநிலை பிரித்தறிய வாராமையிற் கண்ணொளியாக் காணுங்காற் காணுந் தன்மையே முனைத்துத் தோன்று மாகலி னவ்வழி விளக்கொளியிருந்து மில்லை, விளக்கொளியாக் காணுங்காற் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலி னவ்வழி கண்ணொளியிருந்து மில்லை கண்ணொளியும் விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப்புகினுங் காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின் விளக்கொளி திரிவுபுலனாகக் காட்சிப்படுவதல்லது தெளிவு புலனாய்க் காட்சிப்பட்டு நிற்பதில்லை அதுபோலத் தூலவறிவாகிய வுயிரும் சூக்கும வறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்குநிலையும் பிரித்தறிய வாராமையின் உயிராய்க் காணுங்காற் சிவமில்லை சிவமாய்க் காணுங்கா லுயிரில்லை இரண்டுமாய்க் காணப்புகினுந் தற்போத முற்பட்டு நிற்றலின் அவ்வழியுஞ் சிவம் ஐயக்காட்

த்துணையானுந் தானே விளங்குமா றின்றென்பது பற்றி வியஞ்சகத்தான் விளங்கி யெதிரொலி வடிவாய்த் தோன்று மவ்வோசையை ஆகாயத்தின் குணமன்றென்பார் யாருமில்லை, அதுபோலக் கண்ணின் கண்ணதாகிய வொளியும் வியஞ்சக முள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்திரையே பிறிதில்லை யாகலா னதனைக் கண்ணின்குண மன்றென்ற லறிவில்லார் கூற்றேயாமெனவும், அக்கண்ணொளி தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொரு ளேகதேசமாயின் ஏகதேசத்து விளங்கியும் அது வியாபகப் பொருளாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்குமியல்பிற் றெனவுமுணர்க.

அற்றேல், லஃதங்ஙனமாக கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடு மென்றதற்குப் பிரமாண மென்னை? ஒரு விடயத்தின் மேல்வீழ்ந்த பல கண்ணொளிகட்குத் தம்முளியை பில்லாதவாறுபோல வொருவயிற் பட்ட கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்மு ளியைபில்லை யென்றல் பொருத்தமுடைத்தாலெனின்? அறியாது கூறினாய்; ஒரு விடயத்தின் மேல் வீழ்ந்த கண்ணொளிக டம்மு ளொன்றனை யொன்று காணுமாறில்லை, காணப்படுமாறு ஒன்றுக்கொன்று காட்டுமாறில்லை ஆகலானவை தம்முட் கலத்தற் கோரியை பின்றென்ப தொக்கும்; அவ்வாறன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டுதலுமாகிய வியைபுண்மையின் இவ்வியைபு தம்முட் பெறப்படாத கண்ணொளி முதலாயின வின்மைக் குவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்களுந்தம் விடயத்தோ டியைந்தன்றிச் சந்நிதி மாத்திரையா லவற்றை யறிதல் செல்லாதென்பதே யாகமங்கட் கெல்லாந் துணிபாகலானு மத்தன்மையவாகிய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லை யென்றல் சிவாகம வழக்கோடு முலக வழக்கோடு முரணுவார் கூற்றே யாமென்று மறுக்க. இன்னன முவமைக்கோதியன வெல்லாம் பொருட்கண்ணுமாமா றுணர்ந்துரைத்துக் கொள்க.

அற்றேல், இவையனைத்துமொக்கும். சுண்டெடுத்துக் காட்டிய கண்களொன்றனை யொன்று காணுமாறின்மையி னதுபோல ஆன்மாக்களும் பிறவான்மாக்களையறிதல் போலு மெனின்? அறியாது கூறினாய், கண்க டம்மு ளொன்றனை யொன்று காண்டலில்லை யென்றது விளக்கினையும் விடயத் தினையுங் காணுமாறுபோலத் தனித்த முதலாய் வேறுகாணு மாறில்லை யென்ற றுணையேயன்றிப் பிறிதின்மையின் கண் விளக்கொளியைக் காணுங்கா லதுவே தானாக நின்று தன்னை யு மவ்விளக்கொளி வண்ணமாய்க் காண்ட லுண்டென்பது கண்கூடாக வறியக் கிடத்தலி னேனைக்கண்களையு மவ்வாறு காண்ட லமையுமாகலா னதுபோல ஆன்மாவும் பிறவுயிர்க ளைத் தனித்த முதலாய்ப் பிரித்தறியுமா றில்லையாயினுஞ் சிவத்தைத் தரிசிக்கும்வழி தானதுவாய் நின்று தன்னை யறியுமாறு போலப் பிறவுயிர்களையு மச்சிவத்தின் வண்ண மாய்க் கண்டறித லமைவுடைத்தாகலா னென்பது.

அற்றாகலி னன்றே 'தன்னாலே தனையறிந்தாற் றன் னையுடையானை காணுந்தானதுவாகி நின்றே' எ-ம்.-"அன்னிலை யாலபாகா வகைபகிலறிவடங்கி மன்னிட வியாபியாயவன் மாய்ந்தே நின்று" மெனவும் புடைநூலாசிரிய ரோதியதூஉம்; "என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே னின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே நின்னைக்காணா மாந்தர் கண்மையுங் காணாத்தன்மையோரே" என மும்மணிக்கோவை யிலோதியதூஉம், பிறவன்றி மிவ்வாறே யோதியதூஉமென்க,

முதலதிகரணம் முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

—:*:—

முதலதிகரணத்தின் மேலைச்சூத்திரத்தோதிய சிபஞ் சாக்கரத்தை அவ்விதிப்படி யுச்சரிக்கின்றுழி அதன்கண்

விளங்கும் ஞாதுரு ஞான ஞேயப்பகுப்பிறந்து நின்றுச்சரித்தாலன்றி மலவாதனை யருமையா லஃதறும்வண்ணம் முதல்வனிடத் தேகனாகி நிற்றல் வேண்டுமென மலவாசனை யறுதற் குபாயங் கூறியவழி அற்றேல், ஆன்மா அவ்வாறு நிற்புழி யதன்குணமாகிய வறிவிச்சை செயல்கள் கெட்டொழியுமோ கெடாதுநிற்குமோ என்றார்க்குக் குணகுணிகட்கு வேற்றுமை யின்மையாற் குணங்கெடவே குணியுங் கெடுமெனப்பட்டு முப்பொருளு நித்தமென்னுஞ் சித்தாந்தத்தோடுமுரணி யவசித்தாந்தமாம். கெடாதுநிற்குமாயி னேகனாதல் செல்லாதா லென்னு மாசங்கையை நீக்குமுகத்தானே யேனை மாயாகன்ம வாசனை யறுதற் குபாயங் கூறுதற் கெழுந்தது இரண்டாமதிகரணம்.

இனி இறைபணி வழுவாது நிற்க எனவரும்.

நிற்றலாவது சலியாமைநிலைபெறுதலென்பார் வழுவாது நிற்கவென்றார்.

ஈண்டிறைபணியென்ற தியாதெனின்? அஃதாசிரியர் தாமே முன்னர்த் தெரித்துரைக்கின்றமையி னினிதுவிளங்கும்.

அற்றேல், அவ்விறைபணி வழுவாது நிற்பின் ஆன்மாச் சுதந்திரனல்லனாய்ப் பரதந்திர னெனப்பட்டு முத்தியும் பெத்தமெனப்பட்டு வழுவாம். "பரதந்திரியங் கரைகழி பந்த" மெனச் சிவாகமங்களிலே யோதுதலா னென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது.

அவனருளா லல்லதொன்றையுஞ் செய்யானாகவே யஞ்ஞானகன்மம் பிரவேசியாவாகலான் எனவரும், கண்ணொளிக்குக் காட்சி விளக்கொளியை யின்றியமையாமையிற் காண்பன வெல்லாந் தன்செயலே யெனக்கண்டு தானென வேறு முனைப்புமாறின்றி யவ்விளக்கொளியினடங்கி நிற்பி னேனைவிடய மொன்றுங் கண்ணுக்குத் தாக்குமாறில்லை யதுபோலத் தன்

னுடையவிச்சா ஞானக் கிரியைகளின் றொழிற்பாட்டுக்கு முதல்வனது இச்சா ஞானக் கிரியைகளை யின்றியமையாத வான்மாவு மவ்வினைபற்றி நிகழ்வனவெல்லாம் முதல்வனதிச்சா ஞானக் கிரியைகளது நிகழ்ச்சியே யெனக்கண் டம்முதல்வன் வியாபகத்துக்குள்ளாக வடங்கிநிற்பிற் பிரபஞ்சஞ் சிறிதுந் தாக்குமாறில்லை ; அஃதின்றாகவே அது காரணமாக மேலைக்கு வினையேறுமாறு மில்லை; அல்லுழி யெல்லாம் பிரபஞ்சந்தாக்காதொழியாது; அஃதொழியாதவழி யதுகாரணமாக வரும் விருப்பு வெறுப்பேறா தொழியாது; அஃதேறுமாயிற் பிறவிக்கு வித்தாய் மீளப்பெத்த நிலையிற் செலுத்திவிடுமாகலா னங்ஙனமாகாதவாறு மாயை கன்மங்களின் வாதனையறுதற் குபாயமதுவேயாகலா னிறைபணி நிற்றலொருதலையான் வேண்டுமென்பார் அவனருளா லல்லதொன்றையுஞ் செய்யாராகவே யஞ்ஞானகன்மம் பிரவேசியா வாகலானினி யவ்விறைபணி வழுவாது நிற்கவென மேற்கொண்டதென்றார். எனவே "பரதந்திரியங் கரைகழிபந்த" மெனச் சிவாகமங்களி னுண்டாண்டோதியது அவ்விறைபணி நிற்றலையன்று மற்றுச்சிவானந்தத்தை யனுபவித்தற்கட் செல்லுமியல்பிற்றாகிய தன்னிச்சை வழிவிடாது மலத்தினை யைந்தொழிலி னகப்படுத்துச் சுழல்விக்குங் காரணமூர்த்திவழி நிற்றலே யாமெனக்கொள்க.

சிவானந்தத்தை யனுபவித்தற் கேதுவா யிறைபணிநிற்கை தன்னிச்சைவழி நிற்றலேயா மாகலி னஃததனை நோக்கிச் சுதந்திரமே யாமென்பது. மலவாசனை யறுதல் மேலையதிகரணத்தாற்பெற்றமையின் ஈண்டஞ்ஞானமென்றது மாயையின் காரியமாகிய மயக்கவாசனையே யாமெனவும், சஞ்சிதந் தீக்கையாலும் பிராரத்த மனுபவத்தாலு மறுதலின் ஈண்டுக் கன்மமென்றது ஆகாமிய வாசனையே யாமெனவுங் கொள்க.

அஞ்ஞானகன்மம் உம்மைத்தொகை.

அற்றேல், அவனருளாலல்லதொன்றையுஞ் செய்யாத வழி அஞ்ஞானகன்மம் பிரவேசியாதவா றியாங்ஙனம்? பிற் செயாதனுபவிக்குமா றின்மையிற் பிராரத்த மனுபவிக்கும் வழி யாகாமிய மேறுத லொருதலையாமாலென்னு மாசங்கை யை நீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதா ரணம்.

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மரனுடைமை—யாமென்னி
லேத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன். எனவரும்.

செவிவாய் முதலிய விந்திரியங்கள் முதல்வனதுடை மையாகிய மாயேய மெனப்படுவனவன்றி ஆன்மாவாகிய யா மெனப்படுவனவல்ல, அவை தொழிற்படுதலும் முதல்வன் வயத்தினன்றி நம்வயத்தனவல்ல, அவ்விந்திரியங்கள் சத்தா தி வாக்காதிகளை விடயித்தற்கு வழியாகிய தனுகரணபுவன போகங்களும் அம்மாயேய மாவனவன்றி யாமாவனவல்ல, அவை சேட்டித்தலு முதல்வன் வயத்தினன்றி நம்வயத்தன வல்ல, அவற்றொடுகூடி நின்று வினைகளை யீட்டிநுகர்ந்துவரு கின்ற யாமும் ஞானக்கிரியைகளை முதல்விளக்கியவழி விளங் கியும் அல்லுழி விளங்காதும் இவ்வாறு முதல்வனை யின்றி யமையுமா றின்மையா னம்முதல்வன துடைமையாவே மல் லது சுதந்திர ராவேமல்லே மென் றிங்ஙனம் பசுபாசங்களி னியல்புகளை யுள்ளவாறுணர்ந்து செய்வனவெல்லா மவனரு ளின்வழி நின்றுசெய்யுஞ் செயலாய்க் கண்டுகொண்டிருப்ப ராயி னவ்விறைபணியாகிய வடிமைத்திற முடையா ரெவ்வு டம்பினின் றெவ்வினைகளைச் செய்யினு மவையவர்க்குப் பந்த மாகலில்லை யவ்வாகாமியவினையை யவினுபாவமாயுடன்கொ ண்டு வருவதாகிய பிராரத்தவினையுந் தன்னைக்கூட்டுவிக்கு முதல்வன் சந்நிதியின் உடலூழா யொழிவதன்றி யேனையோ ர்க்குப் போலவவர்க்காத லில்லையாகலானென்க.

ம்வழிபி னல்லவென்பதனை மேலுங் கூட்டுக;
தருவான் முன்றுமெனக் கூறிக்கொள்க.
ஆமென்பது சொல்லெச்சம்.

சஞ்சிதவினையாசாரியன் தீக்கைசெய்த மாத்திரையே யிற்சேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிதலின் ஈண்டு முற்செய்வினையென்றது பிராரத்தவினையே யெனக் கொள்க.

ஈறுகெட வழுவமைதி.

அற்றேல், இறைபணியார்க் குளதாகிய வினை அவரைச் சாராதில்லை. யுடனுழாயொழியுமாறும், ஏனையோர்க் குளதாகிய வினையுடனுழாய் வந்து வருத்துமாறும், இங்ஙனஞ்செய்யு மிறைவன் நடுவுநிலைமை யின்றிக் கோட்டமுடையனெனப்படுமா லென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்:

சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச்—சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு. எனவரும்,

நிம்பாலடைக்கலமெனச் சார்ந்தாரைக் காப்பதுதமரபினோர்க்குக் கடமையாகலான் முதல்வன் றன்னைச் சார்ந்தவரையே பாதுகாப்போனாகியும் அதுபற்றிக் கோட்டமுடையவ னல்லனாய்த் தன்னைச் சார்ந்து தன்னடிப்பணியினிற்கவல்ல வடியார், தானேயாய்நிற்குமாறு நிறுவி, அவர்க்குவருமாகாமியவினையைக் கெடுத்து அது செய்யவல்லாத பிறர்க்குவரு மாகாமியவினையை யவர்க்குக் கொடுப்பனாகலா னவ்விருதிறத்தோர்க்குளவாகிய நாலுகிவந்து பொருந்தும் பிராரத்தவினையு மவ்வாறே செய்வோர் செய்திக்குத்தக்க பயனு மிருவேறுவகைப்படச் செய்வனென்க.

சார்ந்தாரை யொழித்துச் சார்ந்தவரைக்காப்பது நடுவுநிலையன்றென்பாரை நோக்கி யவ்வாறு கொள்ளினும் அமை

தாண்டைக்குத் தலைமைக்குண மாவதன்றி யிழுக்கன்மையா னமையுமென்பார் சார்ந்தாரைக் காத்த றலைவர்கடனெனப் பழமொழி யெடுத்துக்காட்டி யுண்மையா னோக்கவல்லார்க்கு அது நடுவுநிலைமையே கோட்டமன்றென வறிவுறுத்துவார் சார்ந்தடியார் தாந்தானுச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தலென வேறுவமை யெடுத்துக்காட்டினார்.

சார்ந்தடியார் தாந்தானுச் செய்துபிறர் தங்கள் வினை தான் கொடுத்தலுண்டென்பதூஉம், அது நடுவு நிலைமையே கோட்டமன்றென்பதூஉ மேனைச்சமயத்தார்க்கு முடம்பா டாகலின் அஃதீண்டைக்குவமையாயிற்று.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

சார்ந்தவென்னும் பெயரெச்ச மீறுதிரிந்தது.

தான் முதல்வன்.

ஆதல் கொடுத்தலென்புழி ஆனுருபு விகாரத்தாற்றொக் கது.

ஆய் என்னும் வினையெச்சங் கொடுத்தலென்னுந் தொ ழிற்பெயரோடு முடிந்தது.

ஆய்ந்து நுணுகி "ஒய்தலாய்த னிழத்தல்சாஅ, யாவயி னான்கு முள்ளதனுணுக்க" மென்றார் தொல்காப்பியனாரும்.

ஆர் வினைத்தொகை.

பிராரத்தவினைசூக்குமவினையாகலி னது கூடுமுறைமை யறிதலரிதென்பார் ஆய்ந்தார் முன்செய் வினையுமென்றார்.

உம்மை யிறந்ததுதழீஇயிற்று.

ஆங்கு அதுபோல வென்க.

இதனானே மேலைவெண்பாவின் முற்செய்வினையுந் தரு வானென்றதுபற்றி ஆசங்கையை நீக்கியவாறு.

இறைபணியினிற்கும் ஞானிகட்கும் பிராரத்தவினை தா க்கலுண்டெனச் சிவாகமங்களி னுண்டாண்டோதுதலி னவற்

[illegible] முரணி யஃதவர்க்குத் தாக்காதென்ற லமையாமையி னது தாக்கும்வழி யாகாமியவினையு மேறு தொழியாதென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டி யுதாரணம்.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையோடு நில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
யாயவத னுணரு மச்சு.                    என வரும்.

தன்பால் வைத்தெடுக்கப்பட் டொழிந்த காயத்தின் கண்ணின்றும் அதன் வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாத்திரத்தி னவ்வாசமங்கிப்போய் மெலிதாய்க்கந்திக்குமாறுபோல நானவனென்றெண்ணிச் சிவோகம்பாவனை செய்தறியு ஞானிக்கு நாடோறு முண்டாதலு முண்மையினதுபற்றி யவன் மாட்டுப் பிராரத்தவினையு மதற்கிடனாகிய வுடம்பு முதலிய மாயேயமும் வாசனைமாத்திரையாய் மெலிதாய் வந்துதாக்கு மாயினு மவ்வழி யேறுவதாகிய வாகாமியவினை மேலைக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக்குப்பற்றுக் கோடாகிய மாயேயத்தினோடுங்கெட்டொழியும். அந்தஞானி பின்னர்ப் பசுத்துணர்வு மிறந்து ஏகனாகி யிறைபணி நின்றுஞ் சத்தாயுள்ள சிவமே யாகிய வாற்றால் ஒரோவழி யவ்வாதனை பற்றிப் பிறழினு மவ்வச்சினையே யுணர்ந்து நிற்பனாகலானென்க.

எனவே யொளி யிருளைத் துரக்குமாறுபோல வவ்வுணர்வு அவ்வாகாமியத்தைத் துரக்கு மென்பதாம்.

உளி ஐந்தாம் வேற்றுமை யுருபு. "மரபுளி வழா" வென்புழிப்போல.

முற்றுகரங்கெடுதல் இலேசாற்கொள்க.
உம்மை சிறப்பின்கண் வந்தது.
மற்று வினைமாற்று.

அவன் மேற்கூறிப்போந்த ஞானி.

தானென்பது அறிவாத முணர நின்றது.

பிறழுவிடாமைபற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ்செய்தார்.

இது இனவெதுகைத்தொடை.

இதனாற் கூறிப்போந்தது சிவாகமங்களி னுண்டாண்டு ஞானிகட்குப் பிராரத்தவினை தாக்குமென்றது இங்குளிவாங்குங் கலத்தைப்போல வாதனை மாத்திரையாய் மெலிதாய் வந்து தாக்குமென்னுந் துணையேயாகலின், அவ்வாறு வரும் பிராரத்தவாதனை நுகர்ச்சியினேறு மாகாமியவினை யவ்வுணர்வின் முன்னர்க் கெட்டொழிவதன்றிப் பிராரத்த நுகர்ச்சியினேறு மாகாமியம் போலப் பிறவிக்கு வித்தாய் நிலைபெறுவதில்லையென ஆசங்கை நீக்கியவாறுமென்க.

அற்றேல், வாதனைபற்றிப் பெயர்ந்துழியும் நிலையிற் றிரியாது அவ்வச்சினையே புணர்ந்து நிற்குமாறியாங்ஙன மென்னு மாசங்கையை யுவமை முகத்தா னீக்கியதனை வலியுறுத்தற் கெடுத்துக்காட்டுமுதாரணம்:

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்று
மவர்திற னீங்கா ரதற்கு. எனவரும்:

நண்ணனல் வேவாமைக்கேதுவாகிய வங்கித்தம்பனை வல்லாரவ்வனலிற் குளிப்பினுந்தந்திறலினீங்காதவாறு போலவும், பண்ணமர மாச்செலுத்துதற்குரிய பாகுநூல்கற்று வல்லாரப்பாய்மாவின் வேகத்துட் படினுந் தந்திறலி னீங்காத வாறு போலவும், ஐம்புலன்கடமக்கு வியாப்பியமா யடங்கத் தாமவற்றை வியாபித்து மேற்பட்டு நிற்கு முறைமையை யாராய்ந்து தாமரனடியாகிய விறைபணியினின் றுணரவல்

லோரவ்வைம்புலனிற் சென்று மதனுமேன தந்திறலி னீங்குத லிலரென்க.

நன்னனல் நன்னனலென மரீஇயிற்று, "நீனுலகெலா" மென்புழிப்போல.

நன்னனல் கீழ்நீர்போல முன்பின்னாகத் தொக்கவாறும் வேற்றுமைத்தொகை.

தம்மானன்னப்படு மனலென் றுரைப்பினு மமையும்.
பண் பண்ணப்படுங் கதிகள்.
செலுத்தல் உளர்தல்.
இன் உவமவுருபு.
உம்மை யெண்ணும்மை.
சென்றும் உம்மை சிறப்பு.
ஐம்புல னுபலக்கணம்.
திறல் வெற்றிப்பாடு.
அதற்கென்பது உருபுமயக்கம்.

அற்றேல், சத்தொடு சார்ந்தவழியு மசத்தொடுசார்ந்த வழியும் அதுவது வேயாய்ச் சதசத்தாமியல்புடையவான்மா க்களைம்புலனாகிய வசத்தைச் சார்ந்தும் அவர் திறம் நீங்காமை யாங்ஙனமென்னு மாசங்கையை நீக்கியதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
லிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கேரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு. ஞானாமிர்தம்.

சத்தொடு கூடியவழிச் சத்தாயும் அசத்தொடு கூடியவழி யசத்தாயும் இவ்வாறு சதசத்தாமியல்புடைய தன்று ண்மை புணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் றிருவருளா னல் லதொன்றையுங் காணானாயி னவ்வழிப் பாசமாகிய வசத்தி

னிதஞ் செய்த லின்மையாற் சத்தாகிய வம்முதல்வனைத் தலைப்படுவோர் சீற்றமிக் கெரியாநின்ற வொளியின் முன்னந் தகாரம்போல வச்சத்தினெதிர் தனதுசத்தியை யேற்கமாட்டாத அசத்தாகிய பாசத்தின் மாட்டெய்துவாரல்லரென்க.

வேறு முடிபாகலி னொருமைப் பன்மை மயக்கமன்மையுணர்க.

அருளினென்னு மைந்தாமுருபு ஏதுப்பொருட்கண் வந்தது.

இதமித்தலென்பது பெயரடியிற் பிறந்த வினைப்பெயர்.

இதஞ்செய்தல் பற்றுச்செய்தல்.

இன்றி இன்மையானென்க.

இன்மைக்கேதுக்கூறுவார் கதமிக் கெரிகதிரின் முன்னிருள்போ லேலாவசத்தென்றார்.

அசத்தைச்சார்ந்த சத்தாய் நிற்றலியற்கை யன்றென்பது "ஒன்று மிகினு மொளிகவரா தேனுள்ள,மென்று மகலாதிருள்" எனப்புடைநூலாசிரிய ரோதியவாற்றானுமறிக.

ஆங்கேலா வசத்தெனக் கூட்டுக.

ஒப்புமைபற்றிக் கதமிக் கெரிகதிரென்றார்.

ஒப்புமையாதல் "எல்லையில்லவ னெரிதுள்ளினலென வெகுண்டான்" என்பதனானுமறிக.

இவ்வைந்து வெண்பாவானு முறையேபிறைபணியினிற்பார்க்குப் பிராரத்தவினைமுதல்வன்சந்நிதியிலுடலூழாயொழிவதாகலின் மேலைக்குவினையேறுமாறில்லையென்றும், அது செய்வோர் செய்திப்பயன் விளையுமாற்றாற் பெறப்படுமென்றும் செய்வோர் செய்திப் பயனன்றியும் விளைவது வாதனைமாத்திரையே யாகலானதுபற்றி வரும்வினை ஞானத்தானழிவெய்து மென்றும், அந்த ஞானம் வாதனைபற்றிச் சலிக்குமாறில்லை யென்றும், அது சலியாமைக்கேது இஃதென்றுமெடுத்துக்காட்டியஞ்ஞான கன்மம் பிரவேசியாமையை வலியுறுத்தவாறு காண்க.

ஏகனாகி நிற்றலான் மலவாதனை யின்றாகலும், இறை பணி நிற்றலான் மாயாகன்மங்களின் வாதனையின்றாகலும் பெறப்பட்டமையின் மலமாயை தன்னொடு வல்வினை யின் றென்பதனை வேறோ ரதிகரணமாக வைத்தோதல் வேண்டா வாயிற்று.

அற்றாயினு மவையில்லாததன் கண்ணுளதாகிய வை ப்பாடு முதலாயின இறுதிச் சூத்திரத்தின் மும்மலங் கழீஇ யென்னுமதிகரணத்துட் பெறப்படும்.

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

சிவஞானபோதத்திற்குத் திருவாடுதுறைச் சிவஞான யோகிசெய்த சிவஞானபாடியத்தில் இரண்டாவதுண்மையதி காரத்துப் பயனியலில் முதற்பாதமாகிய விப்பத்தாஞ் சூத்தி ரம் முடிந்தது.

---

# பதினொராஞ் சூத்திரம்.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

எ-து சூ-ம். எ-னின். பரமேசுரனது சீபாதங்களை யடையுமா றுணர்த்துதனுதலிற்று. ஆன்மாவும் மேலைச்சூத் திரத்தி னிறைபணிவழுவாது நிற்க வென்றவழிச் சிவன் முதல்வனன்றி முதலில்லையென்றுந், சிவனுடைய தொன்மை சிவ கென்றுஞ் சிவனவனெதன் செயல்தாகின்றதென்றாய், நினைவிற்றைத் தன்செயலாக்கொள்ளா தவ்வாறு நிற்கும் ஆன்மாவினுடைய வறிவிச்சை செயல்க ளவ்விடத்தொன்றுமின் றிடப்பிக்குமா றில்வழிப் புத்தர் கூறு மாலயவிஞ்ஞானம் போ

லச் சூனியமாய் முடியுமாலென்னு மாசங்கையை நீக்கியவற்றிற்கு விடயமிது வென்பதுணர்த்துமுகத்தானே ஆன்மலாபமிரண்டினுள் முடிவாயெஞ்சி நின்று சிவப்பேறு கூடுமாறுணர்த்தி யதற்கேதுக்கூறுமுகத்தானே ஏகனாகியவ்வாறு நிற்புழிப் பெறப்படுஞ் சம்பந்த மிதுவென்பது காட்டி மேற்கூறிப் போந்த பாச நீக்கத்துட்பெறப்படா தெஞ்சிநின்ற பிராரத்த வாசனையினொழிபுங் கைமுதிய நியாயத்தானுணர்த்துதல்பயனோக்குளிரண்டாம் பாதமாகிய பதினொராஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

ஆசங்கை பற்றிய வினையானே யதிகரணவினையும் ஆன்மலாப மெனப்படும் பயனிரண்டனுள் பாசநீக்க முணர்த்திய பின்னர்ச் சிவப்பேறுணர்த்துதல் முறைமையாகலின் அம்முறைமை பற்றிய வினையானே யோத்தினையும், ஏகனாகியிறைபணி நிற்க வென்றவழி யவ்வாறு நிற்பித்தற்குரிய சம்பந்தமென்னை யெனவும், மலமாயை தன்னொடு வல்வினையின்றே யென்புழி வினையென்ற தேற்புழிக் கோடலான் ஆகாமிய வினையாகவே யேனைப் பிராரத்தவாசனை கழியுமாறியாங்ஙன மெனவும் அவாய் நிற்றலின் அவ்வவாய் நிலைபற்றிய வினையானே பாதவினையும் பெறப்பட்டன.

அற்றேல், ஏகனாகி யிறைபணிநின்றார்க்கு இனிச்செய்யக்கடவ தொன்றின்மையானு மிருணீக்கமு மொளி விளக்கமு முடனிகழ்ச்சியாமாறுபோலப் பசுத்துவ நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் இடை யீடின்றி யுடனிகழ்வனவாமாகலின் வேறோத வேண்டாமையானும், வடமொழிச் சிவஞானபோதத்துட் சுவானுபூதியாகிய சிவப்பேற்றைப் பத்தாஞ் சூத்திரத்துட் பாசநீக்கத்தோடொருங்கு வைத்தோதுதலானு மதனை யீண்டு வேறுவைத்தோதுத லமையுமா றென்னை யெனின்? அறியாது கூறினாய்; ஏகனாகி யிறைபணி நிற்பது துரியநிலை யெனப்படும் அருணிலையே யாகலின் ஆன்

டு மலநீங்கிய துணையானே சுகப்பிரபை மாத்திரையே விள ங்குவதன்றி யதீதநிலைக் கண்ணதாகிய சிவத்துவ விளக்க மெனப்படுஞ் சுகந்தோன்றாமையின் அது விளங்குதற் கவ னருளா லல்லதொன்றையுஞ் செய்யாமை மாத்திரையா னமையாமையின் வேறுமாண்டுச் செய்யக்கடவ துண்டெ ன்பது தானே போதருதலானும், இருணீக்கத்தி னொளி விளக்கம்போலப் பசுத்துவ நீக்கத்தின் அருள் விளக்க மாத்திரை யுடனிகழ்வதன்றி ஆனந்த விளக்க முடனிகழா மையானும, அருள் விளக்கத்திற்கு மானந்த விளக்கத்திற்குந் தம்முள் வேறுபாடு முன்னர்க் காட்டப்படுமாகலானும் வட மொழிப் பத்தாஞ் சூத்திரத்தின் பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்திய வழிப் பாசநீக்க மாத்திரையே முத்தியென்னுஞ் சமயத்தாரை மறுத்தற் பொருட்டுப் பாசநீக்கம் பெற்றோன் சுவானு பூதியுடைய னுவனெனப் பதினொராஞ் சூத்திரஞ் செய்தற்குத் தோற்றுவாயாந் துணையே செய்துகொண்டு சுவானுபூதி நிகழ்ச்சிக்க ணுதற்பாலன வெல்லாம் பதினொ ராஞ் சூத்திரத்தே கூறிப் போந்தமையின், ஒன்பதாஞ் சூத் திரத்தி லெடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பண்ணுமாறு பத் தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முடிவு பெற்றாற்போலப் பத்தாஞ் சூத்திரத்தி னெடுத்துக்கொண்ட சுவானுபூதிநிலை பதினொராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுத லென்பதின் மலைபாமைப் பொருட்டாசிரியர் சுவானுபூதிமா னுவனென்பதனையும் அரன்கழல் செலுமெனப்பதினொராஞ் சூத்திரத்திற் றானே யொருங்கு வைத்தோதினாராகலி னது மாறன்மையானு, மவற்றின் மொழிபெயர்த்தல் யாப்பானூல் செய்துரைப்பான் புகுந்த வாசிரியர் வேறுபடச் செய்துரை யா ராதலானுமென்பது.

இஃதறியாதார் பத்தாஞ் சூத்திரம் பாசக்ஷயம் பண் ணுமா றுணர்த்திற்றெனவும், பதினொராஞ் சூத்திரம் பரமே சுரனது சிபாதங்களை யடையுமா றுணர்த்திற்றெனவும் ஆசி

ரியர் தாமே கிளந்தெடுத் துரைத்த கருத்துரையு நோக்காது பத்தாஞ் சூத்திரத்தானே யதீதநிலையுங் கூறியொழிந்தா ரெனக்கொண்டு பதினொராஞ் சூத்திரம் பன்னிரண்டாஞ்சூத்திரம் போலச் சீவன்முத்தி நிலையினிகழு மணைந்தோர் தன்மையே கூறிற்றுமெனத் தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அது போலி யென்றொழிக.

வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்துச் சுவானுபூதிமானுவனென்பதனைப் பதினொராஞ் சூத்திரத்துப் பத்தி செய்கவென் றதன்பின்னாகக் கொண்டுகூட்டிவைத் துரைப்பதே யதன் கருத்தென்பது தெற்றென வுணர்ந்து கொள்க.

அஃதாண்டுக் கூறியவா றுணர்ந்து பத்திசெய்த வழியன்றிப் பெறப்படாமையின் அஃதாமாறு முன்னர்க் காட்டுதும்.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு. காட்டக் காண்பதாகிய கண்ணுக்குருவத்தைக் காணுமாறு பிரிப்பின்றி யுடங்கியைந்து நின்றதற்கதனைக் காட்டித் தான்காண்கின்ற வான்மாவைப்போல அறிவிக்க அறிவதாகிய வவ்வான்மாவிடயத்தை யறியுமாறு முதல்வன் பிரிப்பின்றி யுடங்கியைந்து நின்றதற் கதனை யறிவித்துத் தானறிந்து வருதலான் இவ்வா றத்துணையாய் நின்றுதவி செய்துவரும் பெருங்கருணையை மறவாது கடைப்பிடித்துச் செய்யு மன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தானுபூதியைத் தலைப்படுமென்றவாறு.

காணுமென்னு முவமையடையைப் பொருளினுங் கண்டென்னும் பொருள் வினையை யுவமையினுங் கூட்டிக் காணவென்பதனை யீரிடத்துங்கூட்டிக் கண்டுகாட்டலென்பதனை "வியர்த்து வெகுளார் விழுமியோர்" ரென்புழிப் போலக் காட்டிக் காண்டலென மாறிவைத் துரைத்துக்கொ

ள்க. அயராமைக்குச் செயப்படுபொருளதனையே யென்றெடுத்துக் கொண்டுரைக்க.

அயராவன்பு அயராமையானாகிய அன்பென "ஆறுசென்ற வியர்போல நின்றது.

இக்கருத்தேபற்றி "இத்தையாயுமறிவுடையனாயன்பு செய்ய" வென்றார் வழிநூலாசிரியரும்.

உள்ளத்தைஎன்ப துருபுமயக்கம்.

அறிவிச்சை செயல்களி னிகழ்ச்சியாகிய வயராமையும், அன்பும் அரன்கழல்சேறலு முறையே காரணகாரியங்களா யவ்வொருபொருண்மே லொருங்குநிகழுமென்பார் அயராவன்பினரன்கழல் செலுமேயென்றார்.

இஃதென் சொல்லியவாறோவெனின்? ஆன்மாவை யின்றியமையாத கண் ணொருருவத்தைக் காணுங்காலான்மபோதுங் கண்ணொளி யெனவேற்றுமை யின்றியுடனாய் விரவிநின்று கண்ணுக்குக்காட்டிய வுருவத்தைக் கண்கண்டதென்றும் கண்ணையதிட்டித்து நின்ற வான்மாக் கண்டதென்றும் பிரித்தறியப்படுமாறின்றி யிருவகைக் காட்சியுமொன்றனை யொன்றுவிடாம லத்துவிதமா யொருங்கே நிகழுமுறைமைபோல, முதல்வனை யின்றியமையாத வான்மா வொருவிடயத்தை யறியுங்காலு முதல்வனது சிற்சத்தி ஆன்ம சிற்சத்தியெனத்தானென வேறின்றியுடனாய் விரவிநிற்ப முதல்வனுமான்மாவி லவ்வாறு விரவிநின் றறிவித்த விடயத்தை யான்மா வறிந்ததென்றும் ஆன்மாவை யதிட்டித்துநின்ற தானறிந்தானென்றும் பிரித்தறியப்படுமா றின்றி யிருவகையறிவுமொன்றனை யொன்று விடாம லத்துவிதமாயொருங்கே விடயித்துச் செல்லுமாறு செய்துவரு மிவ்வுபகாரம்பெத்த முத்திரண்டினு மொரு பெற்றியாயுண்மையின் ஏனையவற்றையெல்லாங் கைவிட்டு முதல்வனிடத்தேதகனாகி யவனருளால்

லதொன்றையுஞ் செய்யானாய் நின்ற வான்மா முதல்வனவ்வா றத்துவிதமாயுடனின்று கருணையா னுபகரித்துவரு முரிமையை நோக்குந்தோறு நோக்குந்தொறும் அப்பொருளின்கட் செல்லுமிச்சையடங்காது மீதூர்தலி னவ்விச்சையே தானாக விளங்கித்தோன்றும் பேரானந்தத்தை யனுபவிக்கப் பெறுமென மேற்கூறிய வாசங்கையை நீக்கி யறிவிச்சை செயல்கண் மூன்று மிம்முறைமையானம்முதல்வனையொருங் கேவிடயித்து நிற்குமாறு விளக்கி யதீதநிலையி னியல்பு கூறிய வாறுமென்க.

இக்கருத்தேபற்றி "அறிவொளிபோற் பிறிவரு மத்துவித" மென்றார் புடைநூலாசிரியரும்.

அங்கியு மொன்றிற்றங்கிநின் றல்லது தன்றொழினடத்தா தாகலி னதுபோல முதல்வன் செய்யுந் தொழிலனைத்து மான்மாவினிடத்துத் தங்கிநின்றே செய்வனென்பதுணர்ந்து கொள்க.

இதனுள் காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போலென வே, அவ்விரண்டிற்குமுளதாகிய சம்பந்தமத்துவிதமென்பது பெறப்படுதலி னதுவே யவனே தானேயாகிய வந்நெறி யேகனாகி நிற்றற்கண் ணுளதாகிய சம்பந்தமென்பதூஉங் காட்டிக் காணுமெனவே, கைமுதிக நியாயத்தான் முதல்வனையே விடயிக்கும் ஞானிக ளுடம்பினிகழும் பிராரத்த முழுவது மவர்களிடமாய் நின்று முதல்வனே யேன்று கொள்வனாகலி னவருக்கவ்வாதனை தாக்குமாறில்லை யென்பதூஉம் பெறப்பட்டமையி னவாய்நிலையை நிரப்பியவாறு மறிக. அத்துவித மாத லிவ்வியல்பிற்றென்பது பொதுவதிகாரத்திறுதியில் விளங்கக்காட்டினாங் கடைப்பிடித்துக்கொள்க. இவ்வாறன்றிக் காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற்காண வுள்ளத்தைக் கண்டுகாட்டலென்பதற்குக் காட்டிவரு முபகார முணர்த்துதலே கருத்தென் றுரைப்பாருமுளர். அது 'விளம்பியவுள்

ளத்து' என்னுஞ்சூத்திரத்துத் திரோதானசத்தியதிலக்கணங் கூறுமுகத்தாற் கூறப்போந்தமையி னதுவே யீண்டுக்கூறிற் றெனிற் கூறியது கூறலாய் முடியுமாகலானும், ஆசிரியர் கண்ணொழித் தூரைப்புழியவனு மவற்றது விடயத்தை யுணருமெனக் காணுமுபகார மாத்திரையே யெடுத்துக்கொண்டுரைத்த வாசிரியர் கருத்தன்றென்பது தெற்றென விளங்குதலானுங், காணுமுபகாரங் காட்டுமுபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழு மென்ப துணர்ந்துகோடற் பொருட்டதுவு முடன் கூறப்பட்டதன்றி யதனு னீண்டைக் காவதோர் பயன் வேறின்மை யானும் அவருரைப்பனவெல்லாம் போலியென் றொழிக.

அற்றேல், வடமொழிப் பதினொராஞ் சூத்திரத்திற் காட்டுவனென்பது மாத்திரையேயன்றிக் காண்பனென்பது முடன்கூறிற் றில்லையாலெனின்? அறியாது கூறினுய்; ஆண்டுக் காட்டுவானு மென்ற வும்மை காண்பானுமாமென எதிரது தழீஇ நிற்றலிற் கூறுமை யாண்டையதென்க. அவ்வும்மைக்குப் பொருள்காணமாட்டாதார் பாடம் வேறுகக்கொண்டோதுப.

இதனுள் காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம்போல் காணவுளத்தைக் காட்டிக் காண்பதென்பதோ ரதிகரணம். அதனை யயராவன்பி னரன்கழல் செலுமே யென்பதோரதிகரணம். ஆக விரண்டதிகரணத்த திச்சூத்திரமென் றுணர்க.

அவற்று ளீசுர அவிகாரவாதி முதலியோரை மறுத்து ஆன்மா வொன்றனை விடயிக்குங்கால் முதல்வன் செய்யுமுபகாரங் கூறுமுகத்தானே அத்துவிதநிலை யுணர்த்துதற்கெழுந்தது முதலதிகரணம்.

---

## முதலதிகரணம்.

மே-ள். அவனுமவற்றது விடயத்தை யுணரு மெனவரும்.

அவன் முதல்வன்.

அவற்றது ஆன்மாக்களது; ஆறுவது அறிதற் கிழமைக் கண் வந்தது அன்னபிறவுமென்றதனாற் கொள்க.

உம்மையான்மா வுணர்தலேயன்றி முதல்வனதனை யுணருமென இறந்ததுதழீஇயிற்று.

விடயம் பெத்தத்திற் பிரவஞ்சமும் முத்தியிற் சிவமுமாம்.

ஆகவே முதல்வன் றன்னையறிதலும் ஆன்மாவின்பொருட்டு ஆன்மாவிற்றங்கிநின் றறியுமென்பதாயிற்று.

அற்றேல், கண் சடமாகலானுங் காண்டற்பய னான்மாவுக்கே யாகலானுங், கண்காண்புழி யான்மாவுமுடனின்று காண்டல் பெறுதும். கண்போ லான்மாச் சடமன்மையானும், அறிதற்பயனான்மாவுக்கேயன்றி முதல்வனுக்கின்மையானும், முதல்வனு மவற்றது விடயத்தை யுடனின் றறியுமென்றற்குப் பிரமாண மின்றாலென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்தவேது.

ஈண்டிவ் வான்மாக்களவனை யின்றியமைந்தொன்றையும் விடயியாவாகலான் எனவரும்.

இ-ள். கண்ணொளிக்கு விளக்கொளி தன்னொடுங் கலந்து தன்னொடுகூட உருவத்தினுங்கலந்தாலன்றி அவ்வுருவத்தைக் காணுமுறைமையின்மையின் அதுபோல அறிவித்தாலன்றி அறியுமியல்பில்லாத ஆன்மாக்களும் முதல்வனதுணர்வு தம்மொடு விரவிநின்று தம்மொடுகூடச்சென்று விடயத்தும் விரவிநின்றா லறிவுவிளங்கி யவ்விடயத்தை அறியுமியல்பினவன்றித் தனித்தமையவுமாட்டா, தனித்தொன்றை விடயிக்கவு மாட்டாவாகலான் அறிவுவிளங்குதன் மாத்திரைக்கேயன்றி விடயத்திற் சென்று பற்றுதற்கண்ணு முதல்வனுடனிற்றல் பெறப்படுதலான் ஈண்டவனுமவற்றது விடயத்தை யுணருமென மேற்கொண்டதென்றவாறு.

அமைந்து விடயியா என்பது "உரந்துந்தரியா" தென்றாற்போல வேறுவினையாய் நின்றமையின் இன்றியென்ப திரிடத்துங் கூட்டியுரைக்கப்பட்டது.

அவனை யின்றியமையாமையிற் காட்டுமுபகாரம் விளங்கினாற்போல அவனை யின்றி ஒன்றையும் விடயித்தலின்மையாற் காணுமுபகார மினிது விளங்குமென்பார் அவனை யின்றியமைந்தொன்றையும் விடயியாவென்றார்.

உம்மை முற்றும்மை.

விடயியாவென்றது பெயரடியிற் பிறந்த வெதிர்மறை வினை.

இவ்வேதுப்பொருளையே யெடுத்துக்கொண்டு வழிநூலாசிரியர் "எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றையறிந் தியற்றிடா வுயிர்களீசன் றானுஞ், செவ்வியினு ளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்துநிற்ப, னிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்ற நிவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு, மவ்வுயிர்போ னின்றிடுவ னாத லானு மரனடியை யகன்று நிற்ப தெங்கே யாமே"யென விரித்தோதியவாறு பற்றியுணர்ந்துகொள்க.

இதனுளெவ்விடத்து மென்றது பெத்த முத்தி யிரண்டினு மென்றவாறு.

அரனடியை யகன்றுநிற்ப தென்றது அரனடியை விட்டுத் தனித்துநின்றறிவ தெங்கே யோரிடத்துமில்லை யென்றவாறு.

"இறையடியையின்றி யமைந்தொன்றை யியற்றிடா வுயிர்க"ளெனவும், ஈசன்றா னெங்குமாய்ச் செறிந்து நிற்பனெனவுங் கூறியது விடயத்தின்கட்படு நிகழ்ச்சிக்கெனவும், இவ்வுயிர்கடோற்றும்போ தவனையின்றித் தோற்றவெனவும் அவ்வுயிர்போ னின்றிடுவனெனவுங் கூறியது ஆன்மா

வின்கட்படு நிகழ்ச்சிக்கெனவுங் கொள்க. அவ்வாறுகொள்ளாக்கால் இருகாற்கூறுதல் புனருத்தியாய் முடியுமென்றொழிக.

விளக்கொளி கலந்த விரிடத்தும் வேண்டப்படுமென்பது "விளக்கொளிகலந்தவற்றை" யெனவும், "விளக்கின்சோதிகலந்திடு" மெனவும் புடைநூலாசிரியர் வகுத்தோதியவாற்றானு மறிக.

அற்றே, லக்ஷணமாக பரமுத்தியிலான்மாவுக்கு விடயமாவ தொன்றின்மையின் எவ்விடத்து மவற்றறு விடயத்தை முதல்வனுணருமென்றல் செல்லாதாலெனின்? அறியாது கூறினாய்; "சுத்தவனுபோகத்தைத் துய்த்தலனு"வெனவும், "ஒன்றிநின்றுணரு முண்மை" யெனவும் பிறாண்டுமிவ்வாறே யோதுதலின் ஆன்மாப் பரமுத்தியிற் சிவானந்தானுபூதியை விடயித்த லுண்மையா னதுவுமுதல்வனை யின்றியமையாமையின் முதல்வனு மவ்வனுபூதியை யவ்வான்மாவிற் றங்கிநின்றுணர்தலுண்மையின்.

இக்கருத்தேபற்றியன்றே சிலவாகமங்களின் முதல்வனுந் தன்னானந்தத்தைத் தானனுபவிப்பனென் றோதியதூஉமென்க. ஆண்டனுபவிப்ப னென்பதற்குத் தாற்பரியமறிவனென்பதேயாம். அக்கருத்தறியாத சிவாத்துவித சைவர்முதலியோர் முதல்வனுந் தன்னானந்தத்தை யனுபவிப்பனெனக் கூறுப. அழுந்தி யறிதலே யனுபவித்த லென்னுஞ்சொற்குப் பொருளாகலின் அவ்வியல்பு ஆன்மாவுக்கேயன்றிமுதல்வனுக் கில்லையென மேற்காட்டிப் போந்தமையானும், ஆனந்தரூபமே முதல்வ னாகலிற் றனே தன்னைப்புதிதாக அனுபவித்தல் வேண்டாமையானும், முதல்வன்செய்யுஞ் செயலெல்லாந் தன்பொருட்டன்றி யான்மாவின் பொருட்டே யாமென்பது மேற்கூறிப் போந்தமையானும், அவர் மதம்போலியென்றொழிக.

அற்றேல், முதல்வன்காட்டுதன் மாத்திரையா னமையுமாயி னன்றே காந்தங்கண்ட பசாசத் தவையென்றவாறே விகாரமெய்தாமை பெறுதும்; அவ்வளவினன்றி ஆன்மாக்களுடனின்றவற்றோ டொப்பக் காண்டலுஞ் செய்யுமாயின் ஆன்மாக்கள்போலக் கட்டுற்று விகாரியாவான்சேற லொருதலையாமா லென்னு மாசங்கையை நீக்கி யேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

ஐந்தையு மோக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாகலா—லைந்தினையு
மோன்றோ ருப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மோ . ரேன்றுப் பார்க்கு முணர்ந்து. எனவரும்.

ஆன்மாச் சுவையொளி யூறோசைநாற்றமென்னு மைவகை விடயங்களை யுணரு முணர்ச்சிக்கண்ணே தன்னியல்பிறுவென வேறு காணப்படுமாறின்றி யவ்விடயங்களே போலவை தானுவாய்ச் செறிந்து நின்றறியு மியல்பிற்றாகலா னவ்வைந்து மொருங்கேபற்றியமாட்டா தொரோரோவொன்றாக வறிந்தனுபவிப்பது ஆன்மாவேயாம். அதுபோலச் சதசத்தாய்ப் பலதன்மைப்படு மியல்பின்றி யென்றுமொரு பெற்றித்தாகிய பரம்பொருள் எல்லாவான்மாக்களுடைய விடயங்களையும் ஏகமா யொருங்கே பொதுவகையானறிந் தவ்வான்மாக்களுடனின்று சிறப்புவகையானறியு மாகலான் உடனின்றறிதலே பற்றி யான்மாப்போலப் பரம்பொருள் விகாரியாவான் சேறலின்றென்க.

ஆகலான் உடனின்றறிதலே பற்றி ஆன்மாப் போலப் பரம்பொருள் விகாரியாவான் சேறலின்று என்பதுகுறிப்பெச்சம்.

இது சொற்பொருட்பின் வருநிலை.

உணராதுணரு மென வினையும்,

அவற்றுணர்வ தெனச் சாரியை யுள் வழித் தன்னுருபு நிலையாது வந்தது இலேசாற் கொள்க.

உணர்வ தென்றது தொழிற்பெயர் மாத்திரையாய் நின்றது "உறங்குவது போலு" மென்றாற் போல.

வினை செய்யிடத்தின் வருமேழாவது விரித்துரைக்க.

அற்றே, லீண்டுக்கூறிய முறைபற்றி யான்மாக்களுக்கு விடயமாவதொன்றனேபே முதல்வன் சவிகற்பமா யுணர்வ னன்றி யேனையவற்றை யவ்வாறுணர்வானல்ல னெனின், மேலிறைபணி யதிகரணத்தின் முற்செய்வினையுந் தருவான் முன்னென்றது சாலாதாய் முடியுமன்றிச் சீவன் முத்த ருக்குப் பிராரத்த வினை தாக்காதுடலூழா யொழிபு மென வும், ஒரோவழித் தாக்கினும் வாதனையாய் நொய்தின் வந்து தாக்குதல் மாத்திரையே யாமெனவுங் கூறுதலி னதுதரு வான் முன்னாகற் கோரியை பில்லைபாலென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டு முதாரணம்.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினுனேகமா
யுள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணுனோ வுற்று. ——— எனவரும்.

முதல்வன் றிருவடிகளின் நானென வொன்றில்லென்று தானேயென ஏகமாகி நின்றுகொண்டே பிராரத்த வினைக் கீடாக வரும் விடயத்தை யுணர்வாராயினதுதா னச் சீவன் முத்தர்க்கு வினைப்பயனாதலின்றிச் சிவபோகமாய் விளை கின்ற பொலிவானே அவ்வாறுணர்வாராலுணரப்படும் விட யத்தை யவ்வுணர்வி னிடத்தாற் பொருந்தி யறிந்து தனக் காக்கிக்கொள்ளான் கொல்லோ பெத்த முத்தியிரண்டினு மத் துவிதமா யவ்வறிவின்க ணிங்காதுடனின் றுணர்த்தியு முண ர்ந்தும் வரு மம்முதல்வனென்க,

ஏகமாயுள்ளத்தின் கண்ணானான் உள்குவாருள்கிற்றை யுள்ளத்தா னுற்றுக் காணானோ வென்னு மிசை யெச்சத்தா லிவ்வாறுரைக்கப்பட்டது.

நில்லாதுணர்தலைப் பிரித்தமையினேகாரம் பிரிநிலைக் கண் வந்தது.

இணையடிகளென்புழிக் கண்ணுருபு தொக்கது. "ஐயுங்கண்ணு மல்லாப்பொருள்வயின், மெய்யுருபு தொகா விறுதியான" வென்பவாகலின். உணரவென்னுஞ் செயவெனெச்சம் மழை பெய்யக்குளநிறையு மென்புழிப்போலக் காரணப் பொருட்டாய் நின்றது.

தெளிவுபற்றி விளைந்ததென விறந்தகாலத்தாற்கூறினார். விளைந்த பொற்பினையெனன்றமையிற் போகஞ் சிவபோகமாதல் பெற்றாம்.

"செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல், ஆக்கந் தானே காரணமுதற்றே" என்பவாகலி னாக்கமுங் காரணமு மடுத்து வந்தது.

ஆனாமை நீங்காமை.

ஓகாரம் எதிர்மறை.

இஃதிவ்வதிகரணப் பொருள்பற்றி முற்செய் வினையுந் தருவான் முன்னென மேற்கூறிப் போந்ததன்கண் ஐயநிகழாமைப்பொருட் டதனை வலியுறுத்துதற்கெழுந்த தென்க. இணையடிகளின் வினைகளாய்நின்ற கன்மபோகந்தான் பொருளையந்தக்கருத்தினாற் காண்பார்க் கதுசிவபோகமாய் விளையுமென்பது, "பெற்ற சிற்றின்பமே பேரின்பமாய்" எ-ம், உடம்படுமெய்போகிகட் கேற்ற சிற்றின்ப, மடங்கத்தகும் பேரின்பத் தாக்கி" எ-ம், "காணுங்கரணங்களெல்லாம் பேரின்பமெனப் பேணுமடியார்" எ-ம் பிறாண்டு மிவ்வாறே போதியவாற்றா லுணர்க.

இனி இவ்வெண்பாவிற்கு ஒன்றெனப்படு மான்மா வக்
மாய்நின் றிணையடிகளை யுணரவே, போகமாய் விளைந்த பொ
ற்பை யுடையான் அதுவேயுமன்றி ஆன்மாவுக்குக் கண்ணெ
னப்படு மறிவுமாயினு னாகலான் அம்முதல்வன் உள்குவாருள்
கிற்றை யுள்ளத்தாற் காணுமேனுவென் றுரைப்பாருமுளர்.
அஃததிகரணத் தெடுத்துக்கொண்ட பொருளோடியையாது
வெற்றெனத்தொடுத்தலாய் முடியுமென்பதுணர்ந்துகொள்க.

இவ்வதிகரணத்தாற் போந்தபொருள் அவ்வதானேயா
யென முதல்வன் றாலவைந்தொழில் செய்யுமா றுணர்த்து
முகத்தானும், தாந்தம் முணர்வின்றமியருளென அதி சூக்
கும வைந்தொழில் செய்யுமாறுணர்த்து முகத்தானும், பொ
துவகையாற் பெறப்பட்ட வத்துவிதநிலையை அவ்வதிசூக்கும
வைந்தொழிற்கட்படும் விசேடத்தின் மேலிட்டுச் சிறப்புவ
கையாற் பெறுவிக்கு முகத்தானே பெத்த முத்தியிரண்டினும்
ஆன்மாக்களுக்குவரும் பயனை முதல்வனே யுடனாய்நின் றே
ன்றுகொண்டு அவரவர் செய்யுஞ் செய்திக்குப் பயன் விளை
த்து நிற்பனென்பது விளக்கியவாறுமென்க.

இஃதாசிரியர் தாமே வருகின்ற வதிகரணத்தின் விளக்
குகின்ற வாறுபற்றியு முணர்ந்துகொள்க.

எனவே பெத்தர்க்கு வரும்பயனு முடனாய்நின்றேன்று
கொள்ளு முதல்வன்.

உடல் பொருளாவி முழுவதும் அவனுடைமை யெனக்
கொண்டு தானஞ்செய் தொழித்துப் பரமே பார்த்திருப்ப
ரன்றிப் பதார்த்தங்கள் பாராராகிய சிவன்முத்த ருடம்பு
கொண்ட வினைப்பயன் ஒருவாற்றானு மவர்க்குத் தமதாதல்
செல்லாமையி னெவ்வாற்றானு முதல்வனதே யாமென்பது
கூறுமையே விளங்குமென மேற்பெறப்படாதெஞ்சி நின்ற
பிராரத்தவினைத்தொடர்பவர்க்கு இன்றுமாறு கைமுதிக நியா
யத்தால் விளங்கியதூஉ மாயிற்று.

பெத்தர்க்கு வரும் வினைப்பயனும் முதல்வனே யுடனாய் நின் றேன்றுகொள்வ னாகலா னன்றே "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யங்கே, மாதொரு பாகனார் தாம் வருவர்" எ-ம், அங்ஙுநாஞ் செய்யுஞ் செய்திக்காணவைப்பா லளிப்பன் எ-ம், "அறிவாயறிகின்றானே" எ-ம் இவ்வாறோதி யதூஉம் உலகத்து ளொன்றனை யீவாரு மேற்பாருஞ் சிவார்ப்பண மெனக் கருதாத வழிக்குற்றமென் றாகமங்கள்கூறி யதூஉ மென்க.

முதலதிகரணம் முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

—:*:—

முதலதி கரணத்தின் எனைச்சமயத்தாரை யெல்லாம் மறுத்துச் சித்தாந்த முத்தியை நிலைபெறுத்துஞ் சுத்தாத்து விக நிலையை யுணர்த்தியவழி யதனல்தனைப்பெறுமா றியாங்ஙன மென்னு மவாய் நிலையை நிரப்பி ஆன்மலாப மிரண்டானு ளெஞ்சிநின்ற சிவப்பேறு கூடுமா றுணர்த்துதற் கெழுந்தது இரண்டாமதி கரணம்.

இனிப் பத்தியினான் மறவாதேத்த வவனது சீபாதத்தை யணையும் எனவரும்.

இ-ள். சூத்திரத்தி னுரைத்தவாறு பற்றிக் கண்டு கொள்க.

அறிவிச்சை செயல்கண் மூன்றும் ஒருங்கே யுடனாய் நிகழு மியல்பின்கண் ணெவ்வா றுரைப்பினு மமையுமாயினு முதற்க ணிகழு முறைமையே யீண்டெடுத்துக் கோடலின் அதற்கேற்பச் சூத்திரத்து ளுரைத்தவாறே யீண்டும் மறவாது பத்தியினா லேத்த வென் றுரைத்தலே கருத்தாகக் கொள்க.

எத்துத லீண்டு அருள்வழி நிற்றன் மேற்று.

அன்பு பத்தி காதல் என்பன இச்சை மீதூர்தற்பொருள வாகலி னது பரமுத்தியினு முண்டென்ப துணராதார், பத்தியாவது சீவன்முத்தநிலைக்கே செய்யப்படு மொரு சாதகம் போலுமென மயங்கிக் கொண்டு தமக்கு வேண்டிய வாறே யுரைப்ப.

பரமுத்திநிலைக்கண் ணிச்சை நிகழாதவழிச்சிவபோக மநுபவ மாதல் செல்லாமையானும், சீவன்முத்தி நிலைக்கே கூறுவ தொன்றுபிற் செம்மலர் நோன்றா ளென்று சூத்திரத்தொருங்கு வைத்தோதவே யமையுமாகலிற் சூத்திரம் வேறு செய்ய வேண்டாமையி னஃதாசிரியர் கருத்தன்மை யானும் அது பொருந்தாமை யறிக.

அற்றேல், ஒருபொருளை யறிந்த மாத்திரையே யதன்கணிச்சை நிகழுமாறு போல இச்சை நிகழ்ந்த மாத்திரையே யதனைப் பெறுதலுங் கூடுமென்ப துலகத்தின்மையால் ஈண்டு பத்தி மாத்திரையாற் சீபாதத்தை யணையப் பெறுமாறியாங்ஙன மென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்குக் கண்டுகாட்டலினென மேலையதி கரணத்திற் கூறிய பேபாந்ததன் றுற்பரியம் விளக்குவா னெழுந்த வேது.

அவனன்னிய மின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான். எனவரும்.

இ-ள் அம்முதல்வன் உலகத்தார் போலன்றிப் பெத்தமுத்தி யிரண்டினும் அத்துவிதமா யுடனின்று கொண்டு யாரெவர் யாது செய்கின்றா ரென்றறிந் தவரவர்க் கவ்வச் செய்திக்கேற்றக்க பயனை அவ்வப் பொழுதே விளைவிப் பதனால் இனிப்பத்தியி னுன் மறவாதேத்த வவனது சீபாதத்தை யணையுமென மேற்கொண்ட தென்றவாறு.

அற்றேல், முதல்வன் பெத்த முத்தி யிரண்டினுந் திரிபின்றி யொரு பெற்றித்தாகிய வத்துவிதமாய் நின் றுபகரி

ப்பனுயின் யாதானு மொரு வாற்றாற் பசுபாசம் போலப் பெத்த நிலையினு முதல்வன் புலனுதல் வேண்டுமா லென்னு மாசங்கையை நீக்கியேதுவை வலியுறுத்து முகத்தானே யப்பாரமை யெனப்படு மறிவு விளங்கு முறைமை யுணர்த்துதற் கெடுத்துக் காட்டு முதாரணம்.

> அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணுர்க்
> கிருட்கண்ணே பாசத்தார்க் கீச—னருட்கண்ணுற்
> பாசத்தை நீக்கிப் பகலலர்த்துந் தாமரைபோ
> னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர். —— எனவரும்.

படலவிசேடத்தானொளிமழுங்கிய கண்ணிடத்து, மதுநீங்கி யொளிவிளங்கிய கண்ணிடத்தும் வேற்றுமையின்றி யாதித்தன் சமமாய் நின்றாலும் அவ்வாதித்த னொளிமழுங்கிக் காட்சியில்லாத கண்ணுக்கு மாலையிருட்டாய்த் தோன்றுவ னன்றி ஒளிவிளங்கிய கண்ணுக்குத் தோன்றுமாறுபோல விளங்கித் தோன்று னதுபோல முதல்வன் பெத்தர்மாட்டும் முத்தர்மாட்டும் அத்துவிதமா யொப்பநின்றாலும் பாசத்தாராகிய வேகதேச வறிவுடைய பெத்தர்க்குப் பாசஞானமேயாய்த் தோன்றுவன் அப்பாசப் பிணிப்புக்கேதுவாகிய அபக்குவ நீங்கித் தனது திருவருட் பார்வையாற் பத்திசெய்து தன்னையறிதற்குரிய பக்குவமுடையா ராயினுர்க்குப் பாசத்தாராகிய வவ்வேகதேச வறிவை மாற்றிப் பூரணவறிவு விரியச் செய்தவ ரெதிரே விளங்கித் தோன்றுவன்; தனது கிரணத் தீண்டிப் பக்குவ மெய்திய தாமரை மலருக்கு முன்னுள தாகிய கூம்புதலைமாற்றி ஆயிரமிதழ மலரச்செய்யும் ஆயிரங் கதிர்ப் பரிதிபோல வென்க.

பொருள்வினையை யுவமையினும் உவமவினையைப் பொருளினுங் கூட்டி யுரைக்க;

ஏகாரம் பிரிநிலை; தேற்றமெனினு மமையும்.

அல்லும் காணுரும் பாசமும் பகலும் ஆகுபெயர்.

தன்னுணர்ந்தாரெனக் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார்.

தோன்றுவனென்பது சொல்லெச்சம்.

இதனுனே முதல்வன்பெத்த முத்தியிரண்டினு மொப்பநிற்பினும் ஒப்பவிளங்காமை யுவமைமேல் வைத்துணர்த்து முகத்தானே யான்மாவுக்கு முத்திநிலையி னறிவு நிகழுமாயினும் அது முதல்வன தறிவாகிய வருட்கண்ணே யின்றியமையாமையுங் கூறப்பட்டன.

இனி இவ்வாறு பக்குவப்படுத்திப் பாசத்தை நீக்கி யறிவை யலர்த்துவதாகிய வருட்கண் புதுவதா யொருகாலத்தினிகழ்ந் தொழிவதன்றென அதனதுபகார முணர்த்து முகத்தானே அன்பெனப்படு மிச்சை விளங்குமுறைமை கூறுதற்கெடுத்துக்காட்டு முதாரணம்.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து—தன்னில்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றன், எனவரும்.

கண்ணின்க ணிலைபெற்றுளதாகிய விருளைப் பிறைமதியுடனுய்நின்று முறைமுறையா னுந்தித் தள்ளியவாறுபோல ஆன்மாவைத் தனது திருவடிக்கண் சேர்த்துக் கோடற்குளதாகிய விச்சை மிகுதியா னவ்வான்மாவின்கண் ணநாதிமுதலத்துவிதமாய் நிலைபெறு முதல்வன்றானே அவ்வான்மாவின் கணிலைபெற்ற ஆணவமலத்தை யுந்தித் தள்ளிக் காந்தக்கல்லிரும்பைத் தன்க ணீர்த்துக்கொண்டு தன்வசமாய்ப் பற்றச் செய்தல்போலத் தனது திருவடிக்கட் சேர்த்துத் தன்வசமாய்ப் பற்றிக்கொண்டு நிற்கும்படி பண்ணுத லவனுக்கொரு ஞான்றுஞ் சலித்தொழிதலில்லை. அவ்வாறு சலியாது செய்யுமாயினு மதனல் விகாரியாவா னல்லன். எல்லாத் தொழி

ஆ, தனது சந்நிதிக்கட் சத்திசங்கற்ப மாத்திரையாய்ப்பார மின்றி விளையாட்டுப்போலச் செய்பு மம்முதல்வனென்க.

மதியென்றது, ஈண்டுப் பூர்வபக்கத்துச்சந்திரனை. "அந் த வந்தனனக்கிங் காதாரமா யல்லி, விந்துவென வேறிடத் திட்டு" என்பது மது.

ஏகாரம், மலத்தைத் துரத்துதற்குக் காரணம் அவ்வன் பெனப்படு மிச்சையேயன்றிப் பிறிதில்லை யென்பதுணர்த்தி நிற்றலின் பிரிநிலைக்கண் வந்தது.

வான்பான் பாக் கென்பன தொழிற்பெயர் விகுதியுமா மென்பது "கரப்பாக் கறிந்"தென்பதனு னுணர்க.

உவம்வுருபு விரித்துரைக்க.

செய்வானது சலிப்பின்மை செய்லகமே லேற்றப்பட் டது.

சலிப்பிலென்றதுபற்றி அங்ஙன நிகழ்வதாகிய வாசங் கையை நீக்குதற்கு விகாரியலனென்பதும் உடனேதினர்.

தானென்னு மெழுவா யிசையெச்சமாகலி னவ்வாறுரை க்கப்பட்டது.

வசமாதல் பற்றிவிடாமை.

இதனுனே முத்திநிலைபி ஞன்மாவின தன்பு நிகழுமா றும், அது முதல்வனது அன்பை யின்றியமையாமையுங் கூ றப்பட்டன. இனி யவ்வாறு வசமாதற்கட்படு மாசங்கை யை நீக்குமுகத்தானே சேறலெனப்படு மான்மாவினது கிரி யை நிகழு முறைமை யுணர்த்தி யதனை வலியுறுத்துதற் கெ டுத்துக்காட்டு முதாரணம்.

நசித்தோன்றி னுள்ள நசித்தலா லொன்று
நசித்திலதே லொன்றுவ தில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்று மீசன் கழல். ——— எனவரும்.

மேலைவெண்பாக்க ளிரண்டினுங் கூறியவாறே பூரண வறிவு விளங்கி ஆன்மா முதல்வன் வசமா யொன்றுபட்டுக் கூடுங்காற் பண்டை யேகதேசவறிவு கெட்டுக்கூடுமோ கெடாது கூடுமோ வெனக்கடாயினார்க்கு கெட்டுக்கூடுமெனின் குணங்கெடவே குணியுங் கெடுதலாற் கூடமாட்டாது, கெடாது கூடுமெனிலேகதேச வறிவுகெடாதவழி வியாபகப் பொருள் விளங்குத லின்மையாற் கூடுமாறில்லை, மற்றெங்ஙனங்கூடுமாறெனில் ஏகதேசவறிவைச் செய்யு மாணவங் கன்ம மாயை யென்னு மலங்கண் மாத்திரையே கெட்டொழிய ஆன்மாத் தண்ணீரைச்சேர்ந்த வுப்புப்போல முதல்வன்றிருவடியைத் தலைப்பட்டு முதல்வனுக்குச் சேடமாம்; முதல்வன்றிருவடி யவ்வான்மாவை விட்டுக் கவர்த்தலின்றி யியைந்து நிற்கு மாகலானென்க.

ஒன்றாது என்னுந்துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது.

நசித்தணைந்தென்பது காரணகாரியப் பொருட்டாய்ப் பிறவினை கோடலிற் செயவெனெச்சத் திரிபாதலறிக.

"சிற்றறிவு முற்சிதையிற் சேர்வாரின் றுஞ்சிறிது, மற்றதனி னிற்கிலருண் மன்னுதாம்" எனப்புடைநூலாசிரியர் வினயதுமிது.

தன்கண்ணதாகிய கடினகுணநீங்கி அப்பினைச்சேர்ந்தொன்றாகிய வுப்பு ஆன்மா மல நசித்து முதல்வனைச் சேர்ந்தொன்றுபடுதன் மாத்திரைக் குவமையாயிற்று.

யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கும் அஃததற்குச் சேடமெனப்படுமாகலி னவனருளாலல்ல தொன்றையுஞ் செய்யானாய்க் கப்பின்றி யியைந்துநிற்கு மீசன் கழலையே யறிந்திச்சித் தனுபவித்தலாகிய முதல்வனது வழிபாட்டின் பொருட்டுரிமை யெய்திய வான்மா முதல்வனுக்குச் சேடமாகியவாறுணர்க.

'அவையுடைமை யாளனுமங்'கென வோதுதலின் எனப்பசுபாசங்களு முதல்வனுக்குச் சேடமேயாமாயினும், அவை பொதுவியல்புபற்றிய சேடமாவதல்லது சிறப்பியல்புபற்றிய சேடமாகாமையி னிதனை வேறெடுத்தோதினார்.

இங்ஙனமே முத்திநிலையி லான்மாவினது கிரியை நிகழுமாறும், அது முதல்வனது கிரியையையின்றி யமையாமையுங் கூறப்பட்டன. நித்தமாகிய மலத்திற்கு நாசமாமாறும், அது நசித்தவழி யேகதேசமாய் விளங்கிய வறிவே பூரணமாய் விளங்கி வியாபகத்தைத் தலைப்படுமாறும் உவமையின் மேல் வைத்தினிது விளக்கி மேலதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

பொன்வான்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து. — எனவரும்.

ஆதித்தன் முன்புமுகிற்படலத்துண் மறைந்து தனதொளி சங்கோசமாய்ச் சிறிதே விளங்கிப் பின்பு அம்முகிற்படலத்தை வாயுத்துரப்ப அதனானது சத்திமடங்கிவிட்டு நீங்கியவழி அவ்வொளிதானே யெங்கணும் விகாசமாய் விளங்கு முறைமைபோல ஆன்மாவும் முன்பு மலத்தின் மறைப்புண்டு தன்னறிவேகதேசமாய்ச் சிறிதே விளங்கிப் பிரவஞ்சவிடயத்தை யறிந்ததிலழுந்தும், பின்பு முதல்வன் றிருவருளம்மலசத்தியைக் கெடுத்தடக்கியவழி அவ்வறிவே பூரணமாய் விளங்கிக் கப்பின்றி யம்முதல்வன் றிருவடியைத் தலைப்பட்டந்தநேயத்திலழுந்துமென்க.

ஒடுங்கி எ-ம், எங்குமாய் எ-ம் உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டியுரைத்துக் கொள்க.

இது விளங்குதன் மாத்திரைக் கேகதேசவுவமை யென்

பார் உலகையுண்ணும் வரத்துச்செல்லும் எனவேற்றுமையுமுட்டன் கூறினர்.

ஏகாரந் தேற்றம்.
முன்வா ளென்புழிவாள் ஆகுபெயர்.
இரித்தென்பது செயவெனெச்சத்திரிபு.
இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

மலநசித்தலாவது: தனது மறைக்கற் சத்திமடங்கிக் கீழ்ப்படுதன் மாத்திரையே பிறிதன்றென்பதூஉம் உவமையாற் பெறுதும்.

சிவஞானபோதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞானயோகிசெய்த சிவஞானபாடியத்தி லிரண்டாவதுண்மையதிகாரத்திற் பபனேந்து லிரண்டாம் பாதமாகிய விப்பதினொராஞ் சூத்திரம் முடிந்தது.

---

## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

எ-து சூ-ம் எ-னின். அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுய்க்கண்டு வழிபடுமாறுணர்த்துதனுதலிற்று.

மேற்கூறிப்போந்தவாறே அயராவன்பினரன்கழலணைந்த முத்தர்க்குச் சீவன் முத்திநிலைக்கணவ்வறிவிச்சை செயல்கள் ஒரோவழிப் புறத்துச்சேறலு முண்மையின் அவை செல்லு மிடமிவை யென்பதுணர்த்து முகத்தானே வாக்கு

மனாதீதமாய் அயராவன்பினணைந்து வழிபடாநின்ற முதல்வனை வாக்கு மனக்கோசரமாம்படி தெளியக்கண்டு வழிபடு முறைமையை யுணர்த்துதல் பயனாதலின் மூன்றாம்பாதமாகிய விப்பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

அயராவன்பினரன்கழல் சென்றார்க்குச் சீவன் முத்திநிலைக்கண் அவ்வறிவிச்சை செயல்கண் மூன்றும் புறத்தே யெவ்வாறு வியாபரிக்குமென்னுமவாய் நிலையை நிரப்புதலின் அவ்வவாய் நிலைபற்றிய வினையானே அதிகரண வினையும், முத்திநிலையைத் தலைப்பட்ட மெய்ஞ்ஞானிகட்கு ஈண்டுச்செய்யக்கடவதொன்றில்லையெனச் சமயிகள் கூறுமாசங்கையை விதிமுகத்தானுரைத்து மறுத்தலின் அவ்வாசங்கைபற்றிய வினையானே பாதவினையும், முத்திநிலையினியல்பு கூறி யீண்டுச் சீவன் முத்திநிலைக்கட்படும் விசேடங் கூறுதன் முறைமையாகலி னம்முறைமைபற்றிய வினையானே யோத்தினையும் பெறப்பட்டன.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. அயராவன்பி னரன்கழ லணைந்த சீவன்முத்தன் செங்கமல மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது சீபாதத்தை யணைதற் குடம்படாதயர்த்தலைச் செய்விக்கு மவ்வியல்பினையுடைய மும்மல அழுக்கை ஞானநீராற் கழுவித்தன்னைப்போ லயராவன்பினரன்கழ லடைந்த மெய்ஞ்ஞானிகளோடு கலந்துகூடி யவ்வாறு கழுவப்படடு மலமயக்குநீங்க அன்பரொடு மரீஇ அன்புமிக்குடைய வவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையு முதல்வனெனவே கண்டு வழிபட்டு வாழ்வானென்றவாறு.

சீவன்முத்தனென்பது ஏற்புழிக்கோடலாற்பெறுதும்,
நோன்றாள் வினைத்தொகை.
நோன்றல் பொறுத்தல்.
எடுத்துச் சுமப்பா னென்றார் புடைநூலாசிரியரும்.
கழீஇயென்றது குறிப்புருவகம்.

மாலறநேய மலிந்தவ ரென்பது அம்மலங்கழீஇ யன்ப ரொடு மரீஇபிஞ ரெனப் பொருடந்து சுட்டுப்பெயர் மாத்தி ரையாய் நின்றது'

நேயமலிதல் கூறவே வழிபாடும் பெறப்படும்.

தான் அசை.

அம்மலங்கழீஇ யென்றதனாற் சீவன்முத்தர்க்குப் புற த்தே யறிவு வியாபரிக்கு மிடமும், அன்பரொடுமரீஇ யென் றதனால் இச்சை வியாபரிக்கு மிடமும், தொழுமென்றதனாற் செயல்வியாபரிக்கு மிடமும் பெறப்பட்டமையி னவாய்நிலை நிரப்பியவாறு கண்டுகொள்க.

இம்மூன்றும் பிரிப்பின்றி யுடனிகழ்ச்சியா யோரிடத் தொருங்கு நிகழ்வனவாகலின் விடயவேற்றுமையின்மையு முணர்க.

தொழுமென்றது செலுமென்றதுபோலப் படர்க்கை வினைமுற்றாகலி னிஃதனைங்கோரது தன்மையென்பது பெற் றும்.

அற்றாகலினன்றே யிதனைச் சாதகவோத்துள்வையாது கூண்டு வைத்தாரென்பது..

செல்வப்பெருக்க முடையார்க்குணவாகிய பால் உடம்பு நோயின்றி வளரச்செய்யு மருந்துமாமாறுபோல இவ்வழி பாடு மலவாசனை சிறிதுந் தாக்காது சிவானந்தமேன்மேல் வளர்ச்சி செய்யுஞ் சாதகமாதலுண்மையா னதுபற்றி யாசிரி யர் விரித்துரைத்தலுஞ் செய்தாரென்க.

இதனுள் செம்மலர் நோன்றாள் சேரலொட்டா வம்ம லங்கழீஇ யென்றதோரதிகரணம். அன்பரொடுமரீஇ யெ ன்ற தோரதிகரணம். மாலறநேய மலிந்தவர் வேடமுமால யந்தானு மரனெனத் தொழுமேயென்றதோரதிகரணம். ஆக மூன்றதிகரணத்த திச்சூத்திரமென் றுணர்க.

அவற்றுட் சிவன்முத்தர்க் கொருதலையான் முன்னர்ச் செய்யக்கடவதிதுவென்ப துணர்த்து முகத்தானே யவர்தறிவு புறம்பே வியாபரித்தலுமுண்மையின் அது வியாபரிக்குங் காலங்ஙனம் வியாபரிக்குமென்னு மவாய்நிலையை நிரப்புதற்கெழுந்தது முதலதிகரணம்.

## முதலதிகரணம்.

—:*:—

மே-ள் ஈண்டு ஆணவமாயை காமிய மென்னு மலங்களைக்களைக -எனவரும்.

கன்ம மதன் மூலத்தை நோக்கிக்காமிய மெனவும்பெயர் பெறும். காமிய மெனப் பாடமோதி "இனிச்செய் கன்ம மூலமல ஞானத்தா னிடிப்ப" வென்ன வழிநூலாசிரிய ரோதுதலின் ஈண்டு மலமாயைகளொடு வைத்துக்களைய நின்றது ஆகாமியவினை மாத்திரையே யாகலா னதுவே யீண்டெடுத்துக் கொள்ளப்பட்ட தாகலின் காமியமெனத் தலைக்குறை யென்றுரைப்பாரு முளர்.

அற்றேல், ஏகனாகி யிறைபணிநின் றுண்மைஞானத்தைத் தலைப்பட்டார்க்கு மலமாயை தன்னொடு வல்வினையு மின்றாய்க் கழிந்தொழிதலின் அவற்றான் மீளச் செய்யக்கடவதொன்றின்மையா னீண்டவற்றைக் களைதலெற்றுக் கென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதிக்குமாறு சூத்திரத்திலுடம்பொடு புணர்த் தோதியதனைத் தெரித்துணர்த்தி வலியுறுத்தற் கெழுந்த வேது. அவை நாம் ஞானத்தைப் புணர்ந்தாருஞ் ஞானத்தைப் புணர்ந்து மாகலான் எனவரும்.

இ-ள். அம்மூன்று மலங்களும் உண்மை ஞானத்தைத் தலைப்பட்டார் மாட்டும் யாதானு மொரு நெறியா னுயிர்த் தம் மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீத வுணர்வை மேற்படுத்துவனவா மாகலா

னஃதவர்க் காகாமையின் ஈண்டாணவ மாயை கான்மியமென்னு மலங்களைக் களைக வென மேற்கொண்ட தென்றவாறு.

உணர்த்துதல் உணர்விற்கேதுவாதல் "அந்நியமானவை யுணர்த்தி யநந்நியமாய் நின்ற வறிவறியாமையி னு" மென்புழியு மது. ஈண்டஞ்ஞான மென்றது விபரீத வுணர்வை.

இனியவை யஞ்ஞானத்திற் கேதுவாய் வந்து நழையுமாறும், அஃதவர்க்காகாமையுந் தெரித் துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டு முதாரணம்.

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு. எனவரும்.

புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்புக்களாய்ப் பொருந்துகின்ற விக்கன்ம மலமு மண்முதன் மாயா தத்துவ மீறாய்க் காணப்படுகின்ற விம்மாயா மலமுஞ் சுட்டியறிவதாகிய விபரீத வுணர்வைப் பயக்கு மிவ்வாணவ மலமு மென்னு மும்மலங்களு மெய்ஞ்ஞானியாகிய வுனக்காகாவாகலா னிவற்றை விடுத்தொழிக வென்க.

எல்லா மலங்களும் பற்றறத் துடைத்து உண்மைஞானத்தைத் தலைப்பட்டார்க் குடம்புள்ளளவும் பிராரத்த வினையவ்வுடம்பைப் பற்றி நிற்றலான் அஃதவர்க் கொரோவழி வாதனை வயத்தால் இங்ஙளி வாங்குங் கலம்போல வந்து தாக்குங்காற் பிற்செயா தனுபவிப்பதின்று; ஆகலினது சார்பாக விருப்பு வெறுப்புக்க ளுளவாம்; அனவ யுளவாகவே பரிமே பார்த்திருப்பார்க்கு நிலமுதன் மாயா தத்துவ மீறாகிய ஏகதேசப் பொருள் காட்சிப்படும்; அவை காட்சிப்படவே அவற்றைச் சுட்டி யறிவதாகிய விபரீத வுணர்வு மேற்

பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாம் இவ்வாறிம்மூன்றும் அறிவற்றம் பார்த்திம் முறையானே வந்து தலைப்படு மென்பார் கன்ம மாயை யாணவ மென்றிம் முறையே வைத்தவை காட்சிப்புல னமாறு காட்டுவார் அவ்வக்காரிய நிகழ்ச்சிகளை யெடுத்தோதிச் சுட்டிக் கூறினர்.

ஆணவ கன்மங்களைச் சுட்டிக் கூறுதலின் மாயையாயினு மவ்வாறு சுட்டு வருவித் துரைத்துக் கொள்க.

புண்ணிய பாவம் ஆகுபெயர்.

மாயை முன்னையது தத்துவம்.

ஈரிடத்து மாக்கச் சொல் வருவித்துரைக்க.

காண் மாயை செயப்படு பொருள் முடிந்த வினைத் தொகை.

காட்டுதல் உபசாரம்.

இவை சிவபோகப் பெருவாழ்வை யிழப்பிப்பன வாகலான் மெய்ஞ்ஞானிக்காகா வென்றார்.

மேன்மேன் முறுகுவன வாகிய விவற்றைத் தோன்றும் பொழுதே தடையாக்கால் "களைகுநர் கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்னு முறைமைத்தாய் முடியு மென்பது பற்றி விடுவெனவிண்டும் வலியுறுத்தப்பட்டது.

விடுதல் அவை யம்முறையா னிகழ்ந்தவழி யிவ்வஞ்ஞானம் ஏகதேசக் காட்சியா னுயதெனவும், இவை யேகதேசக் காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தா னுயதெனவும், அத்தோற்றமும் பிராரத்த வினை நுகர்ச்சிக்கட் சென்ற தற்போதத்தா லாய தெனவு மறிந்து அங்ஙனஞ் செல்வதாகிய தற்போத முனையாதவா றுபகரித்துச் சிவஞானத்து ளடங்கிச் சிவானுபவந் தவாது பூநிக யாம்படி ஞான நிலையிலுறைத்து நிற்றல். "நுங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்துள் ளின்பொடுங்கத், தூங்குவர் மற்றேறுண்டு சொல்" லென்றது மிது.

அஃதங்ஙனமாக வதுவின்கண் மும்மலங்களு மஞ்ஞா னத்தை யுணர்த்து மெனக்கூறி யீண்டாணவ மாத்திரையே யஞ்ஞானங்காட்டு மென்றல் மலைவாமாலெனின்? அற்றன்று, அஞ்ஞானங் காட்டுதல் மாயை கன்மங்கட்கு ஆணவ மலச் சார்பா னாகிய செயற்கை ஆணவ மலத்திற்கது இயற்கை யென்னும் பொதுச் சிறப்பாமா றுணர்த்துதற்கு ஆண்டுப் பொது வகையாற் கூறிப் போந்ததனை யீண்டுச் சிறந்தெடுத் தோதினா ராகலா னென்பது.

முதலதிகரணம் முடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

:*:

முதலதிகரணத்திற் கூறியவாறு மும்மலங்களையுங்களை தற்கு அதனை நிலை பெறுத்துவதா யதன் பின்னர்ச்செய் யக் கடவ திருவென்ப துணர்த்து மூகத்தானே அவரதிச்சை வியாபரிக்குங்கால் யாங்ஙனம் வியாபரிக்கு மென்னு மவாய் நிலையை நிரப்புதற் கெழுந்தது இரண்டாமதிகரணம்.

இனிச் சிவபத்தர்களோ டிணங்குக எனவரும்.

சிவபத்த ராவார் பத்தியின்ன் மறவா தேத்தி முதல்வ னது சீபாதத்தை யணைந்தோர்.

இணங்குதல் நட்புச் செய்தல்.

சிவபத்தர்களோ டிணங்குக வெனவே ஏனையோர்களோ டிணங்கற்க வென்பதூஉம் பெறப்பட்டது.

அற்றேல், உறவும் பகையு மொழித்து மகவெனப் பல் லுயிரனைத்தையு மொக்கப் பார்க்குஞ் செல்வக் கடவுட்டொ ண்டர்க்கு இவ்வாறு சிலர்மாட்டு விருப்புஞ் சிலர்மாட்டு வெறுப்புஞ் செய்து கொண்டு பகுத்து நிற்றல் சால்பின்றா மென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழு ந்த வேது.

அல்லாதா ரஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான் என வரும்.

இ-ள். வெ-டை. அல்லாதா ரஞ்ஞானத்தை யுணர்த்துமாறு, "தெய்வமென்பதோர்சித்தமுண்டாகி, முனிவிலாததோர்பொருளதுகருதலு, மாறுகோடிமாயாசத்திகள், வேறுவேறுதம்மாயைகடொடங்கின, வாத்தமானுரயலவர்கூடி, நாத்திகம்பேசிநாத்தழும்பேறினர், சுற்றமென்னுந் தொல்பசுக்குழாங்கள், பற்றியழைத்துப்பதறினர்பெருகவும், விரதமேபரமாகவேதியருஞ், சரதமாகவேசாத்திரங்காட்டினர், சமயவாதிகடத்தமதங்களே, யமைவதாகவரற்றிமலைந்தனர்" என்றற்றொடக்கத்தான் அறிக.

மும்மலங்க ளஞ்ஞானத்தையுணர்த்துதல் இலக்குவாய்த்துழி ஏதுவாதன் மாத்திரையேயாம் இவரவ்வாறன்றி வாயாதவழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை யுபாயங்களானுந் தம்மோடொப்பவிபரீத வுணர்விற்செலுத்தியே விடுவராகலான் சிவபத்தியில்லாதார் அம்மலங்களினுங்கொடியராகலினவரை யவற்றினுமஞ்சி விட்டொழிதலே யறிவுடைமைக்குச் சால்பென்பதாம்.

மகவெனப் பல்லுயிரனைத்தையு மொக்கப்பார்த்தலாவது அவைபடுந்துன்பங் கண்டுழி யதற்குப் பரிதல் மாத்திரையேயாம்.

"யான்பெற்றபேறு பெறுகவிவ்வையக" மென்றது மிக்கருத்தே நோக்கியென்க.

அற்றேல், சிவபத்தியில்லாரோ டிணங்காமை மாத்திரையே யமையும் சிவபத்தர்களோ டிணங்குத லெற்றுக்கென்னு மாசங்கையை நீக்கி யதனைவலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்குஞ்
சிறபிலார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்

பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு
மெய்த்தவரை மேவா வினை. — எனவரும்.

மும்மலங்களு நீங்கி முதல்வ னத்துவிதமாய் நின்று காட்டியுங்கண்டுமுபகரித்துவரும்பெருங்கருணையைமறவாது கடைப்பிடிக்கும் ஞானக்கண்ணுடையமெய்த்தவராயினார் அதனை மறக்குமாறுசெய்து ஞானக்கண்ணை யிழப்பித்துத் தீநெறிக்கட்கொண்டுசென்று மலங்களாகிய பிறவிக்குழியில் வீழ்வித்துத் துயருறுத்து மன்பில்லார் கூற்றிலேதொன்று தொட்டுப் பயின்றுவந்த சேர்ச்சியறும்படி யம்மறவியை மாற்றி ஞானக்கண்ணை விளக்கிப் பிறவிக்குழியினின்று மெடுத்து நன்னெறிக்கட்செலுத்தி வாழ்விக்குஞ் சிவபத்தர் கூற்றிலே பேரன்புடையராய் அவ்வன்பு சார்பாகவிளங்குவதாகிய சிவஞானக்கண்ணா லந்நிலைகடைப்பிடித்துணரப் பெற்ற வவரை எல்லாவனத்தங்கட்கு மூலமாய்வரும் பிராரத்தவினை வாதியாவென்க.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பிலாரென மேற்சொல்லிய பொருளையே யநுவதித்துவிரித்தோதினார். அதனெதிர்மறை முகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை யுணர்ந்து கோடற்பயனோக்கி,

மலங்களின்வீழ்க்குமென்பது குறிப்பெச்சம்.

மூலம் ஆகுபெயர்.

எல்லாவற்றினுமன்பு சிறந்தமையின் அது சிறப்பெனப்பட்டது.

சேர்வை சேர்ச்சி.

பத்தரினத்திற் பித்தாயென மாறுக.

பித்துப் போறலிற் பித்தென்றார். அஃததனையுடையார் மேனின்றது.

ஏனைத்தவங்களெல்லாம் மெய்யாதலின்றி மலநடையா யப்போதலிற் பரனுணர்வினாலுண்டாந் தவமொன்றே மெய்த் தவ மெனப்பட்டது.

வினை பால்பகாவஃறிணைப்பெயர்.

சிவபத்தர்பாட் டன்புசெய்து அவரது மனஞ்சொற் செய்கைவழி நிற்பார்க்கு உலகியலுணர்வு மாறிச் சிவானுபூதி யுணர்வே மேம்பட்டு நிகழும் அது அங்ஙன நிகழவே, உடம் புள்ளளவு நிற்பனவாய பிராரத்தவினைகள் அவர்க்கு நுகர் ச்சியாதல் செல்லாமையி னவரை வாதிக்கமாட்டா அவை வாதியா தொழியவே, சிறப்பிலார்தந்திறத்துச் சேர்வை பற்றறக்கெடுமென்பார் அறப்பித்துப் பத்தரினத்தாய்ப் பர னுணர்வினாலுண்டு மெய்த்தவரை மேவாவினை யென்றார்.

எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்க ளோடிணங்கிறலன்றித் தொன்றுதொட்டுப் பயின்றுவந்த சிறப்பிலாரிணக்கமறுதாகலா னஃதொருதலையான் வேண்டு மென வலியுறுத்தவாறாயிற்று.

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

## மூன்றாமதிகரணம்.

—:*:—

இரண்டாமதிகரணத்திற் கூறியவாறு சிவஞானிகளோ டிணங்கினார்க்கு அதன் பின்னர்ச் செய்யக்கடவதிது வென்ப துணர்த்து முகத்தானே அவரது கிரியை வியாபரிக்குங்கால் அங்ஙனம் வியாபரிக்கு மென்னு மவாய் நிலையை நிரப்புதற் கெழுந்தது மூன்றாமதிகரணம்.

மேல். இனிப்பத்தரது திருவேடத்தையும் சிவாலயத் தையும் பரமேசுரனெனக்கண்டு வழிபடுக. எனவரும்.

காண்டல் ஐயுறவின்றித் தெளிதல்.

திருவேடத்தினியல்பு. "தூயவெண் ணீறு துதைந்த பொன் மேனியுந் தாழ்வடமும், நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையு நைந்துருகிப், பாய்வது போலன்பி னீர்பொழி கண்ணும்பதிகச்செஞ்சொன், மேயசெவ் வாயு முடையார்புகுந்தனர் வீதியுள்ளே" "சிந்தையிடை யறுவன்புந் திருமேனி தன்னிலசைவுங், கந்தமிகை யாங்கருத்துங் கையுழவாரப்படையும், வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற் பொலிதிருநீறு, மந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர்வந்தணைய" கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற்பரவு மெய்க்காதற், றொண்டர் திருவேட நேரே தோன்றியவென்று தொழுதே" என்பவற்றானறிக. இத்திருவேடங், காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடைசாந்தணிகல முதலாயின காமுகரை வசீகரித்தின்பஞ்செய்யுமாறுபோல மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையானே வசீகரித்தின்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையுமென்றுபசரித்தார். அது, "சேலுங் கயலுந்திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம், போலும் பொடியணி மார்பிலங்குமென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்பதனானுமறிக.

அற்றேல், மெய்யுணர்வுடையார்க்குப் பகுப்பின்றி யெங்கணும் பரமேசுரனெனக் காண்டலே பொருத்தமுடைமையானும், நின்ற திருத்தாண்டக முதலியவற்று ளவ்வாறோதுதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி யுயிர்ப்பொரு ளுயிரில்பொருள்களை யெல்லாந் தனித்தனி யெடுத்தோதி வழிபாடுகூறுதலானும், ஈண்டிவ்விடங்களின் மாத்திரையே பரமேசுரனெனக் கண்டு வழிபடுகவெனப் பிரித்துக் கூறியது பொருந்தாதா லென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்தவேது.

அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே யல்லாதவிடத் தப்பிரகாசமாய் நிற்றலான் எனவரும்,

இ-ள். அம்முதல்வ னெங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரினெய்போல விளங்கி நிலைபெற்று அல்லுழிப் பாலினெய்போல வெளிப்படாது நிற்றலான் இனிப்பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுகவென மேற்கொண்டதென்றவாறு.

மற்றப்பிரகாசமாய் நிற்றலென வினையும்.

அற்றேல், அஃதியாங்ஙன மென்னு மாசங்கையை நீக்கிப்பிரகாசமாய் நிற்குமாறும், அல்லாதாரிடத் தப்பிரகாசமாய் நிற்குமாறுந் தெரித்துணர்த்தி யேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தர்க் கின்றாம் பதி. — எனவரும்.

வாக்கு மனாதீதமாய் நின்ற பரம்பொரு ளுலகத்தார் தன்னையறியும்படி கருணைசெய்து தனது வடிவாகிய திருநீறு கண்டிகை முதலிய தனது வடிவத்தைத் தன்னன்பர்க்குக் கொடுத்து அவர்களிடமாக நின்று அங்கங்கேயறிவு விளக்குதலானும், அவர் தம்மைச்சோகம் பாவனையானுணரச் செய்தலானும், அவரையொருகுறியின்கணிறுத்தித் தனது வியாபகத்துக்குள்ளாகவிருத்துதலானுங் குறிபிறந்துநின்று தன்னையுள்ளவாறுணரு மன்பாளராகிய வவர்மாட்டுத் தயிரின்கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றும். பாசக்கட்டுடையார்க் கிவ்வியல்பில்லாமையான் அவர்மாட்டுப் பாலின்கண்ணதாகிய நெய்போல விளங்காது நிற்குமென்க.

இன்மை விளங்காமைப் பொருட்டு.

பாசத்தார்க்கென்பது உருபுமயக்கம்.

கொடுத்துச் செய்து இருத்தலானிக்ழுமென வினையும்.
செய்தென்பது சொல்லெச்சம்.
இருத்தல் அல்லீற்றுப்பிறவினைத் தொழிற்பெயர்.
தன்னுணருநேயத்தாரெனப் பெயர்டையானு மோரே
துக் கூறப்பட்டது.

தன்னையென்னு மிரண்டனுருபு விகாரத்தாற் ஜெருக்கது.

அற்றேல், இவ்வியல்புகளுண்டைய சங்கமவேடத்தினிடத்
தெஞ்ஞான்று முதல்வன் பிர்காசமாய் நிற்பனென்பது பெ
றப்படும். இவ்வியல்புகளில்லாத தாபரத்தினிடத்து மந்திர
சாநித்திய மில்வழிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படார்தாலெ
ன்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற் கெடுத்து
க்காட்டு முதாரணம்.

கண்டதோரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதர்மால்—கண்டவுருத்
தானதுவா யன்றுனன் றனதுவாய்த் தோன்றுனே
தர்னதுவாய்க் காணுந் தவர்க்கு. — எனவரும்.

விறகிற் றீக்கடைந்துழிவேறாய் விளங்கும் அல்லுழி
விள்ங்குவதன்று அதுபோல வுயிர்கட்குப் புத்திமுத்தி யளி
த்தற் பொருட்டுக் காணப்பட்ட தாபரத்திருவுருவின்கட்க
லப்பினு லதுவேதானு யதுவன்றி வேறுபொருளுமா மியல்
புடைய முதல்வன் அதுவே தானுய்க்காணார்க்குத் தம்மான்
றியப்பட்ட தொரு மந்திர சாநித்திய மில்வழி யாண்டும் விள
ங்காது நின்று அம்மந்திர சாநித்தியத்தால் விளங்கித்தோ
ன்றும் பொருளாம்; அவ்வா றன்றி யதுவேதானுய்க் காணப்
பெறு முண்மைத்தவமுடையார்க்கு எப்போதுமப்படியே வி
ள்ங்கித் தோன்றுன்கொல்லோவென்க.

காணுதார்க்கென்பது சொல்லெச்சம்.
கடைந்துழி யல்லுழியென்பன ஆற்றலாற் பெற்றும்.

உவமைக் கோதியவினையைப் பொருட்கணெதிர்நிரனிறையாக வைத்துக் கண்டுகொள்க.

ஈண்டுண்மை விளங்குதன் மேற்று.

மந்திரத்தா னுளதாமென வினையும்.

ஆல் அசை.

ஆனுனென்பது பெயர்.

ஒகாரம் எதிர்மறை.

தானதுவாயன்றானு மென்னும் பெயரடையான் அவரவர் பாவனைக்கேற்ப விளங்குதற்கேதுக் கூறப்பட்டது.

தானதுவா யன்றாதல் சங்கமவேடத்தினு மொக்குமேனுந் தாபரவுருவின்க ணிகழு மாசங்கையை யிதனானன்றி நீக்கலாகாமையினீண்டுக் கூறினார். இஃதிரிடத்து மொக்குமென்பது வருகின்ற வதிகரணத்திற் பெறப்படும்.

மூன்றமதிகரணம் முடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

——:*:——

மேலையதிகரண மூன்றனுஞ் சீவன்முத்தர்க்குரியவாசாரமுணர்த்தியவழி, அற்றேல், அவை சீவன்முத்தர்க்குத் தாமே யுளவாவனவாய இலக்கணமாகலின் அநுவாத முகத்தானோதற் பாலனவாகிய வவற்றைக்களைக இணங்குக வழிபடுக என்றிங்ஙனம் விதிமுகத்தானோதிய தெற்றுக்கென்னு மாசங்கையை நீக்குதற்கு அவற்றொழிபா யெழுந்தது நான்காமதிகரணம்.

மே-ள். இவ்விடங்களில் வழிபடுகவெனவரும்.

இவ்விடங்களாவன: பத்தரதுதிருவேடமுஞ் சிவாலயமுமென மேற்கூறிப் போந்தன

வழிபடுகவென்னு மிசையெச்சத்தா லநுவாதமாய்க் கூறவமையுமென்பாரை மறுத்து விதித்தலே வலியுறுத்தவாறு.

வழிபடுகவென்பதுபலக்கணமாகலிற் களைதல் இணங்குதல்கட்கு மிவையொக்கும்.

அற்றேல், எய்திபதனை விதித்தல் பயனுடைத்தன்றுலென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்தவேது.

நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய்வரும் புருடனவை யாகாவா றப்புருடனு மாகலான் எனவரும்.

இ-ள். நரம்பு நாடி யிறைச்சி என்பு முதலிய தாதுக்களின்கண் வேற்றுமையின்றி யதுவதுதானய் வருகின்றவுயிர் நாடியோ வென்போ நரம்பு சிக்கோழையோ வென்றிவ்வாறுபைமறியாப் பார்ப்பார்க்கு நரம்பு நாடி முதலியவை யாகாதவற்றின் வேறுமாயினாற்போல உயிர்க்குயிராகிய வம்முதல்வனுஞ் சடசித்துக்க ளெல்லாவற்றினும் அதுவதுதானும் அல்லனுயு நிற்பனுகலா னதுவதுதானய் நிற்றலைக் காணுங் காட்சிபற்றி யெய்திய வழிபாடல்லனாய்நிற்றலைக் காணுங் காலெய்தாமையி னவ்வழியு மெய்துவிக்க வேண்டுதலான் இனியிவ்விடங்களின் வழிபடுகவென விதித்தோதிய தென்றவாறு,

எனவே, எய்தாததனை யெய்துவிப்பதூஉம், எய்திய திகந்துபடாமற் காப்பதூஉம், எய்தியதனை யொருமருங்கு மறுப்பதூஉமாய விதிமூன்றனுள் இஃதெய்திய திகந்துபடாமைக் காத்தது என்றவாறாயிற்று:

இது விளங்குதற் பொருட்டன்றே ஆசிரியரிவ்விடங்களின் வழிபடுகவெனவீண்டிடமாக வைத்தோதியதூஉ மென்க.

அவையாகாவாறப்புருடனு மெனவே, அவ்விடத்தெய்துவித்த லொருதலையான் வேண்டுமென்பதுதாற்பரியமாயிற்று.

சூத்திரத்திற் றெழுமே யென்னு மேகாரமும் இப்பொருள் குறித்து நின்ற தேற்றம்.

வாறு உவமவுருபு.

முதலானவற்றை யென்பதுருபுமயக்கம்.

அற்றேல், முதல்வனுக்கு இவ்வியல்பு எல்லாப்பொருட் கண்ணு முண்மையின் யாங்கணும் வழிபாடுவிதித்தலே பொருத்தமுடைத்தென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத் துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—போதுவதனி
லத்துவித மாத லக்ண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு. — எனவரும்.

முதல்வன் சடசித்துக்கண்மாட்டு நிற்கு நிலைமைய றிப்பெற்றார்க்குக் கண் ணருக்கன்போல அதுவிதுவெனப் பக்கிசைத் தோதப்படுவதாயபேதநிலைமையனு மல்லனுய் உடலுயிர்போ லதுவேயென்றோதப்படுவதாய அபேத நிலைமையனு மல்லனுய்க் குணகுணிபோ லதுவே யிதுவென்று பக்கிசையாம லோதப்படுவதாய பேதாபேத நிலைமையனு மல்லனுய் அம்மூன்றற்கும் பொதுமையா னறிவொளிபோ லத்துவிதமாய் நிற்குமாற்றாற் சடசித்துக்கண் முழுவதுமத் தனது வடிவேயாமாயினு மவற்று ளன்பு விளையுமிடத்தின் வழிபடுவாயாக அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றோ யென்க.

அதுவிதுவென்பது முன்னைய உம்மைத்தொகை பின்னையது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

அல்லா னென்பதனை மேலுங் கூட்டி. என்றதையென்பதனை அதுவென்பதனோடுங்கூட்டியுரைக்க.

அல்லானென்பது வினையெச்சக்குறிப்புமுற்று.

என்றதை யென்பது ஐயீற்றுடைக் குற்றுகரம்.
உம்மை யிறந்தது தழீஇயிற்று.
பொதுவதென்பது அது பகுதிப்பொருள்விகுதி.
ஆதல் ஆயவாற்றுனென்க.

தைவமென்பது தேவனதுடைமை யென்னும் பொருட்டாய வடமொழிப் பெயர்ப்பகுபதம்.

ஆபினு மென்பது சொல்லெச்சம்.
அத்துவிதி அண்மைவிளி.
அன்பென்றது ஆகுபெயர்.
ஏழாவது விரித்துரைக்க.

திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியினன்றி எங்குமுருக்காண வொண்ணுதபால் முலைப்பால் விம்மி பொழுகுவதுபோல வெளிப்பட்டருளுவதாகியடிப்பட்டுவருமன்பு விளையாமையின் ஆண்டுச்செய்யும் வழிபாடே யத்துவித ஞானத்தை நிலைபெறுத்தற் பயத்த தென்பார் அத்துவிதமாத லகண்டமுந் தைவமே யென்றநுவதித்து அத்துவிதி யன்பிற்றெழுவென்றார்.

அத்துவிதியென்றது பயனுணரநின்ற குறிப்புப்பெயர்.
இதனுனே விதிக்குப்பயன் கூறியதூஉமாயிற்று.

இனியதுவிது வென்பன அருவுருவாகிய திருமேனியெனக் கொண்டதற் கியைய வுரைப்பாருமுளர்.

அவர் அன்பினென்றதனை யேதுப்பொருட்கண்வருமைந்தனுருபேற்ற வியற்பெயராக வைத்துரைப்ப.

அற்றேல், இவ்வத்துவிதஞானம் அசத்தாயுள்ள வன்னம்பதங்களை யசத்தென்று கண்டொருவுதலானுளதாம் பயனுகலின் அதன் பொருட்டு வழிபாடு வேறுவிதித்தல் மிகையாமா லென்னு மாசங்கையை நீக்கி யதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டு முதாரணம்.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றெழு. — எனவரும்.

உடம்பின் கண்ணதாகிய பிராரத்தவாசனை யுயிர்க்குத் தாக்குவதாயுள்ளவளவும் அதனானே வரும் விருப்பு வெறுப்புக்களும் அவைபற்றிக் காட்சிப்படு மண்முதல் மாயைகளும் அவைபற்றி நிகழும் விபரீதவுணர்வுமாகிய வசத்துக்களொருவிய வழியும் வந்துகூடி மேம்படுவன வாகலானிவற்றிற் கெல்லாமூலமாகிய பிராரத்தவினைவாதனை பற்றறக் கழிந்தாலன்றி அத்துவிதஞான மேம்பட்டு நிகழாதாகலி னப்பற்றறக் கழிதற் பொருட் டம்மெய்யுணர் வுடையாரை நாடி வழிபடவே யவ்வினைத்தீர்வு நிகழ்ந்தவ்வுணர்வு மேம்படும் ஆதலானன்பானே யவரை வழிபடுவாயாக வென்க.

அசத்தாயுள்ள வன்னபேதங்களை யசத்தென்று கண்டவழி, யுளதாய் நிற்கும் ஞான சொரூபம் நிலைபெறுத லவ்வசத்தினது விளைவிற்குவேராகிய வினைத்தீர்வின்கண்ணதாகலான் ஆண்டுளதாய் நின்ற மெய்யுணர்வை யவ்வினைவேரறுத்து நிலைபெறுத்துதற்பொருட் டங்ஙன மதனை நிலைபெறுத்தினார்மாட்டுச் செய்யும் வழிபாடொருதலையான் வேண்டப்படுமென்றவாறாயிற்று.

அற்றேல், அவ்வாதனை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறுதலும் ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்கவே யுளதாமென்பது, அஞ்செழுத் ததிகரணத்தி னோதிய வாற்றானும், "பந்தமா னவைய றுத்துப் பவுதிக முழுது மெல்லைச், சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரு, மந்தபா திகளி லாத வஞ்செழுத் தருளினாலே, வந்தவா றுணர்ச் செய் வாரை வாதியா பேதி யாவே" எனப் புடைநூலாசிரியர்

கூறியவாற் றானும் பெறப்படுதலி னதற் கதுவே யமையுமா லெனின்? அஃதொக்கும். அவ்வுச்சரிப்பும் வழிபடுதலே யின் றியமையா தென்பது, 'விதிப்படி யுச்சரிக்க வென்ற' துணை யானொழியா தென்பது 'அஞ்செழுத்தா லுள்ளமரனுடைமை கண்டரனை யஞ்செழுத்தா லர்ச்சித்'தென ஆசிரியர் தாமே யகத்து வழிபாடு கூறியவாற்றாற் பெறப்படுதலின் வழிபாடு மதற் கொருதலையான் வேண்டப்படுமென விடுக்க.

அற்றேல், அஞ்செழுத் ததிகரணத்தையு மிதனைச் சார வைத் தீண்டோதுதலே பொருத்தமுடைத்தெனின் ? அஃ தொக்கும் ; சிவப்பிரகாசந் திருவருட் பயன் முதலிய வற்றி னும் அஞ்செழுத்தருணிலையை யின்புறு நிலைக்குப் பின்னாக அணைந்தோர் தன்மையைச்சாரவைத்துக் கூறியவாற்றானும் அதுவே பொருத்தமுடைத்தாயினும் அஞ்செழுத்தோது முறைமை சொற்பல்காது விதிப்படியென மாட்டெறிந் துணை ர்த்துதற் பொருட்டாண்டே வைத்தோதிய தன்றிப் பிறி தில்லை யென்றொழிக.

இது சொற்பொருட்பின் வருநிலை.

விளையா தென்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது. "ஊட்டா கழியு" மென்புழிப்போல.

பின் வந்த ஞானம் ஆகுபெயர்.

ஆனதா லென்பது ஆனத்தாலென மரீஇயிற்று "பெற் றத்தாற் பெற்றபய" னென் புழிப்போல.

அற்றேல், பயன் பற்றி விதிக்கப்படும் வழிபாடு வேள்வி முதலியன போலப் பயன் வேண்டாமையானாகப் பின் னர்ச் செய்து பெறுதுமென்றாக வொரோவழி யொழியவும் படுங்கொல்லோ வென்னு மாசங்கையை நீக்கிச் செய்யாவழிப் படுங்குற்றமுஞ் செய்தல் கடமையாமாறு முணர்த்தியதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டு முதாரணம்.

தன்னை யறிவித்துத் தான்றனைச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி. எனவரும்.

தன்னுண்மை யறிய மாட்டாது குருடாய்க் கிடந்த வுயிர்க்குப் பலவாற்றானு மதனைத் தெரித்துணர்த்தி எத்தனையு மெளிய வவ்வுயிரை எத்தனையு மரியதானும் வண்ணஞ் செய்தளித்த பெரியதோ ருதவியை யதன் பின்னர் மறக்குமாயின் அஃதிதற்குமுன் னறியாமையான் மறந்த குற்றம் போலத் தீர்திறனுடையதொரு குற்றமன் றாகலானும், முதல்வன் அங்ஙனந் தான்றனே யாகச்செய்தாலும் இதுகாறுந் தனக்குச் சுதந்திர மின்றி முதல்வன துபகாரத்தை யின்றி யமையாதா யடிமையாகிய வுயிர் எக்காலத்து மவ்வாறடிமையேயா மாகலானுந், தான்றனைச் செய்தளித்த அப்பெரியோனை வழிபடுதலே யவ்வுயிர்க்கு வலியாவ தென்க.

தமது முதறனே குருவாகலிற் றன்றனைச் செய்தானை யென்றும், முன்னை மறந்த குற்றம் அறியாது நிகழ்ந்ததாகலிற் கழுவப்படும், இஃதது போற் கழுவப் படுவதன்றென்பார் பின்னை மறத்தல் பிழையல தென்றுங் கூறினார்.

பின்னை மறத்தலென்பதனால் முன்னை மறத்தல் பெறப் பட்டது. "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச், செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்னுங் கருத்து நோக்கிக் கூறிய தாமடமாம்.

அன்றியு மெனப் பாடமோதி யிது பிழையாத லன்றியு மென்றுரைப்பாரு முளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை, பின்னையன தேற்றம். செய்தா லென்பது செய்தெனத் திரிந்தது.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

தான்றனைச்செய்தல்: எதனையெதனைப்பற்றினு மது வதுவா முயிர் தன்னையறிந்தவழி எண்குணங்களா னிறைந்து தன் வண்ணமாகச்செய்தல்; அங்ஙனஞ்செய்தவழியும் "உயிர் தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கேயுரித்" தென்பார் நைவமென்றுந் நைவமே யென்றார்.

நைவமென்னுஞ் சொல்லியல்பு மேலே யுரைத்தாம்.
மானை யென்னு மிரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது.
மானென்பது வடசொற்றிரிபு.
சுட்டு வருவிக்க.
வலிதருவதனை வலியென்றுபசரித்தார்.

இவ்வுதாரணங்கண் மூன்றனும் வழிபாட்டிற்கு இடத்து நிகழ்பொருள் மாத்திரையே யன்றி இடவிசேடமும் பெறல் வேண்டுமென அதனை வலியுறுத்துமுகத்தான் முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர் வேடத்தையுஞ் சிவதேசிகனையு மறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

இங்ஙனஞ் சிவாகமத்துள் ஞானபாதப் பொருளெல்லா வற்றையும் பொது வுண்மை யென் றிருவகைப் படுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதகவியல் பயனியலென நான்கியலாக வைத்துப்போதிப்பதாகிய விச்சிவ ஞானபோத நூலைக் கோடற்குரிய வதிகாரிக ளாவா ரிவரென்ப துணர்த் துதற் கெழுந்தது இச்செய்யுள்.

சிவமேன்னு மந்தர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மோன்று மிரண்டு மலத்தார்க்கிங் கோண்குருவா
லின்றிந்நூல் மும்மை மலர்க்கு. எனவரும்.

தான்றனைச் செய்தவாற்றாற் சீவனென்னு மியல்பி னீங்கிச் சிவனென்றோதப்படும் வேதாந்தத்தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே ஒன்று மிரண்டுமாய மலங் களையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கு முறையே

யறிவின்கணின்றருட் பார்வையா னேக்குதலானுந், தேவ குருவாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கெனப்படுந் திக்கையானும் பிறவிக் கேதுவாய பசுத்துவநீங்கிச் சிவத்துவம் விளங்குமாகலானவரின் வேறாகியமும்மலமுடையார்க்கே யுரித் திவ்வுலகத் தநுபவமுடைய தேசிகனாற் போதிக்கப்படு மிச்சிவ்ஞானபோத நூலென்க.

அந்தம் வேதாந்தம்.

அந்ததரம் சித்தாந்த மாகலி னதனைப் பெற்றோரது பெருமைகூறுவார் சிவமென்னு மந்ததர வென்றார்.

என்னு மென்புழிப்படுசொற் றொக்கது.

சிந்தை அறிவு.

கண்ணுருபு விரித்துரைக்க.

நேர்நோக்குதல் முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையா னேக்குதல்.

நோக்க நோக்குதலானென்க.

கண் வாசகங்களைக்கூறவே பினம்பற்றிப்பரிசமுமுடன் கொள்ளப்படும்.

பவம் ஆகுபெயர்.

இந்நூல் அநுபவமுடைய தேசிகனை லன்றி விளங்காதென்பார் ஒண் குருவாலென்றார்.

போதிக்கப்படுமென்ப தவாய்நிலையான் வந்தது.

இன்றிந்நூலென்பது இந்நூலென்னும் பொருட்டு; இந்நூலத்துரைக்கப்பட்ட நூலெனினு மமையும்.

அது 'நானுரைத்தானின்' றென வருகின்ற வெண்பாவாற் கூறியவாற்றானு மறிக.

மும்மையென்றது சுண்டென்னின்கணின்றது. தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம்பொருப்ப னென்புழிப் போல.

உண்மையதிகாரம் முடிந்தது.

சிவஞானபோதத்திற்குத் திருவாவடுதுறைச் சிவஞான யோகி செய்த சிவஞானபாடியத்தில் இரண்டாவது உண்மையதிகாரத்திற் பயனோத்துள் மூன்றாம்பாதமாகிய இப்பன்னிரண்டாஞ் சூத்திரமுடிந்தது.

## சிவஞானபோத பாஷ்யமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

## நூலாசிரியர்பெயர்.

——:*:——

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

இ-ள். எந்தை சனற்குமரன் - எந்தையாகிய சனற்குமாரமுனிவன் முதலிய முனிவர்கணங்கள், ஏத்தித்தொழ - துதித்துவணங்க, நந்தி - சீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான், இயல்பாய் - தான் கேட்டமுறையே, உரைத்தருளும் - உபதேசித்தருளிய, ஞானநூல்-சிவஞானபோதமாகிய வடநூலை, சிந்தைசெய்து-பரஞ்சோதிமுனிவன்பாற் கேட்டவாறே சிந்தித்து, தாரணியோர் உணர் - தமிழ்நாட்டார் றிந்துய்தற்பொருட்டு, ஏது திருட்டாந்தத்தால் - மேற்கோளோடு கூடிய ஏது திருட்டாந்தங்களுடன், இன்று - இக்காலத்தே, மெய்கண்டான்றான் உரைத்தான் - மொழிபெயர்த்துக்கூறி வார்த்திகப்பொழிப்புரை செய்தருளினான் மெய்கண்டதேவன் என்க.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.
சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.



# * சிவஞானபாஷ்யம்.

—:o:—

வேதாகமங்கள் "பிரமாகம்" என்றும், "சிவோகம்" என்றும் பாவிக்கும்படி கூறியது யாதுகாரணம்பற்றியெனின் பசுக்கள் பாசவிமோசன முற்றுத் தமக்கந்தரியாமியாயும் வியாபியாயுமான பரசிவத்துவந்தங்கண் அபிவியத்தியுறும்பொருட்டுஉபாசிக்க, வேதாகமங்களில் அங்ஙனம் அத்துவித பாவனை விதிக்கப்பட்டது. ஆகலின் அதுகொண்டுதானே ஏகான்மவாதஞ்சாதித்தல் சாலாதென்க. "பிரமாகம்" சிவோகம்" என்னும் அத்துவிதபாவனையால் ஆன்மாக்கள் சிவகுணங்கள் தங்கண் விளங்கப்பெற்றுச் சிவமாயிருப்பனவன்றிக் கெட்டொன்றுயொழியா. அரதத்தாசாரியர்க்குமிதுவே கருத்தாதல் "வேதத்தில் ஆண்டாண்டுப் பிரமப் பொருளாகிய சிவபிரானுக்கும் ஆன்மாவிற்கும் அத்துவிதபாவனை கூறப்படுமா றென்னையென்றுசங்கித்தெடுத்துக்கொண்டு கருடனுமாந்திரிகனுந்தம்முள் வேறுதல் வெளிப்படையாயினுங் கருடோகமென்னுமத்துவித பாவனை விடநிவிர்த்திப்பொருட்டு வேண்டப்படும். அதுபோலப் பிரமப்பொருளாகிய பரமசிவனும் ஆன்மாவுந்தம்முள் வேறுதல் வெளிப்படையாயினு மலநிவிர்த்திப்பொருட்டு வேதத்தில் அத்துவிதபாவனை கூறப்பட்டது. அதுகொண்டு தானே நிரூப சரிதவைக்கியங்கூறுதல் சாலாதென்பது" என்றங்ஙனஞ் சதுர்வேததாற்பரிய சங்கிரகத்தோதியவாற்று னறிக.

இனிச் சிவபிரானுக்குச் சருவஞ்ஞத்துவ முதலிய வெண்குண முடைமை சொரூபவியல்பெனப்படுஞ் சிவத்துவமாம். இவ்வெண்குண சொரூப சிவத்துவப்பேறே முத்தி

---

* முதற்சூத்திரம் இரண்டாஞ்சூத்திரங்களில் எழுதப்பட்ட இப்பாடிய வசனம் அச்சூத்திரங்களில் சேர்க்கும் இடந் தெரியாமையால் இங்குத் தனியே அச்சிடப்பட்டது.

திசையில் ஆன்மாவிற்கு ஆன்மலாபமெனப்படுஞ் சாயுச்சியப் பெரும்பேறும். சிவபிரான் எண்குணமுடையனுதல் "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், றாளைவணங் காத் தலை" எனவும், "எட்டுவான்குணத் தீசனெம் மான்றனை" எனவும், "இறையவனை மறையவனை யெண்குணத்தினனை" எனவுங் கூறிய திருவாக்குக்களானறிக.

அற்றேல், சிவபிரான் எண்குணசொரூபனுயின் அவன் றன்னை "நிர்க்குணன் குணாதீதன்" என்று வேதாகமங்கள் ஓதுதல் பொருந்தாதாலெனின்? வேதாகமங்கள் பரமான்மாவை "நிர்க்குணன் குணாதீத" னென்றோதியது, சாத்துவிக இராசத தாமதமென்னு மாயாகுணங்களில்லாதவனென்னுங் கருத்துப்பற்றி யல்லது முற்றறிவு முதலிய சிற்குணங்களில்லாதவனென்னுங் கருத்துப்பற்றியன்றாகலின் அது பொருந்துவதாம். மற்றுப் பொருந்தாமை யாண்டையதென்க. இச் சிற்குணங்களுமில்லா வியல்பே அவனுக்குச் சொரூபமெனின் சத்தாகை சித்தாகை ஆனந்தரூபமாகையுஞ் சருவஞ்ஞத்துவ முதலியவற்றை யகப்படுத்து நிற்குஞ் சிற்குணங்களாகலின் பரப்பிரமப் பொருள் அவற்றை யிலக்கணமாக வுடைத்தென்றலுஞ் சொரூபவியலாகாதாம். அதுவேயுமன்றி அங்ஙனம் வேண்டுவார் பிரமப்பொருள் ஓரியல்புமில்லா வெறும் பாழென்றாராய் நிரீச்சுரவாதிகட்குச் சகபாடிகளாயு மொழிவரென்க. எண்குணங்களாவன, சருவஞ்ஞத்துவம், திருத்தி, அநாதிபோதம், சுவதந்திரம், அலுத்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்ததேகமென்பனவாம். திருத்தியெனினும் பூர்த்தியெனினுமொக்கும். அநாதிபோதம் அநாதிமுத்தத்துவமெனவும் வழங்கப்படும். இவையே இறைவற்குச் சிவத்துவமெனப்படுமெண்குணமாமாறு "சருவஞ்ஞத்துவா" என்பதை முதலாகவுடைய சருவஞ்ஞானோத்தராகமவசனத்தானறிக. இவ்வெண் குணங்களுள், நிராமயான்மாவை அநாதிபோதத்திலும், விசுத்ததேகத்தினை அலுத்தசத்தியினு

படக்கி அறுகுணங்களாகவும் ஓதுப. இவ்வறுகுணங்கள் சத்து சித்து ஆனந்தமென மூன்றாயடங்குமா றோர்ந்துணர்க. இனி நின்மலமான பரப்பிரமப்பொருள் அவிச்சையாற் கட்டுண்டு சிவான்மாவென நின்று, "பிரமாகம்" பாவனை பேணி, மறித்தும் பிரமமாமெனின், நின்மலமான பிரமப்பொருளை அவிச்சையான மலங் கட்டுறுத்தமாட்டாது. கட்டுறுத்துமெனின், நின்மல பரப்பிரமப் பொருளாமாறில்லை. அன்றியும் சிவற்கு வீடுபேறுளதாய வழியும் அஃததனைக் கட்டுறுத்துமெனப்பட்டு வீடுபேறென்பது போலியாய் முடியுமென்க. அற்றேல், நிராலம்பஞ் சருவசார முதலிய வொருசா ருபநிடதங்கள் அங்ஙன மோதியவாறென்னையெனின், சுவேதாச்சுவதரமுதலிய சைவோபநிடதங்கள் சிவான்மாப் பிரமம்போல வநாதிநித்தியப் பொருளென்றும், அப்பிரமந் தனக்கந்தரியாமியாயும் வியாபியாயுநின் றுபகரிக்க அநாதிமல வினைக்கீடாகப் பிறப்பிறப்புற்று வினைப்போகம் புசிக்குமுறையின் மலபரிபாகமெய்திப் பரமசிவன் றிருவருளாற்றுக் கட்டுநீங்கி முற்றறிவெய்தி மெய்புணர்ந்து மலவாசனையு நீங்கிச் சிவ பரப்பிரமப் பொருளோடத்துவிதமாய் நின்று முடிவுகாலமில்லாப் பேரின்பத்தினை நுகராநிற்குமென்றும், எடுத்தொருதலைப்படத்தோதுதலின், நிராலம்பஞ் சருவசார முதலிய வுபநிடதங்களிற் பிரமசத்தத்தா லெடுத்தோதப்பட்ட சித்துப் பரசித்தாகிய பரப்பிரமமன்று. அபரசித்தான ஆன்மாவே அவிச்சையாற் பந்தமுற்றுச் சாதகமுறையாற் பிரமோபாசனை பேணிப் பிரமமாமென்றவ் வுபநிடதங்களா லங்ஙன மோதப்பட்டது. இங்ஙனமாகலின், அவ்வுபநிடதங்களுஞ் சைவாகமங்களுந் திராவிடவேதங்களுஞ் ஒருமுகமாயொன்று நடப்பனவன்றி முரணுற்றுக்கிடப்பனவல்லவென்று நன்குணர்வார்க்கெளிதி னுணர்ந்துகொள்க. அற்றேல், அஃதாக அபரசித்தான ஆன்மாவைப் பரசித்தினுக்குரிய பிரமசத்தத்தால் அவை எடுத்தோதுதல் சாலுமோவெனின், பரசித்தா

ன பரப்பிரமம் அபரசித்தான வான்மாவுக் கந்தரியாமியாய் அதுவேதானுய்நின்றுபகரித்தலின், அவ்வொற்றுமைபற்றிப் பரப்பிரமநாமத்தாற் சீவான்மாவை அங்ஙனமவைவுபசரித்து வழங்கின. ஆகலின் அது சால்பேயாமென்க. கீதாசாரிய ஞகியகண்ணன் பரப்பிரமமானசிவனருட்பெற்றியைச்சிவோ கம்பாவனை யொற்றுமைபற்றி. "நானே சடசித்தெல்லாமா னேன்" என்று தன் பெற்றியாகக்கொண்டு கூறியதூஉம் இதற்குறுசான்றுமென்க.

இனி உடல் பொருள் ஆவி மூன்றும் ஞானதீக்கையின் முதல்வனுக்கெனத் தானஞ்செய்தளித்தலான் முன்செயற் கையாற் றன்னுடைமையாய் நின்ற விம்மூன்றுந் தானஞ்செ ய்தபின்னர்த் தனக்கின்றிச் சிவனுக்குடைமையாயவாறு பெ ற்றும். பெறவே, யாண்டுப்பொருளென்ற துடம்புபோலொ ற்றுமையுடைத்தாய்த் தன்னு னுகரக்கிடந்த வுடல்வினையே யன்றி முன்பே தன்னாற்றுறக்கப்பட்டொழிந்த புறப்பொரு ளன்றென்பது தாமேபோதருதலானும், அவ்வாறன்றி யாண் டுப்பொருளென்றது எல்லாவற்றிற்கும் பொதுவெனக்கொ ள்ளினும் உடல்வினையும் அவற்றுளடங்குதலானு மங்ஙன முதல்வனுக்கென்றீந்த வுடல்வினையை மீளவுந் தானுகரக் கருதுவோ னவ்வாறு தானஞ்செய்தளித்த ஆன்மாவை மீள வுஞ் சுதந்திரனுகக் கருதுஞ் சிவசமவாதியோடொப்பவனு மாகலின் முதல்வனுக்கென்றளித்த பொருளைத் தானுகரக் கருதுதல் பெரியதோ ரிழுக்காதலறிக.

இன்னுந் தன்னுடம்பே தனக்கின்றி முதல்வனுக்குடை மையாகவிந்தவழி யவ்வுடம்பிடமாக வரும் வினைப்பயனைத் தானுகர்தற்கோ ரியைபின்மையறிக. இன்னுந் தானே தன க்குச் சுதந்திரமின்றிச சிவனுக்குடைமையாயவழித் தான் மற்றென்றனை துகருமாறியாண்டையதென்க. தன்னாலளி க்கப்பட்ட பொருள் மூன்று முதல்வனேன்றுகொண்டா னென்பது "அன்றே யென்ற ஞவியும்" எனவும் "உடலி டங்கொண்டா யினி யுன்னை" எனவும். உடலிடங்கொண்டா யானிதற்கு" எனவும், "என்றவுடற்கன்ம" எனவும், என்ற வுடற்பழவினைகள்" எனவும், "என்றவினை" எனவும், "என் றுகொண்டாயென்னை" எனவும் "நாமொழிந்து சிவமான" எனவும் ஓதியவாற்றுனறிக.

திருச்சிற்றம்பலம்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 27 | 2 | (அரும்பதப்பொருளில்) பாட்டு | பதம் |
| 2 | 30 | வேதங்களை | அவ்வேதங்களை |
| 3 | 7 | மகஉக | மகௌக |
| 5 | 16 | நூலார் | நூலாற் |
| 16 | 13 | மருநது | மருந்து |
| 19 | 21 | இயம | இயமம் |
| 21 | 9 | நூனே | நூலினே |
| 22 | 23 | ஆண்டுககா | ஆண்டுக்கா |
| 23 | 14 | தென்பதனையு | தென்பது |
| ,, | 20 | சாதனங் | சாதகங் |
| ,, | 21 | புனைவரென | புனைவரேயென் |
| ,, | 27 | முறைகளு | முறைமைகளு |
| 24 | 13 | தம்மை | தமை |
| ,, | 30 | தமை | தம்மை |
| 26 | 31 | பாஷாண | பாடாண், (இங்ஙனம் வருமிடந்தோறுங்கொள்க) |
| 27 | 24 | மௌனவைத் | மௌனவேறுவைத், |
| ,, | ,, | தார்க்கிகர் | தார்க்கீகர். (இங்ஙனம் வருமிடந்தோறுங்கொள்க) |
| 28 | 30 | ண்ட | ண்டசிவாத்துவித சைவத்தினுண்மையுணராதார். |
| 29 | 8 | வளவா | வளாவா |
| ,, | 19 | ஐக்கவத | ஐக்கவாத |
| ,, | 20 | கொள்ளாரா | கொண்டாரா |
| 30 | 17 | பிறவற்றுல் | பிறவாற்றுல் |
| ,, | 23 | கற்ப | கற்பு |
| ,, | 15 | முதற்கண | முற்கண |
| 32 | 7 | மாணுக்கர் எனவி | மாணுக்கரி |
| 34 | 1 | 43 | 34 |
| ,, | 10 | ரின | ரின் |
| 35 | 13 | சமுவயமும் | சமுவாயமும் |
| 36 | 5 | சமுவயமா | சமுவாயமா |
| ,, | 9 | இணவாம் | இணையமாம் |
| ,, | 21 | உண்டாம்; | உண்டாய் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | 23 | மில்லையுமாஞ்சா | மில்லையு மாஞ்சொ |
| 37 | 22 | பொருள் | பொருள்கள் |
| 42 | 5 | சபரமுனி | சபாமுனி |
| 43 | 22 | ஒரு | ஒரு |
| 46 | 8 | வுளவாய | வுளவாய் |
| 48 | 3 | கமாய்த் | கமாய் |
| ,, | 14 | லும்புருட | லும்.புருட |
| ,, | 24 | யோகமா | யோகமதமா |
| 50 | 13 | உண்பவர் | றுண்பர் |
| ,, | 23 | முறையொழு | முறையேயொழு |
| 51 | 8 | கழிந்திடுவ | கழித்திடுவ |
| ,, | 9 | முன்பமுதே | முன்புளதே |
| 52 | 9 | முதலது | முதலாவது |
| 53 | 9 | நம்மவரே | நம்மவரவரே |
| ,, | 21 | மேயான | மேயான் |
| ,, | 22 | பேசுவாரே | பேசுவரே |
| 56 | 8 | னெனக | னென்க |
| ,, | 11 | ஆறனுருபு | ஆனுருபு |
| 59 | 28 | படுவென | படுவ்ன |
| 60 | 18 | சாதிக்க | சோதிக்க |
| 63 | 25 | வும்வேத | வும் அவற்றுண் முன்னையதுவேத |
| ,, | ,, | வும்வேதா | வும்பின்னையதுவேதா |
| 71 | 28 | குளிந்ததெ | குளிர்ந்தெ |
| 72 | 6 | கனவு | நனவு |
| ,, | 13 | வன்-கால | வன்றேகால |
|  | 21 | தில்கண்டநன | தில்கனவு கண்டகண்டநன |
| ,, | ,, | வில்கண்டகனவு | வில் |
| 81 | 20 | னீண்டுநின்ற | னீண்டுநோராயவெனநின்ற |
| ,, | 29 | பாலி | பாலில் |
| 82 | 6 | இஃதா | இத்தா |
| ,, | 18 | றனஞ்செய | றனஞ்சய |
| 83 | 10 | ஒன்றெலா | ஒன்றலா |
| 87 | 17 | அந்தமந்தி | அந்தமாதி |
| 89 | 27 | வேறின்மை | வேறன்மை |
| 92 | 6 | பசுவாம் | பசுவாங்காண் |
| ,, | 10 | ளைகாண் | ளை |
| ,, | 14 | இன்று | இன்றல் |
| ,, | 17 | எறு | எ-று. ஆல்-அசை |
| 95 | 12 | தெனச்ச | தெனெச்ச |
| 101 | 19 | சென்று | சென்று அங்கு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 103 | 8 | யேமுறையே | முறையே |
| 107 | 16 | வெதிமறை | வெதிர்மறை |
| 108 | 22 | மெய்யினி | மெய்யெனி |
| 112 | 15 | காரண | கரண |
| ,, | 21 | சந்நித | சந்நிதி |
| 113 | 7 | பறம்பு | புறம்பு |
| ,, | ,, | திருந்தல் | திருத்தல் |
| ,, | 11 | வளர்தலு | வளர்தலும் |
| 117 | 14 | அத்தி | ஆத்தி |
| 118 | 3 | மாக்கள் | மாக்களே |
| ,, | 25 | மாக்கள் | மாக்களே |
| 122 | 21 | படாந்து | படர்ந்து |
| ,, | 23 | வேகமண் | மேகமண் |
| 131 | 29 | தாயையின் | தாமையின் |
| 132 | 17 | ற்லென | ல்லென |
| 142 | 24 | கலே | காலே |
| ,, | 25 | கலே | காலே |
| ,, | 27 | தாம | தாம் |
| 152 | 9 | தாதல் | த்தாதல் |
| 158 | 23 | அந்தம் | அந்தமாம் |
| 166 | 6 | லன | லன் |
| ,, | 11 | செவ் | மன்-அசை. செவ் |
| 168 | 6 | ஆங்கும் | ஆங்கு |
| 176 | 29 | மறுகக | மறுக்க |
| 177 | 16 | மலம் | மற்று மலம் |
| 178 | 11 | கர்ட்ட | காட்ட |
| ,, | 24 | அவ்வுடம் | அவ்வவ்வுடம் |
| 179 | 6 | ஞாஞகலர் | ஞானகலர் |
| 181 | 23 | மிதயத்து | மிதயத்தின் |
| ,, | 24 | கண்டத்து | கண்டத்தின் |
| 182 | 20 | எய்தல் | எய்தல் |
| 185 | 20 | சத்த | சுத்த |
| 188 | 5 | நூலாலா | நூலா |
| ,, | 13 | கேடலா | கோடலா |
| 190 | 2 | அத்தானி | அத்தாணி |
| ,, | 6 | விடங்க | விடயங்க |
| 191 | 6 | தன்றி | தன்று |
| 192 | 28 | அவ்வேறு | இவ்வேறு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 194 | 3 | இன்றென | இன்றென் |
| 195 | 24 | அதனை வயு | அதனைவலியு |
| 196 | 14 | தம்வயத்த | தன்வயத்த |
| 202 | 22 | கருந்த | கடிந்த |
| 204 | 27 | தன்மை | தன்மைய |
| 214 | 23 | னின்று | தினின்று |
| 215 | 4 | ஞாதிரு | ஞாதுரு |
| 217 | 15 | யறிப | யறிய |
| 220 | 19 | தூலஞ்சூக்குமம் | தூலசூக்கும |
| 221 | 27 | போலகிரு | போ லகிரு |
| 222 | 4 | அதுவன்ற | அதுவென்ற |
| 227 | 21 | சறுவஞா | சருவஞ்ஞா, இங்ஙனம் வருமிடந் தோறுங்கொள்க. |
| ,, | 27 | பதியென் | பதியென |
| 228 | 4 | ஞனஞ் | ருனஞ் |
| 231 | 5 | என்றருளி | சர்வேதரும என்றருளி |
| ,, | 26 | மாய் | வாய் |
| 239 | 9 | அதனைவிரித்து | விரித்து |
| 241 | 17 | தாலென் | தாலொன் |
| ,, | 21 | றென்ணுதல் | றெண்ணுதல் |
| 243 | 20 | யாவாவி | யவாவி |
| ,, | 28 | னனனியம் | னன்னியம் |
| 247 | 10 | பொருட்கு | பொருடரு |
| 251 | 5 | மான்வா | மான்மாவா |
| 252 | 8 | பிறுதோ | பிறிதோ |
| 257 | 18 | னீன்டோ | னீண்டோ |
| 258 | 18 | | முதலதிகரணம் |
| 265 | 27 | வென்னுந் | தென்னுந் |
| 270 | 8 | சத்தின் | அசத்தின் |
| 273 | 19 | முறையி | முறைமையி |
| ,, | 26 | கியசத்தின் | கி யசத்தின் |
| 274 | 24 | யன்னிய | யநன்னிய |
| 275 | 8 | னெம்மூர்ப்பு | னெம்மூர்பு |
| ,, | 19 | தொளா | தோளா |
| ,, | 21 | மணிமுடி | நவமணிமுடி |
| 276 | 17 | யென்ற | யென்ப |
| 277 | 10 | மூளைத்தவா | மூளைத்தவர் |
| ,, | 11 | மூவர் | மூவாச் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | 12 | சிறந்த | செறிந்த |
| 281 | 12 | மேற | மேற் |
| 284 | 8 | படுவன் | படுவர் |
| ,, | 11 | ரென்க | னென்க |
| | 20 | யெய்துவன | வெய்துவன |
| 285 | 14 | ஆன் | ஆன |
| ,, | 23 | புண்ணிய | பசுபுண்ணிய |
| 289 | 14 | முத்தியய | முத்தியேயய |
| 291 | 11 | மென்னு | மெண்ணு |
| ,, | 15 | நான்கும் | நான்கும்பத |
| ,, | 19 | முத்தி | பரமுத்தி |
| ,, | 27 | கணுக்காரா | கணுக்கரா |
| 301 | 2 | சகலர்க்குக் | சகலர்க்கு அக் |
| ,, | 18 | கொண்டன | கொண்டது |
| 312 | 30 | தேகத்தின் | தேக்கத்தின் |
| 313 | 11 | வுருவில் | வுருவின் |
| 318 | 10 | செய்தபா | செய்தசிவஞானமாபா |
| ,, | 13 | மூன்று | நான்கா |
| 319 | 6 | யறியும | யறியும் |
| ,, | 23 | தியையும | தியையும் |
| 320 | 4 | சுத்தியாம | சுத்தியாமா |
| ,, | 6 | றுண்ர்த் | றுணர்த் |
| 322 | 11 | உணராபதி | உணராப்பதி |
| ,, | 20 | முணராபதி | முணராப்பதி |
| 324 | 21 | குமென்னுந் | குமேனுந் |
| ,, | 26 | சீகோழை | சீக்கோழை |
| 328 | 19 | திருந்தல் | திருத்தல் |
| ,, | 20 | அவனை | அதனை |
| 329 | 4 | மனரூபம் | சியமனரூபம் |
| ,, | 11 | றியப்படு | றியப்படும் |
| 334 | 24 | பதியிற்சிந்தை | பதியைச்சிந்தை |
| 335 | 15 | வற்றுற் | வார்றுற் |
| 336 | 23 | அடைிம | அடிமை |
| 340 | 8 | கிரந்தவடி | கிரந்திவடி |
| ,, | 25 | சாந்தியாதீத | சாந்தியதீத |
| ,, | 27 | படும | படும் |
| 343 | 27 | கொணட | கொண்ட |
| 344 | 14 | ன்பதொ | ன்றதொ |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 345 | 4 | தற்கும் | தறகும் |
| 347 | 14 | விளக்கொளி | கண்ணொளி |
| 352 | 19 | முதல் | முதல்வன் |
| 353 | 19 | காப்பதுதம | காப்பதுத்தம |
| 360 | 4 | நின்று | நின்ற |
| 361 | 4 | படுஞ்சுக | படும்பரமசுக |
| 365 | 3 | போநத | போந்த |
| ,, | 4 | ஆசிரியர்கண் | கண் |
| 367 | 17 | திவற்றி | விவற்றி |
| 371 | 26 | படுமியோ | புடையயோ |
| 372 | 9 | அவைதானே | அவையேதானே |
| 374 | 10 | ளென்று | ளென்னுஞ் |
| ,, | 26 | பதனல் | பனுதலால் |
| 377 | 5 | வேறிடத் | வெறித் |
| 379 | 13 | பொன்வான் | பொன்வாண் |
| 380 | 21 | சிந்திதனய் | சிந்திதனக |
| ,, | 23 | செப | செய |
| 381 | 2 | வழிபடா | வழிபட |
| ,, | 23 | படடு | பட்டு |
| 383 | 5 | காலங்஁னம் | கால் யாங்஁னம் |
| 384 | 6 | புழியுமது | புழியுணர்த்தியென்பதுமது |
| 385 | 7 | மாயையா | மாயை |
| ,, | 22 | இவை யேக | இவ்வேக |
| ,, | 26 | முனையாத | முளையாத |
| ,, | ,, | பகரித்து | பரிகரித்து |
| 387 | 30 | சிறபிலார் | சிறப்பில்லார் |
| 391 | 16 | பாசத்தர் | பாசத்தார் |
| 393 | 18 | அவை | இவை |
| 402 | 19 | தாரணியோர் | தாரணியோர் தாம் |

அவசரத்திலே பதிப்பித்தலால் காமா முதலிய சில குறியீடுகள் தவறியிருப்பன விரிவஞ்சி யெடுத்துக்காட்டப்படாமையால் அவற்றைத் திருத்திப்படித்துப் பொருளுணர்ந்துகொள்க. பதிப்பித்து முடிந்தபின்னொரு எட்டுப்பிரதி கிடைத்தமையா லதிலுள்ள திருத்தஞ்செய்ய நேர்ந்தன பலவுள.

பிழைதிருத்தம் முற்றிற்று.